உ

ஹரி: ஓம்.

பரமார்த்த தரிசனமென்னும்

# ஸ்ரீ பகவத்கீதை வசனம்.



இது

ஜீவகசிந்தாமணி வசனம், அரிச்சந்திரபுராண
வசனம் ஆகிய நூல்களின் ஆசிரியரும்,
விவேகசிந்தாமணி உரையாசிரியருமாகிய
மதுரைஜில்லா செம்பூர் வித்வான்

ஸ்ரீமத்

வி. ஆறுமுகஞ்சேர்வை அவர்களால்

வசனரூபமாக எழுதப்பெற்றது.

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,

87, தம்புசெட்டி வீதி, சென்னை.

1915

விலை ரூபா 1-4-0




# முகவுரை.

செந்தமிழ்க் கல்வியும் செவ்விய குணமும் ஒருங்கே அமையப்பெற்ற உத்தமர்களே! இந்தப் பகவத்கீதை யென்னும் அரியநூலானது ஆதியில் வேதவியாசரால் மூன்று காண்டங்களாகவும், பதினெட்டு அத்தியாயங்களாகவும், எழுநூறு சுலோகங்களாகவும் வடமொழியில் இயற்றப்பெற்றது; இதன் உயர்வனைத்தும், இவ்வசனநூல் முழுவதையும், இதனீற்றிற் சேர்க்கப்பெற்றிருக்கும் ஸ்ரீபகவத்கீதா மான்மியத்தையும் பக்தியோடு வாசிப்போர்க்கு நன்கு விளங்கும்; மனிதராயினர்க்கு எல்லாத் தத்துவங்களையும் விளக்கிக் காட்டி, உண்மைப்பொருளை யடைதற்குரிய வுபாயங்களை யுபதேசிக்கும் நூல்களுள் இதுவே முதன்மை பெற்றதாகும். இங்ஙனம் இது சிறப்புடையதா யிருத்தல்பற்றியே இதற்கு, ஸ்ரீ சங்கராசாரியர், ஸ்ரீ ராமாநுஜாசாரியர், ஸ்ரீ மத்வாச்சாரியர் முதலியவர்கள் பாஷியங்களு மியற்றி யிருக்கின்றனர். அன்னிய மதஸ்தர்களும் இந்நூலை ஆங்கிலம் முதலிய சிலபாஷைகளில் மொழிபெயர்த் திருக்கின்றனர்; இன்னும் மேற்கூறிய பாஷியங்களைத் தழுவிச் சிலர் தமிழிலும் இதனை மொழிபெயர்த்திருக்கின்றனர். ஸ்ரீ பட்டனூர் என்பவர் செய்யுள் ரூபமாகவும் இயற்றியிருக்கின்றனர். இங்ஙனமிது தமிழில் பலவகையாக வெளிப்பட்டிருப்பினும், அவ்வகைகளுள் வசனமாயிருப்பவை பெரும்பாலும் வடசொற்கள் விரவியும், வினவிடைரூபமாகவும், செய்யுள் ரூபமாயிருப்பது கற்றோரால் அரிதிற் பொருள்காணக் கூடியதாகவு மிருப்பதால், அவை தென்மொழியோடு வடமொழிப் பயிற்சி யுள்ளார்க்கும், இலக்கண விலக்கியப் பயிற்சியோடு வேதாந்த

சாஸ்திரங்களையுங் கற்றுத்தேர்ந்த மதிவல்லார்க்கும் பயன் படக் கூடியவைகளா யிருக்கின்றனவே யன்றி மற்றைய சாதாரணப் படிப்புள்ள தமிழர்க்குப் பயன்படக் கூடியவைக ளாக இல்லை. ஆதலின், இவ்வரிய நூலைச் சாதாரண தமிழ்ப் படிப்புள்ள புருஷர், ஸ்திரீகள், பாலர்கள் முதலிய எல்லோ ரும் படித்துணருமாறு எளிய வசனநடையில் எழுதி வெளி ப்படுத்தும்படி சில அறிவிற்சிறந்த கனவான்கள் விரும்பிக் கேட்டுக்கொண்டதற்கிணங்கி, நான்மேற்கூறிய ஸ்ரீ பட்டா ரியற்றிய செய்யுட் கருத்துக்களையும், தமிழில் கிரந்த சுலோ கங்களுடன் வெளிப்பட்டிருக்கும் வேறு சில புத்தகங்களின் கருத்துக்களையும் தழுவிக் கூடியவரை விஷயங்களைத் தெளி வாக விளக்கிக்காட்டி ஆங்காங்கே அரும்பதங்கட்குப் புட் நோட்டுமிட்டு இந்தப் பகவத்கீதை வசனத்தை இலகுவான நடையில் எழுதி முடித்தேன்.

இதில் என்னுடைய சொந்த அபிப்பிராய மொன்றுங் கலக்கப்படவில்லை. எல்லாம் ஸ்ரீ பட்டாருடைய செய்யுட் கருத்துக்களையும், வேறு சிலபெரியோர்களால் கிரந்த சுலோ கங்களுடன் வெளிப்படுத்தப்பட்ட புத்தகங்களின் கருத்துக் களையும் தழுவிய விஷயங்களே. இக்கருத்துக்களை யெல்லாம் வசனநடைக் கிசையுமாறு பொருத்தியெழுதும் விஷயத்தில் எனக்கேற்பட்ட சிரமம் அதிகம்; எனினும், பெரியோர்க ளுடைய அனுக்கிரகத்தால் உலக நன்மையை யுத்தேசித்து அக்கஷ்டத்தை நோக்காது மிக்க பிரயாசையுடன் என் சிற் றறிவிற் கெட்டியவரையில் இதனை எழுதி முடித்தேன்; இஃது இங்ஙனம் எளிய நடையில் விளக்கமாக எழுதப் பெற்றிருப்பதால் இகபர சாதனங்களையடைய விரும்பும் தமி ழர் ஒவ்வொருவர்க்கும் மிக்கபயனைத் தருமென்பது நிச்ச



யம். ஆதலின், இதனை எல்லோரும் அபிமானிக்குமாறு கேட்டுக்கொள்கின்றேன். "முற்று முணர்ந்தவரில்லை," ஆத லால், என்னால் எழுதப்பெற்ற இந்நூலில் சிற்சில பிழைக ளும் ஏற்பட்டிருத்தல் கூடும்; அங்ஙன மேற்பட்ட பிழைகள் காணப்படின், கல்வியறிவோடு, உத்தமகுணங்களைக் கொள் ளும் பேரறிவும் வாய்ந்த பெரியோர்கள் அவற்றைத் தெரி விப்பின் நான் வந்தனத்துடன் ஏற்றுத் திருத்திக்கொள் வேன். இந்நூல் வெளிப்படுதற்குக் காரணமாயிருந்த கன வான்கட்கு எல்லாம் வல்ல இறைவன் திருவருள் புரிவானாக.

சுபம்.

இங்ஙனம் :

☞ வீ. ஆறுமுகன்.

---

# விஷயசூசிகை.



உ

ஹரிः ஓம்.

பரமார்த்ததரிசனமென்னும்

# ஸ்ரீ பகவத்கீதை வசனம்.

## தெய்வ வணக்கம்.

### விநாயகர் துதி.

கலிவிருத்தம்.

"பாதியோர் பெண்மையான் பரிந்து பெற்றதோர்
சோதியாங் களிற்றினைத் தூர மண்மையிற்
பேதியா துளம்பெறப் பேணிப் பாகவற்
கீதையான் மொழிகுவன் ஞானங் கிட்டவே."

### மகாவிஷ்ணு துதி.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்,

"அரியயனோ டானாகி யகிலந் தன்னை
யாக்கியளித் தழிக்கின்ற வவித்தைக் கென்றுங்
கரியதுவாய்க் காந்தத்தி னிரும்பு போலக்
கரணத்தின் சலனத்துக் கேது வாகி
வரியமரு மாவணைமே னெளிய வேறி
வைகுண்டத் தினிதமரு மாயோன் மண்மேற்
பரிபுணரு மணிநெடுந்தேர்ப் பார்த்தற் கூர்ந்த
பாண்டவர்கள் சாரதிநாம் பாவுந் தெய்வம்."

கலிவிருத்தம்.

"ஒருபத மடித்தொரு பதம்பொற் றேர்மிதித்
தொருகையிற் குசைகசை யொருகை ஞானமாய்ப்
பொருகைவில் விசயனைப் புரிந்து நோக்கிமெய்
தருபொரு ளுரைத்தவர் சரணம் போற்றுவாம்."

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

"ஐவகைப் பொருளு நான்கு காணமுங்
குணங்கண் மூன்றுஞ்
செய்வினை யிரண்டு மொன்றி யாவருந்
திகைப்ப நின்ற
பொய்யிரு ளகல ஞானப் பொருட்கதிர்
விரித்த புத்தேள்
கைவள ராழிச் செங்கட் கண்ணனைக்
கருத்துள் வைப்பாம்."

---

## நூலின் வரலாறு.

வேதாந்தார்த்தங்களின் சாரமாகிய கீதாசாஸ்திரமானது, மகாவிஷ்ணுவானவர் கிருஷ்ணவதாரஞ்செய்த காலத்தில் சகலரும் உண்மைப் பொருளை யுணர்ந்து கடைத்தேறும்பொருட்டு அருச்சுனனுக்கு அவரால் உபதேசிக்கப்பெற்றது. இதனை அவர் எக்காரணத்தால் உபதேசித்தாரெனில், துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனஞ் செய்யும்பொருட்டும், யாதவ வம்சத்தில் பிறந்திருந்தவர்களும் மிகுந்த பக்தர்களுமாகிய வசுதேவர், தேவகி ஆகியவர்களுடைய இஷ்டத்தைப் பூர்த்தி செய்தற்காகவும் மேற்கூறிய மகாவிஷ்ணுவாகிய பகவான் அவர்களுக்குப் புத்திரனாக அவதரித்துக் கிருஷ்ணமூர்த்தி யென்னுந் திருநாமத்துடன் பல அற்புதங்களைச் செய்து விளங்கினர். அக்காலத்தில் அஸ்தினபுரத்தை ஆட்சி புரிந்துவந்த சந்திரகுலத் தரசர்களின் வழியில்தோன்றிய விசித்திரவீரன் இறந்த பின்பு அவன் மனைவியராகிய அம்பிகை, அம்பாலிகை என்னு மிருவருள் அம்பிகை யென்பவள், சந்ததியை விருத்தி செய்யும்பொருட்டுத் தன் மாமியாகிய பரிமளகந்தியின் ஏவல் பெற்று வியாசரைக் கூடித் திருதராஷ்டிரனைப் பெற்றாள்; அம்பாலிகை யென்பவள் அவ்வாறே அவ்வியாசரைக் கூடிப் பாண்டுவைப் பெற்றாள். இவ்



விரண்டு புத்திரர்களுள் திருதராஷ்டிரன் பிறவிக்குருடனாயிருந்தும், இளையவனாகிய பாண்டுவென்பவன் அவன்மீது பக்ஷமுடையவனானமையால் வீஷ்மேர் அத்திருதராஷ்டிரனுக்கு இராஜ்ஜிய பட்டாபிஷேகஞ் செய்ததற்கிணங்கி அவனையே அரசனாக்கித் தான் இளவரசனும் சேனாதிபதியாயு மிருந்தரசுபுரிந்து சில வருடங்கள் கழிந்தபின்னர் இவ்வுலகவாழ்வைத் துறந் திறந்துபோனான். அப்போது அந்தப் பாண்டுவுக்குக் குந்திதேவியிடமும் மாத்திரியிடமும் தருமன், பீமசேனன், அருச்சுனன், நகுலன், சகாதேவன் என்னும் ஐந்து புத்திரர்களும், திருதராஷ்டிரனுக்குக் காந்தாரியிடம் துரியோதனன் முதலாகிய நூறு புத்திரர்களும் பிறந்திருந்தார்கள். அப்போது பாண்டு புத்திரர்மீது கிருஷ்ணபகவான் சிநேகங்கொண்டிருந்தார். இவர்களுள் துரியோதனன் பாண்டு புத்திரர்கள்மீது இளமையிலேயே பகைகொண்டு நித்திரை செய்யுங் காலத்தில் வீமனைக் கொடிகளாற் கட்டிக் கங்கையில் வீழ்த்தியும், அரவங்களை விட்டுக் கடிக்கும்படிச் செய்தும், நதியிற் கழுக்களை நிறைத்து நட்டு அவற்றின்மேல் அவ்வீமனைக் குதிக்கும்படிச் செய்தும், பின்னும் ஒரு தினம் உணவில் விடங் கலந்து அவனுக் கூட்டி அவன் மயங்கியிருக்குஞ் சமயத்தில் வலிய வடத்தால் அவனைக் கட்டித் தூக்கிக் கங்கையிற் போட்டும் பல தீங்குகளைச் செய்தான். அவ்வாறு செய்தும் கிருஷ்ணனுடைய சகாயத்தால் வீமன் அவ்வாபத்துக்களினின்றும் நீங்கினான். அதன்மேல் ஒருதினத்தில் திருதராஷ்டிரன் தருமனுடைய நற்குண நற்செய்கைகளை நோக்கி அவனுக்கு இளவரசுப் பட்டஞ் சூட்டினான். அதனையுணர்ந்த துரியோதனன் அதற்கு மனம் பொறாதவனாய்த் தன் தந்தையிடம் அவ்வாறு செய்தல் தகாதென்று தடுத்தான். திருதராஷ்டிரன் துரியோதனனுக்கு எத்தனையோ சமாதானமான வார்த்தைகளைக் கூறியும் அவன் கேளாமல் தருமன் முதலியோரை அடியோ டொழித்துவிடவேண்டுமென்று வற்புறுத்திக் கூறியபடியால் அந்தகனாகிய திருதராஷ்டிரன் தன்னுடைய மைந்தன் வார்த்தையை மறுக்க

முடியாமல் அவன் கருத்திற் கிசைந்து அவ்வாறே செய்யக் கருதி வீஷ்மர், விதுரன் முதலியோரிடத்தில் "பாண்டவரும், துரியோதனன் முதலியோரும், சிறுபருவத்தே பகைகொண் டிருக்கின்றனர்; இவர்கள் ஓரிடத்திலிருந்தால் இப்பகை நாளுக்குநாள் விருத்தியாகும்; ஆதலால், இவர்களை வெவ்வேறிடங்களி லிருக்கும்படிச் செய்யவேண்டும்; அவ்வாறு செய்தால் இப்பகை தணிந்து இவர்களுக்குள் நேயமுண்டாகும்; அவ்வாறு இவர்களுக்குள் நேசப்பான்மை வளருதற் கேதுவாகப் பாண்டவர்களை வேறு நகரத்திற் கனுப்பிவிடுகின்றேன்," என்று சொல்லிப் புரோசனனென்னும் மந்திரியை யழைத்து அவனும், தானும், தன் மைந்தனும் கூடிப் பாண்டவரை ஒழித்தற்கு, "வாரணாவதத்தில் அரக்குமாளிகை யொன்றியற்றி அதில் தருமன் முதலியோரை வசிக்கும்படிச்செய்து இரகசியமாக நெருப்பிட்டுக் கொளுத்தி அவர்களைத் தொலைத்துவிடவேண்டும்," என்று சதியாலோசனை செய்து, அவ்வாறே ஒருதினம் திருதராஷ்டிரன் தருமனை யழைத்து வாரணாவதத்தில் தன் தம்பியரோடும், புரோசனனோடும் போயிருக்கும்படி அவனுக்குக் கட்டளையிட்டான். அவ்வாறே தருமன் முதலிய ஐவரும், குந்திதேவியும், புரோசனனும் அங்குச் சென்றிருந்தார்கள். அக்காலத்தில் புரோசனன், துரியோதனன் தனக்குச் சொல்லியிருந்தபடி அரக்குமாளிகை சமைத்து அதில் பாண்டவர்களைக் குடியேற்றுவித்து நெருப்பிடச் சமயம் பார்த்துக்கொண்டிருந்தான். அத்தருணத்தில் முன்னரே துரியோதனன் முதலியோருடைய சதியாலோசனையைத் தெரிந்த விதுரன் கட்டளைப்படி ஆபத்துக்காலத்தில் பாண்டவர் தப்பியோடும்படி அம்மாளிகையில் நிலவறை யியற்றிய தச்சன் வீமனிடத்தில் எல்லா இரகசியங்களையும் வெளிப்படுத்த அவ்வீமன் ஒருநாளிரவு தங்களுக்கு விடங்கலந்த தேனைக் கொடுக்கத் துரியோதனன் ஏவலால் வந்திருந்த வேடரைவரும், அவர்கள் தாயும், புரோசனனும் தீக்கிரையாகும்படி தானே அம்மாளிகையில் நெருப்பிட்டுக் கொளுத்திவிட்டுக் குந்தியையும்,



சகோதரரையும் தூக்கிக்கொண்டு நிலவறையின் வழியாகச் சென்று ஒரு வனத்திற் சேர்ந்து இடிம்பனைக் கொன்று, தமையன், தாய் முதலியவர்களுடைய கட்டளைப்படி இடிம்பி மணம்புரிந்து சுகம்பெற்றான். அதன்மேல் பாண்டவர்களும் குந்தியும் அங்குவந்த வியாசருடைய கட்டளைப்படி வேத்திரகியஞ் சேர்ந்திருந்தார்கள். அஸ்தினபுரத்திலுள்ளவர்கள், வாரணாவதத்திலுள்ள அரக்குமாளிகையில் வேடவரும் புரோசனனும் இறந்தெரிந்து கிடந்ததைப் பார்த்துப் பாண்டவர்களே யிறந்தனரென்று வருந்தியிருந்தனர். பின்னர் பாஞ்சால நாட்டில் திரௌபதிக்குச் சுயம்வர மேற்படுத்தித் துருபதன் மற்றத் தேசத்து மன்னர்க்கு ஓலைபோக்கிய விசேஷத்தை யுணர்ந்த பாண்டவரைவரும் அங்கு வேற்றுருவோடு சென்று அத்திரௌபதியை மணம்புரிந்து துரியோதனன் முதலியோரோடு போர்செய்துவென்று வெளிப்பட்டனர். அவ்வாறு வெளிப்பட்டதை யுணர்ந்த திருதராஷ்டிரன் உடனே தூதுவரை யனுப்பி அப்பாண்டவர்களை யழைத்து வரும்படிச்செய்து அவர்களுக்குப் பாதிராஜ்ஜியங்கொடுத்துத் தருமனுக்கு மகுடஞ் சூட்டினான். அதன்மேல் தருமன் முதலியோர் தங்கள் முன்னோரிருந்த விடமாகிய காண்டவப் பிரஸ்தமென்னும் வனத்தை உயர்ந்த நகரமாகச்செய்து அதற்கு இந்திரபிரஸ்தமென்று பெயரிட்டு அதில் தங்கி, கிருஷ்ணனுடைய சகாயத்தால் இராசசூயயாகம் முதலியன செய்து மிகுந்த செல்வத்துடனும் கீர்த்தியுடனும் அரசாட்சி புரிந்துகொண் டிருந்தார்கள். அப்படி அவர்கள் வாழ்ந்து வருங் காலத்தில் துரியோதனன் மேலும் அவர்கண்மீது மிகுந்த பொறாமைகொண்டு, அவர்களுடைய வாழ்வைக் கெடுக்கவெண்ணிச் சகுனியோ டாலோசித்து, அவர்களைக் கபடமாக அஸ்தினபுரத்திற்கு வாவழைத்து மாயச்சூதாடுவித்து, அவர்களுடைய செல்வங்களையெல்லாங்கவர்ந்து அவர்களையும் அடிமைகளாக்கித் திரௌபதியைச் சபைக்கிழுத்து வந்து மானபங்கஞ் செய்து முடிவில் பெரியோர்களுடைய சொற்படி அவர்கள் பன்னிரண்டு வருடங்கள்வரை வனவாச

மும், ஒருவருடம் பிறரறியாவண்ணம் நாட்டின் வாசமும் செய்துவந்தால் அவர்களுக்கு அரசு கொடுப்பதாகச் சொல்லி அவர்களைக் காட்டிற்கனுப்ப, அவ்வாறே அவர்கள் சென்று பதின்மூன்று வருடங்களுங் கழித்துவந்து துரியோதனனிடம் உலூகமுனிவனையும், கிருஷ்ணபகவானையுந் தூதனுப்பித் தங்கள் நாட்டைக் கேட்கத் துரியோதனன் கொடாமல் மறுத்தபடியால், உடனே பாண்டவர்கள் படைகளைச்சேர்த்தணிவகுத்து யுத்தத்திற் கெழுந்தனர்; துரியோதனனாதியரும் நால்வகைச் சேனையுடன் போர்க்குப் புறப்பட்டனர். இருபக்கத்துச் சேனைகளும் குரு க்ஷேத்திரத்தில் நெருங்கி அணிவகுத்துநிற்குங்காலத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவான் சாரதியாயமைந்து தேர் செலுத்த, அருச்சுனன் போர்முனையிற் சென்று அங்குக் கூடியிருந்தவர்களை நோக்கி, "அந்தோ! இங்குக் கூடிநிற்கின்றவரெல்லோரும் என்னுடைய சுற்றத்தவர்களாயிருக்கின்றார்கள்; இவர்களைக் கொன்று யானடையும் பயன் யாது?" என்று கிருஷ்ணமூர்த்தியிடம் சொல்லி "யுத்தஞ்செய்யமாட்டேன்" என்று தெரிவிக்க, அப்போது அந்தக்கிருஷ்ணபகவான் அவனுக்கேற்பட்ட மாயையை ஒழித்து உண்மை ஞானத்தை விளக்கிக்காட்டி அவனை யுத்தத்திற் பிரவேசிக்கும்படிச் செய்யக்கருதி இந்தக் கீதையை உபதேசித்தார். சஞ்சயர், வேதவியாசருடைய கிருபாகடாக்ஷத்தால் இதனையுணர்ந்து திருதாஷ்டிரனுக்குக் கூறினார்.

வேதவியாசர்: இருக்கு, தைத்திரியம், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களையும் பிரித்து ஒழுங்குசெய்து அவற்றிலுள்ள ஐதரேயமுதலிய அநேக சாகைகளில் ஒவ்வொரு சாகைகளையும் பைலர், வைசம்பாயனர் முதலிய மாணாக்கர் மூலம் விருத்தி செய்வித்துப் பின்னர் அவ்வேதார்த்தங்கள் மிகவும் இரகசியமானவை யாதலால் அவற்றை எல்லோரும் அறிதல் முடியாதென்றும், அவ்வாறு அறிய முடியாதவர்கள் எளிதில் அவ்விரகசியங்களை யுணர்ந்து அறம் பொருள் இன்பம் வீடென்னும் நான்கு புருஷார்த்தங்களையு மடைதற்குரிய ஒரு நூலைச் செய்யவேண்டுமென்றுங் கருதி அவர்கள்மீது கிருபைகூர்ந்து, தர்மார்த்த காம மோக்ஷமென்னும் நாற்பயன்களையு முபதேசிப்பதும், மேற்கூறிய பாண்டவர் துரியோதனனாதியர் முதலியவர்களுடைய சரித்திரங்களை விளக்கிக் காட்டுவதுமாகிய பாரதமென்னும் இதிகாசத்தை வடமொழியில் இலட்சம் சுலோகங்களில் செய்தகாலத்தில், அவ்விதிகாசத்தினிடையே நக்ஷத்திரக் கூட்டங்களுக்கு மத்தியில் சந்திரமண்டல மிருந்ததுபோல விளங்கும்படி, உபநிஷத்தென்றும், பிரமவித்தையென்றும் கூறப்படும் அத்வைதரூபமான இந்தக் கீதையை அமிர்தம் போன்ற எழுநூறு சுலோகங்களில், மேற்கூறியபடி சஞ்சயருணர்ந்து திரதராஷ்டிரனுக்குச் சொன்னதாகக் கிரமப்படி திருவாய்மலர்ந்தருளினார். இது கர்மம், உபாசனை, ஞானம் என்னும் மூன்றுகாண்டங்களாகவும், பதினெட்டு அத்தியாயங்களாகவும் வகுக்கப்பெற்றுள்ளது. பிற்பட்ட காலத்தில் ஸ்ரீ பட்டனாரென்பவர், தமிழர்க்குப் பயன்படுமாறு இதனை வடமொழிக்கிணங்கத்தமிழ்க் கவிகளாற் செய்தருளினார். அச்செய்யுட்களின் கருத்தைத் தழுவி இறைவனருளால் இப்பொழுது இந்தப் பகவற்கீதை வசனத்தை நான் எழுதுகிறேன்.



---

## நூல்.

### முதலாவது
### அருச்சுனன் சோகவத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

"புண்ணிய பூமி யென்று புகழ்குரு பூமி தன்னில்
நண்ணிய பின்னை நண்ணா தவர்களு நமரு மாங்குக்
கண்ணிய தெதனை யென்று கண்ணிலா வரசன் கேட்பத்
தண்ணிய வினிய சொல்லாற் சஞ்சய னுரைக்க லுற்றான்."

மேற்கூறியபடி பாண்டவர்களுடைய சேனையும், துரியோதனன் சேனையுந் திரண்டு குருக்ஷேத்திரத்தில் நெரு

ங்கி யுத்தஞ் செய்யத் தொடங்கி நிற்குங்காலத்தில் அஸ்தினாபுரத்தில் திருதராஷ்டிர மகாராஜன், “இந்த யுத்தத்தால் என்ன தீங்கு நேருமோ? நம் புத்திரர்களுக்கு ஜெய முண்டாகுமோ? உண்டாகமாட்டாதோ? அவர்கள் உயிருடன் நிலைபெறுவார்களோ அல்லது அழிந்துபோவார்களோ?” என்று பலவாறு சிந்தித்துக்கொண்டிருந்தான். அத்தருணத்தில் வேதவியாச மஹாமுனிவர் அவனிடம்வந்தார். அவரைக் கண்டமாத்திரத்தில் திருதராஷ்டிரன் அவருக்கு வணக்கஞ் செய்து அவரை நோக்கி, “முனிசிரேஷ்டரே! இப்போது என் மகனுக்கும் பாண்டவர்களுக்கும் ஏற்பட்டிருக்கும் யுத்தம் எவ்வாறு முடியுமோவென்று மனங் கலங்கியிருக்கின்றனன்; நீர் திரிகாலமு முணர்ந்த ஞானி யாகையால் இந்த யுத்தத்தின் முடிவு இன்னதாகு மென்பதை எனக்குக் கூறி என் மனக் கலக்கத்தைத் தீர்த்தருளுவீராக,” என்று கூறினான். அவனுடைய வார்த்தைகளைக் கேட்டவுடனே வியாச பகவான் அவனை நோக்கி, “அரசனே! ஸ்ரீ விஷ்ணு பகவானானவர் பூமிபாரந் தீர்க்கவேண்டி இப்போது கிருஷ்ண மூர்த்தியாக அவதரித்து வந்திருக்கிறார்; எல்லா விஷயங்களும் அவருடைய செயலாலேயே நடக்கின்றன; யுத்தத்தில் கூடியிருக்கிற சேனைகளுக்கெல்லாம் முடிவுகாலம் சமீபித்திருக்கிறது; எவர் வேண்டாமென்று தடுத்தாலும் இச்சேனைகளிலுள்ள வீரர்கள் யுத்தத்தை நிறுத்தமாட்டார்கள்; உன்னுடைய சுற்றத்தார்கள் மடிந்துபோவது நிச்சயம்; அவர்களைப்பற்றி நீ சிந்திப்பதாற் பயனில்லை; தினந்தோறும் யுத்த பூமியில் நடக்கும் விசேஷங்களைத் திரிகால ஞானியாகிய சஞ்சயர் என்னுடைய அனுக்கிரகத்தாலறிந்து உனக்கறிவிப்பார்; எல்லாம் பகவானுடைய நோக்கப்படியே நடக்கும்; நீ மனங் கலங்காதிருப்பாயாக,” என்றுரைத்துவிட்டுத் தம்முடைய ஆச்சிரமத்திற்கெழுந்தருளினார். அதன்மேல் திருதராஷ்டிரமகாராஜன் தனித்திருந்து தன் மக்களைப்பற்றிச் சிந்தித்துக்கொண்டிருந்தான். அத்தருணத்தில் யுத்தகாரியங்களை அறிந்து தெரிவிப்பவராகிய சஞ்சயர் அவனிடம் வந்



தார். திருதராஷ்டிரன் அவரைக்கண்ட மாத்திரத்தில், “வியாசர் கூறியபடி இந்த யுத்தம் நிற்காமல் நடைபெறக் கூடியதாயிருந்தாலும், குருக்ஷேத்திரம் மிகவும் புண்ணியபூமியாதலால் அதில் சென்றவிசேஷத்தாலும், பாண்டவர்கள் இயற்கையிலேயே தருமசிந்தனை யுடையவர்க ளாதலால் அவர்களுடைய நற்குணத்தாலும், அவர்கள் இரண்டுபக்கத்திலு முண்டாகும் ஜீவஹிம்சையினா லேற்படும் பாவத்திற்கஞ்சித் தங்கள் மனத்தில் இக்கொலைத்தொழில் கூடாதென்னும் எண்ணத்தை வைத்து ஒருவாறு இந்த யுத்தத்தைக் கைவிட்டாலும் விடக்கூடும்; அப்படி விடுவார்களாயின் நம்புத்திரர் இராஜ்ஜியத்தைப் பெற்றுச் சுகமாக வாழ்வார்கள்; அவ்வாறின்றிப்பாபசிந்தனையுடையவர்களாகிய நம்புத்திரர்க்கே அந்தக்குருக்ஷேத்திரத்தின் மகிமையால் அந்தக்கரணசுத்தியுண்டாகி அதனாற் பச்சாதாபமடைந்து, முன்னே பாண்டவரிடங் கபடமாகக் கொண்ட இராஜ்ஜியத்தை அவரிடமே மீண்டும் கொடுத்தாலுங் கொடுக்கக்கூடும்; அவ்வாறு அவர்கள் கொடுத்துவிடுவார்களேயானால் யுத்தமில்லாம லொழிந்துபோகும்; அவ்வாறொழியினும் நம்புத்திரர் செல்வத்திற் குறைந்தவராகி நாசமடைவர்; ஆதலால், இக்காரியங்களில் ஏதேனும் குருக்ஷேத்திரத்தில் நடந்ததா வென்பதை இந்தச் சஞ்சயரிடம் கேட்டுத் தெரிந்துகொள்வோம்,” என்று தனக்குட் சிந்தித்து, உடனே அந்தக் கண்ணில்லா வரசனாகிய திருதராஷ்டிரன் சஞ்சயரை நோக்கி, “சஞ்சயரே! தன்னிடம் வாசஞ் செய்வோர்க்கு, அவ்வாறு வாசஞ்செய்த மாத்திரத்திலேயே தருமத்தையும், தருமத்தின்பலனையும் கொடுக்கும்விசேஷத்தால் தருமக்ஷேத்திரமென்று நூல்களாற் புகழ்ந்து கூறப்பட்ட குருக்ஷேத்திரத்திலே சத்துருக்களாகிய பாண்டுபுத்திரர்களும், நம்முடைய புத்திரரான துரியோதனன் முதலியவர்களும் போர் செய்வதில் விருப்புடையவர்களாய் நெருங்கிக் கூடியபின்னர் அவ்விடத்தில் என்ன காரியத்தைக் கருதிச் செய்தார்கள்? அவ்விவரத்தை எனக்கு விளக்கமாகக் கூறுவீராக?” என்று வினவினான்.

அவ்வாறு அவ்வரசன் கேட்கவே, சஞ்சயர் குளிர்ச்சி பொருந்தியதும், கேட்போர்க்கு விருப்பத்தை அதிகரிக்கச் செய்வதுமாகிய தம்முடைய வசனத்தால் அவனுக்கு விடைகூறத்தொடங்கினவராய் அவனை நோக்கி, "திருதராஷ்டிர மன்னரே! கேட்பீராக; ஸ்ரீ கிருஷ்ணபகவான் இங்கு தூதுவராகவந்துபோய்த் துரியோதனன் அரசு கொடுக்க மறுத்ததைத் தருமராஜனிடங் கூறியவுடனே அத்தருமன் மிகுந்த கோபமுடையவனாப் போர் செய்ய வெண்ணி அத்தருணமே படைத்துணையாக வரும்படி தனக்கிதஞ் செய்வோராகிய பலதேயத்தரசர்களுக்கும் நிருபமெழுதி யனுப்ப அந்நிருபத்தைப் பார்த்தமாத்திரத்தில் பாஞ்சாலதேசத் தரசனாகிய துருபதன், அவன் புத்திரராகிய திட்டத்துய்மன், திட்டகேது, சிகண்டி, உத்தமோசா, உதாமன் முதலியவர்களும், விராடபூபதி, அவன் புத்திரராகிய சதானிகன், சிவேதன், வராககேது, உத்தரகுமாரன் முதலியவர்களும், சேரநாட்டரசரும், சோழநாட்டரசரும், பாண்டிநாட்டரசரும், கேகயதேசத்தரசர்களும், குந்திபோசன் முதலிய யாதவவரசர்கள் பலரும், வீமன் புத்திரனாகிய கடோற்கசனும், அருச்சுனன் புத்திரராகிய அபிமன், இராவான் ஆகியவர்களும், தருமன் முதலிய ஐவருக்கும் முறையே திரௌபதியிடம் பிறந்த உபபாண்டவராகிய பிரதிவிந்தியன், சுருதசோமன், சுருதகீர்த்தி, சதாநீகன், சுருதசேனன் ஆகிய ஐவரும், சீனர், சாவகர், மத்திரர், மாளவர், தெலுங்கர், கலிங்கர், சோனகர், கன்னடர், மாகதர், துலுக்கர், குச்சரர், ஒட்டர்முதலிய பதினெண்பாஷைகள் வழங்கும் தேயங்களின் அரசரும், இன்னும் எட்டுத் திக்குகளிலுமுள்ள பல அரசர்களும் பாண்டவர்க்குப் படைத்துணைவராக வந்து சேர்ந்தார்கள். அவ்வாறு வந்து கூடவே அவர்களுக்கு ஏழக்குரோணி சேனைகள் கூடின.

நம்முடைய துரியோதனனும் அவ்வாறே தனக்குரியவர்க்குத் திருமுக மெழுதியனுப்ப, மகததேசாதிபதியாகிய சராசந்தன் புத்திரன் சகதேவனும், அவந்திதேசத்தரசராகிய விந்தரன், விந்தன் ஆகியவர்களும், பாண்டவர்களுக்குப் படைத்துணைவந்த கலிங்கம், தெலுங்கு, கேகயம், காம்போசம், மாளவம்முதலிய பலதேசத்தரசர்களின் தாயத்தார்களாகிய சந்தனு சகோதரனான பாகிலிகன் புத்திரன் சோமதத்தன், தௌசிகன், காம்பிலீசன், போசன், திகத்தபூபன், கவுண்டராசன் முதலிய அரசரும், பாண்டவர்க்குப் படைத்துணையாக வந்து துரியோதனன்செய்த தந்திரத்தால்அப்பாண்டவரோடு சேரமுடியாமல் இந்தப்பக்கத்திற் சேர்ந்த சல்லியனும், சகுனியும், கிருஷ்ணனுக்குக் கோவியரிடம் பிறந்த பதினாயிரம் நாராயணகோபாலரும், சோமதத்தன் முதன்மகனாகிய பூரியும், கௌரிமாவென்னு மரசனும், இன்னும் பலரும் வந்து சேர்ந்தார்கள். இவர்களோடு அசுவத்தாமா, துரியோதனன் தம்பியாகிய துச்சாதனன் முதலியவர்கள், வீஷ்டுமர், கிருபர், துரோணர், விகத்தசேனன், நரகாசுரன் புத்திரனாகிய பகதத்தன் ஆகிய எல்லோரும் கூடினார்கள். அவ்வாறு யாவரும் கூடவே நம் துரியோதனன் பக்கத்தில் பதினோரக்குரோணி சேனைகள் சேர்ந்தன.



மேற்கூறியபடி இருபக்கத்துப் படைகளும் குருக்ஷேத்திரத்திற் கூடியபின்பு பாண்டவர்கள் தங்கள் சேனைக்கு விராடன் புத்திரனாகிய சிவேதனை அதிபதியாக்கினார்கள்; துரியோதனன் தன்னுடைய சேனைக்கு வீஷ்டுமரை அதிபதியாக்கினான். அதன்மேல் ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய கட்டளைப்படி பாண்டவர் சேனாதிபதியாகிய சிவேதன், தன்னையும், வீமனையும், அருச்சுனனையும், அபிமனையும் * அதிரதாதிபராகவும், சிகண்டி, சாத்தகி, திட்டத்துய்மன், விராடன், தருமன் ஆகியவர்களை மகாரதாதிபராகவும், † யாகசேனன்

* ஒருவனாகவே நின்று அளவிறந்த வீரர்களோடு யுத்தஞ்செய்பவனும். கைவிடாப்படையாகிய சஸ்திரசாஸ்திரத்தில் மிகவுஞ் சாமர்த்தியனுமாகியவன் அதிரதாதிபன்; கையில் வில்லையுடைய பதினாயிரம் வீரர்களோடு ஒருவனாகவே நின்று யுத்தஞ் செய்பவனும், கைவிடாப் படையாகிய சஸ்திர சாஸ்திரத்தில் மிகவுஞ் சாமர்த்தியனுமாகியவன் மகாரதாதிபன்; ஒரு வீரனோடு யுத்தஞ் செய்பவன் சமரதன்; சமரதனினுங் குறைந்த பலமுள்ளவன் அர்த்தரதன்.

† யாகசேனன் - துருபதன்.

உதாமன், உத்தமபானு ஆகியவர்களைச் சமரதாதிபராகவும், நகுலன், சகாதேவன், கடோற்கசன் ஆகியவர்களை அர்த்தரதாதிபராகவும் ஏற்படுத்திப் படைகளை அணிவகுத்தான். வீஷ்டுமர், துரியோதனன் சொற்படி தம்மையும், துரோணாசாரியரையும், அசுவத்தாமனையும், சோமதத்தன் இரண்டாம் புத்திரனாகிய பூரிசிரவாவையும் அதிரதத்தலைவராகவும்; சோமதத்தன், பகதத்தன், துரியோதனன் தம்பியாகிய துன்மருடணன் ஆகியவர்களை மகாரதத்தலைவராகவும், யதுகுலத்திற் றோன்றிய ஹிருதிகன் மகனாகிய கிருதபன்மன், துரியோதனன், கிருபன், சகுனி, சல்லியன், சயத்திரதன் ஆகியவர்களைச் சமரதத்தலைவராகவும், கன்னனையும், அவன் புத்திரனாகிய விருடசேனனையும் அர்த்தரதத் தலைவராகவும் ஏற்படுத்திச் சேனைகளை அணிவகுத்தனர். அவ்வாறு அணிவகுத்த பின்பு இரண்டுபக்கத்துச் சேனைகளும் ஆயுதங்களுடன் யுத்தத்திற்கு ஆயத்தமாகி நின்றன.

அப்படி நிற்கும்போது இரணபேரிகை முழங்கும் சேனைகளையும், சர்ப்பக் கொடியையுமுடைய துரியோதன மகாராஜன், சிவேதன், திட்டத்துய்மன், வீமன் முதலியவர்களால் வியூகஞ்செய்யப்பட்டு வீராவேசத்தோடு போர்செய்வதற்கு யுத்தமுகத்தில் நின்ற பாண்டவர்களுடைய சேனைகளைப்பார்த்து, உடனே வில்யுத்தத்தில் வீராகிய துரோணாசாரியரை நோக்கி, அழகிய மேக கெர்ச்சிதம்போலச் சில வார்த்தைகள் கூறத்தொடங்கினவனாய், "சிறந்த குதிரைகள் பூட்டிய இரதத்தையுடைய ஆசிரியரே! யுத்தத்தில் நிகரற்ற வீமனும், அருச்சுனனும், அவர்களை நிகர்த்த வில்வீராகிய விராடன், துருபதன், திட்டகேது, குந்திபோசன் முதலிய அரசர்களும், அழகிய வில்லையுடைய அபிமன்யு முதலிய பலரும் அதிரத மகாரத சமரத அர்த்தரதத் தலைவர்களாகி இங்கே திரண்ட பாண்டவர்களுடைய சேனைக்கூட்டத்தை நீர் கண்ணால் பாரும்; அவை மிகக் களிப்போடு நிற்கின்றன; நம்முடைய சேனையிலும், கங்காபுத்திரரான வீஷ்டுமரும், யாவ



ரும் புகழாநின்ற என்னுயிர்த்தோழரும் அங்கதேசாதிபதியுமாகிய கர்ணனும், நமது செல்வத்துணைவனான அசுவத்தாமாவும், துரோணாசாரியாராகிய நீரும், சயத்திரதனும், கிருபாசாரியரும், இன்னும் அநேகம் அரசர்களும் எனக்கு வெற்றியுண்டாதலையே உங்களுக்குரிய செல்வமாக விரும்பியிருக்கின்றீரல்லாமல் வேறொன்றையும் விரும்பவில்லை; அன்றியும், எனக்கொருதோஷ முண்டாகுமேயானால் நீங்களெல்லோரும் உங்களுயிரைக் கொடுத்தேனும் அதனைப் போக்குதலை மேற்கொண்டிருக்கின்றீர்கள்; நீங்கள் இவ்வாறமைந்திருப்பதனால் எனக்கொன்றும் குறைவில்லை; ஆயினும், சேனாதிபதியாக அமைந்த எங்கள் பாட்டனாரான வீஷ்டுமாசாரியருடைய ஏவலால் பல படைத்தலைவர்களாலும் இரட்சிக்கப்பட்டிருக்கின்ற கடல்போன்ற நம்முடைய சேனைக் கூட்டத்தைப் பார்க்கும்போது இது, சிவேதன், திட்டத்துய்மன், கொடிய யுத்தத்தைச் செய்யும் வீமன் முதலியவர்களால் யாவரும் அதிசயிக்கும்படி இரட்சிக்கப்படுகின்ற பாண்டவருடைய சேனைக்கு ஆற்றும்படியான அவ்வளவு வல்லமையுடையதாகுமோ என ஒரு ஐயம் நிகழ்கின்றது. அப்படியிருப்பினும் நாம் மனந்தளராமல் நம்முடைய வல்லமையைச் செலுத்தி முடிவில் வெற்றியடைவோம்; நம்முடைய சேனாதிபதியான வீஷ்டுமர் இப்போதேற்பட்டிருக்கும் யுத்த காரியங்களை நடத்தும் வேகத்தால் முன்பின் பக்கங்களைப் பாராராகையால் அவருக்குப் பக்கங்களில் எதிரிகளால் எவ்வித தீங்கும் நேராதபடி எந்த எந்த திக்கில் எந்த எந்தச் சேனைகள் நிற்கவேண்டுமோ அந்த அந்த திக்கில் அந்த அந்தச் சேனைகளை நிறுத்தி, நீங்களும் அவரவர் நிற்கவேண்டிய ஸ்தானங்களில் சாக்கிரதையாக நின்று அந்த வீஷ்டுமரைக் காத்துக்கொள்வீராக," என்று கூறினான்.

அவ்வாறு சொன்னமாத்திரத்தில் துரோணர் முதலிய எல்லோரும் அப்படியே அணிவகுத்து வீஷ்டுமரைச் சூழ்ந்து நின்றார்கள். அப்போது வலிமையுடைய யாதவர்களாலும்

மற்றைப் படைகளாலும், படைத்தலைவர்களாலும் அரணாகச் சூழப்பட்ட கங்காபுத்திரரான வீஷ்டுமர் தம்முடைய படைகளுக்கு உற்சாகத்தை யுண்டாக்கக் கருதி உடனே சிம்மநாதஞ் செய்து திரண்ட வெண்சங்கத்தையும் வாயில் வைத்தவராகி, 'வஞ்சகரான துரியோதனாதியர் பாண்டவர்க்குச் செய்த வஞ்சகத்தொழிலே, நமனுக்கு அவருயிர் உணவாகும்படி இந்தக் கொடிய யுத்தத்தை விளைத்தது,' என்று யாவரும் சொல்லவும், அரசர்க்கரசனான துரியோதனன் மனமானது அக்காலத்திலேற்பட்ட நிலையற்றதாகிய அற்பசந்தோஷத்தை யடையவும், சத்துருக்களாயினோர் மனத்திற் பயமெய்தவும், சினந்தூதி ஆர்த்தனர். அவ்வாறு வீஷ்டுமர் சிம்மநாதஞ் செய்து சங்கத்தையும் வாயில் வைத்து முழக்கியார்க்கவே, துரியோதனனுடைய சேனைகளில் எவ்விடத்தும் அனேக சங்கங்கள் முழங்கின; எண்ணிறந்த வாத்தியங்கள் சப்தித்தன. அவ்வாறு போர்முகத்தில் திரண்ட துரியோதனனுடைய சேனைகள் அநேகம் சங்கங்களையும், இரணபேரி முதலான பலவகை வாத்தியங்களையும் முழக்கி ஆர்ப்பரிக்கவே பாண்டவர் சேனையும் வீராவேசத்தோடு முன் சென்று ஆர்ப்பரிக்கத் தொடங்கின. அப்போது அருச்சுனனுக்குத் தேர்ப்பாகராக அமைந்து அத்தேரை நடத்தியவரும், பதினாலுலகங்களையும் பெற்ற கடவுளுமாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானும், பாஞ்சஜந்நிய மென்னும் தமது திவ்விய சங்கத்தை, செந்தாமரை மலர்போன்ற திருக்கரத்திலெடுத்துக்கொண்டு, எழுமேகங்களும் திரண்டு முழங்கினாற்போலவும், சப்த சமுத்திரங்களும் பொங்கியெழுந்து சப்தித்தாற் போலவும், பூமி முழுவதையும் முற்காலத்தில் அள்ளி உண்ணாநிற்கும் சிவந்த பவளம்போன்ற அதரங்களையுடைய வாயில் வைத்து முழக்கினார். அந்தப் பாஞ்சஜந்நியத்தின் தொனியானது எப்படியிருந்ததெனில், 'துரியோதனாதியரே! பாண்டவ ரைவரும் எனக்குப் பிராணன்போன்றவராதலினாலே அவர்களுக்கு இந்த யுத்தத்தில் பிழைத்தலுண்டு; உங்களுக்குத் தப்பிப் பிழைக்கும்படியான தன்மை



இல்லை,' என்று அண்டகடாகமறிய அக்கிருஷ்ணபகவான் சொன்னதை நிகர்த்திருந்தது. அவ்வாறு ஸ்ரீ கிருஷ்ணபகவான் சங்கத்தொனி செய்தபின்னர் தருமன் அனந்தவிஜயமென்னும் சங்கத்தையும், வீமன் பௌண்டரமென்னும் சங்கத்தையும், அருச்சுனன் தேவதத்தமென்னும் சங்கத்தையும், நகுலன் சுகோடம் என்னும் சங்கத்தையும், சகாதேவன் மணிபுட்பகமென்னும் சங்கத்தையும், இடியையொப்பான தொனியுண்டாகி எதிரிகளுடைய செவிகளை அடைக்கும்படி ஊதினார்கள். இன்னும் சிவேதன், திட்டத்துய்மன், சிகண்டி, சாத்தகி, விராடன் முதலிய பலவரசரும் பல சங்கங்களை வெவ்வே றோசைகளாகத் தொனிக்கும்படி ஊதினார்கள். அப்படி எல்லோரும் ஊதிய வெள்ளிய சங்கங்களின் தொனிகளானவை சென்று யுத்தபூமியில் எதிர்த்து நின்ற குருகுல வேந்தர்களுடைய இருதயங்களைக் கலங்கும்படிச்செய்து, ஆகாயத்திலும் பூமியிலும் பிரதித்தொனிகளையுண்டாக்கி நிறைந்தன. அதன்மேல் வெற்றியைத்தரும்படியான யுத்தத்தைச் செய்ய எல்லோரும் தொடங்கினார்கள். அவ்வாறு யாவரும் போரை ஆரம்பிக்குந் தருணத்தில் வெள்ளைநிறமான குதிரைகளைப் பூட்டிக் கிருஷ்ணபகவானால் நடத்தப்பட்ட இரதத்தின்மீதேறிக் காண்டீபமென்னும் வில்லைக் கையிற்றாங்கி யுத்தசன்னத்தனாய் நின்ற அருச்சுனன் ஒரு வார்த்தையை ஸ்ரீ கிருஷ்ணபகவான் எதிரில் மிகவும் தளர்ச்சியுடனே சொல்லத் தொடங்கினான்.

அவ்வாறு கூறத்தொடங்கிய அவ்வருச்சுனன் ஸ்ரீ கிருஷ்ணபகவானை நோக்கி, “எல்லாவுலகங்களையும் சிருஷ்டித்து, அவற்றை யிரட்சித்துப் பின்பு அவ்வுலகங்களைச் சம்மரிக்கும் ஸ்ரீ கண்ணபிரானே! 'வீஷ்டுமர், துரோணர் முதலிய வீரருள்ளே எவர் எம்மோடு யுத்தஞ்செய்ய விரும்பி இந்த ரணகளத்தில் வந்து சேர்ந்திருக்கின்றனர்? நம்மெதிரே வந்து சேர்ந்து நிற்கின்ற இவ்வீரர்களுக்குள்ளே நாம் எவரோடு யுத்தஞ் செய்யத் தொடங்கலாம்?' என்று இப்போது நான்

ஆராய்ந் தறிந்துகொள்ள விரும்புகின்றேன்; ஆதலின், நான் அவ்வாறு மேற்கூறிய விஷயங்களை ஆராய்ந்தறியும் வரையிலும் நான் விரும்பும்படி நீர் கருணையினால் நடத்தும் அசுவங்களைப் பூண்டிருக்கின்ற எனது இரதத்தை இரண்டு சேனைகளுக்கும் மத்தியில் நிறுத்துவீராக,'' என்று கூறினான். அவ்வாறு அருச்சுனன் சொல்லிப் பிரார்த்தித்தவுடனே மேகம்போன்ற நிறத்தினையுடையவராகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர், வெள்ளைப்புரவிகள் பூட்டி நடத்தப்படும் அவ்வருச்சுனனுடைய இரதத்தைப் போர்க்களம் நிறையும்படி நின்ற இரண்டு சேனைகளுக்கும் மத்தியிற் செலுத்தி வீஷ்டுமர், துரோணர் முதலிய வீரர்களுக்கெதிரே நிறுத்தி, 'அருச்சுனா! இங்கே ஒன்றாகத் திரண்டிருக்கின்ற இந்தக் கௌரவ சேனையை உன்னிஷ்டப்படியே பார்,' என்றுரைத்தார். அப்படி யுரைக்கவே அருச்சுனன், பெருமை பொருந்திய வீஷ்டுமர் முதலாகக் கிரீடத்தைத் தரித்துநின்ற பந்துக்களான அரசர்களெல்லோரையும் நன்றாக நேரில் பார்த்துக் கிருபையோடு கூடினவனாய்த் தடுமாறுகின்ற வசனத்தோடும், கலங்குகின்ற மனத்தோடும் தன் சக்திக்கேற்றவாறு ஸ்ரீ கிருஷ்ணபகவானிடத்தில் சில வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினான்.

அங்ஙனந் தொடங்கிய அவன் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் திருமுகத்தைப் பார்த்து, ''சுவாமி! பூரிசிரவன் முதலியோரான வருத்தமற்ற அறிய பிதாக்களும், வீஷ்டுமர் சோமதத்தர் முதலிய பாட்டன்மாரும், துரியோதனன் முதலிய சகோதரர்களும், துரோணர் கிருபர் முதலிய ஆசிரியர்களும், பிராணனைப்போலும் சிநேகிதரான அசுவத்தாமா சயத்திரதன் முதலியோரும், அறிவுடைய பெரியோர்களான கிருதவர்மா, பகதத்தன் முதலியவர்களும், பின்னும் உபகாரஞ் செய்பவர்களான மாதாவின் பிதாக்கள் முதலிய பெரியோரும், இந்த யுத்தபூமியில் இராஜ்ஜியத்தை விரும்பிப் போர் புரியவந்த எங்கள் பொருட்டாகத் தம்முடைய உயிர்களை



விடத்தொடங்கி நிற்கின்றார்கள். இன்னும் குற்றமற்ற இலக்கணகுமாரன் முதலிய புத்திரரும், அவர்களுக்குப் பிள்ளைகளும், சல்லியன் சகுனி முதலிய மாமன்மாரும் ஆகிய பந்துக்களும் மடியப்போகின்றார்கள்; இஃதென்ன பாவம்!'' என்று சொல்லி அச்சுற்றத்தார்மீது கிருபையைச் செலுத்தி அந்தப் பக்ஷதாபத்தினாலேற்பட்ட துன்பத்தால் கலங்கினான். அப்படிக் கலங்கிய அவன் மீண்டும் அந்தக் கிருஷ்ணபகவானுக்கெதிரே சில வார்த்தைகளைக் கூறத் தொடங்கினவனாய் அவரை நோக்கி, ''தாயையொப்பான ஸ்ரீபகவானே! யுத்தத்தில் விருப்பத்தோடுகூடி இந்த ரணக்களத்தில் நிற்கின்ற வீஷ்டுமர்முதலிய என் சுற்றத்தார்களைப் பார்க்குந்தோறும் சோகத்தால் என் வாக்குத் தடுமாறுவதுந் தவிர முகமும் மலர்ச்சியடையாமல் வாடுகின்றது; மனமானது செய்வ தின்னதென்று ஒன்றையு முணராமற் சுழலுகின்றது; நெருப்பென்று சொல்லும்படி சரீரமானது மிகவும் வெப்பமுற்று வாடுகின்றது; செவ்வையாக நிற்க என்றால் முடியவில்லை; மூங்கிலாலே செய்யப்பட்ட வலிமை பொருந்திய காண்டிபமென்னும் என்னுடைய வில்லும் என் கையைவிட்டு நழுவிக் கீழே விழுகின்றது; சொற்பகாலத்திற்குள் துன்ப மடைவதைத் தெரிவிக்கும் இடக்கண் துடித்தல் முதலிய பல விபரீத நிமித்தங்கள் அநேகமா யுண்டாகின்றன; ஸ்ரீ பகவானே! இந்த யுத்தத்தில் வீஷ்டுமர் முதலாகிய பந்து ஜனங்களை நான் சம்மரித்து அடையும் பிரயோசன மொன்றையுங் கண்டிலேன்; இவ்வாறு பந்துக்களைக் கொல்வதில் வேறு பிரயோசன மொன்று மேற்படாமையினால் வெற்றி முதலியவற்றில் எனக் கிச்சையில்லை; நீர், சத்துரு ஜெயத்தோடு அரசாட்சியை அடைதலே எனக்குண்டாம் பிரயோசனமென்று சொல்லக்கூடும்; எனக் கவற்றில் மேற்கூறியபடி இச்சை யில்லாதபடியால் அவை பிரயோசனமாகமாட்டா; அப்படியிருக்க நீர் இவ்வாறு அபிப்பிராயப்படுவது யாது காரணத்தாலோ? எனக்கதனைக் கூறுவீராக; இன்னும், 'விருத்தரான மாதா பிதா முதலியவர்களைப் போஷிக்கும்பொருட்டு

ஒரு புருஷன் அதர்மத்தைச் செய்யினும் அது தோஷமாக மாட்டாதென்று மனு கூறியிருப்பதால் உனக்கு இராஜ்ஜியம் முதலியவற்றில் இச்சை யில்லையாயினும் உனது சுற்றத்தாரின் சௌக்கியத்தின் பொருட்டு நீ யுத்தத்திற் பிரவேசிக்க வேண்டும்,' என்று நீர் சொல்லக்கூடும்; மலையை நிகர்த்த புஜங்களையுடைய ஸ்ரீ பகவானே! இராஜ்ஜியம், அவ்விராஜ்ஜியத்தால் வரும் அனுபவத்திற்கேதுவான விஷயங்கள், அவற்றால் அடையும் சுகம் ஆகியவற்றை, எவரைப் போஷிக்கும் நிமித்தம் உலகிலுள்ளோர் பிரயாசைப்பட்டு அடைவாரோ அச்சுற்றத்தாரே தம் பொருள்களிலும், ஆயுளிலும் இச்சை வைக்காமல் வந்து போரில் இறக்கத் துணிவுகொண்டு நிற்பார்களேயானால் அவர்பொருட்டு யுத்தஞ் செய்து வெற்றி பெறுவதால் யாது பயனுண்டாகும்? இப்போது நான் மனு சாஸ்திர முறைப்படி போஷித்தற்குரிய விருத்தரான ஆசாரியர், பிதாக்கள், பாட்டன்மார், புத்திரர், பௌத்திரர் முதலியவர்களே உயிரைப் பெரிதாக நினையாமல் யுத்தத்திற்கு வந்து ஒருவருக்கு முன் ஒருவராக வரிசைபெற்று நிற்கின்றார்கள்; இப்போது நேர்ந்திருக்கும் விஷயம் இத்தன்மையுடையதாயிருப்பதினால், மேற்கூறிய விஷயமும் பொருந்தாது; மனத்தில் கிருபையில்லாமல் இந்த வீஷ்டுமர், துரோணர் முதலியவர்களை நானும் என் சகோதாரும் சேர்ந்து கொல்லுவோமானால் எங்களுக்கு மிகுந்த தோஷமுண்டாகுமே யன்றி எவ்விடத்தும் சிறிதேனும் சுக மேற்படமாட்டாது; இன்னும், 'நீங்கள் கிருபையினால் வீஷ்டுமர் துரோணர் முதலியவர்களைக் கொல்லாவிடினும் இராஜ்ஜிய விருப்பத்தால் அவர்கள் உங்களை அவசியங் கொல்வார்கள்; ஆதலால், இச்செய்கையை உத்தேசித்தேனும் நீயே இவர்களைக் கொன்று உங்களுயிரைக் காப்பாற்றிக்கொண்டு இராஜ்ஜியத்தை அனுபவிக்கக்கடவாய்!' என்று நீர் சொல்லக்கூடும்; இந்த வார்த்தையும் எனக்குச் சம்மதியாயிராது; வரிந்து கட்டப்பட்ட வளைவான வில்லைக்கொண்டு வீஷ்டுமர், துரோணர் முதலியோர் உம்முடைய அபிப்பிராயப்படி எங்களைக் கொன்றாலும், நான்



மனந் துணிந்து இவர்களைக் கொல்லமாட்டேன்; இவர்களைக் கொல்வதால் சுவர்க்க மத்திய பாதாளமென்னும் மூவுலகங்களின் அரசு எனக்குக் கிடைப்பதா யிருந்தாலும் நான் இக்கொலைத்தொழிலுக் குடன்படமாட்டேன்; இத்தகைய நான் மண்ணை மாத்திரம் ஆளும்பொருட்டு இவர்களைக் கொல்லத் துணிவேனோ?

பகவானே! இன்னும், 'நீ ஆசாரியர் முதலியவர்களைக் கொல்லுவதால் தோஷமுண்டாகுமென்று நினைத்து அவர்களைக் கொல்லாவிடினும், உங்களை அரக்கு மாளிகையில் வசிக்கும்படிச்செய்து தீமூட்டுவித்தது முதலான அநேகம் தீவினைகளை உங்களுக் கியற்றிய துரியோதனாதியரையேனும் என் கொல்லலாகாது? அவர்களைக் கொல்வதால் என்ன தோஷமுண்டாகும்?' என்று நீர் சொல்லக்கூடும்; அவர்களைக் கொன்று எங்கள் குலத்தை நாசம் செய்வதற்கும் என் மனமிணங்காது; அவர்கள் அறியாமையால் அந்தத் தீங்குகளை எங்களுக்குச் செய்தார்கள்; அரசராயிருப்பவர்கள் தம் குலமானது நாசமாகும் காரியங்களைச் செய்வதால் வந்துசேரும் தோஷத்தையும், மெய்ம்மையுடைய மித்திரர்க்குத் துரோகம் பண்ணுவதால் வந்தடையும் பாதகத்தையும், பாதகரான அத் துரியோதனாதியர் அறியாமல் மறந்தாலும் அவற்றைக் குற்றமென்றறிந்த நான் அவர்களைக் கொன்று குலத்தைக் கெடுக்கத் துணியமாட்டேன்; ஆததாயிகளென்று கூறப்படும் அக்கினியிடுபவன், உணவில் விஷமிடுபவன், ஆயுதபாணியாய்க் கொல்ல வந்தவன், பிறர் பொருளை அபகரிப்பவன், பிறருடைய பூமியை அபகரிப்பவன், அன்னிய ஸ்திரீயை அபகரிப்பவன் ஆகிய அறுவரையும் கண்டமாத்திரத்தில் கொல்லலாமென்று அர்த்தசாஸ்திரங் கூறினும், பிராணிகளுக்கு இம்சை செய்வது தோஷமென்று தருமசாஸ்திரங் கூறுகின்றது; அர்த்தசாஸ்திரத்தினும் தருமசாஸ்திரம் சிறந்ததாகையால், துரியோதனாதியர் ஆததாயிகளா யிருந்தாலும் அவர்களைக் கொல்வதும் தருமசாஸ்திரப்படி தோஷமாகின்றது.

ஸ்ரீ பகவானே! இன்னுங் கேட்பீராக! மேற்கூறியவாறு தோஷ முண்டாகும்படி பந்துக்களாகிய துரியோதனாதியரைக் கொல்வதால் பல கேடுகள் ஒன்றன்பின் ஒன்றாக வந்தெய்தும்; முதலாவது அவர்களை நாசஞ் செய்வதால் குலம் கெடும்; அவ்வாறு குலம் கெடவே பரம்பரையாக அனுஷ்டித்து வரப்படுகின்ற குலதருமங்க ளெல்லாம் நாசத்தை யடையும்; அந்தத் தருமங்கள் நாசமாகவே குலாசாரம் தவறுவோரைச் சிட்சிக்கத்தக்க விருத்தபுருஷ ரில்லாமையால் எஞ்சிய ஸ்திரீகளும் பாலரும் பொருந்தியிருந்த குலத்தில் அநாசாரமாகிய அதர்மம் வந்து வாசஞ் செய்யும்; அவ்வாறு அதர்மமானது வந்து வாசம் பண்ணவே விளங்குகின்ற ஆபரணங்களை யணிந்த அக்குல ஸ்திரீகள் ஒழுக்கந் தவறி வியபிசாரிகளாவார்; அவ்வாறு அவர்கள் நெறிதவறி வியபிசாரிகளாகவே வருணக்கலப்பான புத்திரர் தோன்றி உலகிற் பொருந்துகின்ற நற்குல முழுதும் ஒழுங்கு தவறி வருணக் கலப்பாகும்; அவ்வா றுண்டான அந்த ஜாதிக் கலப்பானது, அக்குலத்திற் பொருந்தினவர்க்கும், அக்குலத்தைச் சாராமல் வேறாயிருந்து அந்தக் குலம் கெடும்படியான செயலைக் கருதிச் செய்தோருக்கும் கெடாத நரக வாதனையை யுண்டாக்கும்; இன்னும் அந்த ஜாதிபேதத்தா லுண்டாகுந் துன்பங்களை என்னென்று வரையறுத்துக் கூறுவேன்! கேடடைந்த அக்குலத்தில் பூர்வகாலத்தில் இறந்து சுவர்க்கத்தை யடைந்த பிதிர்க்களும் தமக்குப் பொருந்துகின்ற பிண்டக்கிரியை, ஜலக்கிரியைகளைச் செய்யும் புத்திரரைப் பெறாமையினாலே அச்சுவர்க்கத்தினின்றும் நீங்கி இருண்ட நரகங்களில் வீழ்வர்; இன்னும் பரம்பரையாய்க் கலப்பின்றி விருத்தியாகி வருகின்ற குலத்தைச் * சங்கரகுல மாகும்படி பண்ணின குலநாசருக்கும், அச்சங்கர குலத்திற் பொருந்தினவருக்கும் தருமமானது சாராமல் குறைந்து கெடும்; சுருதி ஸ்மிருதி மூலமாயும், பரம்பரையாயும் அடைந்திருக்கிற ஜாதி தருமங்களும், குலதருமங்களும், மேற்கூறியபடி குறைந்து கெடவே

* சங்கரம் - கலப்பு.



அவர்களுக்கு மீளா நரகமானது வந்து பொருந்துமென்று பெரியோர்க ளெல்லோரும் கூறுவர்.

நான் மேற்கூறியபடி குண தோஷங்களை யறிபவனாயிருந்தும், தோன்றி உடனே மறைகின்ற மின்னலைப்போல நிலையற்ற இராஜ்ஜிய சுகத்தை விரும்பித் தங்கள் சரீரத்தையும், ஆயுளையும் போக்கும் பொருட்டு வந்து இங்கே நிற்கின்ற என் பந்துஜனங்களாகிய துரியோதனாதியரைச் சிறிதுநேரத்திற்குமுன் யோசியாமற் கொல்லத் துணிந்து யுத்த சன்னத்தனாய்க் குருக்ஷேத்திரத்திலுள்ள யுத்த களத்திற்கு வந்தேன்; இஃது என்ன ஆச்சரியம்! இவ்வாறு அவர்களை நான் கொல்ல நினைத்துச் சிறிதும் அஞ்சாமல் வீணே கொடுமையான பெரும் பாவத்தைத் தேடிக்கொள்ள முயற்சி செய்தேன்; இது மிகவும் மதியீனமான செய்கை; அவர்கள் என்னைக் கொல்லக்கருதி யுத்தஞ்செய்யினும், யானும் அவர்களோடெதிர்த்து அத்துரியோதனாதியரெதிரே ஆயுதங்களை யெடாதொழித்து யுத்தஞ் செய்யாமல் நின்றால் அவர்கள் என்னைக் கொல்லுவார்களோ? ஒருபோதும் கொல்லமாட்டார்கள்; அவ்வாறின்றி அவர்கள் என்னைக் கொன்றாராயினும் குணதோஷங்களை விசாரித்தறியாநின்ற எனக்கு அக்கொலையைச் சகித்துக்கொள்ளுதலே குணமாகும்; ஆதலால், நான் இப்பொழுது கையில் வில்லைப்பிடித்து யுத்தஞ் செய்பமாட்டேன்," என்று கூறித் தன் கையிற் பிடித்த வில்லுடனே பாணமும் நழுவிக் கீழே விழவும், கண்களில் நீர் சொரியவும், மணிகள் கட்டிச் சப்தியாநின்றதும், ஓடுகின்ற உருளைகளைப் பூண்டதுமாகிய தேரின்மீதிருந்தான்,"' என்றுரைத்தார்.

முதலாவது சோகவத்தியாயம்

முற்றுப்பெற்றது.

---

## இரண்டாவது
## சாங்கியயோகவத்தியாயம்.

கோச்சகக்கலிப்பா.

"இவ்வண்ண மறிவொதுங்க வெழுகின்ற விரக்கத்தாற்
செய்வண்ண மறியாது திகைத்திருந்த தேர்விசய
னுய்வண்ண மதுநாடி யொருவண்ண முலகோதுங்
கைவண்ண மலருடைய கார்வண்ணன் கட்டுரைப்பான்."

மேற்கூறியபடி அருச்சுனன் யுத்தஞ் செய்யச் சம்மதியாமல், ஜீவ இம்சை செய்யாதிருத்தலும், குலநாசஞ்செய்யாதிருத்தலுமே சிறந்ததர்மமென்று ஸ்ரீ கிருஷ்ணபகவானிடம் சொல்லித் தேரில் சோகமுற்றிருந்தானென்று சஞ்சயர் உரைக்கவே திருதராஷ்டிரன் தன் புத்திரர்க்கே இராஜ்ஜியம் நிலைத்து விடுமென்றெண்ணி அற்ப சந்தோஷத்தையடைந்தான். அவ்வாறு அவன் அற்பசந்தோஷமடைவதைச் சஞ்சயரறிந்து மேல் நடந்தவற்றைக் கூறி அந்த அற்பசந்தோஷத்தைநீக்கக் கருதி, உடனே திருதராஷ்டிரனைநோக்கி, "'பூபதியே! நடந்த விஷயத்தை முடிவுறக் கேட்குமுன்னரே நீர் அற்பசந்தோஷத்தை யடையவேண்டாம்; இன்னும் மேல்நடந்தவற்றைக் கேட்பீராக; நான் சொன்ன இந்தப்பிரகாரம் அருச்சுனன், உண்மையறிவானது தன்னைவிட்டு நீங்கும்படி வீஷ்டுமர், துரோணர் முதலியவர்களின் விஷயமாக உண்டாகிய சிநேகரூபமான கிருபையினாலே தான் செய்யும் காரிய மின்னதென்றறியாமல் கண்ணீர் சொரியச் சோகமுற்றுத் தேரிலிருந்தவுடனே, செந்தாமரைமலர்போன்ற திருக்கரங்களையும், மேகம் போன்ற நிறத்தினையும், பெரியோர் ஒரே தன்மையுடைய சச்சிதானந்தப் பொருளாகக் கருதித் துதிக்கும் சிறப்பினையுமுடைய ஸ்ரீ கிருஷ்ணபகவான், அருச்சுனனுக் கேற்பட்ட சோகம் முதலியன நீங்கி, அவன் ஈடேறும்படியான அநேகம் யுத்திகளைத் திருவுளத்தில் நாடி உறுதியாக உரைக்கத் தொடங்கினவராய் அவனை நோக்கி, "ஐயா அருச்சுனா!



நீ மிகவும் அறிவுள்ளவனாயிருந்தும் இப்போது மகாமாயையை யடைந்திருக்கின்றாய்; நீ அடைந்திருக்கும் இந்த மயக்கமானது அவிவேகிகளும், பேடிகளும் அடையத்தக்கது; கெடாத பழிப்பைத் தரத்தக்கது; குறையாத உன்னுடைய விவேகஞானத்தைக் குறைக்கத்தக்கது; துன்பத்தை விளைவிக்கத்தக்க காரியங்களிலே மிகவும் சிரேஷ்டமானது; கெடாத நரகத்திற்றள்ளத்தக்கது; க்ஷத்திரியர்க்குள்ளே சிறந்த உன்னைப்போன்ற புருஷர் கைக்கொள்ளத்தகாதது; இத்தகைய இம்மயக்கம், பொருந்தக்கூடாததான இந்த யுத்தபூமியிலே எவ்வழியினாலே உன்னை வந்தடைந்ததோ? நீ மோக்ஷத்தை யடையவேண்டுமென்று கருதிய இச்சை காரணமாக வந்தடைந்ததோ? அல்லது சுவர்க்கத்தை யடையவேண்டுமென்று கருதிய இச்சையினால் வந்தடைந்ததோ? அல்லது கீர்த்தியை அடைய வேண்டுமென் றெண்ணிய விருப்பத்தால் வந்தடைந்ததோ? அல்லது வேறு ஏதுவினால் வந்தடைந்ததோ? இவற்றுள் இன்ன காரணத்தால் இது வந்தடைந்ததென்பதை யான் அறியேன்; அருச்சுனா! மிகவும் இழிவான இவ்வதைரியமானது, சாட்சாத் மகேசுரனோடும் யுத்தஞ் செய்த மகா சாமர்த்தியசாலியாகிய உனக்குக் கூடாது; நீ இப்பொழுதே இம் மயக்கத்தை நீக்கி, எழுந்து * சுதர்மரூபமான யுத்தத்தில் ஒருமனப்பட்டுப் பிரவேசிப்பாயாக," என்றுரைத்தார்.

கரிய வுருவத்தையும், சிவந்த வாயையுமுடைய ஸ்ரீ பகவான் இவ்வாறு கூறவே, இரதத்தையுடைய அருச்சுனனானவன், மேலும் தன்னுடைய அபிப்பிராயத்தைச் சொல்லத் தொடங்கினவனாய் அவர் திருமுகத்தை நோக்கி, "பகவானே! மனம், வாக்கு, காயம் என்னும் முக்கரணங்களாலும் புஷ்பம், சந்தனம், அட்சதை முதலிய திரவியங்களைக் கொண்டு மிகவும் பூஜிப்பதற்கு யோக்கியரான வீஷ்டுமர், துரோணர் முதலியவர்களை இந்த யுத்தத்தில் வலிமையான

* சுதர்மம் - நற்கிரியை.

ஆயுதங்களைக் கொண்டு எவ்வாறு கொலை புரிவேன்? என் மனம் சிறிதும் அதற்கிணங்கவில்லையே; மகானுபாவரான இந்த வீஷ்டுமர், துரோணர் முதலியவர்களைச் சத்துருக்களென்று கருதிக் கொன்று நான் அடையும் பெரிய இராஜ்ஜிய வாழ்வைப் பார்க்கினும், இவர்களுடைய பிரபாவத்தைச் சொல்லிக்கொண்டு அன்னியரிடத்திற் சென்று பிச்சையெடுத்துண்ணல் சிரேஷ்டமான காரியமாகும்; இப்படியின்றி இந்த யுத்தத்தில் காலனானவன் இவர்களுயிரை யுண்ணும்படி நான் செய்வேனானால், இவ்வாறு செய்து என்னால் அனுபவிக்கப்படும் போகங்களெல்லாம் இவர்களுடைய உதிரத்தால் சமைத்த சோற்றை உண்ணுதல் போலாம்; இன்னும், 'க்ஷத்திரியனுக்கு யுத்தமே நற்கிரியையாதலால் இதுவே உனக்குத் தர்மம் அல்லது மோக்ஷத்தைக் கொடுக்கத் தக்கதாகும்,' என்று நீர் சொல்லக்கூடும். அப்படியானால் நான் வெற்றியடைந்தால் மாத்திரந்தானே எனக்கு நன்மை யுண்டாகும்? அவ்வாறு நான் வெற்றியடைவேனென்பது என்ன நிச்சயம்? வீஷ்டுமர், துரோணர் முதலியவர்களான இவர்கள் என்னைக் கொல்வார்களோ? நான் இவர்களைக் கொல்லுவேனோ? இவ்விரண்டில் ஒன்றையும் நான் அறியேன்; ஒருவாறு இவர்களிற் சிலர் இறந்துவிட்டால் அப்படி இறந்தவர்களுடைய மரணத்தினாலே என்னுயிரும் போய்விடும்; ஆகையால் யான் வெற்றியடைவதாலும் பயனில்லை; இவ்வாறு ஒன்றும் பயனில்லையென்று கருதி யுத்தத்தை விட்டுவிடலாமென்றாலோ இந்த வீஷ்டுமர், துரோணர் முதலியவர்களே, 'யுத்தத்தை ஆரம்பிப்பாயாக,' என்று சொல்லி வெற்றியைக் கருதிக்கொண்டு எதிரே நிற்கின்றனர்; இவற்றை யெல்லாம் உத்தேசிக்கும்போது இன்னதுதான் செய்யத்தக்கதென்பது எனக்கொன்றும் விளங்கவில்லை; உம்முடைய சொற்படி யுத்தஞ் செய்தல் சுதர்மமாவதால் நான் வில்லிற் பூட்டிய பாணத்தைப் பிரயோகஞ் செய்து இவர்களோடு யுத்தஞ் செய்வது எனக்குத் தக்கதா? என்னுடைய சொற்படி யுத்தத்தை விடுதல் ஜீவ இம்சையில்லாமைக் கேதுவாயிருப்பதால் நான் யுத்



தத்தைவிட்டுப் பிச்சையேற் றுண்ணுதல் எனக்குத் தக்கதா? மரணமும் ஜனனமு மில்லாத ஒப்பற்ற கடவுளே! நான் இப்போது சுற்றத்தார்மீது மிகுந்த பக்ஷபாதத்தை யடைந்திருக்கின்றேனாதலின், அவ்வாறு இந்த வீஷ்டுமர், துரோணர் முதலியவர்களிடத் தேற்பட்ட ஆசையாகிய இருள் என்னுடைய அறிவாகிய விழியை மறைக்க, அதனாலே மேற்கூறிய சந்தேகமான விஷயங்களில் செய்வது இன்னதுதா னென்பதை அறியாம லிருப்பதோடு உய்யும் மார்க்கத்தையும் எவ்விடத்தும் காணாதவனா யிருக்கின்றேன்; அக்காரணத்தால் எனக்கு இனிப் பொருந்தும் புருஷார்த்தரூபமான தர்மத்தையோ மோக்ஷத்தையோ தெரிந்துகொள்ளச் சக்தியற்றவனாயு மிருக்கிறேன்; ஆதலால், என்மீது கிருபைசெய்து, எனக்கிப்போ தேற்பட்டிருக்கும் சந்தேகங்களையொழித்து, நான் உய்யும்படியான உண்மை மார்க்கத்தை உபதேசித்தருள்வீராக; செந்தாமரை மலர்போலும் கண்களையும், மேகம்போன்ற தேக நிறத்தையுமுடைய ஸ்ரீபகவானே! 'புத்திரனாகவும், மாணாக்கனாகவு மில்லாத புருஷனுக்குப் பிரமவித்தையை யுபதேசிக்கக் கூடாதென்று சுருதி கூறுவதால் மாணாக்கனாகிக் கேளாத உனக்கு எவ்வாறு சம்சார துக்கத்தினின்றும் பிழைத்துச் செல்லும் வழியை உபதேசிப்பேன்?' என்று எனக்கு நல்வழி காட்டுவதை நிறுத்திவிடவேண்டாம்; அவ்வித எண்ணம் உமக்கேற்பட்டிருக்கும் பக்ஷத்தில் நான் மாணாக்கனினும் தாழ்மை யுடையவனாகி எனக்குத் துணை நீரே யென்று நம்பி உம்மைச் சரணடைகின்றேன்; தண்டம்போலப் பூமியிற் படிந்து உமக்கு நமஸ்காரஞ் செய்கின்றேன்; உமக்குச் சீடனுமாகி மலர்போன்ற உம்முடைய பாதங்களைச் சிரசிற் றரிக்கின்றேன்; ஆகையால் நீர், 'அருச்சுனா! அஞ்சாதே,' என்று இங்கு அடியேன் செய்யத்தக்க தொழில்களில் என்னை ஏவி அனுக்கிரகம் செய்தருள்வீராக; ஸ்ரீ கண்ணபிரானே! 'நீயே ஆராய்ந்து பார்த்து எது செய்யத் தகுந்ததோ அதனைச் செய்துகொள்வாயாக,' என்று நீர் என்னிடம் சொன்னாலும் சொல்லக்கூடும்; நான்

அப்படியும் ஆராய்ந்து பார்த்தேன்; அவ்வாறு ஆலோசித்ததில் ஒருவன் பூமண்டல முழுவதையும் அரசாட்சி செய்யும் பெரிய ஐசுவரியத்தை யடைவதன்றி, விரைவில் கெடாத இந்திரன் முதலிய தேவர்களின் ஐசுவரியத்தை யடைந்தாலும் தன்னைச் சோகமானது வந்தடையாமல் காக்கும் மார்க்கத்தை யறிவது அரிதாகுமென்று விளங்குகின்றது; அவ்வாறு என்னுடைய சரீரேந்திரியங்களை வருத்துகின்ற இந்தச் சோகமானது ஒருகாலத்தும் என்னிடம் பொருந்தாமலும், ஒருவாறு பொருந்தினும் வருத்தாமலும் காத்துக்கொள்ளத்தக்க வுபாயத்தை இங்கே எவ்வுலகங்களினும் கண்டிலேன்; நீரே அதனை உபதேசித்தருளவேண்டும்," என்று கண்ணீர்விட்டழுது அதன்மேல் ஒன்றுஞ் சொல்லவியலாமல் மௌனமுற்றிருந்தான்.

அப்படி யிருக்கும்போது, யாதொரு பிரதியுபகாரத்தையும் விரும்பாமல் உயிர்களை இரட்சிப்பதையே தமக்குரிய கடமையாகக் கொண்டருளிய அந்தக் கிருஷ்ணபகவான் நெய்யை மார்பிலோடவிடுவதுபோல நெடிய கண்களினின்றும் கண்ணீரானது தாரை தாரையாக ஒழுக அழுகின்ற அருச்சுனன்: வீஷ்டுமர் முதலியவர்களைப்பற்றித் தன்னுடைய அந்தக்காணத்தினின்று மெழாநின்ற பாசமென்கிற கொடிய அக்கினியினாலே வெந்தொழியாமல் தம்முடைய திருவாக்காகிய கிருபைமாரியால் அவ்வக்கினியைத் தணிக்கும்பொருட்டு அவ்வருச்சுனனை நோக்கி, மின்னலையொப்பான புன்னகை செய்தருளி, வேறு உபாயங்களால் நீங்காத அவ்வருச்சுனனுடைய சோகமானது நீங்கும்படியான வுபாயத்தைத் தம்முடைய திருவுள்ளத்தின்கண்ணே நாடிப் பழைய வேதங்களெல்லா மெடுத்துரைத்து முடிந்த பொருளாகி உலகிற்கு முதற்பொருளாயுள்ள பாமான்மாவாகிய தம்முடைய தன்மையை உள்ளபடியே சோகத்தை யடைந்த அவ் வருச்சுனனுக்குத் தாமே எடுத்துபதேசிக்கத் தொடங்கினர்.



அவ்வாறு தொடங்கியவரும், வாசனை பொருந்திய தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமியை மார்பில் தரித்தவருமாகிய அந்தப் பகவான் அவ்வருச்சுனனை நோக்கி, "அருச்சுனா! எவரும் எவராலும், எதுவாலும், எப்போதும் மாணமாவதேயில்லை; அதைப்பற்றி நான் இனிமேல் விரித்துக் கூறுவேன்; அதுநிற்க, இப்போது வேறொரு விஷயத்தைக் கூறுகிறேன் கேட்பாயாக; இந்த யுத்தத்தில் மாணமாவாரென்று நீ கருதும் சிறந்த இரதத்தையுடைய வீரர்களாகிய வீஷ்டுமர், துரோணர் முதலியவர்களெல்லோரும் கெடுதற்கரிய தீவினைகளைச்செய்யாமல் நல்வினைகளைச்செய்ய வந்தமையினாலே இந்த யுத்தத்தில் மாணமாவதற்குமுன்னே சுவர்க்கத்தை மேன்மேலும் அடைவார்கள்; துக்கப்படத்தக்கவாகாத வீஷ்டுமர் துரோணர் முதலியவர்களைத் துக்கப்படத்தக்கவர்களென்று கருதி இரங்குவதாலும், மாயையை நீக்கும் வகையறியாதிருந்தும் சொல்லுதற்கரிய பண்டிதர்கள் கூறும் ஒழுங்கின்படியே தெரிந்தவன்போலப் பேசுவதாலும், நீ மயக்கமதிகரித்து, இராஜதகுணமில்லாத புத்தியில் இராஜதகுணமிருப்பதாகக் கருதி மனமயங்கினைபோலும்; புத்திமானுன உனக்கு இவ்வித மயக்கங் கூடாது; ஆகையால், இனி இந்தச் சோகரூபமான தொழிலைமறந்து நான் கூறும் இவ்வசனங்களையுங் கேட்பாயாக; ஆன்மா, அநான்மாக்களை ஆராய்ந்திருக்கும் அறிவுடையோர்கள் இறந்துபோன தங்கள் பந்து ஜனங்களைப்பற்றியும், ஜீவித்திருக்கும் பந்து ஜனங்களைப்பற்றியும் சோக மடையமாட்டார்கள்; அவர்கள் அவ்வாறு சோகமடையாதிருத்தலை நீ அறிந்திலையோ? இனிமேலாவது அப்படிப்பட்ட பண்டிதர்களுடைய நிச்சயத்தையறிந்து சோகத்தை விடக்கடவாயாக; அருச்சுனா! நீயும், வீஷ்டுமர் துரோணர் முதலியவர்களான இவர்களும், விளங்காநின்ற ஈசுரனை நானும், சுருதி, யுக்தி அனுபவங்களைக்கொண்டு ஆராய்ந்து பார்க்கின், இதற்குமுன் ஒருகாலும் இல்லாதவர்கள் என்று கூறப்படாமல் நிலைபெற்றுப் பொருந்தும் தன்மையினாலே சரீரம் அழிந்ததற்குப் பின்னர் எதிர்காலத்திலும்

நித்தியமாகிய ஆன்மசொரூபமாக இருக்கின்றவர்க ளாகின்றோம்; 'பழைய தேகத்தைவிட்டு நூதன தேகத்தை யடையும் ஆன்மாவுக்குத் தேகசம்பந்தத்தால் பேதம் ஏற்படுவதால் அதற்கு நித்தியத்துவம் எவ்வாறு பொருந்தும்,' என்று உனக்கு ஐயம் நிகழக்கூடும்; அதற்குச் சமாதானங் கூறுகிறேன் கேட்பாயாக; மரணமாகின்றது தேகமேயாம்; அத்தேகத்தினுள்ளே சாக்ஷியாய் நிற்கின்ற ஆன்மா மரணமாகாது; அஃது என்றும் ஒரே சுபாவமுடையதாய் நிற்கும்; அவ்வாறு ஒரே சுபாவத்துடன் நிற்கும் அவ்வான்மாவின் இயல்பைக் கூறுவேன் கேள்; இப்போதிருக்கும் தேகமானது முன்னே தானடைந்த பாலப்பருவாவஸ்தையைவிட்டுப் பின்னர் யௌவனம், விருத்தம் என்னும் அவஸ்தைகளோடு பொருந்துமாயினும், தேகாபிமானியான ஜீவனுக்கு அந்த அவஸ்தைகள் பொருந்தமாட்டா; அப்படியே முந்தின தேகமானது நாசமாகி இலிங்கதேக வாயிலால் அன்னியதேகமானது உண்டாகும் அவ்விடத்தே பரமான்மாவாகிய எனது உருவமான ஆன்மா மரணமடைந்து ஜனனமாகாது; ஆதலால், சுருதி, யுத்தி, அனுபவங்களால் நித்தியமாகிய அவ்வான்மாவின் நித்தியத்தன்மையை அறிந்த தீரன் பின்னர், தன்தேகமானது இறந்தொழியுங் காலத்திலும் அதனைத் தன்னுடையதென்று கருதிச் சிறிதேனும் துன்பத்தை யடையான். அருச்சுனா! 'இப்படியானால் உஷ்ணம், குளிர், துக்கம், சுகம் முதலியவைகளை, உலகசம்சந்தமான தொழிலில் சாராத ஆன்மா அடைகின்றதே? இப்படி யடைவதற்கு என்ன காரணம்?' என்று உனக்கு ஐயம் நிகழக்கூடும்; அவ்வாறுண்டாகும் சந்தேகத்திற்குத் தக்க விடை கூறுகிறேன் கேள்; தேகசம்பந்தமாக ஏற்பட்ட ஐந்து வகையாகிய மெய், வாய், கண், மூக்கு, செவிஎன்னும் பொறிகள்: ஸ்பரிஸம், ரசம், ரூபம், கந்தம், சப்தம் என்னும் புலன்களோடு சம்பந்தப்பட்டு இந்தச் சீதோஷ்ண சுகதுக்காதிகளைத் தம்மோடு சம்பந்தித்த அந்தக்கரணத்திற்குக் கொடுக்க, அந்தக்கரண தர்மங்களான இந்தச் சீதோஷ்ண சுகதுக்காதிகளுண்டாய் அவ்வந்தக்கரண சம்பந்



தத்தால் ஆன்மாவினிடத்தே பிரதிபலித்தலாய்ப் பொருந்தின; அருச்சுனா! இன்னமும் நீ அந்த சீதோஷ்ண சுகதுக்கங்களின் தன்மைகளைக் கேட்டறிய விரும்பின் நான் சொல்லுகிறேன் கேட்டுணர்வாயாக; அவை ஸ்திரமற்றனவாயும், நாசத்தையும் உற்பத்தியையும் அடையக் கூடியனவாயுமிருக்கின்றன; அப்படியிருப்பதால் சுகம் வந்தபோது சந்தோஷத்தையும், துக்கம் வந்தபோது விசனத்தையும் அடையாமல் நிலையற்றனவாகிய அவைகளைச் சகித்துக்கொள்ளுதல் ஞானாதிகாரியி னிலக்கணமாதலின் அதிகாரியாகிய நீயும் அவற்றைச் சகித்துக்கொள்வாயாக; அப்படி அவைகளைச் சகித்துக் கொள்வதா. லுண்டாகும் பிரயோசனம் யாதென்றால் அந்தச் சுகதுக்கம் முதலியவற்றைச் சகித்த தீரனை தோஷங்களையுடையனவாகிய அச்சுகதுக்காதிகள் தன் நிலை கலங்கும்படிச் செய்யமாட்டா; இக்காரணத்தால் கலக்கம் நீங்கினவனான அவ்வதிகாரி மோக்ஷத்தையே அடைவான்.

கூர்மை தங்கிய வேலாயுதத்தையுடைய வீரனே! இன்னமுங் கேட்பாயாக; மண்ணினா லுண்டானவையாகிய கடம் முதலிய விகாரங்க ளனைத்தும், அவற்றிற்குக் காரணமான அம்மண்ணின் சொரூபமேயாம்; ஏதனாலெனில், காரணமான அம்மண்ணை நீக்கி வேறொன்றால் கடம் முதலிய அவ்விகாரங்களைப் பண்ணினாரெவருமில்லை; மண்ணினாற் பண்ணப்பட்ட கடம் முதலிய அநேகம் விகாரங்களை ஆராயுமிடத்து அவை உண்டாவதற்கு முன்னும், நாசமடைந்த பின்னும், மத்தியில் விகாரங்களாய்த் தோன்றியிருக்கும் பொழுதும் கண்களால் நாடி அவை மண்ணின்றி வேறாகக் கண்டவர்களுண்டோ? நீ உறுதியாகச் சொல்லுவாய்; எவரும் அவற்றை மண்ணினின்றும் வேறாகக் காணமாட்டார்கள். அந்த திருஷ்டாந்தத்தின்படியே சத்து, அசத்து ஆகியவற்றின் தன்மைகளைக் கூறுவேன் கேட்பாயாக; சத்தான ஆன்மவஸ்துவானது எக்காலத்தும், எத்தேயத்தும், எந்த அவஸ்தையிலும் நசித்து அசத்தாகமாட்டாது; இந்த ஆன்ம

வஸ்துவோடு அன்னியமானதென்று சொல்லும்படிக்குச்
சீதோஷ்ண சுகதுக்காதி தர்மங்களைப் பொருந்துகின்ற அசத்
தாகிய தேகாதிப் பிரபஞ்சமானது முக்காலத்திலும் நிலை
பெற்றதாகமாட்டாது; சத்து அசத்துக்களைப்பற்றிய இவ்
விவேகங்களே ஞானத்தைத் தரத்தக்க பொருள்களாம்.
அருச்சுனா! பரமான்மாவான என்னை அறிந்தவர்களே இவ்
வுண்மைகளைச் சுருதி, ஸ்மிருதி யுக்திகளால் ஆராய்ந்தறிவார்
கள்; மற்றவர் அறியமாட்டார்கள்.

இனி, ஆன்மாவுக்குள்ள தன்மையைக் கூறுவேன் கேட்
பாயாக: கற்பிதங்களாக உண்டாகின்ற சப்த ஸ்பரிஸ ரூப ரச
கந்தங்களும், ஆகாயம், பிருதிவு, அப்பு, தேயு, வாயு ஆகிய
பூதங்கள் முதலியனவும் உண்டாகுங்காலத்தில் அவை உண்
டாவதற் கிடமான சத்தாயும், நீங்காமல் அவைகளைப்பற்றி
எழுகின்ற அந்தக்கரணத்தின் விருத்திஞானங்கள் முழுதை
யும் அறியும் மூலப்பொருளாயும், போங்காலத்துடனே
வருங்காலமாகிய வழியை அடையாததாயுமுள்ள ஏகவஸ்து
வாயிருப்பதே ஆன்மாவின் தன்மையாம். இன்னும் அழியா
வியல்பையுடைய சத்துப்பொருளானது எப்படிப்பட்டதெ
னில், விகாரமற்ற பூரணரூபமாய்க் கடாதிகளில் நிறைந்திருக்
கும் ஆகாயம்போலத் தன்னிற் கற்பிதமான சகலபிரபஞ்சங்
களிலும் நீங்காமல் நிறைவோடு வியாபித்திருப்பது; அசத்
தான தேகம் முதலியவைகளை என்னுடையன எனவும்,
யான் எனவும் கருதாத ஞான சுபாவத்தையுடைய பெரி
யோர்கள் இந்த ஆன்மவஸ்துவை யான் கூறியதற்கு மாறா
கச் சில விபரீத சுபாவமுடையதெனக் கூறமாட்டார்கள்;
நான் கூறியவண்ணமே கூறுவர்; என்றும் நாசமில்லாத
தாகிய இவ்வான்மாவைத் தமது பிரயத்தினத்தால் கொல்லத்
தக்க சமர்த்தர் யாவர்? ஒருவருமிலர்.

அருச்சுனா! இனி சீதோஷ்ண சுகதுக்காதிகளையுடைய
இத்தேகாதி பிரபஞ்சரூபமான அசத்திலக்கணத்தை நீ கேட்
பாயாக: சூரியனது உஷ்ணகிரணத்தால் பூநீறெழும் பூமியில்



உண்டாகும் பேய்த்தேரென்னும் கானலினிடத்தே சத்தும்
அசத்துமல்லாம லுண்டாகின்ற பொய்த் தோற்றமாகிய ஜல
மானது நெருங்கிப்பார்க்கும்போது இல்லாமற்போவதுபோல
நன்றாக ஆராய்ந்து பார்க்கவே ஒழிந்து போகக்கூடியதாகத்
தோற்றுவதால் எல்லாவிதத்தாலும் நாசமடைவது இத்தே
கந்தான்; வீஷ்மர் முதலியவர்களுடைய மரணத்தினாலுண்
டாகும் சோகம் எப்படி அகாரணமாய் நிகழ்கின்றதோ அப்
படியே, இவர்களை மரணமடையப்பண்ணுவிக்கிற கர்த்தாவாக
நானாகிறேனென்றெண்ணுகிற துக்கமும்அகாரணமாகநிகழ்வ
தாம்; அறிவுமயமான ஆன்மாவோ ஒன்றைக் கொல்லுகிற
கர்த்தாவுமாகாது; ஒன்றாற் கொல்லப்படுவது மாகாது; அத்
தகைய ஆன்மாவின் தன்மையை இன்னும் கேட்பாயாக: பல
விதமான இடையூறுகளைப் பொருந்தும்படி ஒருதரத்திலே
உற்பத்தியாதல், பின்பு பிறந்திருத்தல், அந்நிலைமையினின்
றும் வேறாக விருத்தியாதல், அவ்வாறு விருத்தியாகி அந்நிலை
மைக்கு வேறான விகாரமாக மாறுபாடடைதல், அந்நிலை
மைக்கு மாற்றமாகப் பின்பு இளைத்தல், பின்பு நாசமடைதல்
என்னும் ஆறு விகாரங்களும் சரீரத்தை யடையுமல்லாமல்
ஆன்மாவை யடையாவாம்; அக்காரணத்தினால் இவ்வான்மா
வானது அநித்தியமான தேகத்தினிடத்தே பொருந்தியிருந்
தாலும் எல்லாவிடத்தும் வியாபித்து நித்தியவஸ்துவா யிருப்
பது; நாசமற்ற சத்தியவஸ்துவா யிருப்பது; பொய்யான
ஜனனமரணங்களில் ஒன்றையு மறியாதது; அத்தன்மையான
ஆன்மாவைக் குருசாஸ்திரோபதேசங்களால் தரிசித்த ஞானி
கள், ஒருவரைக் கொல்லுகிற கர்த்தாவும், கொல்லுவிக்கிற
ஏவற்கர்த்தாவு மாகார். அப்படியானால், யுத்தம் முதலிய கர்
மங்களைச் செய்யும்படி விதிக்கும் சுருதிகளின் றாற்பரிய
மென்னெனில், அவனவன் ஜாதிதர்மங்களை விதிக்கும் சுரு
திகளெல்லாம் அவனவனுக்கு விதித்த கர்மங்களை அவனவன்
குலத்தின்மீது சம்பந்தப்படுத்தி, அவித்துவானுக்குச் சித்த
சுத்தியின்பொருட்டு விதித்தனவல்லாமல் ஆன்மாவின்மீது
சம்பந்தப்படுத்தி ஆன்மசாட்சாத்காரமுடைய வித்துவானு

க்கு விதித்தில; ஆதலால், அருச்சுனா! நீ இவ்விஷயத்தையும் தெரிந்துகொள்வாயாக. இன்னும், 'ஆன்மா, விகாரமற்றதென்றுகூறினும், பழையதேகத்தைவிட்டு நூதனதேகத்தையடையும் தன்மையுடையதாக விருத்தலின் அஃது எவ்வாறு விகாரமற்றதாகும்?' என்று உனக்கு ஐயம் நிகழக்கூடும்; அந்தச் சந்தேகம் நிவிர்த்தியாகும் மார்க்கத்தையும் கூறுகிறேன் கேட்பாயாக; கிழிந்துபோன வஸ்திரத்தை நீக்கிவிட்டுப் பின்னர் உடனே வேறு நல்ல வஸ்திரத்தை விரும்பித் தரித்துக்கொள்பவர்களைப்போல விருத்தாப்பியத்தையடைந்த தேகத்தில் விளங்குகின்ற ஆன்மாவும், சீர்கேடடைந்த அத்தேகத்தை நீக்கி மற்றொருபுதிய தேகத்தைப் பொருந்தும்; கிழிந்த வஸ்திரத்தை நீக்கிப் புதிய வஸ்திரத்தைத் தரிக்கும் புருஷன் அந்தப் பழைய வஸ்திரத்தை நீக்கும்போதும் புதிய வஸ்திரத்தைத் தரிக்கும்போதும் விகாரமற்று ஒரே வடிவமுடையவனா யிருப்பதுபோலத் தேகியாகிய ஆன்மாவும் பழைய தேகத்தை விடும்போதும் புதிய தேகத்தை யடையும்போதும் விகாரமற்றதாகவே விளங்கும்.

இன்னும் நீ, 'அக்கினியினால் வீடானது வெந்தபோது அவ்வீட்டினிடத்தேயுள்ள புருஷனும் வெந்தொழிவது போல இத்தூலதேகம் நாசமாகும்போது இதனிடமுள்ள ஆன்மாவும் நாசமாய்விடுமே,' என்று கேட்கக்கூடும்; அக்கேள்விக்கும் விடை கூறுகிறேன் கேட்பாயாக; இத்தேகத்தினிடம் வேறாகவிருக்கும் ஆன்மாவிற்கு அவயவக்கூட்டத்தன்மையானது ஒருகாலத்திலு மில்லாமையினாலே யுத்தத்தில் கொடிய ஆயுதங்கள் தூலதேகத்தைச் சேதிப்பது போல இந்த ஆன்மாவைச் சேதிக்கமாட்டா; அன்றியும் அவ்வான்மாவானது சரீரம்போல அக்கினியால் வெந்து நீறாகமாட்டாது; நீரினால் நனைக்கப்பட்டு இளக்கமாகி யோடமாட்டாது; வாயுவினாலும் அசைவடையாது; இன்னும் அவ்வான்மாவின் தன்மையைக் கூறுகிறேன் கேட்டுணர்வாயாக; எல்லாப் பொருள்களுக்கும் பழமையானதும், அதனால் எவ்விடத்



திலும் தானாகவே வியாபித்திருப்பதும், அதனால் நிலைபெற்ற சுபாவமுடையதும், அதனால் நாசமற்ற தன்மையுடையதும், அதனால் அசைவற்ற நிலைமையையுடையதும், அநான்மாவான இந்திரியங்கள் பதினான்கும் அறியமுடியாத அறிவுமாகி அவ்வான்மாவானது மிகவும் சிறப்புற்றதாம். இத்தகைய நித்திய வஸ்துவாகிய ஆன்மாவை உள்ளபடியுணராமல் நிலையற்ற பொருள்களாகிய தேகம் முதலிய பதார்த்தங்களைப்போல இஃது அழிந்துபோகுமென்று கருதி நீ வருந்துகின்றது எதனாலோ யானறியேன். அருச்சுனா! இன்னும், வீஷ்டுமர், துரோணர் முதலியவர்கள், முன்னே கூறியபடியல்லாமல் தேகம் உற்பத்தியாகும்போது உற்பத்தியாகின்றவர்களெனவும், அஃதழியும்போது மரணமாகின்றவர்களெனவும் நீ ஒருவாறு எண்ணினும், அந்த ஜனன மரணங்களின்பொருட்டும் சோகமடைதல் உனக்குசிதமன்று. ஏனென்றால், எவர் பிறப்பாரோ அவர் எத்தன்மையுடையவராயினும், நிச்சயமாக மரணமாவர்; அப்படி மரணமானவர் முந்தின தேகத்திற்செய்த கர்மவசத்தினால் மீண்டும் பிறப்பார்; அவ்வாறு அவர்கள் பிறப்பிறப்பை யடைதற்கு ஏதேனும் பரிகாரமுண்டோ? எவ்வித பரிகாரமுமில்லை; இவ்வாறு ஜனனமரணமுண்டாவது முறைமையேயாம். இன்னும், நீ, 'ஆன்மா சோகமடையத்தக்கதன்றாயினும்பூதங்களின்கூட்டரூபமானவீஷ்டுமர், துரோணர் முதலியவர்களின் சரீரங்களைப்பற்றிச் சோகமடைகிறேன்,' என்று சொல்லக்கூடும்; அதற்குத் தக்க விடை கூறுகிறேன் கேள்: அருச்சுனா! இந்த வீஷ்டுமர், துரோணர் முதலியவர்கள் உண்டாவதற்கு முன்னே இருந்தவிதம் இன்னவாறென்பதையும் நீ அறியமாட்டாய்; இவர்கள், சரீரங்களினின்றும் மரணமாகிப் பின்னர் சென்றடையும் ஸ்தானத்தையும் நன்றாக அறியமாட்டாய்; நீ இவர்களை அறிந்தது ஜனனத்திற்கும் மரணத்திற்கும் மத்தியில் சில தினங்களேயாம். முன்னும் பின்னும் இல்லாத பதார்த்தங்கள் மத்தியினும் இல்லாதனவேயாகும். அதுபோல இவர்களுடைய தேகங்களும் உனக்கு முன்னும் பின்னும் தோற்றாமலிருந்து மத்தியில்

சொப்பன பதார்த்தம்போலத் தோற்றக்கூடியனவாதலால் இப்பொழுதும் நிலைபற்றனவேயாம். ஆதலின், இத்தகைய சரீரங்களையுடைய வீஷ்டுமர், துரோணர் முதலியவர்களைப் பற்றி நீ துன்பமடைதல் தகாது; உடனே அதனை விட்டுவிடுவாயாக. அருச்சுனா! இன்னமும், 'நீர் கூறியபடியானால் விவேகிகளும் கூடச் சோகத்தை யடைகிறார்களே, அதற்குக் காரணம் யாது?' என்று நீ வினவின், அதற்கும் விடை கூறுகிறேன் கேள்; அவர்கள் ஆத்மாவின் தன்மையை நன் குணராததனாலேயே அவ்வாறு துக்க மடைவார்கள்; அவர்களில் ஓரதிகாரியானவன் இவ்வான்மாவை என்றும் காணாத வஸ்துவைக் கண்டாற்போல வுணர்ந்திருப்பான்; மற்றொருவன் இவ்வான்மாவை என்றும் உரைத்தறியாததை உரைத்தாற்போல மற்றொருவனுக் குபதேசிப்பான்; மற்றொருவன் இவ்வான்மாவை என்றும் கேட்டறியாததைக் கேட்டாற்போலக் கேட்டு மகிழ்ச்சி யடைவான்; மற்றொருவன் இவ்வான்மாவை எப்போதும் கேட்டாலும், சொன்னாலும், கண்டாலும் நன்றாக அறியமாட்டான்; இந்நால்வரும் சாஸ்திரங்களை வாசித்துணர்ந்த விவேகிகளானாலும் தங்களிடம் * சமுசயபாவனை, † அசம்பாவனை, ‡ விபரீதபாவனை முதலியவைகள் பொருந்தி யிருப்பதனாலும், தேகமே தானென்னும் எண்ண முண்டாயிருப்பதனாலும் ஆன்மாவின் தன்மையை உள்ளபடி உணராதவ ராகின்றார்கள். அதனாலேயே இவர்களிடத்தும் சோகம்பொருந்துகின்றது. இவர்களாலும் ஆன்மாவை யுணர்தல் முடியாது; பின்னை எவர் உணர்வார்களெனின், இவர்களுக்கெல்லாம் சிரேஷ்டராயும், மிகுந்த சூக்ஷ்மமான புத்தியுடையவர்களாயு மிருக்கிறவர்கள் எவர்களோ அவர்களே இவ்வான்மாவை யுணர்வார்கள்.

ஆதலால், நீ, சர்வ பிராணிகளுடைய தேகங்கள் சங்கரிக்கப்பட்டாலும் நித்திய ஞானானந்த சுபாவமுடைய ஆன்மா

* சமுசயபாவனை - சந்தேகத்தன்மை. † அசம்பாவனை - அறியக்கூடாமை. ‡ விபரீதபாவனை - ஆச்சரியத்தன்மை, அல்லது மாறுபாட்டுத்தன்மை.



வானது சங்கரிக்கப்படாதென்னும் உறுதியுடையவனாய் முன் சொல்லிய நால்வரும் உள்ளபடி சந்தேகமற அறிய முடியாத அவ்வான்மாவைச் சந்தேக மின்றித் தெரிந்துகொண்டு அவ்வான்ம சிந்தனையின் வலிமையினாலே, 'இந்த வீஷ்டுமர் துரோணர் முதலியவர்களை நான் கொன்றேன்,' என்று எண்ணுவதால் பின்னர் உனக்கேற்படும் சோகத்தை விட்டுவிடுவாய்; நீ சோகமடையா திருத்தற்பொருட்டு இன்னமும் நான் சொல்வதைக் கேள்: நான்குவகையான வேதவாக்கியங்களும் வாள்முதலிய ஆயுதங்களைக்கொண்டு நியாயமாகச் செய்யும் யுத்தமே க்ஷத்திரிய தருமமென்று கூறுவதால், நீ, 'யுத்தஞ் செய்வதே க்ஷத்திரியனான எனக்கு மோக்ஷத்தைத் தருவதாகும்,' என்று கருதி அந்த யுத்தத்தைச் செய்யத் தொடங்குவாயாக; 'அதனால் தர்ம முண்டாகுமோ அதர்ம முண்டாகுமோ,' என்று நீ சந்தேகங் கொள்ளாதே. எவ்வித பிரயத்தனமு மில்லாமலே தேவர்கள் வசிக்கும்படியான சுவர்க்கத்தை அடைவதற்குச் சாதனமாக ஏற்பட்ட இந்த யுத்தத்தைத் தமக்குரிய தொழிலாக அடைகின்றவர்கள் எவரெனில், வேதமார்க்கத்தா லுண்டாகும் பெரிய தவத்தை மேலாகக் கொண்டு உண்மையை யறிந்த அரசர்களே யாவர்; ஆதலின், அருச்சுனா! மகா பாக்கியசாலிகளான அரசர்களால் அடையத்தக்க தர்மரூபமான யுத்தத்தை நீ செய்பாயாகில் தர்மமுங் கீர்த்தியும் உன்னைவிட்டு நீங்கிப் பாவமே உனக்குண்டாகும்; இன்னும் மேற்கூறியபடி தர்மமும் கீர்த்தியும் உன்னைவிட்டு நீங்குவது மின்றி, 'அருச்சுனன் தைரியமில்லாதவனாய் யுத்தத்தைக் கைவிட்டான்,' என்று சகலரும் சொல்வதால் உனக்கு மிகுந்த அவகீர்த்தியு முண்டாகும்; 'தர்மான்மா சூரன்,' என்று பலராலும் கொண்டாடப்படும் உனக்கு யுத்தத்தைக் கைவிடுவதாலுண்டாகும் அவகீர்த்தியைப் பார்க்கிலும் மரணமாகிறதே பெருமையாகும்; அன்றியும், துரியோதனாதியர், 'அருச்சுனன்: கர்ணன் முதலியவர்களுக்குப் பயந்து யுத்தத்தினின்றும் நீங்கினான்,' என்று கூறுவர்; பூமியின்கண்ணே

தர்மம், பராக்கிரமம், சௌரிய முதலிய அநேகம் நற்குணங்களோடு கூடிநின்று முன்னே நீ செய்த வெற்றியான காரியங்களும் பகைவராகிய அவர்களால் பழிக்கத்தக்கனவாய்க் குறைந்துபோகும்; அவ்வாறு சத்துருக்கள் சொல்லக்கூடாததான ஒரு வார்த்தையைச் சொன்னால் அது மிக்க துன்பத்தைத் தருவதாகும்; அதற்கதிகமான துன்பம் வேறெதுவுமில்லை.

இன்னும், 'இந்த யுத்தத்தில் வீஷ்மர், துரோணர் முதலியவர்களைக் கொல்லின் மத்தியஸ்த புருஷர் நிந்திப்பர்; யுத்தத்தினின்றும் நீங்கினால் துரியோதனுதியான சத்துருக்கள் நிந்திப்பர்; ஆகலின், இதனைச் செய்யினும் நிந்தையே யுண்டாம், செய்யாதிருப்பினும் நிந்தையே யுண்டாம்; இப்படி யிருப்பதனால் யுத்தஞ் செய்யாதிருத்தலே நலமாம்,' என்று நீ கருதக்கூடும்; அவ்விதம் கருதுவதும் சரியன்று; வெற்றியினாலும் தோல்வியினாலும் உனக்கு நிச்சயமாக இலாபமே யுண்டாகும்; எப்படியெனில், இப்போது வாள்முதலிய ஆயுதங்களைக்கொண்டு செய்யும் இந்த யுத்தத்தில் நீ, கர்ணன் முதலிய அரசரோடெதிர்த்துப் போர்புரிந்து அவர்களால் மரணமடைவாயாகில் விரசுவர்க்கம் பெற்றுத் தேவர்கள் வணங்க விண்ணுலகத்தை அரசாள்வாய்; கர்ணன் முதலிய அரசர்களை நீ கொன்று ஜயத்தை யடைவாயாகில் இவ்வரசர்களெல்லோரும் உன்னை வணங்க நீ மகாராஜனா யிருந்து மண்ணுலகத்தை யரசாள்வாய்; இவ்வாறு யுத்தமானது இருவகையினும் உனக்கு நன்மை செய்யக்கூடியதாகவே யிருக்கிறது; ஆதலின், நீ எவ்விதயோசனையு மின்றி இப்போது யுத்தஞ் செய்யும்பொருட் டெழுந்து நிற்பாயாக; நீ முன்னே, 'அந்தோ! என் சுற்றத்தவரைக் கொன்று பெரும் பாவத்தை யடைய நினைந்தேனே,' என்று வருந்தினை; அவ்வாறு வருந்த வேண்டாம்; நான் சொல்லுகிறபடி செய்வாயானால் உன்னைப் பாவந் தொடாது; நிறைந்த சுகமும், துக்கமும் இவற்றிற் கேதுவான மிகுந்த இலாபமும், நஷ்டமும், இவற்றிற்கேது



வான வெற்றியும், தோல்வியும் என்று கூறுகின்ற இவைகளில் நீ சமத்துவமான அந்தக்கரணத்தை யுடையவனாய்ச் சுதர்மமாகிய புத்தியோடு கூடி யுத்தத்தைச் செய்வாய்; இவ்வாறு செய்யின் உனக்குப் பாவமில்லை.

அருச்சுனா! இதுவரை உனக்கு ஞானயோகத்தைக் கூறிவந்தேன்; அதனைக் கூறியும் சித்த தோஷத்தால் உனக்குப் பிரமக்கியான முண்டாகாமையினாலே அச்சித்ததோஷம் நீங்கி பிரமசாட்சாத்கார முண்டாதற்பொருட்டு இனி அதற்குச் சாதனமாகிய நிஷ்காம கர்மயோகத்தைக் கூறுகிறேன்; அதையும் நீ கேட்பாயாக: சம்சாரமென்னும் சமுத்திரத்தைக் கடத்தற்குரிய தெப்பமாகப் பெரியோர் நீங்காது பற்றிய பரமான்மவஸ்துவின் விஷயமாகிய ஞானத்தை, அளவிறந்த என்னுடைய வாக்கியங்களாலே நீயும் சாமான்யமாகப் பொருந்தும்படி புத்தியின்கண் அறியுந்தன்மையை யுடையவனாய்; எந்த ஈசுரார்ப்பணரூப கர்மானுஷ்டான விஷயமான புத்தியினாலே கர்மபந்தமென்னும் புண்ணியபாவரூபமான இருவகை வினைகளும் பற்றாமல் விட்டுப்போமோ அப்படிப்பட்ட கர்மயோக புத்தியை அறிந்தனுஷ்டிப்பவர் மோக்ஷத்தை யடையுந் தகுதியுடையவராவர்; இனி அதன் விவரத்தையுந் தெரிந்துகொள்ளக்கடவாய். உலகத்தில் செய்வதருமையென்று சொல்லத்தக்கதும், விவேகிகளாற் செய்யப்படுவதுமாகிய * நிஷ்காம கர்மயோகத்தின் பயனானது, † காமிய கர்மங்களின் பயனான சுவர்க்கம் முதலியவைபோல ஒருபோதும் நாசமடையாது; அதிகமான விக்கினங்களும் பாவவினைகளும் அதன் மத்தியிற் பொருந்தமாட்டா; அறிந்தனுஷ்டிக்கும் ஈசுர ஆராதன ரூபமான அந்த நிஷ்காம கர்மமானது சொற்பமானாலும் பெரிய ஜனனமரணரூபமான சம்சாரபயத்தைக் கெடுத்துவிடும்; அப்படி அது சம்சார பயத்தைக் கெடுக்கக்கூடியதா யிருக்குமானால் இவ்வுலகத்தி

* நிஷ்காமகர்மயோகம் - பயனை விரும்பாது செய்யப்படுந்தவம்.

† காமியகர்மம் - பயன் கருதிச் செய்யுங் கிரியை.

னுள்ள விவேகிகள் தம்மிடத்தே உறுதியாகக் கொள்ளத்தக்
கது அந்த நிஷ்காம கர்மமின்றி வேறுண்டோ? இல்லை.
ஈசுர ஆராதனரூபமான கர்மங்களை யனுஷ்டிக்கும் நிஷ்காம
புருஷராகிய விவேகிகளின் புத்தியானது, ‘பரமேசுர பக்தியி
னாலேயே அவசியம் கடைத்தேறுவோம்,’ என்று ஒரே உறுதி
யோடிருக்கும்; ஈசுர ஆராதனத்தை விட்டு நீங்கிய காமிய
கர்மபுருஷராகிய அவிவேகிகளின் புத்தியானது, விருக்ஷத்
தின் றளிர்கள் பல கிளைகளாகப் பிரிந்து விருத்தியாவது
போல சுவர்க்கம், பசு, சந்தானம் முதலியவற்றில் இச்சை
வைத்து அநேகம் பிரிவுகளாக விரியும். இந்தக் காமிய புருஷ
ரும் கஷ்டரூபமான சகல இச்சையையும்விட்டு ஏகமான புத்
தியை ஏன் அடைவதில்லையெனின், இவர்கள், காமியகர்மத்
தை அனுஷ்டிப்பவர்க் குண்டாகும் சுவர்க்கம் முதலிய பயன்
களை விசேஷமாக வுபதேசிக்கும் பிரகாசம் பொருந்திய கர்ம
காண்டச் சுருதி வாக்கியங்களையே மேலாக வுணரத்தக்க
பொருளென்று சொல்லும் எளியர்; வேதவாக்கிய தாற்பரி
யத்தை அறியாதவர்கள். ஆதலின், அந்தச் சுவர்க்காதி பயன்
களை யன்றிப் பரம புருஷார்த்தமான கைவல்லிய சுகத்தை
அறியமாட்டார்கள். சுவர்க்கத்திலுள்ள கற்பகத்தரு, சிந்தா
மணி, அமுதம் முதலிய பொருள்களை உத்தமமான புரு
ஷார்த்தங்களென்று மனத்திற் கருதுவோரும், சுவர்க்க வின்
பத்தை யனுபவித்தபின் மண்ணுலகத்தில் மீண்டும் பொரு
ந்துகின்ற ஜனனங்களிற் சார்வதற்குக் காரணமான மார்க்கத்
தில் நிற்பவரும், தாம் செய்யும் கர்மங்களுக்குப் பயன்களைக்
கருதுகின்றவர்களுமாகிய காமியகர்ம புருஷரான அவர்களு
க்கு சூக்ஷுமமான பரமான்மாவின் வாஸ்தவ சொரூபத்தை
யறிவதற் கேதுவான யோக புத்தியை நுட்பமான ஆன்ம
ஞானமுடைய பெரியோர் உபதேசிக்கமாட்டார்கள்.

அருச்சுனா! வேதாப்பியாசமுடைய காமியகர்ம புரு
ஷர்க்கு ஏன் விவேகபுத்தி உண்டாகாதெனில், கர்மகாண்ட
மயமான சுருதியின் வழியை யனுசரித்துச் சுவர்க்க சுகத்



தை மாத்திரமே யறியும் இரஜோகுணரூபமான இச்சையை
வைத்திருக்கும் அவிவேகிகளாகிய காமியகர்ம புருஷர்கள்,
அநேகவிதமான குற்றங்களைத் தரும் புண்ணிய பாவ மிசிர
மென்னும் * சஞ்சிதம், † பிராரத்தம், ‡ ஆகாமியம் ஆகிய
மூன்று கர்மங்களின் சம்பந்தமாகிய சம்சாரப் பயன்களை
அடைந்தவராவர்; சீதோஷ்ண சுகதுக்காதிகளைத் தரப்பட்ட
இரஜோகுணரூபமான பலனின் இச்சையைப் பொருந்தின
வர்களின் கர்மத்தினிடம் இப்படிப்பட்ட பயனே யுண்டா
கும்; அவர்கள் இத்தகைய சுபாவ முடையவர்களாதலால்
அவர்களிடம் விவேகஞானம் ஏற்படுவதில்லை. ஆதலின், அந்த
விவேகஞானத்தை நீ அடையவேண்டுமாயின், சுவர்க்க சுகம்
முதலிய பயன்களில் இச்சையில்லாதவனாகவேண்டும்; அவ்
விச்சை யில்லாமற்போதற்குபாய மேதுவெனில், நீ சீதோஷ்
ணாதி விருத்த தர்மங்களைச் சகிக்கிறவனாகவேண்டும்; அவை
களைச் சகித்தற்குபாய மென்னையெனில், எப்போதும் சத்
துவகுணத்தை யனுசரிக்கிறவனாகவேண்டும்; அவ்வாறு செய்
யின் முன்னே கிடையாத வஸ்து கிடைப்பதாகிய யோகத்தை
யும், அவ்வஸ்துவின் பரிபாலனமாகிய க்ஷேமத்தையுங்
கருதாதவனாய்ப் பிரமக்கியான முடையவனுவாய்.

அருச்சுனா! இன்னும் நீ, ‘சுவர்க்கசுக முதலிய பலன்
களைத் தரும் சர்வ காமியகர்மங்களையும் நான் விட்டு நிஷ்கா
மிய கர்மங்களைச் செய்வேனாயின் அந்தக் காமியகர்மங்களா
லடையும் சுவர்க்கசுக முதலிய எல்லா ஆனந்தங்களையும்
அடையாதவனாவேனே,’ என்றெண்ணின், அதற்குத் தக்க
விடை கூறுகின்றேன் கேள்: சொற்ப ஜலமுள்ள குளம்,

* சஞ்சிதம் - சென்ற ஜனனங்களிற் செய்யப்பட்டுப் பலனனு
பவியாமல் நின்ற கர்மம்.

† பிராரத்தம்-சென்ற ஜனனங்களிற் செய்யப்பட்டு வர்த்தமான
ஜனனத்துக் கேதுவாயிருக்கும் கர்மம்.

‡ ஆகாமியம் - வர்த்தமான ஜனனத்திற் செய்யப்பட்டு மறுஜன
னத்துக் கேதுவாயிருக்கும் கர்மம்.

கிணறு, தடாகம் முதலியவைகளிலே ஸ்நானபான முதலிய
பிரயோசனங்களை யனுபவிப்பவன், எல்லாத் திக்குகளிலும்
விசாலித்து நிறைந்திருக்கின்ற ஜலத்தையுடைய சுத்தோதக
சமுத்திரத்தை யடைந்தால் முன் கூறிய சொற்ப ஜலமுள்ள
வாவி முதலியவற்ற லடையும் அவ்வளவு பிரயோசனங்களை
யும் அடைதல் அருமையாகுமோ? இல்லை; அதுபோலக்
காமியகர்மங்களால் உண்டாகும் பிரமலோகபதவி வரையி
லுள்ள சுகங்களா லேற்படும் சிறிய ஆனந்தங்க ளெல்லா
வற்றையும் சகல பிராணிகளின் உள்ளமும் சந்தோஷிக்கின்ற
பிரமானந்தத்தின்கண்ணே பிரமநிஷ்டன் அடைதல் மிகவும்
எளிதாம். ஆதலின், அருச்சுனா! நிஷ்காமகர்மமே உனக்குரிய
தாகும்; அந்தக்கரண சுத்தியின்பொருட்டு நீ அதனையே செய்
தல் வேண்டும்; புத்தியோகமென்னும் நிஷ்காமகர்ம இலக்க
ணத்தை உனக்குக் கூறுகிறேன் தெரிந்துகொள்வாய்; சகல
சம்சார பலன்களும் உன்னை அடைந்து நீங்குங்காலையில் நீ
சமமான மனமுடையவனாகவே பெரிதான உன்னுடைய கர்
மத்திற் பொருந்தியிருப்பாயாக; இவ்வாறு சுகதுக்கங்களில்
மனமானது சமமாயிருக்கையே நிஷ்காமகர்மயோகமாம்;
இதைத் தெரிந்தனுஷ்டிப்பாயாக; இத்தகைய நிஷ்காமகர்
மத்தை விட்டு, மோக்ஷத்திற்குச் சாதனமான ஆன்மஞானத்
தைச் சித்த சுத்தியின் வழியாகத் தருகின்ற புத்தியோக
மானது தூரத்தில் விலகிப்போகும்படிச்கு அற்பசுக இச்சை
யோடு கூடிக் காமியகர்மத்தில் நிற்பவர் மிகவும் சிறியோ
ராவர். இனி, நிஷ்காமகர்ம முடையவராய்ப் பரமான்மாவான
என்னை அறிபவர்களுடைய செய்கையைக் கூறுகிறேன்
கேட்பாயாக: அவர் விடுதற்கரிய தன்மையையுடையனவாகிய
நித்தியாதி கர்மங்களின் பயன்களை நீக்கி, அவரவர்களுக்குத்
தகுதியாகச் சாஸ்திரங்களில் விதித்த கர்மங்களைச் சுகதுக்
கங்களில் விருப்பும் வெறுப்பு மடையாதபடி செய்து, சித்த
சுத்தி ஞானப்பிராப்திகளின் வாயிலாகப் புண்ணிய பாவங்
களினின்றும் விடுபட்டவராய்த் தேகத்தோடு கூடி இவ்வுல
கின்கண்ணே நிலைபெற்றவரென்று சொல்லும்படிக்குச் சீவித்



திருந்து, ஜென்மபந்தத்தை விட்டவராய், எல்லா உபத்திர
வங்களு மிறந்த மோக்ஷரூபனான என்னை அறிந்தபடியே
அறிவடைந்தவராவர்.

இனி, நிஷ்காமகர்மானுஷ்டான வழியால் மோக்ஷமடை
யும் விதத்தையுங் கூறுகிறேன் கேள்: ஒருவன், காமியகர்மங்க
ளால் தரப்பட்ட சுவர்க்கவின்பம் முதலிய பலன்களில் ஏற்
படும் இச்சையை நீக்கிச் செய்யத்தக்கவைகளான நித்தியகர்
மங்களை ஈசுரார்ப்பண புத்தியோடுகூடிச் செய்யில் அவனு
க்கு நீங்குதற்கரிதாகிய பாவங்கள் நீங்கிச் சித்தசுத்தியுண்டா
கும்; அவ்வாறு பாவங்களற்றுச் சித்தமானது சுத்தியானால்
அந்தச் சுத்தமான சித்தத்தில் நித்தியாநித்தியத்தை யறி
யும் விவேகமானது பொருந்தும்; அவ்வாறு அவ்விவேகமா
னது பொருந்தினால் புண்ணிய பாவங்களில் விருப்பம் நீங்கும்;
அங்ஙனம் புண்ணிய பாவங்களில் விருப்பம் நீங்கினால் இலாப
நஷ்டங்களில் சமசித்தமுண்டாகும்; அவ்வாறு சமசித்தமுண்
டாபின், ‘ஆன்மா இன்னது’ ‘அநான்மா இன்னது’ என்றறியும்
விவேகமானது பொருந்தும்; அப்படி ஆன்மஞான முண்
டானபின், அவிவேகத்தை யடைந்து அந்த அவிவேகத்தால்
அன்னியமான தேகம் முதலியவற்றில், ‘இஃது யான்; இஃது
என்னுடையது,’ என்னும் அபிமானம் பொருந்தும் மனமா
னது ஒழிந்து மிகுந்த அந்தக்கரண சுத்தி யுண்டாம்; அவ்
வாறு அவன் எப்பொழுது அந்தக்கரணசுத்தி யடைந்தானோ
அப்போது இனிக் கேட்கவேண்டுவதும், முன் கேட்டது
மாகிய வைதீகசாஸ்திர சப்தங்களிலும், இலௌகிகசாஸ்திர
சப்தங்களிலும் மனப்பற்றுதலற்று வைராக்கிய முடையவ
னாவான்; அவ்வாறு அவற்றால் பயனின்றென்று வைராக்கிய
மடைந்ததனால் பரமான்மாவான என்னை உள்ளவண்ணமே
அடைவான்; அருச்சுனா! இனியும் அந்த வழியைக் கூறுகி
றேன் கேள்: மேற்கூறியபடி எல்லாப் பொருட்கும் ஆதியாய்
நிற்கின்ற பரமான்மாவினிடத்தே சந்தேக மில்லாமலும்,
சலிப்பின்றியும் அவன் எக்காலத்தில் நிலையாக நின்றானோ

அக்காலத்திலே இந்நெறியினின்ற அந்த யோகியானவன், சாஸ்திரங்களிற் கூறிய தத்துவஞானமென்னும் யோகத்தின் பயனை அனுபவிப்பான்,” என்று கூறினார்.

இவ்வாறு ஸ்ரீகிருஷ்ணபகவான் கூறவே, வில்லைத்தாங்கிய புயத்தினையுடைய அருச்சுனன், ஆன்மதத்துவஞானியின் இலக்கணத்தை யறியும் விருப்புடையவனாய்ச் சிலவார்த்தைகளைக் கூறத்தொடங்கி, அந்தப் பகவானுடைய திருமுகத்தை நோக்கி, “சுவாமி! முன்சொன்ன சமாதியினிடத்தே நிலைபெற்ற ஆன்மதத்துவஞானியை மற்றவர்கள், எவ்வகைப்பட்ட இலக்கணமுடையவனாகக் கூறுவார்கள்? அவன் சமாதியினின்று மெழுந்தபோது அச்சமாதியினின்றும் வெளிப்பட்ட சித்தத்தை நிக்கிரகஞ் செய்யும்பொருட்டு நேத்திர முதலிய வெளியிந்திரிய நிக்கிரகம் எவ்வாறு செய்வன்? வெளியிந்திரியநிக்கிரக மில்லாத காலத்தில் எவ்வாறு விஷயங்களை யடைவன்? தன்னை ஒருவர் துதிக்குங்காலத்திலும், நிந்திக்குங்காலத்திலும் எவ்வாறு வார்த்தையாடுவன்? உள்ளபடியே இவ்வினாக்களுக்குத் தகுதியான விடைகளைக் கிருபையோடு உரைத்தருள்வீராக,” என்று சொல்ல, ஆகாயத்தை ஆதியாகக்கொண்ட ஐந்து வகையான பூதங்களையும், சகல போகங்களையும் சிருஷ்டித்தருளிய அந்தக் கிருஷ்ணபகவானானவர் அவ்வினாக்களுக்குத் தகுதியான விடைகளைக் கூறத்தொடங்கினவராய், அவனை நோக்கி, “அருச்சுனா! சமாதியிலுள்ள அந்தப் புருஷன், தன் மனத்தினிடமுள்ள எல்லா ஆசைகளையும்நீக்கி, ஆன்மாவின்கண் ஆன்மாவினாலேயே திருப்தியடைந்து, மயக்கத்தைத் தருவனவாகிய குரோதம், இராகம், பயம் என்னும் இவைகளை நீக்கிச் சுகதுக்கங்கள் மித்தையாகத்தோன்றுங் காலத்தில் அவற்றால் முறையே உண்டாகின்ற சந்தோஷம், விசனம் ஆகியவற்றைக் கெடுத்து, பழவினையாலுண்டாகும் ஸ்துதியிலும்நிந்தையிலும்முறையேநிகழும் விருப்பையும் வெறுப்பையு மொழித்து, ஆமையானது தன் சிரசுமுதலிய ஐந்தவயவங்களையும் தன்சரீரத்தினிடமாக



ஒடுக்கிக்கொள்ளுந்தன்மைபோலத் துன்பத்தைச்செய்கின்ற சுரோத்திரம் முதலிய இந்திரியங்கள் ஐந்தையும் சப்தாதி விஷயங்களினின்றும் நீக்கித், தன்னுள்ளே அடக்கமிகும்படிச்செய்துஆன்மாவின்கண்ணே இரமித்து விளங்குவானாதலின், அவனை இப்படிப்பட்டதன்மையுடையவனாகவேஅறிஞர் கூறுவர்; அனுகூலப் பிரதிகூலமுடையவைகளாகிய பதார்த்தங்க ளெல்லாவற்றிலும் விருப்பும்வெறுப்புமின்றிஎப்பொழுதும் அவைகளை உதாசினமாகச் சொல்வதே அவனுடைய வசனத்தினதியல்பாம்; ‘சப்தாதிவிஷயங்களினின்றும் சுரோத்திராதி யிந்திரியங்கள் நீங்கி யடங்கியிருத்தலே நிலைபெற்ற ஆத்மஞானத்திற் கேதுவாமென்றால், பிணி, உபவாசம்முதலியவற்றால் மூடபுருஷரின் சுரோத்திராதி யிந்திரியங்களும் சப்தாதி விஷயங்களினின்றும் நீங்குகின்றனவே, அப்படி நீங்குவதால் அவர்களும் நிலைபெற்ற ஆன்மஞானிக ளாதல் வேண்டுமே’ எனில், ஆன்மாவினிடத்தே நிலைபெறாத அஞ்ஞானியானவன், தான் கருவியாகக்கொண்ட சுரோத்திரம் முதலிய இந்திரியங்களை தவசு முதலியவற்றால் குறையும்படி ஒடுக்கினாலும் அளவிறந்த அலைகளையுடைய கடல்போலும் சித்தத்தின்கண்ணுள்ள விஷய இச்சைகளை நீக்கமாட்டான்; விஷய இச்சையானது, பரமான்மாவைத் தரிசித்திருக்கிற நிலைபெற்ற ஆன்மஞானிக்கே நிவிர்த்தியாகும்; பரமான்மாவின் தரிசனையாலல்லாமல் இச்சையோடு கூடிய விஷய நிவிர்த்தி ஏற்படாததலால், ஞானத்தை அடைதற் குரியவன் விஷய இச்சையை நிவிர்த்தி செய்யத்தக்க ஞானரூபமான அறிவின் ஸ்திரமான நிலைமையை அவசியம் சம்பாதித்தல் வேண்டும். அறிவின் ஸ்திரத்தன்மையை யடைவதற்கு சுரோத்திரம் முதலிய வெளியிந்திரியங்களின் நிக்கிரகமும், மனோநிக்கிரகமும் முக்கிய காரணமாம். அவற்றைச் செய்யாவிடில் அறிவானது நாசமாம்; குருவினிடத்தில் சுருதி வாக்கியங்கள் பலவற்றையும் படித்து இந்திரியங்களை யடக்கும் பிரயத்தினமுடைய விவேகியின் மனத்தையும் பலாத்காரமாக இழுத்து அவனது தைரியங் கெடும்படி சுரோத்தி

ராதி இந்திரியங்களைந்தும் சப்தாதி விஷயங்களிலே புகுவிக்கும்; ஆதலால், சுரோத்திர முதலிய இந்திரியங்கள் ஐந்தையும், ‘சர்வான்மாவான வாசுதேவனே நான் அன்னியனல்லன்,’ என்று நினைத்துச் சதாகாலமும் அவ்வனுஷ்டானத்தைச் செய்யும் சாமர்த்தியத்தாலும், விஷயங்களைத் தோஷமுடையவையாகக் கருதும் சாமர்த்தியத்தாலுமல்லாமல் வசப்படுத்துதல் முடியாது; வெளியிந்திரியங்களடங்கியும் குற்றமற்ற அந்தரிந்திரியமான மனம் அடங்காதானால் தீமையான சப்தாதி விஷயங்களிலே, ‘இவை சுகசாதனமாம்’ என்று செல்லும்; அங்ஙனம் அவ்விஷயங்களில் சென்றதானால், அவற்றில் பிரியமுள்ளதாய் அந்தப் பிரீதியினாலே அது புகைந்து, வெவ்விதாகிய ஆசைரூபமாய்ப் பற்றித் தன்னால் விரும்பப்பட்ட பதார்த்தம் தன்னிடத்தே பொருந்தாமற் போகுமானால் கொடிய குரோதரூபமாய்ப் பெரியதருவானது தான் பெற்ற தீயினாலே தானே வேதல்போல வேகும்; அவ்வாறு தீயை நிகர்த்த குரோதமானது அதிகரிக்க, மோகமானது வந்து பொருந்தும்; அம்மோகமானது வந்து பொருந்தவே குருசாஸ்திரங்களாலறிந்த அர்த்தங்களின் ஆராய்ச்சிரூபமான ஸ்மிருதியறிவுகள் கெடும்; அவ்வாறு மனத்திலறிந்தஸ்மிருதிஞானங்கள் கெட்டபொழுதே முத்தியடைதற்குரிய அத்துவிதான்மாகாரமனோவிருத்திரூபமான புத்தியானது கெடும்; அந்தப் புத்தியானது கெட்டொழிந்த வழியே, அடைதற்கரியனவென்று பெரியோரால் புகழப்படும் சர்வ புருஷார்த்தங்களும் அடையப்படாமல் மாய்ந்தொழியும்.

அருச்சுனா! இனி மற்றைய வினாக்களுக்கும் விடை கூறுகிறேன் கேள்: ஒன்றில் விருப்பும், மற்றொன்றில் வெறுப்புமில்லாமல் தனது வசமாகச்செல்லும் சுரோத்திராதி இந்திரியங்களாலே மாட்சிமைப்பட்ட போகங்களை அனுபவிக்கும் சுவாதீன சித்தமுடைய புருஷன், அப்போகங்களால் மனங்கலங்கமாட்டான்; அவனுடைய மனத்தின்கண்ணேபிரமான்ம



தரிசனைக்கு யோக்கியமான தெளிவே யுண்டாகும்; அவ்வாறு அவனுடைய மனமானது மிகவும் தெளிவடையவே அஞ்ஞான காரியங்களான அளவற்ற துக்கங்களும் நாசமாம்; அப்படி அவை நாசமாகவே பிரமான்மாவில் பேதமின்றிப் பொருந்திய புத்தி நிலையாகும்.

பஞ்சேந்திரியங்களையும் நிக்கிரசஞ் செய்யாதவர்களுக்குக் குருசாஸ்திரோபதேசங்களால் ஆன்மவிஷயமான புத்தி உண்டாகாது; அப்படி ஆன்மவிஷயமான புத்தி யில்லாமற்போகவே, விஷயப்பற்று நீங்கிய மெய்யுணர்வாகிய ஆன்மத்தியானம் உண்டாகமாட்டாது; அவ்வாறு ஆன்மத்தியானம் இல்லையானால் பின்பு தாம் தொடங்கிய சாட்சாத்காரரூபமான சித்தசாந்தியானது உண்டாகமாட்டாது; அந்தச் சித்தசாந்தியானது உண்டாகாமற்போனால், சித்தசாந்திக்குரிய பயனாகச் சாஸ்திரங்களில் எடுத்துக் கூறிய மோக்ஷானந்த முண்டாகாமற் போகும்; இது சாஸ்திரங்கள் மூலம் பிரசித்தமா யிருப்பதால் நாம் இதைப்பற்றி எடுத்துரைக்க வேண்டியதில்லை. தம்தம்முடைய விஷயங்களை அனுபவிக்கும்படியான வழிகளில் தாம் வேண்டியபடியே சஞ்சரிக்கின்ற ஐம்புலன்களுக்கும் பின்னே அவற்றையுடைய புருஷனால் நியமிக்கப்படாமல் அவை சென்ற வழியே அவற்றிற் கனுகூலமாகச் செல்கின்ற மனமானது அந்தப் புருஷனுடைய ஆன்மவிஷயமான புத்தியை நாசஞ் செய்து அவனைக் கலங்கும்படிச் செய்யும்; இச்செய்கை எதைப்போன்றதெனில், நீர் நிரம்பிய சமுத்திரத்தில் ஓடுகின்ற கப்பலை, அதனோடு அதற்கனுகூலமாகச் செல்கின்ற காற்றே பிரதிகூலமாகி அதனை அடித்துடைத்து அக்கடலின்கண்ணே ஆமிழ்த்தி வீழ்த்துதல் போன்றதாம்.

ஆன்மவிஷயமான எந்த புத்தியைச் சர்வபிராணிகளும் இரவைப்போலக் கருதி அறியமாட்டாவோ அந்த ஆன்மவிஷயமான புத்தியைச் சொல்லுதற்கரிய இந்திரிய நிக்கிரகமுடைய ஞானியானவன் உள்ளங்கை நெல்லிக்கனிபோலச்

சந்தேகமின்றி யுணர்வான்; எந்தச் சப்தாதி விஷயமான புத்தியை எல்லா உயிர்களும் எப்பொழுதும் காணுமோ அந்தச் சப்தாதிவிஷய புத்தியை, விஷய ஆசை யொழிந்த ஞானியானவன் கண்ணினால் தெரியக் காணமாட்டான். இன்னும், பலவித நதிஜலங்களால் நிறைந்து தனதெல்லை கடவாமல் நிற்கின்ற கடலிலே, நீரினால் நிறைந்த கங்கை, யமுனை முதலிய நதிகள் பலவிதமான வழிகளாற் சென்று பிரவேசிப்பதால் அச்சமுத்திரமானது சிறிதேனும் பெருகித் தன்னுடைய நிலைமை மாறி விகாரமடையாது; அத்தன்மைபோல அறிவு நிறைந்து நிர்விகாரரூபமாயுள்ள நிலைபெற்ற ஆன்மஞானிகளின் சந்நிதியை நோக்கிச் சப்தாதி விஷயங்கள் முழுதும் பிராரப்த கர்மவசத்தால் வந்தடையுமாயின், அவ்விஷயங்களால் அவர்களும் விகார மடையார்கள்; இரதத்தையுடைய அருச்சுனா! சரீரேந்திரியாதி கூட்டங்களில், யான் என்னும் ஆன்மாபிமானமும், சரீர பாதுகாப்பின்பொருட்டு பிராரப்த கர்மவசத்தால் அடையப்பட்ட கந்தை, கௌபீனம் முதலியவற்றில், 'என்னுடையது, என்னுடையது,' என்று கொள்ளும் மமதாபிமானமும் இல்லாமல் எத்தகைய பொருள்களையும் நீக்கிப், பரமான்மாவாகிய தான் ஒருவனே என்று முள்ளவனென்னும் உள்நோக்குடையவனாய்த் தனது இச்சை எங்கேயோ அங்கே சஞ்சரிக்கின்றவன் எவனோ அந்தப் பிரமநிஷ்டனையே எல்லா சம்சாரங்களின் துக்க நிவர்த்திரூபமான மோக்ஷமானது அடையும்; பிரமநிஷ்டாரூபமான இந்த நிலைமையைப் பெரியோர் சொல்லிய கிரமப்படி அடைந்த புருஷர் மீண்டும் சம்சார மயக்கத்தை அடையார்கள்; தேகம் இறக்கும் சமயத்திலாயினும் பிரமஞானரூபமான இந்த ஸ்திதியை அடைபவர் பிரமசொரூபமான என்னை அடைவர்; பிறவியை அடையமாட்டார்கள்," என்று சொன்னார்.

இரண்டாவது

சாங்கியயோகவத்தியாயம் முற்றுப்பெற்றது.

---

மூன்றாவது

## கர்மயோகவத்தியாயம்.

கோச்சகக்கலிப்பா.

"அலையிலே கடல்கிடந்து மருமறைக ளானவற்றின்
றலையிலே யிருக்குமவன் றேரிலே நின்றருளிக்
கலையிலே பொருளெடுத்துக் காட்டவுமெய் காணாதே
சிலையிலே தோள்விசய னிவ்வண்ணஞ் செப்புவான்."

அலையையுடைய திருப்பாற்கடலிலே அறிதுயிலமர்ந்தும், அரியனவாகிய வேதங்களின் சிரசிலே வீற்றிருந்து விளங்கும் ஸ்ரீ பகவான், மேற்கூறியபடி அருச்சுனனுடைய தேரின் மீது எழுந்தருளிச் சுருதிகளிலுள்ள அரிய பொருள்களையெடுத்துரைத் தறிவித்தும், வில்லைத் தாங்கிய புயத்தையுடைய அருச்சுனனானவன், அந்தப் பகவானுடைய உபதேச வாக்கியங்களின் தாற்பரியத்தை யறியாமல் இதனடியில் வரும் இவ்வண்ணமாகச் சொல்லத் தொடங்கினவனாய் மீண்டும் அவர் திருமுகத்தை நோக்கி, "மலையைப்போலும் அளத்தற்கரிய கிருபையையுடைய சுவாமி! நிஷ்காமகர்மத்தைப் பார்க்கிலும் ஞானமானது சிரேஷ்ட முடையதென்று கூறினீர்; மீண்டும் கர்மமானது சிரேஷ்டமுடையதென்று மொழிகின்றீர்; நான் இவ்விரண்டில் இன்னது முக்கியமானது, இன்னது முக்கியமல்லாதது என்றாராய்ந்தறியக்கூடாதவனாயிருக்கின்றேன்; ஆதலின், உம்மைச் சரணமாகவடைந்த எனக்குப் பொருந்திய சோகத்தை யொழியச் செய்யும் சாதனத்தை ஒரேவிதமாக நிச்சயித்து விளங்கும்படி உபதேசித்தருள வேண்டும்," என்று கூறினான்.

இவ்வாறு கூறியவுடனே அந்தக் கிருஷ்ணபகவான் இவ்வினாவுக்கு விடைகூறத் தொடங்கினவராய் அருச்சுனனை நோக்கி, "விஜயனே! சிருஷ்டியாரம்பத்திலே பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்து, பிராமணர், க்ஷத்திரியர், வைசியர் என்னும் மூன்று வர்ணத்தார்களையும் உண்டக்கிய அப்போது

சாஸ்திரார்த்த சம்பிரதாய கர்த்தாவும், சர்வக்ஞனுமாகிய யான் உபதேசித்தருளிய ஞானநிஷ்டை, கர்மநிஷ்டை என்னும் இரண்டும் உண்மையானவைகளே; இவற்றுள், ஞானநிஷ்டை ஆன்ம அநான்ம விவேகமுடைய புருஷர்க்கும், கர்மநிஷ்டை மலினாந்தக்கரண முடையோர்க்கும் முக்கியமானவைகளாம். மண், தண்டம், சக்கரம், குயவன் முதலிய காரணங்கள் இல்லையானால் கடரூபமான காரியோற்பத்தி உண்டாகாததுபோல நிஷ்காமகர்மரூபமான காரணம் இல்லையானால் ஞானரூபமான காரியோற்பத்தி உண்டாகமாட்டாது; ஆதலால், நித்திய நைமித்திக கர்மங்களை நிஷ்காமனாய்ச் செய்யாதவன் தீமை பொருந்திய ஆசை நீங்கி அந்தக்கரண சுத்தி யடையமாட்டான்; இன்னும், 'சந்நியாசத்தினாலேயே முத்தியடைதல் கூடும் என்று சுருதி கூறுவதால் கர்மத்தாற் பிரயோசனம் யாது?' என்று நீ நினைத்தல் கூடும்; அதற்குச் சமாதானங் கூறுகிறேன் கேள்: மேலான இயற்கையையுடைய நிஷ்காமகர்மங்களை யனுஷ்டிக்காத அசுத்தாந்தக்கரணமுடைய சந்நியாசியானவன் அந்தச் சந்நியாசத்தால் மாத்திரம் மோக்ஷமடையான்; ஏனெனில், நிஷ்காமகர்மானுஷ்டான மின்றிச் சித்தசுத்தி யுண்டாகாது; சித்தசுத்தியின்றி ஞானம் உண்டாகாது; ஞானமின்றி மோக்ஷமில்லை. இன்னும் ஞானி, அஞ்ஞானி ஆகியவர்களுள், எந்தக்காலத்திலும் ஒரு க்ஷணநேரமாத்திரமாவது புண்ணியம், பாவம் என்னும் இருவகை வினைகளையும் செய்யாதவர்களில்லை; பூர்வஜன்ம வாசனையால் உண்டாகின்ற இராகத்துவேஷாதிகளினால் சுவாதீனமற்றுச் சகலரும் கர்மங்களில் பிரவேசிப்பார்கள். ஆதலால், விடுதற்கரிய மயக்கமான ஆசைபறுத அந்தக்கரண முடையவனாய் வாக்கு, பாதம், பாணி முதலிய கர்மேந்திரியங்களை அடக்குபவன், துன்பத்தோடு சப்தாதி விஷயங்களையே மனத்தினால் நினைத்துக்கொண்டிருப்பான்; இவன் கபடாசார முடையவனென்று கூறப்படுவான். ஆதலின், அருச்சுனா! நீ சுரோத்திரம் முதலிய ஞானேந்திரியங்கள், சப்தம் முதலிய விஷயங்களிற் செல்வதைத் தடுத்துப்



பலனில் இச்சையின்றி நித்தியநைமித்திகாதி கர்மங்களை பரமேசுரனான எனது பிரீதியின்பொருட்டுக் கர்மேந்திரியங்களினால் செய்வாய்; நன்மை மிகுந்த அந்த நித்தியாதிகர்மங்கள் காமியகர்மங்களைப்போல நாசமாகாமல் நின்று சித்தசுத்தியைத் தருவதுந்தவிர ஞானவாயிலால், கலக்கம்பொருந்திய ஜன்மபந்தத்தையும் ஒழிக்கும்; இன்னும் கர்மங்கள் ஒன்றையும் செய்யாதிருப்பதைக்காட்டினும், காமிய கர்மங்களையேனும் செய்தல் உத்தமமாம்; அவற்றின் தன்மையைக் கூறுவேன் கேள்.

சிருஷ்டியாரம்பத்தில் ஜாதி, குலம், தர்மம் முதலியவற்றை யுணர்ந்து, இந்திரன் முதலிய தேவர்களைச் சந்தோஷிக்கும்படிச் செய்யும் எக்ஞாதி நியமங்களோடு கூட பிரம க்ஷத்திரிய வைசியரென்னும் இம்மூன்றுவகையான ஜனங்களையும் சிருஷ்டித்த பிரமாவானவர் அவர்களைப் பார்த்து, 'ஜனங்களே! பொருந்துதற்கரிய தேவாராதனம் இவ்வெக்ஞங்களாம்; இவை, நீங்கள் இச்சித்த பலன்கள் முழுவதையுந் தரும்; இன்னும் இவற்றின் வகையைக் கேட்பீராக; அதிகாரிகளாகிய நீங்கள் இந்த எக்ஞாதிரூபதர்மங்களால் இந்திராதி தேவர்களின் பலத்தை விருத்தியடையும்படி செய்யுங்கள்; நீங்கள் செய்வதுபோலவே அவர்களும் மேகத்தின்மூலம் மழை முதலியன பெய்யும்படிச் செய்து அம்மழைஜலத்தால் அன்னம் முதலியவற்றை யுண்டாக்கி அவற்றின் மூலம் உங்கள் உடலத்தை விருத்திபடையப் பண்ணிப் பாதுகாத்து உங்களை இரட்சிப்பார்; இந்தப்பிரகாரம் நீங்களும், தேவர்களும் ஒருவர்க்கொருவர் சந்தோஷத்தை யுண்டாக்கி நடந்துவருவீராகில் நீங்கள் இருதிறத்தவர்களும் இந்தப்படி முயன்று செய்யும் செய்கைகளாலே கிரமமாக மோக்ஷத்தையோ அல்லது சுவர்க்கத்தையோ அடைவீர்கள்; மேற்கூறியபடி எக்ஞத்தால் சந்தோஷமடைந்த தேவதைகள் தந்த அன்னம், பசு, சுவர்ணம் முதலிய பலவிதபோகங்களைக் கொண்டு மீண்டு அத்தேவர்களைப் பூஜியாமல் தங்களுடைய சரீரேந்தி

ரியாதிகள் புஷ்டியடைவதினிமித்தம் புசிப்பவர், பெரியோர் முன்னே பழித்துக் கூறிய செய்ந்நன்றி மறந்த கள்ளரைப் பார்க்கிலுங் கடைப்பட்டவராவர்; தேவர்களாற் பெற்ற அன்னம் முதலிய பொருள்களைக் கொண்டு, வேதங்களை மனப்பாடஞ் செய்தலும், சந்தியோபாசனஞ் செய்தலுமாகிய ரிஷியக்ஞம், அக்கினிஹோத்திர முதலியவற்றைச் செய்லாகிய தேவயக்ஞம், பலிமுதலியவற்றைச் செய்தலாகிய பூதயக்ஞம், வீட்டில் வந்த அதிதியை அன்னம் முதலியவற்றையுண்பித்துச் சந்தோஷிப்பித்தலாகிய மனுஷ்யயக்ஞம், சிரார்த்தம் தர்ப்பணம் முதலியவற்றைச் செய்தலாகிய பிதிர்யக்ஞம் ஆகிய ஐந்து யக்ஞங்களையுஞ் செய்து அவர்களைப் பூஜித்து அதற்குமேல் மிஞ்சின அமிர்தமயமான அன்னம் முதலியவைகளைக்கொண்டு தான்புசியாமல், மேற்கூறியபடி தேவர்களால் தானடைந்த அன்னம் முதலியவைகளைத் தனதுவயிறு பருத்திப்பொதிபோலப் பருக்கும்பொருட்டாகப் பாகஞ்செய்துண்பவன், நெற்குத்தல், திரிகை அம்மி முதலியவைகளில் அரிசிமுதலிவைகளை அரைத்தல், கூட்டல், அடுப்பில் தீமூட்டுதல், பாண்டங்களில் ஜலம்வைத்தல் என்னும் ஐந்துதொழில்களாலு முண்டாகும் ஜீவஹிம்சையால் வரும் பஞ்சசூனை முதலிய பாவங்களையே போசனஞ்செய்பவனாவன்; மேற்கூறியபடி பஞ்சயக்ஞங்களைச் செய்து மீதியாயுள்ள அமிர்தமயமான அன்னம் முதலியவற்றைப் புசிக்கும் கருமாதிகாரியான சிஷ்டபுருஷன் பஞ்சசூனை முதலிய பாவங்களினின்றும் விடுபடுவான்,' என்று பூவுலகிலுள்ள அந்தப்பிரஜைகளுக்கு உபதேசித்தார்; இதனால் நித்தியகர்மங்களைச் செய்தல் மனிதர்க்கு அவசியமென்பது நன்கு விளங்கும்.

இளமையான ஒளிமிகுந்த சிம்மத்தையொப்பான வீரத்தையுடைய அருச்சுனா! இன்னமுங் கேள்; மனிதரால் உண்ணப்பட்டுச் சுக்கிலசோணிதரூபமாக வேறுபடுகின்ற அன்னத்தினால் பிராணிகளின் சரீரங்கள் உண்டாகும்; அந்த அன்னத்திற்குக் காரணமான நெல் முதலியவைகள் உயர்வான



மழை பொழிவதால் உண்டாகும்; வளம் பொருந்திய மழையானது உயர்வான தேவதைகளின் சந்தோஷத்தாலுண்டாகும்; அந்தத் தேவதைகளின் சந்தோஷம், பொருந்துகின்ற அக்கினிஹோத்திர முதலிய கர்மங்களால் உண்டாகும்; இந்த அக்கினிஹோத்திர முதலிய கர்மங்களைப் பிரமாணங்களெவற்றினும் மேலான பிரமாணமாகிய வேதம் உண்டாகும்படிச் செய்யும்; பெருமை பொருந்திய இந்த வேதமானது, தனது தாற்பரியத்தால் சதா தர்மரூபமான அந்த எக்ஞத்திலிருக்கின்றது. அன்னத்தால் பிராணிகளின் சரீரங்களும், மாரியினால் உணவும், வானவர் மகிழ்ச்சியால் மாரியும், எக்ஞம் முதலிய கர்மங்களால் வானவர் மகிழ்ச்சியும் விருத்தியடையுமென்று சொன்ன இந்த வகையினாலே, கர்மங்களினின்றே எல்லாம் உண்டாகக் கூடியவைகளாயிருக்கின்றன. இந்தப்படி எப்போதும் நிலையான ஈசுரனால் நியமிக்கப்பட்டு வருகின்ற கர்மரூபமான சக்கரத்தின் வழியை அனுசரியாதவர்களாய்ச் சஞ்சரிப்பவர்கள், அவருடைய ஆக்ஞைரூபமான வேதநெறியை அனுசரியாததுந் தவிர, வந்தடைந்தபோது மாத்திரம் இனிமையாகத் தோற்றும் இந்திரியங்களின் விஷயங்களையே சந்தோஷித்தற்கிடமாகக் கருதி அவற்றைப் பற்றியிருப்பர்; அக்காரணத்தால் பாவஜீவனமுடைய அவர்கள் வியர்த்தமாகவே ஒரு பயனுமின்றி ஜீவிப்பவர்களென்று நீ அறியக்கடவாய்.

இங்ஙனம் மனிதன், கர்மங்களைச் செய்தல் அவசியமாயினும், * சமம், † தமம் முதலிய சாதனங்களில்லாத புத்தியினால் கருதியறிதற்கரிய ஆன்மாவைப் பரமான்மாவாகக் கருதித் தரிசித்துப் பரமானந்தரூபமான அவ்வான்மாவினிடத்தே பூரணமா பெழுகின்ற சந்தோஷங்களைக் குறைவற அடைகின்றவனான பிரமநிஷ்டன், அளவிறந்த கர்மங்களால் வரப்பட்ட பயன்களை அடைவதற் கிச்சியானாதலின் அக்கார

---

* சமம் - அந்தக்கரணத்தைத் தண்டித்தல்.

† தமம்-புறத்தின்கண்ணுள்ள தசேந்திரியங்களைத் தண்டித்தல்.

ணத்தால் நித்திய நைமித்திகாதி கர்மங்களெல்லாவற்றையும் அவன் செய்வதால் அவனுக்குண்டாகும் பபனுமில்லை, அவற்றைச் செய்யாததனால் அவனுக்குறும் பழியுமில்லை; இவ்வுலகத்தில் அன்னியர் இந்தப் பிரமநிஷ்டன் இந்நற்கருமங்களைச் செய்திலனென் றெண்ணவுமாட்டார்கள்; பின்னும் இந்த நித்தியாதிகர்மங்களை இந்தப் பிரமநிஷ்டன் செய்யும்படி இவனுக்கு விதிக்கவு பாட்டார்கள்.

இதனால் நீ, 'யானும் தத்துவஞானத்தை யனுசரித்துக் கர்மங்களை விட்டுவிடுகிறேன்,' என்று சொல்லக்கூடும்; அது தகுதியன்று; நீ பலனில் இச்சையின்றிக் கர்மங்களைச் செய்தலே உனக்குத் தகுதியாம்; ஆதலால், நீ பிரயோசனத்தில் விருப்பம்வைக்காமல்உனக்குரியவைகளாகிய நித்திய நைமித்திககர்மங்களை மிகுந்த சிரத்தையோடு எப்பொழுதும் செய்யக்கடவாய்; இவ்வாறு நித்தியநைமித்திககர்மங்களைச்செய்வதால், அந்தக்கரண சுத்தியோடு ஆன்மஞானவாயிலால் குற்றமற்றதாகிய மோக்ஷத்தையே அடையலாம். முற்காலத்தில் இந்த நித்தியநைநிமித்திககர்மங்களைச் செய்தே முத்தியடைந்தவர் அநேகர்; இப்போது நீ அவர்களை யாவரென்று தெரியவிரும்பின் சொல்கிறேன் கேள்: அரசனாகிய ஜனகன், அஜாதசத்துரு, பகீரதன் முதலியவர்கள் சிரத்தையினால் சுருதிஸ்மிருதிகளிற் சொன்ன கர்மானுஷ்டானங்களை யனுசரித்து நடந்தே அந்தக்கரண சுத்தியால் ஞானநிஷ்டராய் மோக்ஷவுலகிற் புகுந்தார்கள்; இன்னும் நீ உன்னை ஞானியென எண்ணினாலும் உலகத்தவரைத் தங்கள் தங்கள் தருமங்களிற் சேர்ப்பிப்பதும், அதர்மங்களினின்று மீட்பிப்பதுமாகிய இவ்வுலக இரக்ஷிப்பின்பொருட்டு நித்தியநைமித்திககர்மங்களை மறந்துங் கைவிடாமல் செய்வாயாக.

இன்னும் நீ, 'நான் கர்மம்பண்ணுவது எப்படி உலக இரக்ஷிப்புக் கேதுவாகும்?' என்று வினவக்கூடும்; அந்தக் கிரமத்தையும் கூறுகிறேன் கேள்: உலகத்தில் அரசன் முதலிய சிரேஷ்டர்களுடைய ஆணைவழி நடப்போர், அவர்கள் அனு



சரித்துவந்த கிரமங்களை அனுசரித்து வருவதல்லாமல் வேறொன்றையும் அனுசரியார்கள். அந்த ஒழுங்கின்படி நீ எதைச்செய்கின்றாயோ அதையே உனக்குப் பின்னுள்ளோர் செய்வர்; ஆதலின், எல்லா வுலகங்களினும் சிரேஷ்டனான நீ நல்வழி காட்டி உலகை இரக்ஷித்தற்பொருட்டு அவசியமாகச் சுபகர்மங்களைச் செய்யவேண்டும்; இவ்வாறு பெரியோர் உலகமரியாதையை நிலைநிறுத்தும்பொருட்டு நற்கருமங்களைச் செய்வார்கள் என்பதற் குதாரணமாக நீ என்னையே தெரிந்துகொள்ளலாம்; எனதாட்சிக் குரியவைகளான சுவர்க்க மத்திய பாதாளமென்னும் இந்த வுலகங்கள் மூன்றிலும், இவற்றிற்குச் சுவாமியாகிய எனக்குச் செய்யவேண்டிய கர்மம் ஒன்றுமில்லை; இன்னும் இம்மூவுலகங்களினும் என்னால் அடைதற்கரியனவும், அடையத்தக்கனவும் எவையுமில்லை; அப்படியிருந்தும் அருச்சுனா! பெரிய இவ்வுலகமானது சிரத்தையோடு கூடிச் சுபகர்மங்களைச் செய்து உய்தற்பொருட்டு நான் சுபகர்மங்களிற் பிரவேசித்திருக்கின்றேன்; இவ்வாறு ஆலசியமில்லாமல் சுபகர்மங்களில் பிரவேசித்திருக்கிற என்னையும் திருஷ்டாந்தமாகப் பார். மேற்கூறியபடி பெரியோர் உலக மரியாதையை நிலைநிறுத்தும்பொருட்டு உரிய நற்கருமங்களைச் செய்யவேண்டுமென்பது உண்மையில்லையானால் நான் ஏன் இவ்வாறு செய்கிறேன்? சகல தர்ம பரிபாலகனான எனது அவதார சரீரத்திற்குப் பொருத்தமாகிய இந்தச் சுபகர்மங்களை யான் செய்யாமற்போவேனாகில், அவ்வாறு யான் செய்யாத சுபகர்மங்களைக் கர்மாதிகாரிகளான சகல மனிதரும் எவ்விதத்தாலுஞ் செய்யபாட்டார்கள்; அக்காரணத்தினாலே என்னால் நிலைபெறச்செய்த வருணங்கள் கலப்பாகி அம்மனிதரும் நாசமாகிவிடுவர்; அவ்வாறு உலகங் கெடாதிருத்தற்பொருட்டே நான் மேற்கூறியபடி சுபகர்மங்களைச் செய்கின்றேன்; என்னைப்போல நீ, அநேக ஜனங்களுக்குச் சிரேஷ்டனாதலால் ஆன்மஞானியாகிய நீயும் இந்த வுலகின்மீது கருணைகூர்ந்து சுபகர்மங்களைச் செய்யவேண்டும்; பின்னால் வருவதை யுணராமல், ஆசை

யோடு கூடிச் சுபகர்மங்களைச் செய்யும் அஞ்ஞானியைப் போல நடித்து உலக இரக்ஷிப்பின் நிமித்தமாக உன்னுடைய நற்கருமங்களைச் செய்; இவ்வாறு செய்வதோடு சுவர்க்கலோகத்தின்பம் முதலிய பலன்களின் இச்சையோடு கூடி எக்ஞாதிகர்மங்களை யனுஷ்டிக்கும் அஞ்ஞானிகளுக்குத் தத்துவ ஞானோபதேசஞ்செய்து அவர்களுடைய உணர்வைச் சுபகர்மங்களினின்றும் நீங்கும்படிச் செய்யும் செய்கையையும் விட்டுவிடுவாயாக. அவ்வாறு நீ அசுத்தாந்தக்கரணமுடைய அனதிகாரிகட்குத் தத்துவஞான முபதேசிப்பாயானல் அவர்களுக்குச் சுபகர்மங்களிலுள்ள சிரத்தை நீங்கிவிடுவதனாலும், அவர்களுடைய அசுத்தாந்தக்கரணத்தில் ஆன்மஞான முண்டாகாமையினாலும் அவர்கள் போகம், மோக்ஷம் ஆகிய இரண்டையு மிழந்துவிடுவார்கள்; ஆதலால், உன்னைப்போன்ற ஆன்மஞானி, தானும் சுபகர்மங்களைச் செய்துகொண்டு அவர்களையும் சுபகர்மங்களிலே பிரவேசிக்கும்படிச் செய்தல் அவசியமாம்.

அருச்சுனா! இன்னும் நீ, 'ஞானியும் கர்மம் பண்ணவேண்டுமானல், ஞானிக்கும் அஞ்ஞானிக்கு முள்ள வேறுபாடு யாது?' என்று வினவக்கூடும். அதற்கும் விடை கூறுகிறேன் கேள்: ஆன்மாவுக்கும், * சட்சுமுதலிய இந்திரியங்களுக்கும் எதார்த்தமாகவுள்ள வேறுபாடுகளை நன்றாக அறிந்த ஞானியானவன், ஐந்துவகையான சுபாவமுடைய சட்சு முதலிய இந்திரியங்களே உருவம் முதலிய விஷயங்களில் பிரவேசித்து வருந்துகின்றன. ஆன்மாவாகிய யான் பிரவிர்த்திக்கவில்லை என்றறிந்து கர்மங்களில் அபிமான முறமாட்டான்; இவ்வாறு ஆராய்ந்தறியாத அஞ்ஞானியானவன் லௌகிக வைதிகமென்னும் இருவகைக் கர்மங்களையும் 'யானே செய்தேன்' என்றெண்ணி மனமெலிந்து வருந்துவான்; ஞானியும் கர்மம் பண்ணவேண்டுவது உசிதமாயிருப்பதை உத்தேசித்துக் கர்மாதிகாரியாகிய நீ அவசியம் கர்

* சட்சு - கண்.



மங்களைச் செய்யவேண்டுமாதலின், நீ மோக்ஷத்தை யடைந்துய்யும்படிக்கு இப்போது நான் சொல்லிவந்த இவ்வகைகளை யறிந்து உனக்குச் சுதர்மமான யுத்தத்தை, ஈசுரனான என்னிடத் தர்ப்பணஞ்செய்து பலனில் இச்சையில்லாதவனாயும், சோகமற்றவனாயும் செய்யக்கடவாய்," என்றுரைத்தார்.

இவ்வாறு கூறிய ஸ்ரீ கிருஷ்ணபகவான், கர்மங்களை யனுஷ்டிப்பதால் வரும் நன்மையையும், அனுஷ்டியாமையால் வரும் தீங்கையும் கூறத்தொடங்கி மீண்டும் அருச்சுனனை நோக்கி, "அருச்சுனா! இன்னமுங் கேள்: எவர்கள், பரமகுருவென்னும் வாசுதேவனாகிய என்னிடத்தில், 'துக்கத்தைக் கொடுக்கத்தக்கதானகர்மத்தில் நம்மைப் பிரவேசிக்கும்படிச் செய்கின்றார்,' என்னும் அசூயையை ஒழித்து என்னுடைய அபிப்பிராயமான இந்த நற்கர்மத்தை அன்போடு தினந்தோறும் அனுஷ்டித்துச் செய்வார்களோ அவர்கள், புண்ணிய பாவரூபமான கர்மங்களை விட்டவரேயாவர்; என்னிடத்துண்டான அசூயையினால், யான் முன்னே உரைத்தருளிய இம்மதத்தை அனுசரியாமல் அநேகவிதமான தோஷங்களைக் கற்பித்து நிந்திக்கும் துஷ்டசிந்தனையுடையவர்கள், கீழே வலிமையான பாருள்ள பூமியிலுண்டாகிய மரத்தைப்போல அடிப்பலமற்று எல்லாப் புருஷார்த்தங்களையும் விட்டுநீங்கி சர்வஞானங்களையு மிழந்திறந்தவர்களேயாவர். அருச்சுனா! இன்னும், 'உம்முடைய மதம் இவ்வாறு உயர்வுடையதாயிருக்கும்போது, எல்லாப் பிராணிகளும் அசூயையினால் இதனை அனுசரியா திருப்பதற்கும், சர்வ புருஷார்த்த சாதனங்களிலும் புத்தியைச் செலுத்தா திருத்தற்கும் காரணமென்னை?' என்று நீ வினவும்பக்ஷத்தில் அதற்கும் விடை கூறுகின்றேன்: பிரமத்தை அல்லது குணதோஷங்களை அறிந்தவர்களும் முந்தின ஜென்மங்களிற் செய்த ஜென்ம வாசனையை அனுசரித்துவரும் சேஷ்டைகளைப்பற்றி நிற்பார்கள்; அவர்களே அப்படி ஜென்மவாசனையால் சேஷ்டைகளை யனுசரித்து நடப்பார்களானல், அஞ்ஞானிகளாகிய மூடபுருஷர்

சர்வக்ஞனாய் நிற்கின்ற பரமேசுரனான என்னுடைய கட்டளையால் உபகார முண்டென்று அறிவார்களோ? ஒருபோதும் அறியமாட்டார்கள்; ஆதலின், என்னுடைய ஆச்ஞையானது அவர்களிடத்தில் என்ன செய்யும்? அவர்கள் தோஷத்திற்கு ஒருபோதும் அஞ்சமாட்டார்கள். 'இவ்வாறு ஜென்ம வாசனையை அனுசரித்துச் சகலரும் கர்மங்களிற் பிரவேசிப்பார்களானால் விதிவிலக்குகளை உபதேசிக்கும் சாஸ்திரம் வீணாமே,' என்று நீ கருதக்கூடும்; அதற்கும் தகுதியான விடை கூறுகின்றேன் கேள்: அவ்வாறு ஜென்ம வாசனையை யனுசரித்து எல்லோரும் கர்மங்களைச் செய்வாராயினும், விதிவிலக்குகளை ஏற்படுத்தும் சாஸ்திரம் வீணாகமாட்டாது; அதனால் மிக்க பிரயோசன முண்டு; அது கீழ்வரும் விஷயங்களால் நன்குவிளங்கும். அவ்விஷயங்களைக் கூறுகிறேன்கேள்: சுரோத்திரம் முதலிய பஞ்சேந்திரியங்கள் தொடருகின்ற சப்தம் முதலிய பஞ்சவிஷயங்களாகிய கொடிய பாலைநிலத்தில், உயிரானது உலர்ந்து வெதும்பித் துன்பப்படுகின்ற *முமுட்சுக்கள் பிழைத்துப் போதற்குக் காரணமான ஒரு ஞானமார்க்கத்தைக் கள்ளரைப்போலத் தடுத்துப் பலவிதமான துன்பங்களை அவர்களுக்குச் செய்வதற்கு, ஜென்ம வாசனையா லுண்டாகும் இராகத்துவேஷங்கள் உரியவைகளாயிருக்கின்றன; ஜென்ம வாசனையானது தனது வலிமையினால், விஷய நினைப்பின்வழியாக மேற்கூறிய இராகத்துவேஷங்களை வெளிப்படுத்தி அவற்றின் மூலம் மனிதரை வேகமுள்ள வெள்ளம்போலத் தள்ளித் துன்பங்களிற் சேர்க்கும்; மேற்கூறிய சாஸ்திரமோ அவ்வனர்த்தங்களிற் பிரவேசிக்கு முன்னரே இராகத்துவேஷங்களுக் கெதிரிடையான தேவாராதனையிற் பிரவேசிக்கச் செய்யும்; அதனால், வெள்ளத்தில் வீழ்வதற்கு முன்னரே அதனைக் கடத்தற்குரிய ஓடங் கிடைக்கப்பெற்றவனைப்போல மனிதர் அந்தச் சாஸ்திர வழியை யனுசரித்து அவ்வனர்த்தங்களினின்றும் நீங்குவர். ஆதலால், அருச்சுனா! நீ அந்தச் சாஸ்திர கிரமங்களை யனு

* முமுட்சுக்கள் - மோக்ஷவிருப்புடையவர்கள்.



சரித்து மேற்கூறிய இராகத்துவேஷங்களை ஒழித்துவிடக்கடவாய்.

இன்னும் நீ, 'இம்சை முதலியவைகளோடு கூடினதாயும், அரசர்க்குச் சுதர்மமாயும், சாஸ்திரத்திற் சொன்னபிரகாரம் இராகத்துவேஷங்களை நீக்கிச் செய்யக்கூடாததாயுமிருக்கிற யுத்தம் முதலிய செய்கைகளைப்பார்க்கினும் இம்சையற்ற தொழிலாகிய இரந்துண்ணல் முதலிய தொழில்களை யனுஷ்டிப்பது சுலபமாகையால் அவ்வாறே செய்தல் நலமாம்,' என்று கருதி உன் சுதர்மத்தை விட்டு வேறு தர்மத்திற் புகுதற்கும் விரும்பாதே; அருச்சுனா! ஒருவன் தனது ஆசிரமத்திற்கு உசிதமாகாததென்று விலக்கிய கர்மங்களை யனுஷ்டிப்பது கூடாததாம்; தனது ஆசிரமத்திற்கே உசிதமான யுத்தம் முதலிய கர்மங்களை யனுஷ்டித்து ஒருவன் மரணமடைந்தாலும் அத்தொழில் மிகவும் சிரேஷ்டமாம்; இக்காரணத்தால், உன்னைப்போன்ற அரசர் முதலாயினோர், தமக்குக் கூடாவென விலக்கப்பட்ட கர்மங்களை அதிகமாகச் செய்வதைக்காட்டிலும், சாஸ்திரங்களால் கூடும் என்று விதிக்கப்பட்ட கர்மங்களைக் கொஞ்சமாகவாவது அனுஷ்டித்தலே தர்மமாம்,'' என்று கூறினார்.

ஸ்ரீ கிருஷ்ணபகவான் இந்த வார்த்தைகளை இரதத்தில் நின்று சொல்லவே, அருச்சுனன் இவற்றையெல்லாங் கேட்டு, முன்னமே கூறப்பட்டிருக்கினும் நிச்சயிக்கக்கூடாமலிருக்கிற சம்சார மூலத்தை நன்றாக அறியவேண்டுமென்னும் இச்சையுடையவனாய் மீண்டும் அந்தக் கிருஷ்ணபகவானை நோக்கி, ''சுவாமி! உம்முடைய மதத்திற்கு விரோதமான பாவகர்மமானது எல்லாத் துன்பங்களுக்கும் மூலகாரணமாயிருப்பதால் அதைச் செய்யமாட்டோமென் றிருப்பவரைப் பலாத்காரமாகச் சேவகரைக்கொண்டு தமக்கு வேண்டிய காரியங்களைச் செய்துகொள்ளும் அரசரைப்போலத் திகைக்கும்படிச் செய்து அதைச் செய்விப்பவன் யாவன்?'' என்று வினவினான். இவ்வாறு அருச்சுனன் வினவவே, திருப்பாற்

கடலையே தமக்குரிய சயனமாகக் கொண்டருளிய ஸ்ரீ பகவான், அவனுடைய வினாவிற்குத் தகுதியான விடை கூறத் தொடங்கினவராய் அவனை நோக்கி, "அருச்சுனா! உன்னுடைய வினாவிற்குத் தகுந்த விடை கூறுகின்றேன் கேள்: மேற்கூறிய செய்கைகளைச் செய்விப்பவன் வேறொருவனுமல்லன்; அச்செய்கைகள் நிகழ்வதற்குக் காரணமாயுள்ளது, தீமையான இரஜோகுணரூபமான அந்தக்கரணத்தினின்றும் உற்பத்தியாகும் கொடுமையுள்ள அந்தக் காமமேயாம்; அதுவே அக்காரியங்களை நடத்துவிக்கின்றது. இன்னும், நீ 'குரோதமும் இவ்வாறே பிராணிகளை அனர்த்தத்திற் பிரவேசிக்கும்படிச் செய்யக்கூடியதாயிருக்கின்றதே? அப்படியிருக்கக் காமத்தைமாத்திரம் அச்செய்கைகளுக்குக் காரணமாகக் கூறியதென்னை?' என்று வினவக்கூடும்; அதற்கும் தகுந்த விடை கூறுகிறேன் கேள்: ஓர் துஷ்டபுருஷனானவன், தன்னைப் பூரணமாகவொட்டாமல் விரோதம் பண்ணும்போது இந்தக் காமமானது வெறுப்பாகி வேறுபட்டுத் தோன்றுகின்றது; அதுவே, யாவரும் வெந்துபோவதற்குக் காரணமான தீயைப்போன்ற உருவினையுடைய குரோதமென்று கூறப்படுவது. ஆதலால், காமத்திற்கும் குரோதத்திற்கும் பேதமில்லையாம்; காமத்திற்கே குரோதமென்றும் பெயராம். இத்தகைய அந்தக் காமத்தாலுண்டாகும் மிக்க தீமையை இன்னமுங் கூறுவேன் கேட்பாய்.

இந்தக் காமமானது, எவ்வளவு போகங்களை அனுபவித்தாலும் திருப்தியடையாமல் அநேகவிதங்களான மகாபோகங்களையும் புசிக்கத்தக்கது; அதனால், எவ்வகைப்பட்ட மகாபாவங்களையும் கொடுக்கத்தக்க உக்கிரமுடையது; எவ்வகைப்பட்ட பிராணிகளுக்கும் சத்துருவாக இருப்பது; இப்படிப்பட்ட காமத்தின் தன்மையை இன்னும் இன்னவிதமானதென்று கூறுவேன் கேட்பாயாக: நெருப்பைப் புகையும், கண்ணாடியை மாசும் மறைத்தாற்போல, உடலில் தேகியினால் அடையப்பட்டிருப்பனவாகிய அந்தக்கரணத்தின் விருத்தி



ரூபமான விவேகவிஞ்ஞானங்கள் முழுமையும், விஷயப்பிரீதியினால் அதிகரித்த கொடிய காமமானது மறைக்கும்; இன்னும் விஷயப்பிரீதியினால் அதிகரித்த இந்தக் காமமானது பஞ்சேந்திரியங்கள், மனம், புத்தி என்னும் இவைகளின் வழியாக உள்ளே புகுந்து ஞானங்களை மறைத்துத் தேகாபிமானியை நாநாவிதமான மோகங்களை யடையும்படி பண்ணும்; ஆகையினாலே, காமத்தினாற் செய்யப்பட்ட மோகத்தை யடைவதற்கு முன்னர் பஞ்சேந்திரியங்களையும் வசஞ்செய்து, அதன்பின்னர் மனம், புத்தி ஆகியவைகளையும் வசஞ்செய்து, மேற்சொன்ன இந்திரியங்கள், மனம், புத்தி ஆகியவைகளின் வழிபால் உண்டாகும் கொடிதாகிய அக்காமத்தை நீ நாசஞ்செய்வாய். இப்பொழுது காமத்தை நாசஞ்செய்யும்பொருட்டு இந்திரியங்களை வசப்படுத்தவேண்டுமென்று யானுரைத்தேன்; இவ்வாறு இந்திரியங்களை வசப்படுத்தினாலும் தேகம், இந்திரியங்கள் முதலியவைகளுக்கு வேறான ஆன்ம ஞானத்தினாலல்லாமல் காமத்தை ஜயிக்க முடியாது; ஆதலால், எல்லாவற்றிற்கும் வேறாகியும், மேலாகியு மிருக்கின்ற ஆன்மாவின் தன்மையை உணரவேண்டும்; அது எல்லாவற்றிற்கும் மேலானதென்பதைக் கிரமமாக இனிக் கூறுகிறேன் கேட்பாயாக:

கர்மவசத்தால் பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களாற் செய்யப்படும் இத்தூலதேகத்தைப் பார்க்கிலும் சுரோத்திரம் முதலிய ஞானேந்திரியங்கள் ஐந்தும் சூக்ஷுமமாயும், வியாபகமாயும், உள்ளாயு மிருப்பதால் மேலானவைகளாம்; மாற்றத்தக்கவைகளான ஐந்து ஞானேந்திரியங்களைப் பார்க்கிலும் அவைகளை விஷயங்களிற் பிரவேசிக்கச் செய்யும் மகத்தாகிய மனமானது மேலானதாம்; அந்த மனத்தைப் பார்க்கிலும் அதனைக் காக்கத்தக்க நிச்சயரூபமான புத்தியானது மேலானதாம்; அந்தப் புத்தியைப் பார்க்கிலும் தோன்றுகின்றனவாகிய தேகேந்திரிய மனோபுத்திகளைச் சாட்சியாயிருந்தறியும் பரமான்மாவே மிகவும் பழமையானதும் மேலானது

மாம். இவ்விதம் புத்தியினும் மேலான ஆன்மாவைச் சந்தேகமின்றி அறிந்து, ஜனனம், மரணம் முதலிய துன்பங்கள் மாயும்படி, பலவித மயக்கங்களையுடையதாய்க் கலங்கும் மனத்தையும், 'ஆன்மா, புத்தியினும் மேலானது,' என்னும் நிச்சயரூபமான புத்தியினல் அடக்கி, அந்த மனத்தைக் கலக்குங் காற்றுயுள்ள மோகமென்னும் சத்துருவை நாசஞ் செய்வாய்,'' என்று உறுதியாக வுரைத்தருளினர்.

மூன்றுவது
கர்மயோகவத்தியாயம் முற்றுப்பெற்றது.

---

நான்காவது

## சம்பிரதாயவத்தியாயம்.

கலிவிருத்தம்.

''நற்றவ நிகழ்தரு கரும ஞானமு
மற்றம தறவுனக் கறியக் கூறினேன்
மற்றவை களின்வர லாறுங் கேளெனக்
குற்றமி லாழியங் கையன் கூறுவான்.''

குற்றமற்ற சக்கரத்தைத் தாங்கிய திருக்கரத்தையுடைய ஸ்ரீ கிருஷ்ணபகவான், முன் கூறியபடி ஞானயோகம், கர்மயோகம் ஆகியவைகளைப்பற்றிச் சொல்லி முடித்தபின் அவற்றை விஸ்தாரமாகக் கூறியருளவேண்டுமென்று கருதிப் பார்த்தனை நோக்கி, ''நல்ல தவத்தையுடைய அருச்சுனா! பிரவிர்த்தி, நிவர்த்தி அதிகாரிகளால் அனுஷ்டிக்கப்பட்டு நடக்கின்ற கர்மயோகம், ஞானயோகம் என்னும் இரண்டையும் குறைவற நீ அறியும்படி உனக்கு விளக்கமாக முன் அத்தியாயத்தில் எடுத்துரைத்தேன்; இனி அவ்விரண்டின் குருசிஷ்ய பாரம்பரிய வரலாறு முதலியவற்றையுங் கூறுகிறேன் கேள்,'' என்று சொல்லத் தொடங்கினவராய் மீண்டும் அவனை நோக்கி, ''விஜய! முன் அத்தியாயங்களிரண்டினும் உனக்குரைத்த இரண்டு யோகங்களையும் சிருஷ்டி



யின் ஆதிகாலத்தில், எல்லா வுலகங்களையும் பரிபாலனம் பண்ணும் வாசுதேவனுகிய நான், சூரியனுக்குத் துன்பம் நீங்கும்படி உபதேசித்தேன்; அந்தச் சூரியனனவன், தன்னுடைய புத்திரனுகிய வைவஸ்வதமனுவுக்கு அறியும்படி உபதேசித்தான்; அந்த மனுவானவன், தன்னுடைய புத்திரனுகிய இட்சுவாகுவுக்குச் சந்தோஷத்துடனே உபதேசித்தான்; பின்னர் தவத்தை முயன்று செய்த நிமி, ஜனகன், அஜாதசத்துரு, கைசேயன் முதலிய இராஜரிஷிகளும் குருசிஷ்யபாரம்பரையாக இவற்றையறிந் தனுஷ்டிப்பாராயினர். இவ்வளவென்று அளவிட்டுரைக்கக் கூடாதபடி, இவற்றின் சம்பந்தமான ஞானத்தை நான் சூரியனுக்கு உபதேசித்த காலத்திலிருந்து இக்காலம்வரை அநேகங் காலஞ் சென்றுவிட்டபடியால் மிகவும் பழமையாய் ஒருவரும் விளக்கமாக அறியக்கூடாதபடி இந்த ஞானமானது மறைந்தது; இவ்வாறு ஒருவராலும் அடைய முடியாதபடி முன்னிருந்த நிலைமையினும் வேறுபாடடைந்ததும், மெய்ம்மையானதும், எவரும் அறிதற்கரிய இரகசியமானதும், புண்ணிய பாவமென்னும் இரண்டு வினைகளும் சிறிதுமின்றிக் கெடும்படி பெரியோர் அனுசரித்து வருவதால் உத்தமமானதுமாகிய அந்த ஞான நிஷ்டையை, நீ என்னிடத்து அன்பைச் செலுத்துகின்ற சிறந்த சிநேகிதனுயும், என்னையன்றிப் பொன், போகம், புகழ், வலிமை, ஊர், மனை, காணி, சுற்றம், துணை முதலிய எல்லாவற்றையும் விரும்பாத பக்தனுயு மிருப்பதால், உனக்கு இப்போது உபதேசிக்கத் தொடங்கினேன்,'' என்று கூறினர்.

இவ்வாறு பரிசுத்தரான ஸ்ரீ பகவான் கூறவே அருச்சுனன் வேறொரு விஷயத்தை மிருதுவாகக் கூறத் தொடங்கினவனுய், அவர் திருமுகத்தை நோக்கி, ''சுவாமி! ஞானயோகமான இதனை நல்லோர்கள் பரம்பரையாகக் கேட்டு அனுஷ்டித்து வரும்படி சென்ற சிருஷ்டியின் ஆதிகாலத்திலும் யான் சூரியனுக்கு உபதேசித்தேன்,'' என்று, நீர் இப்

போது கூறினீர்; அப்படியே நீர் உபதேசித்திருந்தாலும் வசுதேவர் திருமனையில் அவதரித்த உம்முடைய இந்தச் சரீரமானது, நீர் சூரியனுக் குபதேசித்ததாகக் கூறும் அந்தச் சிருஷ்டியாதிகாலத்திலிருந்த உம்முடைய தேகமன்றே; அப்படி யிருப்பதால் நீர் அந்தக் காலத்திலிருந்த தேகத்தோடு கூடி உபதேசித்த விஷயம், எங்களைப்போலே இப்போது மானிடசரீர முள்ளவராயும், அசர்வக்ஞராயு மிருக்கின்ற உமக்கு எப்படித் தெரியும்? அஃது அவ்வாறு அறியக் கூடாததாயிற்றே,” என்று வினவினான்.

கீர்த்தி நிறைந்தவனான அருச்சுனன் இவ்வாறு கூறவே துளபமாலையை யணிந்த ஸ்ரீ கிருஷ்ணபகவான், அவனை நோக்கி, “அருச்சுனா! வாசுதேவனான எனக்கும், அருச்சுனனாகிய உனக்கும், சிருஷ்டியாதி காலத்திற்கும், இக்காலத்திற்கும் மத்தியில் முறையே லீலாமாத்திரத்தாலும், புண்ணிய பாவ கர்ம வசத்தாலும் உண்டாய் நீங்கிய ஜனனங்கள் பல்லாயிரமாம்; சர்வக்ஞனும், சர்வசக்திசம்பன்னனும் ஈசுரனுமுள்ள யான் அந்த ஜனனங்களெல்லாவற்றையும் அறிவேன்; அஞ்ஞானியாகிய நீ அந்த ஜனனங்களைச் சிறிதும் அறியமாட்டாய்; வில்லைத் தாங்கிய புயத்தினையுடைய விஜயனே! நன்றாக ஆராய்ந்து சொல்லுமிடத்து நம்மிருவருக்குமுள்ள வேறுபாடானது இதுவேபாகும்; இன்னும், ‘நித்திய முக்தராயும், ஜனனத்திற் கேதுக்களாகிய புண்ணிய பாவங்களில்லாதவராயு மிருக்கின்ற உமக்கு மற்றச் சீவர்களைப்போலச் சென்றனவாகிய அநேகம் ஜனனங்கள் எப்படி வந்து கூடின?’ என்று நீ வினவக்கூடும்; அதற்கும் விடை கூறுகிறேன் கேள்: மரணமாகாமலும் ஜனனமாகாமலும் சர்வபிராணிகளுக்கும் ஈசுரனாகியிருந்த நான், தர்மத்திற்குக் கேடும், அதர்மத்திற்கு விருத்தியு முண்டாகிச் சாதுக்கள் படுகின்ற கொடிய துன்பத்தைப் போக்கித் துஷ்டரைச் சம்மரித்துத் தர்மத்தை நிலைநிறுத்தற்பொருட்டு, பரமார்த்தமாக ஜனனமடையாமல் இருந்தவண்ணமிருந்தே என்



னுடைய மாயாவசத்தினால் தேகமுடையவன்போல ஒழியாமல் ஒவ்வொரு யுகத்திலும் சத்துவமூர்த்தியாக அவதரிப்பேன். இந்தப்படிச் செய்யும் திவ்வியமான என்னுடைய ஜனனமும் கர்மமுமாகிய செயலை, ‘இது லோகானுக்கிரகத்தின்பொருட் டுண்டானது,’ என்று உள்ளபடியே அறிந்து, தாம் பிழைத்தற் கேதுவான ஞானமாகிய தவத்தினை யடைந்து, இராகம், பயம், குரோதம் முதலிய துன்பமயமான சம்சாரத்தினின்றும் நீங்கி முத்தியடைந்தோர் பலர்; அவரை இவ்வளவினரென்று வரையறுத்துக் கூறுதல் முடியாது.

‘இவ்வாறு நிஷ்காமபுருஷரை முத்தியடையும்படிச் செய்து, காமிய கர்மபுருஷரை முத்தியடையும்படிச் செய்யாமையால் உம்மிடம் பக்ஷபாதம் உண்டாகின்றதே?’ என்று நீ வினவின் அதற்கும் சமாதானங் கூறுகிறேன் கேள்: அவ்வாறு நான் பக்ஷபாத முடையவனல்லன்; தம்மால் விரும்பப்படும் பயனைச் சீக்கிரம் கொடுப்பதால், ‘மெய்யான தன்மையுடையது இந்தத் தெய்வந்தான்,’ என்று இந்திரன் முதலிய தெய்வங்களுக்குள்ளே ஒவ்வொரு தெய்வத்தை விரும்பி வணங்குகின்ற காமியகர்ம புருஷர் விரும்பிய தனம்முதலிய அந்த அந்தப் பயன்களை, அவரவர் வேண்டிய அந்த அந்தத் தெய்வரூபமாகிக் கொடுப்பவனும் வாசுதேவனாகிய யானே யாவன். இன்னும், ‘நான்கு வருணங்களுக்குக் கர்த்தாவும், வேதத்தின் வழியாகப் பிராமணாதி வருணங்களுக்கு உத்தமாதமமான கர்மங்களை யேற்படுத்தினவரும் நீரேயாதலால் உம்மிடத்துப் பட்சபாதம் இல்லையென்பது எவ்வாறு பொருந்தும்?’ என்று நீ வினவில், அதற்கும் விடை கூறுகிறேன் கேள்: பரமேசுரனான நான், சிருஷ்டியின் ஆதிகாலத்தில் சத்துவாதிகுண வேறுபாடுகளோடும், சமதமாதி கர்மவேறுபாடுகளோடும் கூடி நடக்கும்படி பிராமணாதி நான்கு வருணங்களையும் மாயையால் படைத்தேன்; எப்படியெனில், சத்துவகுணப் பிரதானன் பிராமணனாதலின், அவனுக்குச் சமதமாதிகர்மங்களையும், சத்துவமிசிர ரஜோகுணப்பிரதானன்

க்ஷத்திரியனாதலின், அவனுக்குச் சௌரிய முதலானவைகளையும், தமோமிசிர ரஜோகுணப்பிரதானன் வைசியனாதலின், அவனுக்குக் கிருஷியாதி கர்மங்களையும், இரஜோ மிசிர தமோ குணப்பிரதானன் சூத்திரனாதலின், அவனுக்கு முதல் மூன்று வருணத்தாரையும் வழிபடல் முதலிய கர்மங்களையும் நான் ஏற்படுத்தினேன்; இப்போதும் இனிமேலும் நானே அவ்வருணங்களை இரக்ஷிப்பேன்; நான் மேற்கூறிய படி அவ்வருணங்களை அவரவர் குணவேறுபாடுகளாலும், கர்மவேறுபாடுகளாலும்சிருஷ்டித்தபடியால்என்னிடம் பட்சபாதமில்லை யென்பது சொல்லாமலே விளங்கும். இன்னும், 'நான்கு வருணங்களுக்கும் நீர் கர்த்தாவானால், கர்மபலன்களை யனுபவிக்கும் எம்மோடொத்தவரானீர்; அப்படியானால் கர்த்திருத்வ முதலியவையற்ற ஈசுரனாக நீர் எப்படியாவீர்?' என்று நீ வினவின் அதற்கும் தக்க விடை கூறுகின்றேன் கேட்பாயாக: நான் சர்வான்ம திருஷ்டியினால் சர்வ பதார்த்தங்களையு மடைந்துள்ள ஆப்தகாமனாதலால், மயக்கத்துக் கேதுவாகிய கர்மபலன்களில் இச்சை வையேன்; அக்காரணத்தினால் அந்தச் சிருஷ்டியாதி கர்மங்கள் என்னோடு சம்பந்தியாமல் எனக்கு அன்னியமாகவே யிருக்கும்; இவ்வாறு ஈசுரனாகிய நான் கர்மங்களைச் செய்கிறவனானாலும் வாஸ்தவமாக அகர்த்தாவாகவே யிருப்பேன். 'ஈசுரனாகிய நீர் இந்தப்பிரகாரம் இருப்பதனால் எமக்கென்ன பிரயோஜனம்?' என்று நீ வினவின் அதற்கும் விடை கூறுகின்றேன் கேள்: இப்படியிருக்கும் என்னை அறிபவரும், நான் எப்படிக் கர்ம பந்தத்தினின்றும் விடுபட்டிருக்கின்றேனோ அப்படியே கர்ம பந்தத்தினின்றும் விடுபடுவர்; இதுதான் உங்களுக்கேற்படும் பிரயோஜனம்.

பாணங்களைப் பிரயோகம் பண்ணும் வில்லைத்தாங்கிய கையையும், மிக்க வலிமையையுமுடைய அருச்சுனா! தாம் பிழைக்கும்படி பூர்வயுகம், யுகாந்தரங்களில் சகலமு முணர்ந்த முமுட்சுக்களான ஜனகன் முதலியோர், 'அகங்காரமின்



றிச் செய்யுங் கர்மங்கள் பந்தத்திற்கேதுவாகா,' என்று அறிந்தனுஷ்டித்த வருணாச்சிரம கர்மங்களில் நீயும், அஞ்ஞானியானால் சித்தசுத்தியின்பொருட்டு, அல்லது ஞானியானால் உலக இரக்ஷிப்பின்பொருட்டு ஒரே எண்ண முடையவனாய்ச் செல்லக்கடவாய்; இத்தகைய கர்மமும் ஞானிகளோடு கூடி அறிந்தே செய்யவேண்டுமல்லாமல் உலக பரம்பரைமாத்திரத்தாற் செய்யலாகாது; 'எது கர்மம்?' 'எது அகர்மம்?' என்று ஆராய்ச்சிசெய்யும் விஷயத்தில் வித்துவான்களும்மயக்கத்தை யடைந்திருக்கின்றனர்; ஆதலால், செய்யத்தக்க கர்மம், அகர்மம், நிஷேத கர்மமாகிய விகர்மம், என்று கூறுகின்ற இவைகளின் மெய்ம்மையான சொரூபம் இப்படியென்பதையும், பொய்யான சொரூபம் இப்படி யென்பதையும் அறிவது அருமையாம்; முமுட்சுக்களால் அறியத்தக்க பொருள்களும் இந்தக் கர்மம், அகர்மம், விகர்மம் ஆகியவைகளேயாம்; ஆதலால், இவற்றுள் விகர்மமானது நிஷேதகர்மமென்பது பிரசித்தமாதலின் அதனைத் தள்ளி, கர்மம், அகர்மம் ஆகியவற்றின் வாஸ்தவ சொரூபங்களைத் திருஷ்டாந்தமுகமாகக் கூறுகின்றேன் கேட்பாயாக:

ஓடுகின்ற ஜலத்தையுடைய நதியில் ஓடுகின்ற ஓடத்தின் மேலிருந்து அதனுடனே விரைந்தோடுகின்ற புருஷனானவன், அந்நதியின் இரண்டு பக்கங்களிலும் அசையாமல் நிற்கின்ற மரங்கள், தான் ஓடுகின்ற வேகத்தால் ஓடுகின்றன போலவும், தான் ஓடாமல் நிற்கின்றாற்போலவும், மயக்கமான தோற்றமுண்டாகக் கண்டும், 'இந்நதியின் இரண்டு பக்கங்களிலும் நீண்டு நிற்கின்ற இவ்விருக்ஷங்கள் நிற்கின்ற இயற்கையான தன்மையுடையன; இவை இங்கு ஓடவில்லை; நானே இந்நதியில் ஓடத்தோடு சேர்ந்து ஓடுகின்றேன்,' என்று தன்னுடைய அறிவின் மிகுதியால் அறிந்தாற்போல, கர்மங்களிற் சம்பந்தப்படாதிருந்தும் சம்பந்தப்பட்டதுபோல அக்கர்மங்களினிற்கின்ற தனிமையான ஆன்மாவினிடத்தே வாஸ்தவமாகக் கர்மங்களில்லையென்பதையும், தாம் எல்லாக் கர்மங்

களிலும் சம்பந்தப்பட்டிருந்தும் அக்கர்மங்களில் சம்பந்தப்படாதவைபோலத் தோற்றும் தேகேந்திரியாதிகளில் வாஸ்தவமாக எல்லாக் கர்மங்களும் பொருந்துகின்ற தன்மையையும், அவிவேகமானது ஒருபோதும் பொருந்தாமல் ஒழிந்துபோகும்படி விசாரித்தறிந்தவன் எவனோ அவனே மனிதருக்குள்ளே கர்மாகர்மங்களெல்லாவற்றையு மறிந்த புத்திமானும், மோக்ஷத்தை யடைந்துய்யும்படியான வழியில் நிற்கின்ற யோகியும், எல்லாக் கர்மங்களும் ஒழிந்தவனுமாவன். எவருடைய கர்மங்கள், 'இவை நம்மால் அனுஷ்டிக்கப்படுகின்றன,' என்னும் எண்ணமும், சுவர்க்காதி பலன்களின் விருப்பமும் விடுபட்டனவாகி, எல்லாம் ஞானமாகிய வெந்தீயினால் தகிக்கப்பட்டனவோ அப்படிப்பட்ட சுபகர்மங்களையுடைய ஞானிகளே பிறப்பிறப்பற்ற சம்சாரமுக்தராவர்; இன்னும், 'அவிவேகிகளாற் கருதப்படும் இகலோக பரலோக சுகங்களின் விருப்பமும், கர்மங்களி லுண்டாகும் அபிமானமும் இல்லாமல் இந்த நித்திய நைமித்திக கர்மங்களைச் செய்கின்றான்,' என்று பெரியோர்களாற் கூறப்படும் இந்தத் தன்மையினையுடைய ஞானியானவன், பின்பு அனுபவிக்கப்படுகின்ற கர்மங்கள் தனக்குண்டென்று மறந்து மறியான்; அதனால், பிராரப்த வசத்தால் அவன் செய்கின்ற கர்மங்கள் அவனை வருத்துமோ ? ஒருபோதும் வருத்தமாட்டா; இன்னும், சுவர்க்கசுகம் முதலிய பலன்களின் இச்சையானது நீங்கி * பிரத்தியாகாரத்தால் ஒடுங்குகின்ற இந்திரியங்களோடு அடங்கிய சித்தத்தையுடையவனாகிய சந்நியாசியானவன், 'சரீரஸ்திதியானது இக்காரணங்களாலேற்படுகின்றது; ஆதலால், அதன்பொருட்டு இவற்றைச் செய்பவேண்டும்,' என்று தொடங்கிச் செய்யும் † பிக்ஷாடனம் முதலிய கர்மங்கள் அவனைத் தொடருமோ ? ஒருபோதும் தொடரமாட்டா; இன்னும், வேண்டாதிருக்கத் தாமே வந்தடைந்தனவாகிய அன்னம், வஸ்திரம்முதலிய பதார்த்தங்களைக்கொண்டு

* பிரத்தியாகாரம் - உபாதியை நீக்கி உண்ணோக்குதல்.

† பிக்ஷாடனம் - இரத்தல்.



சந்தோஷித்து, தனக்கெதிரே இலாப நஷ்டங்கள் வந்தடைந்தபோது சமமான மனதுடையவனாய் ஒருவிதத்தினாலும் ஒருவரிடத்திலும் கோபமடையாத சந்நியாசியானவன் செய்யும் பிக்ஷாடனாதி கர்மங்கள் அவனுக்குப் பந்தமாகுமோ? ஆகமாட்டா. நான் இப்போது, 'பிக்ஷாடனம் முதலிய கர்மங்களால் துறவறத்திலுள்ள ஞானி பந்தமடையான்,' என்று கூறியதனால், 'இல்லறத்திலுள்ள ஞானிகளாற் செய்யப்படும் எக்ஞாதி கர்மங்கள் அவசியம் பந்தத்திற் கேதுவாம்,' என்று உனக்கு ஐயம் நிகழக்கூடும்; ஆதலின், அச்சந்தேகத்தையும் நிவிர்த்திசெய்து இனி அக்கர்மங்களின் தன்மையையும் கூறுவேன் கேட்பாயாக.

கர்மங்களெல்லாவற்றிலும் அபிமானத்தை விடுத்து, கர்மபலன்களி லுண்டாம் ஆசையொழிந்து ஞானரூபமான பரமான்மாவில் எழுகின்ற சித்தமானது நிலைபெறும்படி நின்ற ஞானியாகிய புருஷன், வேதவிகிதமான எக்ஞ முதலியவற்றில் உலகத்தவரைப் பிரவிர்த்திக்கும்படி செய்தற்பொருட்டு, அல்லது விஷ்ணு பிரீதியின்பொருட்டுச் செய்யப்பட்ட எக்ஞ முதலிய கர்மங்கள், அவற்றின் பலனோடு கூடவே நாசமாய்விடும்; நான் இவ்வாறு சொன்னதனால், 'அனுபவித்தாலல்லாமல் நூறுகோடி கற்பங்கள் சென்றாலும் சுபாசுபகர்மங்கள் நாசமாகாவென்று ஸ்மிருதியிற் கூறப்பட்டிருப்பதால் ஞானிக்குப் பலனோடு கூடவே அக்கர்மங்கள் நாசமாய்விடுமென்று சொல்லுதல் எவ்வாறு பொருந்தும்?' என்று உனக்குச் சந்தேகமுண்டாகக்கூடும்; அங்ஙனம் சந்தேகமுண்டாயின் அதற்குச் சமாதானங் கூறுகிறேன் கேள்: பிரபஞ்சமுழுதும் பிரமமாத்திரமேயல்லாமல் அன்னியமில்லையென்று பார்க்கும் பிரமஞானிக்குச் சகல கர்மங்களும் நாசமாய்விடும்; இதிற் சிறிதும் சந்தேகமில்லை. சர்வவியவகாரங்களும், பழுதையின் யதார்த்த சொரூபத்தை யறியமுடியாத அஞ்ஞானத்தினால் அப்பழுதையில் சர்ப்பம், தண்டம், மாலை முதலியவை கற்பிதமாகத் தோற்றுவதுபோல பிரமசொரூபத்தை

யறியாத அஞ்ஞானத்தினால் கற்பிதங்களாகத் தோற்றுவனவாம். இவை, பழுதையின் யதார்த்த சொரூபத்தை யறியும் ஞானத்தினால் அதிற்றோன்றும் சர்ப்பம் முதலியன இல்லாமற்போய்விடுவதுபோல பிரமசொரூபத்தையறியும் ஞானத்தினால் நாசமாவது நிச்சயம்; ஆதலால், ஞானிகளிடத்தில் கர்மங்கள் கற்பித்மாகத் தோற்றினும் அவை அவருக்கு எப்பயனையும் உண்டாக்குவதில் சமர்த்துடையவையாகமாட்டா; அவர்களுக்குப் பிரமதிருஷ்டியே சர்வ எக்ஞரூபமுமாகும்; எப்படியெனில், எல்லாம் பிரமமே யென்றறிந்து அந்தப் பிரமமே தாமான பிரமவித்துக்கள், பிரமரூபமான அக்கினியில் பிரமரூபமாகிய மந்திரத்தால், பிரமரூபமான அன்னத்தோடுகூட நெய் முதலிய அவிசை பிரமரூபமாகிய கர்த்தாவினால் ஆகுதி செய்தபின் பிரமகர்ம சமாதியினால் பரமானந்த சொரூபபிரமத்தையே அடைவர்; வேறொரு பயனையுமடையார்; இன்னும் வேறேயும் எக்ஞம் செய்பவருளர்; அவரால் செய்யப்படும் சர்வ எக்ஞங்களும் ஞானோற்பத்திக்கு உபாயங்களேயாம். அவ்வாறு வேறு எக்ஞங்களைச் செய்யும் அவர்களையுங் கூறுகிறேன். கேட்பாயாக:

பிரமத்தை யறிந்த சில சன்னியாசிகள், பிரமரூபமான அக்கினியில் அபேதமாகத் துவம்பதார்த்தமான பிரத்தியகான்மாவையே ஓமஞ் செய்வர்; அதாவது: துவம்பதார்த்தரூபமான பிரத்தியகான்மாவைப் பிரமரூபமாகக் காண்பர்; சில யோகிகள், தமது பிரயத்தனத்தாற் பொருந்துவதாகிய * சமரூபமான அக்கினியிலே, நிவிர்த்திக்கத்தக்கனவாகிய சுரோத்திரம் முதலிய ஞானேந்திரியங்களை ஓமஞ் செய்வார்கள்: அதாவது: இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம் ஆகிய இந்நான்கையும் பெற்றுப் பிரத்தியாகாரத்தை யனுஷ்டிக்கும் சில அதிகாரிகள், சுரோத்திரம் முதலிய பஞ்ச ஞானேந்திரியங்களையும் தத்தம் சப்த முதலிய விஷயங்களில் செல்லாமல் நிவிர்த்தி செய்து சமரூபமான அக்கினியில் ஓமஞ் செய்வர்.

* சமம் - பிரத்தியாகாரம்.



அருச்சுனா! சமாதியினின்று மெழுந்த சில யோகிகள் சப்தாதி விஷயங்கள் ஐந்தையும் இராகத்துவேஷங்களில்லாமலே சுரோத்திரம் முதலிய இந்திரிய ரூபங்களான அக்கினிகளில் ஓமஞ் செய்வார்கள். வேறு சில அதிகாரிகள், சர்வேந்திரியங்களின் தொழில்களையும், பிராணன், அபானன் முதலிய சர்வ வாயுக்களின் தொழில்களையும், பரமான்ம ஐக்கிய சாட்சாத்காரமென்னும் விவேக விக்ஞானமாகிய நெய்யைச் சொரிந்து, அதனால் சுவாலித்தெழுகின்ற தாரணை, தியானம், சமாதிரூபமென்னும் யோகமாகிய அக்கினியில் ஆகுதி செய்வார்கள். இன்னும், தாம் சம்பாதித்த திரவியங்களாலும், தாம் செய்கின்ற தவங்களாலும், தாம் விரும்பிய இயம, நியம, ஆசனங்களாகிய யோகத்தினாலும், இருக்கு முதலிய வேதாத்தியயனத்தினாலும், அவற்றின் அர்த்தஞானத்தினாலும், தம்முடைய சக்தி, புத்திக்கியன்றவிதத்தால் வாவி, கூவம், தடாகம் முதலியவைகளைச் செய்வதும், சிவாலயம் விஷ்ணுவாலயம் முதலியவைகளைச் செய்வதும், பசியினால் வருந்திய பிராணிகளுக்கு அன்னமளித்தலும், ஜனங்கள் வாசஞ் செய்தற்பொருட்டுத் தருமசாலை ஏற்படுத்துவதுமாகிய பூர்த்தமென்னும் * ஸ்மார்த்த கர்மங்களும், அடைக்கலம் புகுந்த பிராணிகளை இரட்சித்தலும், ஓர் பிராணியையும் இம்சியாதிருத்தலுமாகிய தத்தம் என்னும் ஸ்மார்த்த கர்மங்களுமாகிய எக்ஞம் செய்பவர்களும் அநேகருளர்; இன்னும் இங்கே சொல்லிய இவ்வைவரல்லாமல் இனிக் கூறப்படும் சிலருடைய எக்ஞத்தையுங் கேட்பாயாக:

சில அதிகாரிகள் மிகவும் மேல்நோக்கி ஓடிக்கொண்டிருக்கிற பிராணவாயுவை, அபான வாயுவிலே † பூரகப் பிராணாயாமவாயிலாக இழுத்து ஓமஞ் செய்து, அதாவது: பூரகப்பிராணாயாமஞ் செய்து, கீழ் நோக்கி ஓடிக்கொண்டிருக்கின்ற அபானவாயுவை அந்தப் பிராணனிடத்தே ஓமஞ்

* ஸ்மார்த்தம் - ஸ்மிருதி சம்பந்தம்.

† பூரகம் - பிராணவாயுவை உள்வாங்கல்.

செய்து. அதாவது: இரேசகப்பிராணாயாமம் செய்து இத்தேகத்தின்கண்ணே பிராணன், அபானன் ஆகிய இரண்டும் இயக்கமற்று ஒடுங்கும்படி கும்பகப்பிராணாயாமம் செய்து இருப்பார்கள். சொல்லுமிடத்து, இவரே இவ்வுலகத்தின்கண் பிராணாயாமத்தாற் சிறப்புற்று நின்றவராவார்.

இங்கே சொல்லிவந்த யாவர்களும் எக்ஞரூபக்கிரியைகளை அறிந்தவர்களே யாவர்; இவர்களே புண்ணியரூபங்களான எக்ஞங்களினால் பாவங்களினின்றும் விடுபட்டவராவர்; இனி இந்த எக்ஞங்களைச் செய்யாமையால் வருந் தோஷத்தையுங் கூறுகிறேன் கேட்பாயாக: இங்கே சொல்லிவந்த பிரகாரம் இந்த எக்ஞங்களைச் செய்ய முடியாதோர்க்கு எந்த வகையினாலும் அற்பசுகமுடைய இவ்வுலகபோகம் உண்டாகமாட்டாது; இகலோக சுகமே உண்டாகாமற் போகுமானால், மகா புண்ணிய கர்மங்களா லடையப்படும் பரலோக சுகம் எவ்வா றுண்டாகும்? ஒருபோது முண்டாகமாட்டாது. ஆதலால், இகசுகம், பரசுகம் ஆகிய இரண்டிற்கும் காரணமான இச்செய்கைகள் எப்பொழுதும் எவரும் செய்யத்தக்கனவாம். அருச்சுனா! இன்னும் நீ, 'இந்த எக்ஞங்கள் உமது கற்பனையினால் சொல்லப்பட்டனவே யல்லாமல் இவற்றிற்கு வேறொரு பிரமாணமும் இல்லையே,' என்று என்னிடம் வினவின் அதற்கும் சமாதானங் கூறுகின்றேன் கேள்: இப்போது இவ்வாறு என்னாற் சொல்லப்பட்ட இந்த எக்ஞங்களெல்லாம் ஆதியிலேயே வேதத்தின் மத்தியில் விஸ்தீரணமாகச் சொல்லப்பட்டுள்ளனவே யன்றி இக்காலத்தில் என்னால் கற்பித்துச் சொல்லப்பட்டனவல்ல; அப்படியாயினும், இவை செய்யுங் காலத்தில் மனோ வாக்குக் காயங்களின் கர்மங்களாலேயே உற்பத்தியாயினவல்லாமல் ஆன்மாவினால் உற்பத்தியானவைகளல்ல; ஆன்மாவானது கர்மங்களோடு ஒட்டாததாதலின், இணையற்ற அந்த ஆன்மவிஷயமான புத்தியானது கர்மங்களால் உளதாகாது; உன் உள்ளத்தின்கண் அவ்வாறே அதனை அறிந்து நீயும் ஞானநிஷ்டனாய்ப் பாவரூபமான சம்சாரத்தினின்றும் நீங்கி முத்தனாவாய்.



அருச்சுனா! இப்போது என்னால் எல்லா எக்ஞங்களும் சமானமாகவே சொல்லப்பட்டமையின், 'கர்ம எக்ஞம், ஞான எக்ஞம் ஆகிய இரண்டும் சமானமேயாகும்,' என்று நீ கருதக்கூடும்; அவ்விரண்டும் ஒரு தன்மையுடையனவாகா; ஆதிகாலத்திலேயே வேதத்திற் கூறப்பட்டுள்ளனவாக என்னால் இதற்குமுன் சொல்லப்பட்ட ஞானசூனியமான திரவியமய எக்ஞமுதலிய எக்ஞங்களுக்கெல்லாம் மிகவும் சிரேஷ்டமான இயல்பினையுடையது ஞான எக்ஞமேயாம். இவ்வாறு ஞான எக்ஞமே சர்வ எக்ஞங்களினும் சிரேஷ்டமாமென் றறிந்தபின்னர், ஞானசூனியமான சர்வ எக்ஞங்களினு முண்டாகும் இச்சையை ஒழித்து அந்த ஞானத்தை அடையத்தக்க உபாயம் யாதென்று நீ கேட்பாயாகில் அவ்வுபாயத்தையும் இனிக் கூறுகிறேன் கேள்: சாஸ்திரஞானத்தோடு பிரமத்தை யறிந்திருப்பவரான ஆசாரியர் உன்னைப் பார்த்து, 'இவன் எனது கண்மணியாம்,' என்று கூறி உன்மீதருள் சுரக்கும்படி நீ அவருடைய கருத்தின்படியே வழிபாடு செய்து அவரைச் சந்தோஷப்படுத்தி, அவரிடத்தில், 'குருவே! நான் யார்? எனக்குச் சம்சாரம் எப்படி வந்தது? எந்த வுபாயத்தால் நான் இந்தச் சம்சாரத்தினின்றும் நீங்கி முக்தனாவேன்?' என்று வினவி, அவருடைய செந்தாமரை மலர்போலும் திருவடியை உனது முடியின்மீது சூடிக்கொள்வாயானால் அப்போது அந்தப் பிரமநிஷ்டர், பிரத்தியகான்மாவாய்த் துவம்பத லட்சியார்த்தனான நீ, சராசரப் பிரபஞ்ச முழுதையும் நீங்காமல் என்னிடத் தபேதமானதென்றறிந்து பின்னர் வாசுதேவனாய்த் தற்பதலட்சியார்த்தனான என்னிடத்து உன்னையும் அபேதமாகவறிந்து, பிதா, புத்திரர் முதலிய பந்துக்களால் ஒருபோதும் சோகமடையா திருக்குந் தன்மை பொருந்துதற்குக் காரணமான அந்த அபேத ஞானத்தை உனக்குபதேசிப்பார்கள்.

பார்த்த! இனி, அந்த அபேதஞானத்தா லுண்டாகும் பிரயோஜனம் யாதென்று கேட்பாயாகில், அதனைக் கூறுகின்

றேன் கேள்: மிகுந்த பாதகமுதலிய உருவமாய் விளங்கும் அநேகவிதமான தீவினை, நல்வினை என்னுங் கடலிலே வீழ்ந்து கிடப்பவரும் அந்தத் திடஞானமாகிய கெடாத தெப்பத்தினால் ஆயாசமில்லாதபடி அவ்வினைக்கடலினின் றுங் கரையேறுவர். 'அவ்வாறு ஆன்மஞானரூபமான தெப் பத்தினால் புண்ணிய பாவ ரூபமான சமுத்திரத்தைக் கடந் திடினும், புண்ணிய பாவ ரூபமான கர்மங்கள் எவ்வாறு நாசமாம்?' என்று உனக்கு ஐயம் நிகழக்கூடும். அந்த ஐயத் தையும் நான் நிவிர்த்திசெய்கிறேன்; அது நீங்குமாறு நான் சொல்வதைக் கேள்: அக்கினியானது மிகுந்து பற்றிச் சுவா லித்து எரிந்துகொண்டு வரும் காட்டினிடத்தே வெந்து நீறாகாத விருக்ஷங்கள் யாவை? எல்லாம் எரிந்து சாம்பலா கும்; இவ்வாறு அவை சாம்பலாகு மென்பதை இளம்பருவத் தையுடைய பிள்ளைகளும் அறிவர்; இந்தத் திருஷ்டாந்தம் போல ஞானிகள் தம்மை, 'யாம் யாவர்?' என்று உள்ளே நாடுகின்ற விசாரத்தால் உண்டாகின்ற சற்குணங்களையுடைய தத்துவஞானமாகிய அக்கினியானது, எவ்வித பந்தமுமின்றி யெழுந்து வியாபித்திடுமானால், அவர் அந்த ஞான முண் டாவதற்குமுன்னே, 'நாம் கர்த்தா,' என்று எண்ணும் பிரா ந்தி ஞானத்தா லுண்டாகும் புண்ணிய பாவ ரூபங்களான கர் மங்களாகிய விறகுகளெல்லாம் வெந்து நீறாய்விடும்; மேற் கூறியவாறு எழும் ஞானக்கினிக்குக் கர்மங்களாகிய விறகு கள் முன்னின்று நிலைபெறத்தக்க பொருள்களாகுமோ? இல்லை.

இன்னும் ஆன்மஞானத்திற்கு முன் சொன்ன வுபாயத் தைப் பார்க்கினும் மிகவும் சமீபமான வேறோருபாயத்தை யுங் கூறுகிறேன் கேள்: தீயனவென்று கூறப்படாத பிக்ஷா டனம், குருசேவை, சிரவணம் முதலியவை பொருந்திய இயற்கையை யுடையனவாகிய நல்வினைகளைச் செய்பவருள் ளும் பல வருஷங்கள் மாதங்கள் கழிவதின்றிச் சில தினங்க ளில், தம்மிடத்துள்ள பிரமத்தை அறியும் அறிவுடையோர்



யாவரெனில், சாஸ்திரார்த்தங்களை உபதேசிக்கும் குருவி னிடத்தும், அவரால் உபதேசிக்கப்பட்ட சாஸ்திரார்த்தங்களி னிடத்தும், விசுவாச முடையவரும் ஐம்புலன்களை வென்ற வருமேயாவர்.

இனி, தத்துவஞானத்திற்கு விபரீதமான அநதிகாரிகளை யும் உரைக்கின்றேன் கேள்: குருவினாலும், சாஸ்திரங்களா லும் உபதேசிக்கப்பட்ட அரியவைகளாகிய ஞானார்த்தங்களை யறிந்துகொள்ளமுடியாத அஞ்ஞான முடையவரும், இலௌ கிக வைதிகமாகிய அர்த்தங்களுள்ளே எவ்வகைப்பட்ட அர்த் தங்களை உபதேசித்தாலும், 'இவ்வர்த்தங்கள் இத்தன்மை யுடையனவோ வேறுதன்மை யுடையனவோ?' என்று அவற் றில் சந்தேகங் கொள்பவரும், குருவினாலும் சாஸ்திரத்தா லும் உபதேசிக்கப்பட்ட அர்த்தங்களில் அன்பின்றி, 'இவை இத்தன்மையான கருத்துடையனவல்ல,' என்று அவற்றை இகழும் நாஸ்திக புத்தியுடையாரும் ஆகிய இம்மூவரும் புரு ஷார்த்தங்களுட் சிறந்த வீட்டைப் பெறுமல் நஷ்டத்தை யடைவர்; இன்னும், இம்மூவருள்ளே சாஸ்திரார்த்தங்களில் மிகுந்த சமுசயமுடையவர்கள், இகலோக சுகத்திற் கேது வான தனசம்பாத்தியத்தொழில் முதலியவற்றிலும், பர லோகசுகத்திற் கேதுவான புண்ணியம் முதலியவற்றிலும் சந்தேகங்கொண்டு அவற்றில் ஒன்றையுஞ் செய்யாமற்போவ தால் இகபர சௌக்கியங்களையும் அடையமாட்டார்கள். ஆதலால், இவர்கள் சமுயான்மர் சகலரினும் மிகுந்த பாவிகளா வார். இவர்களைப்போலாது, சமத்துவ புத்திரூப யோகத்தி னாலே பகவானிடத்தில் கர்மங்களை அர்ப்பணஞ் செய்தவ ரும், ஆன்மஞானத்தினாலே சமுசயங்களை நீக்கியவருமாகிய புருஷர் எல்லாக் கர்மங்களையும் துறந்தவராவர்.

அருச்சுனா! நான் இங்குக் கூறியபடி ஆன்மஞானத் தாற் சமுசய நீங்கிய வித்துவானை இலௌகிக வைதிக கர்மங் கள் பந்தப்படுத்தமாட்டாவாதலால், நீயும் ஆன்மஞானத் தாற் சமுசயத்தை நீக்கிச் சுதர்மத்தின்கண் பிரவேசித்தல்

நலமாம்; ஆதலின், அவிவேகரூபமான அஞ்ஞானத்தினின்றுமுற்பத்தியாகி உனதுபுத்திரூபமான இருதயபத்தின்கண்ணே வளர்ந்திருப்பதும், எல்லா அனர்த்தங்கட்கும் மூலபூதமாயிருப்பதுமான சமுசயத்தை, சோகம், மோகம் முதலிய தோஷங்களைச் சேதிப்பதான உனது தேகான்ம விவேக ஞானமாகிய வாளால் வெட்டி முழுது மறவொழித்துச் சுதர்மத்தை நாடுங் கருத்தால் உனது யுத்தரூபமான கர்ம யோகத்தைச் செய்வாயாக,” என்று கூறியருளினார்.

நான்காவது

சம்பிரதாயவத்தியாயம் முற்றுப்பெற்றது.

---

ஐந்தாவது

## ஞானகர்மவத்தியாயம்.



கோச்சகக்கலிப்பா.

“பூத்தருளி யொருமலராற் புவனமவை யீரேழுங்
காத்தருளி விளையாடிக் கடைசாரங் கண்வளருந்
தீர்த்தன்மறை முறைமொழிந்த திருவாக்குத் தெரியாதே
பார்த்தனவ னெதிர்நின்று சிலவிங்ஙன் பகர்வுற்றான்.”

ஒப்பற்ற தனது திருவுந்திக் கமலமலரால் பதினான்கு புவனங்களையும் சிருஷ்டித்தருளி, அவைகளை இரட்சித்துத் திருவிளையாடல்களைச் செய்து, அவைகளின் அந்தத்தில் வடபத்திரத்தில் அறிதுயி லமருகின்ற ஸ்ரீ கிருஷ்ணபகவான், சுருதியின் கிரமப்படி முந்தின அத்தியாயத்தில், ‘ஞானாக்கினியானது சர்வ கர்மங்களாகிய விறகுகளையும் எரித்து நீறாக்கும்; அதுவே முக்கியமானதாம்,’ என்று கர்மத்தியாகத்தையும், ‘ஞானவழியிற் செல்லாமற் கட்டுப்படுத்தும் சமுசயத்தை யொழித்து உனது சுதர்மரூபமான யுத்தத்தைச் செய்,’ என்று கர்மானுஷ்டானத்தையும் கூறிய வார்த்தைகளின் தாற்பரியத்தை அருச்சுனன் அறியாமல், ‘ஒன்றிற்கொன்று விரோத தர்மங்களை யுடையனவான கர்மத்தியா



கத்தையும், கர்மானுஷ்டானத்தையும் ஒரு மனிதன் எவ்வாறு அனுஷ்டித்தல் இயலும்; அது முடியாத காரியம்; ஆதலால், அவ்விரண்டினுள்ளே முக்கியமாக நாம் அனுஷ்டிக்க வேண்டிய ஒன்றை உபதேசித்தருளும்படி ஸ்ரீ பகவானிடம் விண்ணப்பம் செய்து கொள்ளவேண்டும்,’ என்று கருதி அந்தப் பகவான் எதிரே நின்று கீழ் வரும் இந்தப்பிரகாரம் சில வார்த்தைகளைக் கூறத் தொடங்கினான்.

இவ்வாறு தொடங்கிய அந்த அருச்சுனன், ஸ்ரீ கிருஷ்ணபகவானை நோக்கி, “ஆவரணமென்னும் மலமற்ற சுபாவமுடைய ஸ்ரீ பகவானே! எனக்கு நேரே இப்போது நீர், கர்மானுஷ்டானமானது சிரேஷ்டமானதென்று முபதேசிக்கின்றீர்; பின்னும் கர்மசன்னியாசத்தை அரியவமுதம் போன்றதென்றும் உபதேசிக்கின்றீர்; இவ்வாறு நீர் உபதேசிப்பதால் அடிக்கடி என்னைச் சந்தேகத்திற் றள்ளுகின்றவர் போலாகின்றீர்; இப்படிச் செய்யாமல், கர்மானுஷ்டானம், கர்மசன்னியாசம் என்னும் அவ்விரண்டினுள்ளும் மிகவும் சிரேஷ்டமானதென்று நீர் நிச்சயித்திருக்கும் ஒன்றை என் சம்சாரத்துக்கங்கள் ஒழிந்துபோகும்படி உபதேசித்தருள்வீராக,” என்று கூறினான். இந்த வார்த்தைகளைக் கேட்டவுடனே ஸ்ரீ கிருஷ்ணபகவான், கர்மானுஷ்டானம், கர்மசன்னியாசம் ஆகிய இரண்டின் தன்மைகளும், இப்படிப்பட்டவையென்று சொல்லத் தொடங்கினவராய் அவனை நோக்கி, ‘‘அருச்சுனா! சாஸ்திர விதிப்படி செய்யும் சர்வ கர்மங்களின் தியாகரூபமான சன்னியாசமும் சிரேஷ்டமானதுதான்; அரிய கர்மானுஷ்டானரூபமான கர்மயோகமும் சிரேஷ்டமானதுதான்; அவைகளை நன்றாகச் சீர்தூக்கிப் பார்க்குமிடத்து அந்தக்கரண சுத்தியில்லாத அநதிகாரி செய்யுங் கர்மசன்னியாசத்தைப் பார்க்கிலும் கர்மானுஷ்டானரூபமான கர்மயோகமே மிகவும் சிரேஷ்டமானதாம். ஏனெனில், ஆன்மஞானத்தின் அதிகாரத்தன்மையைச் சித்தசுத்திவாயிலால் அது கொடுக்கும்; இலாபத்தில் இச்சையும், நஷ்டத்தில்

த்வேஷமும் அடையாத நிஷ்காமகர்மயோகிகள், பெரும்பாலும் கர்மசன்னியாசத்தில் நிற்பவராவர்; கர்மங்களை விட்டும் சுகதுக்கங்களிலும், சுகதுக்க ஏதுக்களிலும் இராகத்துவேஷங்களையுடையோர், துன்பமயமான பந்தத்தினிற்குந் தொழிலுடையரேயாவர். அதிகாரிகளா லனுஷ்டிக்கும்படியான மாட்சிமை பொருந்திய கர்மசன்னியாசம், கர்மானுஷ்டானம் என்று கூறப்படும் இரண்டினுள்ளும் அருமையாகிய தமது அதிகாரத்தை யனுசரித்துச் சாஸ்திரவிதிப்படி ஒன்றை யடைந்தோர், ஆன்மஞானோற்பத்தி வாயிலால், அவை யிரண்டினது ஒரே மோக்ஷரூபமான பயனை யுடையவராவர்; அவ்விரண்டிற்கும்பயன் வெவ்வேறென்றெண்ணுபவர், இயல்பாக அவ்விரண்டையு மறிந்தவராகார்; அவை யிரண்டிற்கும் பயன் ஒன்றே யென்றறிந்தவர் சாங்கியமென்னும் சன்னியாசம், கர்மயோகம் ஆகிய இவ்விரண்டையும் இயல்பாக வறிந்தோராவர்.

அருச்சுனா! இன்னும் நீ, ‘சன்னியாசமே ஞானநிஷ்டைக் கேதுவாதலின், அது அவசியமாகச் செய்தற்குரியது; ஆதலால், சுத்தாந்தக்கரணமுடைய புருஷன் ஞானநிஷ்டையடைதற்பொருட்டுச் சன்னியாசஞ் செய்துகொள்வதுபோல அசுத்தாந்தக்கரணமுடைய புருஷனும் ஞானநிஷ்டை யடைதற்பொருட்டு முன்னர்ச் சன்னியாசமே செய்துகொள்ள வேண்டுவது அவசியமாகும்,’ என்று நினைத்தல்கூடும்; அவ்வாறு நினைப்பது சரியன்று; அதற்குத்தக்க மறுமொழி கூறுகின்றேன் கேள்: முன்னர் அந்தக்கரணசுத்திக்குக் காரணமாகிய நிஷ்காமகர்மயோகத்தை அனுஷ்டித்தவர், அதனால் அந்தக்கரணசுத்தியுண்டாய்ப் பின்னர் ஏற்படும் சன்னியாசங்கொண்டு எவரும் பரமான்மாவான என்னைச் சீக்கிரம் அடைவார்கள். இங்கு நிஷ்காம கர்மயோகம் தவிர, என்னை யடைதற்கு வழியாக வேறு பெருமையுடைய பொருள் உண்டென்றறிந்து சொல்வதற் கேதுவில்லை. ஆதலின், அப்படிப்பட்ட தமது நிஷ்காம கர்மயோகத்தை முன்னர்ச் சித்த சுத்தியின்



பொருட்டு அனுஷ்டிப்பவரே மேற்கூறியபடி என்னை அடைவாரென்று நீ அறியக்கடவாய்.

இனி, ‘கர்மங்களால் ஜந்துக்கள் பந்தமடைகின்றன,’ என்பது முதலிய வசனங்களால், கர்மங்களுக்குப் பந்தத்திற் கேதுவே கூறப்படுதலின், கர்மயோகத்தோடு பொருந்தின புருஷன், பரமான்மாவான உம்மை யடைவானென்று நீர் கூறுவது எவ்வாறு பொருந்தும்?’ என்று நீ வினவக்கூடும்; அதற்கும் தக்க விடை கூறுகிறேன் கேள்: ஆதியில் நித்திய நைமித்திக கர்மானுஷ்டானத்தால் பிரிவான அந்தக்காணமும், மிகவும் மயக்கத்தைத் தரும் புலன்களென்னும் வெளியிந்திரியங்களுமாகிய இவைகளை வென்றவரும், சர்வான்மாவாகிய என்னைத் தமது புத்தியினிடத்தே நன்றாக அறிந்தவருமாகிய ஞானிகள், அன்னியருக்கு இகழத்தக்க பந்தத்தைக் கொடுப்பனவாகிய கர்மங்களைப் பாதிருஷ்டியினாற் செய்யினும், அக்கர்மங்கள் அவர்களை எப்பொழுதும் பந்தப்படுத்தாவாம்; ஆதலால் மேற்கூறியபடி எல்லா இந்திரியங்களையும் ஜயித்த ஞானிகள் அக்கர்மங்களைச் செய்வதால் தோஷமில்லை; ஞானியானவன்: கண்களால் உருவங்களைப் பார்ப்பான்; செவிகளால் சப்தங்களைக் கேட்பான்; உடலால் குளிர்ச்சி உஷ்ணம் முதலியவைகளை ஸ்பரிசிப்பான்; நாசியால் கந்தங்களை முகருவான்; பாதங்களால் நடப்பான்; நித்திரை செய்வான்; ஒன்றை வேண்டுமென்று விரும்புவான்; ஒன்றை வேண்டாமென்று வெறுப்பான்; சுவாசம் விடுவான்; வாக்கால் வார்த்தையாடுவான்; கண்களைத் திறப்பான்; கண்களை மூடுவான்; ஆடையாபரணம் முதலியவற்றால் சரீரத்தை அலங்கரிப்பான்; இவ்வாறு இன்னும் அநேக வியாபாரங்களைச் செய்யினும், அவைகளையெல்லாம், இந்திரியாதிகள் தாம் தாம் செல்லத்தக்க விஷயங்களில் செல்லுகின்ற பிரவிர்த்தியென்றே அறியும் திடநிச்சயமுடைய அந்த ஞானியானவன், தூணைப்போன்றும் பருவதத்தைப்போன்றும் ஒன்றினாலும் அசைவுறமாட்டான்.

இன்னும், 'ஞானியானவன், தனக்குக் கர்மங்களில் அபிமானமில்லாமையால் அவைகளைச் செய்தாலும் அவைகளோடு சம்பந்தப்படானென்று நீர் முன்னே கூறினமையால், அஞ்ஞானியானவன், கர்மங்களிலுள்ள அபிமானத்தால் அவைகளோடு அவசியம் சம்பந்தப்படுவானென்பது ஏற்படுகின்றது; ஆதலால், கர்மங்களிற் பிரவேசித்த அஞ்ஞானிக்கு ஞானநிஷ்டை எவ்வாறு கைகூடுவது? என்று நீ வினவக்கூடும்; அதற்கும் சமாதானம் கூறுகிறேன் கேட்பாயாக: இலௌகிக வைதிகமான எல்லாக் கர்மங்களையும் எவர்கள் எனது சந்தோஷத்தின்பொருட்டாகச் செய்து, சுவர்க்கவின்பமுதலிய பலன்களிலுள்ள இச்சையை நீக்குவார்களோ அவர்கள், தாம் செய்கின்ற அந்தக் கர்மங்களில் ஒன்றோடும் சம்பந்தப்படமாட்டார்கள். இவ்வாறு ஒருகர்மத்தோடும் சம்பந்தப்படாதிருக்கும் அவர்கள் எப்படியிருப்பார்களெனில், தாமரையானது நீருடனே பிறந்திருந்தும் அதன் இலையும் நீரும் எப்படி ஒட்டாமலிருக்குமோ அப்படியே அவர்கள் கர்மங்களோடு பொருந்தியிருப்பினும் அவற்றிற் பற்றின்றியிருப்பர். அவ்வாறு தாமரையிலையும் நீரும்போலக் கர்மங்களோடு சம்பந்தப்படாதிருப்பவர்க்கு, நிஷ்காம கர்மங்களுள்ளே எதுவும் பந்தத்திற் கேதுவாகாது; பின்னை அக்கர்மங்கள் எதற்கேதுவாமெனில் அந்தக்கரணசுத்திக்கே ஏதுவாகும். இன்னும் கர்மயோகிகள், தம்முடன்கூடப் பொருந்தியிருப்பனவாகிய இந்திரியங்களாலும், மனத்தினாலும், உடம்பாலும், முறையே சிரவணம் முதலியவைகளும், தியானம் முதலியவைகளும், ஸ்நானம் முதலியவைகளுமாகிய கர்மங்களை, 'இவை கரணங்களின் வியாபாரமாம்,' என்று கருதி மமதையையும், பலனில் விருப்பத்தையும் விடுத்துச் சித்தசுத்தியின்பொருட்டே செய்வர்; இந்தக் கிரமத்தின்படி அவர்கள் தினந்தோறும் கர்மங்களைச் செய்தாலும் விஷத்தைப்போலும் சம்சாரதுக்கத்தைக் கொடுத்தற்குக் காரணமாகின்ற அந்தக் கர்மங்களே அவர்களுக்குச் சாந்திரூபமான மோக்ஷத்தைக் கொடுத்தற்குங் காரணமாம். கர்மங்களின்



பயன் நமக்கடையத்தக்கனவாமென்று விரும்பி அந்தக் கர்மங்களிற் பிரவேசிக்கும் அஞ்ஞானபுருஷர் அக்காமியகர்மங்களால் அவசியம் பந்தப்படுவார்.

பக்தனான அருச்சுனா! இதுவரை அசுத்தசித்தமுடைய புருஷர்க்குச் சன்னியாசத்தினும் கர்மயோகம் சிரேஷ்டமாமென்று விரிவாகக்கூறினேன்; இனிச்சுத்தசித்தமுடைய புருஷர்க்குச் சர்வகர்மங்களின் சன்னியாசமே சிறந்ததாமென்பதைக் கூறுகிறேன் கேள்: தேகத்தின் வேறான ஆன்மாவை நன்றாகத் தரிசித்த மனிதன், அடங்கிய மனத்தினாலே, எல்லாக் கர்மங்களையும், அவற்றால்உண்டாகும் பயன்களையும் விடுத்து, நவத்துவாரங்கள் பொருந்திய மாயாபுரியென்னும் இந்தத் தேகத்தினுள்ளே சுகரூபமாய் இனிதாக விருப்பான்; அன்றியும், அவன்பிராரப்த வசத்தாலே எதிரில்வந்தடைவனவாகிய கர்மங்களைச் செப்பவனுமாகான்; செய்விப்பவனுமாகான். இப்போதுநான் கூறிய வார்த்தையைக்கேட்டதனால் நீ, என்னிடம், 'ஓட்டமும் இளைப்பும் வியர்வையும் வருவிக்கும் வாயுவாகிய தேவதத்தனிடத்து வாஸ்தவமாகவுள்ள கதியானது அவன் நிலைத்துநின்ற காலத்தில் அவனிடம் நிகழாதது போல ஆன்மாவினிடத்து வாஸ்தவமாகவுள்ள செய்தல் செய்வித்தல்என்னுந் தொழில்கள்சன்னியாசகாலத்தில் அவ்வான்மாவினிடத்தில் உண்டாவதில்லையென்பதுஉம்முடையவாக்கியத்தின் றாற்பரியமா? அல்லது ஆகாயத்தின்கண் நீலநிறம் முதலியவைகள் வாஸ்தவமாக இல்லாததுபோல ஆன்மாவினிடத்தும் செய்தல் செய்வித்தல் என்னும் தொழில்கள் வாஸ்தவமாக இல்லையென்பது உம்முடைய வாக்கியத்தின் றாற்பரியமா?' என்று வினவக்கூடும். இவ்வினாக்களுக்கும் தக்க விடை கூறுகின்றேன் கேட்பாயாக: பிரபுவென்னும் ஆன்மதேவனானவன், தேகம் முதலியவைகளுடைய செய்கைகளையும், கர்மங்களையும், கர்ம பலன்களோடு சம்பந்தத்தையும் உண்டுபண்ணவில்லை. இப்படிப்பட்டவைகளையுடையனவாகிய செயல்களெல்லாம் அஞ்ஞானரூபமான மாயையினால் உண்டா

கின்றனவேயாம். அத்தன்மையான மாயையினால் வாஸ்தவமாக ஆன்மசொரூபத்தை யறியாமல், செய்கைகள் நிகழுங் காலத்தில், 'நான் இக்கர்மங்களைச் செய்யுங் கர்த்தா,' 'இக்கர்மங்கள் என்னுடைய செய்கைகள்,' என்று அறிவில்லாதவர்கள் பொய்ம்மையாக மயக்கத்தை யடைவர்.

ஆனால், ஜனனமரணரூபமான சம்சார நிவிர்த்தி எவ்வாறுண்டாகுமெனில், ஆன்மவிஷயமான விவேகஞானத்தினால், சகலரும் மயங்கும் ஆவரணரூபாம்சமான அஞ்ஞானங்களெல்லாம் நாசமாகவே, பரிபூரண சுபாவமுடைய பிரமசைதந்நியமானது, ஆகாயத்தில் சூரியோதயமான மாத்திரத்தில் இருளனைத்தும் நீங்கிக் கடம்முதலிய பதார்த்தங்கள் விளங்குவனபோல விளங்கும். இந்த வழியினால் அப்பரப்பிரமத்தினிடத்தே நம்பிக்கை யுடையவராகி, 'அதில் நாம் வேறு,' என்னும் புத்தி சிறிதுமில்லாமல், 'அதுவே நமது ஆன்மா,' என்னும் புத்தியை அடைந்தவரெவரோ அவர் மீண்டும் ஜனனமில்லாதவராவர்.

இப்போது ஆன்மஞானத்திற்கு ஏற்படும் * விதேக கைவல்யரூபபலனைக் கூறினேன்; இனி அவ்வான்மஞானத்திற் கேற்படும் சீவன்முத்திரூபமான பயனைக் கூறுகிறேன் கேட்பாயாக: நல்ல வித்தை, நிரகங்காரத்தன்மை முதலியவைகளையுடைய பிராமணன், யானை, பசு, நல்ல நாய், அந்த நாய் மாமிசத்தைத் தின்றுழலுகின்ற சண்டாளன் என்று சொல்லப்படும் பலவகைப்பட்ட சாத்துவிக இராஜத தாமதப் பிராணிகளிலெல்லாம் ஒன்றில் பகவான் இருக்கின்றான், ஒன்றில் இல்லை என்று கருதாமல், எங்கும் அறிவுமயமாகி நின்ற என்னைச் சமமாகவே இருக்கின்றவனாகக் கருதிப்பார்க்கும் ஞானவான், இத்தேகத்தோடு கூடிச் சீவிப்பவனா யிருந்தே தோஷமற்றவனாய் ஜனனமரணங்களை ஜெயித்தவனாவான். அருச்சுனா! இன்னும், 'கர்மங்களைச் செய்யின் விஷயப்பிரீதிரூபமான † பிரதிபந்தத்தால்ஒருவருக்கும்பிரமஞானஞ்சித்தி

* விதேகம் — தேகவிமோசனம். † பிரதிபந்தம் — தடை.



யாதே,' என்று உனக்கு ஐயம் நிகழக்கூடும்; அதற்கும் சமாதானங் கூறுகிறேன் கேள் : இங்குச் சப்தாதி விஷயங்களிற் செல்லுகின்ற இந்திரியங்களா லுண்டாகும் விஷயவின்பங்களெல்லாவற்றையும் அந்தக்கரணத்தினின்றும் நீக்கி, உலகவின்பத்தில் மிகவும் வெறுப்புடைய தமது அந்தக்கரணத்தினிடத்தே யுண்டாகும் பேரின்பத்தை அனுபவிக்கும் புருஷர்க்கு என்றும் அழியாத பிரமசுகமானது கைகூடும்; மேற்கூறிய விஷயப்பிரீதி விவேகமற்றவர்க் குண்டாகுமேயன்றி விவேகமுற்றவர்க் குண்டாகமாட்டாது; விவேகிகள், மனத்திலே புகும்படி அனுபவிக்கின்ற இந்திரிய விஷயங்களின் சம்பந்தத்தா லுண்டாகுஞ் சுகங்கள் நிலையற்றனவென்றும், அச்சுகங்களுக்குத் தக்கபடி பின்னர்த் துன்பங்கள் உண்டாகுமென்றும் கருதி அவற்றை எப்போதும் பொருந்திரமியாதவர்களாய்த் தள்ளிவிடுவார்கள். இன்னும், பரமபுருஷார்த்தமான முத்திக்குக் காமக்குரோதங்களே தடையானவைகளாம்; ஆதலின், மரணமானபின் சரீரத்தில் மாலையை யணிவதனாலும், சந்தனத்தைப் பூசுவதனாலும், இச்சையும், அதனைச் சுடலையில்வைத்துக் கொளுத்துவதாற் குரோதமும் அடையா திருத்தல்போலச் சரீரத்தோடு கூடிச் சீவிப்பவனாயிருந்தே இஷ்ட விஷயங்களைக்காணினும் கேட்பினும் நினைக்கினும் அவைகளைப்பற்றி அந்தக்கரணத்தில் எழுகின்ற இச்சையாகிய காமத்தாலும், அதனா லுண்டாகின்ற உரோமச்சிலிர்ப்பு முகமலர்ச்சி முதலிய காமவேகத்தாலும், பிரதிகூலமான பதார்த்தங்களைப்பற்றி அந்தக்கரணத்தில் எழுகின்ற த்வேஷமாகிய குரோதத்தாலும், அதனா லுண்டாகின்ற சரீரநடுக்கம் வியர்வை பற்கடி பெருமூச்சு குரூரப்பார்வை முதலிய கலக்கங்களாகிய குரோத வேகத்தாலும் வேகாமல், சரீரேந்திரியாதிகளின் க்ஷோபரூபங்களான அந்தக் காமக்குரோதங்களின் வேகங்களைச் சகித்ததீரன் எவனோ அவனே பிரமத்தினிடம் புகும் ஞானியும், ஞானத்தின் பயனான மோக்ஷசுகம் பெறுதற் குரியவனுமாவன்.

ஆயினும், இத்தகைய அதிகாரிகள் இங்குக் கூறியபடி காமக்குரோத வேகங்களைச் சகித்ததனால்மாத்திரம் மோக்ஷத்தை யடையார்கள்; பின்னை எதனால் அதை அடைவார்களெனில், இதனினும் சிறந்த செய்கை யொன்றுளது; அதனை யனுஷ்டிப்பதாலேயே மோக்ஷமெய்துவர். அச்செய்கை யாதெனில், இவர் அந்தரான்மாவையே தமக்குள் விளையும் ஆனந்தமாகவும், அந்தரான்மாவையே தமக்கு விளையாடுமிடமாகவும், அந்தரான்மாவையே தமக்கு திருஷ்டியாகவுங் கொண்டு அனுபவித்தலாம். இப்படி அனுபவிக்கும் இந்த யோகிகள் தாங்களும் அந்தரான்மாவேயாகிச் சித்தமாயிருக்கும் பிரமபூதமான ஆனந்தத்தை யடைவர்," என்று கூறினார்.

இவ்வாறு கூறிப் பின்னரும் ஆதி மத்தியாந்தங்களில் ஒன்றுந் தனக்கில்லாமலே சர்வமுந் தானாய்நின்ற ஸ்ரீ கிருஷ்ணபகவான், இனி ஆறும் அத்தியாயத்தில் விஸ்தாரமாகக் கூறப்படும் பிரமஞானத்திற் கந்தரங்கமான தியானயோகத்தைச் சுருக்கிச்சொல்லத் தொடங்கினவராய் அவனை நோக்கி, "அருச்சுனா! இனி பிரமஞானத்திற்கு அந்தரங்கமாகிய தியானயோகத்தைச் சுருக்கிக் கூறுகிறேன் கேட்பாயாக: சுரோத்திரம் முதலிய ஐந்து இந்திரியங்களையும் சப்தாதிவிஷயங்களினின்றும் நீக்கித் தமது இரண்டு கண்களின் திருஷ்டியையும் பெரிய இரண்டு புருவங்களின் மத்தியில் பொருந்தும்படி வைத்து, அதோமுகமாகவும் ஊர்த்துவமுகமாகவும் ஓடிக்கொண்டிக்கும் அபானன், பிராணன் என்னும் வாயுக்களை அப்பியாச வலிமையினால் இயக்கமில்லாமற் கும்பித்து, ஐந்துவகையான விஷயங்களின் இச்சைகளை யடக்கி, மனத்தையும் பயத்தையும் குரோதத்தையும் நீக்கி, ஆகாராதிகள் ஒருகாற் குறைந்து ஒருகால் மிகுதலில்லாமல் அவற்றைச் சமமாகக்கொண்டு பழகும் யோகிகளே யோகத்தேர்ச்சியுடையவராய் உய்ந்து, பிறப்பிறப்பு துன்பம் முதலிய யாவையும் நீக்கி முக்தராவார். இனி, 'இவ்வாறான யோகத்தோடு



கூடின அதிகாரிகள் எதனை யறிந்து முத்தியடைவர்?' என்று நீ வினவின் அதற்கும் விடை கூறுகின்றேன் கேள்: இந்த யோகிகள் மேற்கூறிய யோகானுஷ்டானத்தால், பிராமணாதி ஜாதியபிமான முடையவர்களாற் செய்யப்படும் ஜ்யோதிஷ்டோமாதி எக்ஞங்களுக்கும், அறிவுடையோராற் செய்யப்படும் குற்றமற்ற கிருச்சிரசாந்திராயணாதி தபசுகளுக்கும், ஏழுலகங்களுக்கும், பொருந்துந்தானமாய்ச் சச்சிதானந்தமாய் ஏகரசமாய்ச் சர்வான்மனாயுள்ள நாராயணனான என்னை வேதங்களெல்லாம் சொல்லி முடிந்தபடியே யுள்ளபடி பிரத்தியக்ஷருபமாக அறிந்து மோக்ஷத்தை யடைவர். இவ்வாறு மோக்ஷத்தை யடைந்து பிரமானந்த சுகத்தை யறிந்தவர் மீண்டும் ஜனிக்கமாட்டார்கள்," என்றுரைத்தருளினார்.

ஐந்தாவது

ஞானகர்மவத்தியாயம் முற்றுப்பெற்றது.

---

ஆறாவது

## யோகவத்தியாயம்.

கலிவிருத்தம்.

"யோக மனத்தவர் யோக மதற்கே
யேக முதற்பொரு ளாகி யிருந்தே
நாக பணத்திடை யேநட மாடும்
மேக மவற்கிவை மீள விரிப்பான்."

மேற்கூறியபடி ஸ்ரீ கிருஷ்ணபகவான் ஐந்தாமத்தியாயத்தினீற்றில் தியானயோகத்தைப்பற்றிய விஷயங்களைச் சுருக்கிச் சொன்னவுடனே அருச்சுனனுக்கு அவை விளங்காமல் சந்தேக முண்டாயிற்று. அதனால், யோகம் பொருந்திய மனத்தினையுடைய தவத்தினரது யோகத்தின்கண்ணே ஐக்கியமான ஆதிவஸ்துவாகியிருந்தே, காளிங்கனென்னும் சர்ப்பத்தின் பணாமகுடத்தில் நடனஞ் செய்யும் மேகவண்ண

ராகிய அந்த ஸ்ரீ கிருஷ்ணபகவான், அவ்வாறு யோகவிஷயங்களைக் கேட்டுச் சந்தேக மடைந்த அவ்வருச்சுனனுக்கு அந்த யோகத்தைப்பற்றிக் கீழே கூறப்படும் இவ்விஷயங்களைக் கூறத் தொடங்கினவராய் மீண்டும் அவனை நோக்கி, "அருச்சுனா! நான் மேற்கூறிய விஷயங்களால் சர்வகர்மங்களையும் விடுபவர்களே சன்னியாசிகளும் யோகிகளு மாவரென்று கருதாதே; வெவ்விய நெருப்பால் வேள்வி செய்பவருக்குள்ளே தான் செய்யும் கர்மங்களின் பயனை இச்சியாதொழித்து, அக்கர்மங்களை விடாமல் சிரத்தையோடு செய்து நிற்கும் நிஷ்காமகர்ம புருஷனே தான் கடைத்தேறக் கருதிய நல்ல யோகியும், சன்னியாசியுமாவன். தம்மிடத்துப் பொருந்தின கர்மபயன்களின் இச்சைகளை விடாதவர்கள் எவர்களா யிருந்தாலும் நல்ல யோகிக ளாகமாட்டார்கள். அவர்கள் யோகிகளாக விரும்புவார்களானால் சர்வகர்ம பயன்களின் இச்சைகளையும் ஒழித்தல் வேண்டும்; ஒழிதலில்லாத சுருதியிற் கூறிய நல்ல யோகவிலக்கணம் இதுவேயாகும். ஆதலின், கர்மபலன்களின் இச்சைகளை யொழித்தவன் எவனாயிருந்தாலும் யோகியாவன்.

இங்குக் கூறிய விஷயங்களால், கர்மபலன்களின் இச்சை முதலியவைகளை நீக்கிய கர்மபுருஷனே சன்னியாசியும் யோகியு மாவானென்பது நன்கு விளங்கும். 'சர்வகர்மங்களையும் விடுதலே சன்னியாசமும் யோகமுமா யிருக்கும்போது, கர்மங்களைச் செய்யும் நிஷ்காம கர்மபுருஷனைச் சன்னியாசியென்றும் யோகியென்றும் கூறுதல் எவ்வாறு பொருந்தும்?' என்று நீ வினவின் அவ்வினாவுக்குத் தக்க விடை கூறுகின்றேன் கேள்: 'சிம்மம் தேவதத்தன்,' என்னும் வசனத்தில் மிருகரூபமான சிம்மத்தின் வேறான மனிதரூபமான தேவதத்தனிடத்தே, அந்தச் சிம்மத்திற்குச் சமானமான சூரத்தன்மை குரூரத்தன்மை முதலிய குணங்களிருப்பதைக்கொண்டு அச்சிம்ம சப்தமானது ஏற்றிக் கூறப்படுவதுபோல, நிஷ்காமகர்ம புருஷனிடத்தும், அவன்



பலன்களின் இச்சையை ஒழித்திருக்கும் குணத்தைக்கொண்டு யோகியென்னும் சப்தமும், சன்னியாசியென்னும் சப்தமும் ஏற்றிக் கூறப்படுகின்றன. எப்படியெனில், 'சந்நியாசி,' என்னும் சப்தத்திற்கு முக்கியார்த்தம், 'பலனோடுகூடச் சர்வகர்மங்களையும் விட்டவன்,' என்பதாம். ஆகவே, அச்சந்நியாசியிடத்தில் சுவர்க்காதி பலன்களின் இச்சை யில்லாதிருத்தல்போல நிஷ்காமகர்மமுடைய புருஷனிடத்தும் அச்சுவர்க்கம் முதலிய பலன்களின் இச்சை ஏற்படாதிருக்கின்றது; ஆதலின், அச்சன்னியாசி சப்தம் குணசம்பந்தத்தால் அந்தக் கர்மமுடைய புருஷனிடத்து ஏற்றிக் கூறப்படுகின்றது. இப்படியே, 'யோகி,' என்னும் சப்தத்திற்கு முக்கியார்த்தம், 'சர்வ சித்தவிருத்திகளையும் தடைசெய்தவன்,' என்பதாம். ஆகவே அவனிடத்தில் பயன்களில் ஏற்படும் இச்சைரூபமான சித்தவிருத்தியின் அழிவு ஏற்பட்டிருப்பதுபோல நிஷ்காமகர்ம புருஷனிடத்தும், அந்தப் பலன்களில் ஏற்படும் இச்சைரூபமான சித்தவிருத்தியின் அழிவு ஏற்பட்டிருக்கிறது. ஆதலின், அந்த, யோகியென்னும் சப்தம் குணசம்பந்தத்தால் அந்த நிஷ்காமகர்மபுருஷனிடத்து ஏற்றிக் கூறப்படுகின்றது.

நான் இவ்வாறு கூறியதனால், 'ஸ்ரீ பகவான் கர்மயோகஞ் சிரேஷ்டமானதென்று விதித்ததாலும், சுருதியும், சீவித்திருக்கும்வரை கர்மஞ் செய்யத்தக்கதென்று விதித்திருப்பதாலும் இங்குக் கூறிய அதிகாரி புருஷனுக்கு அவன் சீவித்திருக்கும்வரை கர்மயோகமே செய்தற்கு யோக்கியமாம்,' என்று நீ நினைக்கக்கூடும். அப்படி நினைத்தல் கூடாது; அக்கர்மயோகத்திற்கும் ஓர் எல்லையுண்டு; அதைக் கூறுகிறேன் கேட்பாயாக: தாம் யோகநிலையுடையவராய் உய்யும்படிக்கு யோகத்தில் ஒருமனப்படும் இச்சையுடைய முனிவர்க்கு அந்த யோகம் கைவசமாவதற்கு நிஷ்காமமாகச் செய்யும் நித்தியநைமித்திக கர்மங்களே சாதனமாகும். ஆதலால், அந்த நித்தியநைமித்திக கர்மங்களை அந்த யோகம் கைகூடும்வரையிற் செய்து பின்னர் விடவேண்டும்; உள்ளபடி

யோகம் உதித்தபின்னர் ஞானநிஷ்டைக்குச் சன்னியாசமே சாதனமாவதல்லாமல் நித்திய நைமித்திக கர்மங்கள் சாதனமாகமாட்டா; அவை ஞானநிஷ்டைக்கு விக்கினங்களேயாம். 'சீவித்திருக்கும்வரை கர்மங்கள் செய்யத்தக்கனவாம்,' என்று சுருதி கூறினது வைராக்கியமில்லாத புருஷருக்கேயன்றி வைக்கிராக்கியமுடைய புருஷனுக்கில்லை. அருச்சுனா! இனி, 'எந்த யோகநிலையை அடைந்தவனாய் இவ்வதிகாரிபுருஷன் சர்வ கர்மங்களையும் விடுதற்குரியனாவனோ அந்த யோகநிலையை இந்த அதிகாரிபுருஷன் எந்தக்காலத்தில் அடைந்தவனாவன்?' என்று நீ வினவக்கூடும்; அதற்கும் விடை கூறுகின்றேன் கேள்: அற்பத்தன்மையுடையனவாகிய சப்தாதி விஷயக்கூறுபாடுகளிடத்தும், பலவிதங்களாகிய கர்மபலன்களிடத்தும் இவ்வதிகாரியானவன் எப்பொழுது அபிமானத்தை விடுகின்றானோ அப்போது இச்சுபாவத்தால் சமாதிரூபமான யோகத்தின்கண் நிலைபெற்றவனாவான். எந்த அதிகாரி புருஷன் எப்பொழுது இவ்வாறு யோகத்தில் நிலைபெற்றவனாவானோ அவ்வதிகாரி புருஷன் அப்பொழுது தனதான்மாவை ஆன்மாவாலேயே இச்சம்சாரத்தினின்றும் கடைத்தேறப் பண்ணுகிறவனாகிறான்; ஆதலால், இவ்வதிகாரி புருஷன் யோகநிலையுடையவனாய்த் தன தான்மாவை இச்சம்சாரத்தினின்றும் அவசியம் கடைத்தேறப்பண்ணவேண்டும்; ஆன்மாவல்லாமல் வேறே யாவர் ஆன்மாவைச் சம்சாரத்தினின்றுங் கரையேற்றி அதற்கு மேன்மை செய்யத்தக்கவர்? ஆன்மாவல்லாமல் வேறே யாவர் ஆன்மாவைச் சம்சார சமுத்திரத்தில் மூழ்குவித்து அதற்குத் தாழ்மை செய்யத்தக்கவர்? ஆன்மாவல்லாமல் வேறே யாவர் ஆன்மாவுக்கு உண்மையாகச் சத்துருவாவர்? ஆன்மாவல்லாமல் வேறே யாவர் ஆன்மாவுக்கு உறவினராவர்? வேறொருவருமிலர். ஆன்மாவே ஆன்மாவுக்கு உயர்வு தாழ்வைச் செய்வதும் சத்துருமித்துருவாவதுமாயிருக்கின்றது. ஆதலால் மேற்கூறியபடி ஆன்மாவைக்கொண்டே ஆன்மாவுக்கு உயர்வையே தேடிக்கொள்ளவேண்டும்.



இனி, 'எவ்வகையான ஆன்மா தனக்குப் பந்துவாம்? எவ்வகையான ஆன்மா தனக்குச் சத்துருவாம்?' என்று நீ வினவக்கூடும். அவ்வினாக்களுக்கும் தக்க விடை பகருகின்றேன் கேட்பாயாக: பிறந்திறந்து தான் வருந்தாவண்ணம் தனது தேகேந்திரியாதிரூபமான கூட்டத்தை விவேகத்தோடுகூடிய சுத்த மனத்தினாலேயே தன் வசமாகப் பண்ணினவன் எவனோ அவனே தனக்குத்தானே எப்போதும் பந்துவாயுள்ளவன்; தேகேந்திரியாதிரூபக் கூட்டத்தை விவேகத்தோடு கூடிய மனத்தினால் தமது வசம் பண்ணாதவர், தமக்குத் தாமே புறச்சத்துருவைப்போலச் சத்துருவாகிச் சஞ்சரிப்பவராவர். இன்னும் மேற்கூறியபடி தேகேந்திரியாதிரூபமான கூட்டத்தை வசஞ்செய்து, யாவரும் துறவாததனால் வந்தடைந்து சித்தத்தைக் கலக்கும் சீதோஷ்ணம், சுகதுக்கம், மானாவமானம் முதலிய துவந்துவங்களை விலக்கிப் பரமான்மாவொன்றையே எப்பொழுதும் நாடுகின்றவரிடத்து உதயமாகிய ஞானசுபாவமான ஆன்மாவானது, மேற்கூறிய துவந்துவரூபமான மாயையால் மறைவுபடமாட்டாது.

இன்னும், குருவினிடமாகக் கற்கத்தக்க பல நூல்களைக் கற்று, அந்நூல்களாலறியத்தக்க பயனைச் சந்தேகமின்றியறிந்து, விஷயங்களில் நீண்டு செல்லும் இந்திரியங்களை ஜெயித்து, விஷயங்கள் தன் சமீபத்தையடைந்தாலும், விஷயங்களையனுபவிக்கத் தனக்குச் சாமர்த்தியமிருந்தாலும், அவைகளாற் றனது சொரூபஸ்திதியினின்றும் தன்னைப் பேதித்தற்கரியவனாகி, ஓட்டையும் பொன்னையும் ஒருபொருள்போலச் சமமாகப் பார்க்கும் யோகியே, இவ்வுலகத்தில் யாவரும் சம்சார பந்தத்திலகப்பட்டு நடிக்கும் பெரிய மாபா நடனத்தைத் தானுஞ் செய்யாமல் தான் அம்மாயா நடனத்தைக் கண்டு கலக்கமற்றவனாயிருப்பான். அன்றியும், பிரதியுபகாரத்தை விரும்பாமலும், பூர்வ சிநேகத்தாலில்லாமலும், பூர்வசம்பந்தத்தாலில்லாமலும் உபகாரஞ் செய்யும் சுகிருதனும், பழைய சிநேகத்தை விரும்பியே உபகாரஞ்

செய்யும் அன்புள்ள மித்திரனும், ஒருவன் செப்த அபகாரத்தை நாடாமல் இயற்கையிற் பொருந்திய தனது குரூர சுபாவத்தாலேயே அபகாரஞ்செய்பவனாகிய கொடிய சத்துருவும், ஒருவர்க்கொருவர் விவாதஞ் செய்துகொள்ளும் இருவர்க்கும் இதத்தைச் செய்யவிரும்பி, யாவரிடத்தும் சமமாயிருக்கின்ற மத்தியஸ்தனும், அற்ப சம்பந்தத்தால் உபகாரஞ்செய்பவனாகிய பந்துவும், தன்னாற் செய்யப்பட்ட அபகாரத்தை நாடியே அபகாரஞ் செய்பவனாகிய த்வேஷியும். அழகும் பெருமையும் பொருந்திய வேதசாஸ்திர விகிதமான சுபகர்மங்களை யனுஷ்டிக்கும் சாதுவும், வேதசாஸ்திர விரோதமான அசுபகர்மங்களைச் செய்யும் பாவியும் என்று சொல்லப்பட்ட இம்மனித ரனைவரிடத்தும் சமசித்த முடையவனாயிருப்பவன் எவனோ அவனே எல்லாயோகிகளினும் சிறந்த யோகியாவான்.

அருச்சுனா! இப்போது யோகநிலையுடையவனது இலக்கணத்தைக் கூறினேன்; இனி அவனுடைய அங்கரூபமான யோகத்தின் தன்மையைக் கூறுகிறேன் கேட்பாயாக: யோகங்களெல்லாவற்றினுந் தலைமையாகிய இந்த யோகத்தில் யோகியானவன், நிலைநின்று இதனை முயன்று செய்யுந் தன்மை எப்படியெனில், அவன், கெடாத ஆசைகளைத் தோஷமென்று கருதி முற்றுமொழித்து, யோகசித்தியில் தடை செய்கின்ற பதார்த்தங்களில் ஒன்றையும் தனக்கென்று கருதி ஒருவரிடத்திற் சென்று யாசிக்காமல், யோகசித்திக் குரியனவாக நூல்களில் வகுத்துக்கூறப்பட்டவையாகிய மலைகளிலுள்ள குகை முதலிய ஸ்தானங்களில் ஒன்றிற் சென்று இயற்கையினாலாவது செயற்கையினாலாவது சுத்தமாயுள்ளதும், யோக சித்திக்குத் தடையாக எந்தப் பிராணியும் வருத்தஞ் செய்யாதவிதத்தில் அமைந்ததுமாகிய ஓரிடத்தில், ஆசனம் மிகவும் உயர்ந்திருந்தால் ஒருசமயம் பரவசத்தினாற் கீழே விழவும், மிகவுந் தாழ்ந்திருந்தால் சீதோஷ்ணமும் மழை ஜலம் பிரவேசித்தலும் கல் முதலியவை உறுத்தலு



முண்டாகித் தியானத்திற் கிடையூறு நேருமாதலால் அவ்விதம் நேராதபடி, மிகவும் உயர்வுதாழ்வின்றிச் சமமாயிருக்குமாறு தருப்பையைப் பரப்பி, அதன்மீது மிருதுவான மான்றோலை அல்லது புலித்தோலை விரித்து, அந்த மான்றோல் முதலியவற்றின்மீது மிருதுவான வஸ்திரத்தை விரித்து, இவ்வாறு நிச்சலமான ஆசனத்தைத் தானே ஸ்தாபனஞ் செய்து, தான் அந்தச் சுத்தமான விடத்திலமைத்த அவ்வாசனத்தின்மீதேயிருந்து, வேறுவேறாகச் செய்யப்படுகின்ற கிரியைகளோடு கூடிநிற்கும் சுரோத்திரம் முதலிய இந்திரியங்களை ஜெயித்து, அதிக கலக்கத்தை யடைகின்ற மனத்தை அக்கலக்க மறும்படி ஒடுக்கி, அந்தக்கரண சுத்தியின்பொருட்டுச் சமாதி விஷயமான அப்பியாசத்தைச் செய்யவேண்டும்.

அருச்சுனா! இன்னும், மேற்கூறியபடி ஆசனத்தமர்ந்து, யோகாப்பியாசத்தைச் செய்யத் தொடங்கிய புருஷன், வலப்புறம், இடப்புறம், பின்புறம், ஆகியவற்றிலுள்ள எந்த வஸ்துவையும் பாராமலும் தீண்டாமலு மிருத்தற்பொருட்டுத் திடப்பிரயத்தன முடையவனாய்ச் சிரசையும் கழுத்தையும் உடம்பையும் தண்டம்போல நேரே நிற்கும்படிச்செய்து ஒருசமயம் கொசுகு எறும்பு முதலிய பிராணிகளால் உபத்திரவம் நேரினும் சரீர மசையாமல் தளராநிலையிற் சமமாயிருந்து, உருவமுதலிய விஷயங்களைக் கவராதிருக்கும்படி நேத்திரங்கள் தனது நாசிநுனியைப் பார்ப்பதாக அதன்மேலே அவைகளை நிறுத்தித் திக்குகளையும் பாராதவனாய், இராகத்துவேஷங்களையும் நீக்கி, பிரமசரியமாகிய குருசேவை பிச்சையுண்ணல் முதலிய பிரமசாரியின் விரதத்தை யனுஷ்டித்து, அலைகின்ற சமுத்திரம்போன்ற சஞ்சலரூபமான ஆசையும், 'சர்வகர்மங்களையும் விடுவது நமக்கு யுக்தமானதோ யுக்தமல்லாததோ?' என்று கர்மங்களை விடுவதி லுண்டாகும் சந்தேகமாகிய பயமும் சாஸ்திர ஞானதிடநிச்சயத்தால் தன்னைவிட்டு நீங்கவும், அலையாநின்ற

மனமானது விஷயங்களிற் செல்லாமல் உள்ளே அடங்கவும் செய்து பரமேசுரனான என்னைப் பரம புருஷார்த்தரூபனாக அறிந்து என்னிடத்திற் சித்தமுடையவனாக இருப்பதுவே சம்பிரக்ஞாதசமாதிரூபமான யோகமாம்.

பார்த்த! இனி இந்தச் சம்பிரக்ஞாத சமாதிரூபமான யோகத்தினாலேற்படும் பயனைக் கூறுகின்றேன் கேள்: அப்பியாச வைராக்கியங்களின் வன்மையினால் விளங்கும் இந்தச் சம்பிரக்ஞாத சமாதியை மேற்சொன்ன நியமப்படியே கொண்டு எப்பொழுதும் அப்பியாசிப்பவர், முடிவில் அதாவது: சித்தமொடுங்கியவிடத்தில் பரமநிர்வாண சொரூபமான என்னையே அடைவர்.

இனி, யோகாப்பியாசமுடைய புருஷர்க்குரிய ஆகாராதி நியமத்தையுங் கூறுகின்றேன் கேட்பாயாக: அதிகமாக உண்ட அன்னம் அதனை யுண்டவர்க்கு அசீரணமாகி இரச முதலிய தாதுக்களின் விஷமவாயிலாகப் பலவிதமான சுரம், சூலை முதலிய வியாதிகளை யுண்டாக்க, அந்த வியாதிகளாற் பிடிக்கப்பட்ட புருஷரால் யோகாப்பியாசஞ் செய்தல் முடியாதாகையால், உணவில் மிகவும் விருப்புடையவராய் அதனை மிகுந்துண்பவருக்கும், அன்னத்தை அளவுப்படி உண்ணாமல் மிகவும் குறைப்பவர்க்கும், அதனை யுண்ணாதொழிப்பவர்க்கும் சரீரம், இரசம் முதலிய தாதுக்களால் இரக்ஷிக்கப்படாமல் இளைத்து எதையுஞ் செய்யச் சாமர்த்தியமின்றிப் போவதனிமித்தம் யோகாப்பியாசம் சித்தியாதாகையால் உணவை யுண்ணாமல் மிகவும் நீக்கிவிடுவோர்க்கும், அளவிற் குறைத்து அற்பமாக உண்பவர்க்கும், அதிக நித்திரை யோகத்திற்குத் தடையாகுமாதலால் மிகுந்து நித்திரை செய்பவருக்கும், நித்திரையேயின்றி விழித்திருப்பதால் யோகாப்பியாச காலத்தில் அவசியம் நித்திரை வந்து கூடுவதால் யோகத்திற் கிடையூறு நேருமாதலால் நித்திரையை மிகவும் ஒழித்திருப்பவருக்கும் இந்த யோகமானது சித்திக்கமாட்டாது. தனது வயிற்றின் இரண்டு பாகங்களை அன்



னத்தினாலும் மூன்றாம் பாகத்தை ஜலத்தினாலும் பூரணமாக்கிப் பிராணவாயு சுகமாகச் சஞ்சரித்தற்பொருட்டு நான்காம்பாகத்தைச் சும்மா வைத்தலாகிய ஆகார நியமத்தையும் சூரியாஸ்தமனந் தொடங்கி உதயகாலபரியந்தமான இரவைச் சமமாக மூன்று பாகஞ்செய்து அம்மூன்று பாகத்துக்குள்ளே முதற்பாகத்திலும் கடைசிப்பாகத்திலும் விழித்திருந்து மத்தியபாகத்தில் நித்திரை செய்தலாகிய நித்திரையினியமத்தையும், யோசனை யளவிற் கதிகம் நடக்காமல் அந்த யோசனை யளவிற்குள்ளேயே நடத்தலாகிய கமனாகமனரூபவியவகார நியமத்தையும், வாக்காதி இந்திரியங்களின் சபலத்தன்மையை விடுதலாகிய ஜபமுதலிய கர்மங்களின் பிரவிர்த்தி நியமத்தையும் அளவிற்கதிகப்படாமலும் குறையாமலும் அப்பியாசிப்பவனே எல்லாத் துக்கங்களையும் நாசம்பண்ணத்தக்கதான சமாதியோகத்தைத் தனக்குட்படுத்துந் தன்மையுடையவனாம். எப்பொழுது அனுபவிப்பவைகளான இகலோக பரலோக விஷயங்களிலுள்ள ஆசைகளை யொழித்து அவனுடைய அந்தக்கரணரூபமான சித்தமானது சைதந்நிய சொரூபமான ஆன்மாவினிடத்தே அடங்குமோ அந்தச்சமயத்தில் அவனை இங்கே கூறுகின்ற அஸம்பிரக்ஞாத சமாதியோகத்தில் நிலைபெற்றவனாயினானென்று சொல்லலாம். இந்தப்பிரகாரம் அஸம்பிரக்ஞாதசமாதிரூபயோகத்தை அனுஷ்டிக்கின்ற யோகியின் அந்தக்கரணமானது, காற்றில்லாதவிடத்தில் உள்ளபடி அசையாதிருக்கும் தீபம்போல நிச்சலமாய்ப் பிரகாசிக்கும். எப்பொழுது, சதாகாலம் பூரண சிரத்தையோடு யோகாப்பியாசஞ் செய்பவனுடைய சித்தமானது இவ்வாறு அந்தக்கரணமொடுங்கி ஆன்மாவினிடத்தே சென்று பொருந்துமோ அப்பொழுது அவன், சுத்தமான அந்தக்கரணத்தினால் பிரத்தியக் சைதன்னியமாகிய ஆன்மசாட்சாத்காரஞ் செய்தவனாய் அவ்வான்மாவின்கண்ணே பரமமான சந்தோஷத்தை யடைவன். இன்னும், எந்தச் சுகமானது, இந்த நேத்திரம் முதலிய இந்திரியங்களுக்கு விஷய

மாகாததாயும், * தேசபரிச்சேதம், † காலபரிச்சேதம், ‡ வஸ்துபரிச்சேதம் என்னும் மூன்றுவித பரிச்சேதங்கள் நீங்கிய நிரதிசய பிரமரூபமாயு மிருக்குமோ, எந்தச்சுகத்தை யோகாப்பியாச வாயிலாகச்சென் றடைந்தவர்கள், 'இதனினும் அதிகமானதும் இதற்குச் சமமானதுமான இலாபம் வேறொன்றுண்டு,' என்று கருதமாட்டார்களோ, எந்தச் சுகமானது இராசத தாமதரூப மலத்தினின்றும் விடுபட்ட சத்துவப்பிரதானமான புத்திக்கே கவரும்படியான விஷபமாய் நிற்குமோ அதனிடத்தே திடசமாதியாக நிலைபெற்றவர், கைவேல், சூலம்,சக்கரம்முதலிய ஆயுதங்களைக்கொண்டு வஞ்சகராயினோர் தம்முடைய மார்பினிடமாக ஊடுருவிச் செல்லும்படி வீசினாலும், தாம் குறைவை யடையும்படி தீயானது தம்மைச் சூழ்ந்தெரிந்தாலும், நிறைந்த நெருப்பைப்போலும் விஷத்தையுடைய நாகமானது தம்மைத் தீண்டி வருத்தினாலும், சித்தத்தின் சர்வ விருத்திகளின் நீக்கரூபமான அச்சமாதியின்கண்ணே தாமடைந்துள்ள பிரத்தியகபின்ன பிரமமானது நிரதிசயானந்தரூபமா மாதலின், மேற்கூறிய துன்பங்களுக்கெல்லாமஞ்சிச் சலனமுறார்கள்.

அருச்சுனா! 'எந்த வுபாயத்தால் இந்தயோகம் அப்பியாசிக்கத்தக்கது?' என்று நீ வினவக்கூடும். அவ் வுபாயத்தையுங் கூறுகின்றேன் கேட்பாயாக: இகலோக பரலோகங்களிலுள்ள விஷபங்கள் அனர்த்தத்திற் கேதுவானவைகளாயும் மிகவும் தீமையுடையவைகளாயு மிருந்தும் அவற்றிலுள்ள

* தேசபரிச்சேதம் - ஒரு வஸ்துவைத் தேசத்தால் வேறு பிரித்தளவிடல்; அதாவது: இது இன்னதேசத்திலுள்ளதெனக் கூறுவது.

† காலபரிச்சேதம்-ஒன்றைக் காலத்தால் வேறுபிரித்தளவிடல்; அதாவது: இது இன்ன காலத்தி லுள்ளதெனக் கூறல்.

‡ வஸ்துபரிச்சேதம் - ஒன்றை வஸ்துவால் வேறுபிரித் தளவிடல்; அதாவது: இது இன்னவஸ்துவி லுள்ளதெனக் கூறல்.

பரிச்சேதமாவது - எல்லை, அல்லது துண்டிப்பு, அல்லது பகுத்தறிகை.



அசோபனத் தன்மையைப் பாராமல், 'இவை மிகவும் இரம்மியமானவைகளாம்,' என்று அவற்றைச் சோபனமுடையவைகளாகக் கருதும் நினைவால், 'இவை நமக்குக் கிடைக்குமோ?' என்றுண்டாகும் விஷயவிருப்பங்களாகிய சர்வகாமங்களையும், ஆன்மசாஸ்திர விசாரத்தால், நாயருந்திக் கக்கிய சோற்றைப்போலச் சூட்சும வாசனையோடுகூட நீக்கி, அக்காமங்களின் வழியாகவே விஷபங்களிற் பிரவிர்த்தித்திருந்த நேத்திரமுதலிய இந்திரியக் கூட்டங்களை உருவமுதலிய சர்வ விஷபங்களினின்றும் மனதால் நிவிர்த்தித்து அம் மனத்தை நிஜரூபமான பிரத்தியகான்மாவினிடத்தே, நீ விரையாமலும்,சாஸ்திரக்கிரமத்திற்கு விரோதமாகாமலும், மிருதுவாகவும் ஐக்கியமாக இருத்தக்கடவாய். இன்னும் நேத்திரம் முதலிய இந்திரியவழிகளால் புறத்தே சென்று, உருவமுதலிய பஞ்சவிஷயங்களில் சஞ்சரித்து நிற்கின்றமனத்தை, விஷபங்களைத் தோஷமாகப் பார்க்கும் திருஷ்டிமுதலிய வைராக்கியத்தின் ஏதுவாதிப வுபாயங்களால் உள்ளே இழுத்து, லயரூபமான நித்திரை யடையாதபடி, சர்வவுபாதிகளினின்றும் விடுபட்ட பிரத்தியகான்மாவின்கண்ணே இருத்திச் சமாதிக்கு எந்தச் சிந்தனையும் விக்கினமாதலின், யாதாயினுமோர் அநான்ம பதார்த்தத்தையாவது, அல்லது பிரத்தியகான்மாவையாவது கொஞ்சமும் விருத்திக்கு விஷயமாக்காமையாகிய தன்மையினையுடைய அப்பியாசமெதுவோ அதையே பழகுவாயாக

இனி, இவ்வாறான யோகாப்பியாச வலிமையால் யோகியின் மனமானது பிரத்தியகான்மாவின்கண்ணே நிலைபெற்றதால் அவனுக்குண்டாகும் பயனைக்கூறுகிறேன் கேட்பாயாக: தெளிந்த சித்தத்தை யுடையவனாய்ச் சர்வஜகத்தும் பிரமரூபமேயென்னும் தனது செயல்மாத்திரமன்றி வேறொன்றைக் கற்பித்தறியாத தத்துவஞானத்தினால் இடையூறு ஒன்றுமில்லாமல் இவ்வுடம்போடு இதற்கு விலட்சணமான பிரமத்தை யடைந்து ஞானபூமியின் முடிவில் நிலைபெற்றவ

னாய் நிற்கும் சீவன்முக்தனை பிரமபூதமான நிரதிசயானந்தமடைவான். இன்னும், அடிக்கடி பிரதிபந்த முதிப்பதால் மனமானது சலித்துத் தானேறிய யோகத்தினின்றும் இறங்கிவிடாமல், இந்த யோகத்தை எப்பொழுதும் தலைமையாக அனுஷ்டித்து நிற்பவன் எப்பொழுதும் அழியாத பிரமானந்தத்தை இன்பமாக அனுபவிப்பான்; அதுநிற்க, ஒன்றுந் தவிராமற்சர்வபூதங்களையும் ஆன்மாவினிடத்திருப்பனவாகப் பார்ப்பான்; அந்தச் சர்வபூதங்களினுள்ளே எங்கும் நீங்காமல் தான் நிற்கின்ற தன்மையையும் அபரோட்சமாகப் பார்ப்பான்.

தேவர்களின் சத்துருக்களாகிய அசுரர்களை முன்னே அழித்த அருச்சுனா! இன்னும், எந்த யோகியானவன் என்னைச் சர்வ பூதங்களினிடத்தும், சர்வபூதங்களை என்னிடத்தும் அபேதபாகச் சமுசய விபரீதமின்றிப் பார்ப்பானோ அந்த யோகிபுருஷன், எவ்வகைப்பட்ட வியவகாரங்களைச் செய்யினும், சர்வ பூதங்களினுமுள்ள தற்பதார்த்த ரூபனான நான், துவம்பதார்த்தரூபனான அவனாக வாகின்றேன்; அவ்விஷயத்தில் நீ சிறிதும் சந்தேகங்கொள்ளாதே. இன்னும், துக்கமாவது சுகபாவது எவர்க்கேனும் வந்து பொருந்துமானால், அன்னியர்க்கு வருகின்ற அந்தச் சுகதுக்கங்களைத் தன்னிடத்திற் பொருந்தினாற்போலத் தானும் அனுபவிக்கின்றவன் எவனோ அவனே மேலான யோகியென்று சொல்லப்படுவான். ஒளியும் கூர்மையுந் தங்கிய வேலாயுதத்தைக் கரத்திற்றாங்கிய அருச்சுனா! நீ இதனை மனத்தில் உறுதியாக வைக்கக்கடவாய்,'' என்று கூறினார்.

துளபமாலை பொருந்திப் பிரகாசிக்கின்ற திருமுடியையுடைய ஸ்ரீ கிருஷ்ணபகவான் இவ்வாறுஉபதேசிக்கவே, இவ்வாக்கியங்களைக் கேட்ட அருச்சுனன் சில விஷயங்களைப்பற்றி வினவத்தொடங்கினவனாய் மீண்டும் அவரை நோக்கி, ''வலிமை பொருந்திய புயங்களையுடைய ஸ்ரீ பகவானே! எல்லாவுயிர்களையும் ஒன்றாகப் பார்த்தலே யோகம் என்று நீர் கூறி



னீர்; ஆயினும் இந்த யோகத்திற்கு ஸ்திரமான நிலைமையை என்னிடத்திருப்பதாக நான் கண்டிலேன்; என் மனமானது, சஞ்சல சுபாவ முடையதாய்ச் சரீரேந்திரியங்களைக் கலங்கப் பண்ணுகிறது; அம்மனத்தை ஓர் க்ஷணநேரமாகிலும் ஸ்திரமாக நிறுத்துதல் ஏலாதெனவும், அதனை நிறுத்தத் தொடங்குதல் வாயுவை நிறுத்தத் தொடங்கியதற்குச் சமமாமெனவும் நான் கருதுகின்றேன்,'' என்று கூறினான்.

விஜயன் இவ்வாறு கூறவே ஸ்ரீ கிருஷ்ணபகவான் அவனுக்குச் சமாதானங் கூறத் தொடங்கினவராய் அவனை நோக்கி, ''பார்த்த! ஐந்துவகையான இந்திரியங்களையும் அந்தக்கரணத்தையும் அடக்குதல் அரிதென்பது நிச்சயமானாலும், ஒருவன், தான் கடைத்தேறும்படிச் செய்யும் யோகத்தின் சர்வாப்பியாசங்களினாலும், நல்லவையாகப் பொருந்தாத ஐந்துவகையான இந்திரியங்களால் உண்டாக்கப்படும் கண்ட கேட்ட விஷய சுகங்களனைத்தையும் வேண்டாமல் ஒழிக்கும் வைராக்கியத்தினாலும் கொடிய அந்தக்கரணமானது இந்திரியங்களோடு அடங்கிவிடும். இப்போது சொன்ன அப்பியாச வைராக்கியங்களால் அந்தக்கரணம் அடங்கிவிடும் என்னும் இவ்விஷயத்தில் வேறொரு சந்தேகமில்லையென் றறியக்கடவாய். இந்தக் கிரமத்தின்படி மிருதுவாக பதினான்கு கரணங்களையும் தம்வசமாகச் செய்தவரெவரோ அவர் யோகமுஞ் சித்தியாகப் பெற்றவராவர். அந்தக்கரணத்தை வசம் பண்ணாதார்க்கு யோகம் பெறுவது அரிதாயினும், அதை வசஞ் செய்தோர்க்கு அந்த யோகஞ் சித்தித்தல் எளிதேயாகும்,'' என்று கூறினார்.

ஸ்ரீ கிருஷ்ணபகவான் இவ்வாறு கூறியதைக்கேட்டபின் அருச்சுனன், யோகப்பிரஷ்டனுக் குறும்பயனை யறிய விரும்பினவனாய் அவரை நோக்கி, ''சுவாமி! ஒருவன், சீவிதகால முழுவதும் யோகாப்பியாசத்திற் சிரத்தையோடு கூடிநின்று மரணமாகுஞ் சமயத்தில் ஞானத்தை மறந்து உயிர் நீங்கினால், அப்போது அவன் சென்று நற்கதி சேர்வானோ? துர்க்

கதி யடைவானோ? ஏகவஸ்துவாகிய ஸ்ரீபகவானே! இன்னும் அவன் மேற்கூறிபபடி ஞானசித்தியின்பொருட்டு முயற்சித்ததால் பரலோக சுகசாதனங்களான கர்மோபாசனைகளினின்றும் நீங்கினவனாகிறான்; மரணகாலத்தில் ஞானத்தை மறந்து மூடத்தை யடைதலின் யோகசித்தியையு மடையாதவனாகிறான்; ஆதலின், இப்படி இருவகையிலும்பிரஷ்டனான அவன், வாயுவினால் முன்னை மேகக்கூட்டத்தினின்றும் பிரிக்கப்பட்ட சிறிய மேகமானது அம் மேகக்கூட்டத்தினின்றும் பிரஷ்டமாய்ப் பின்னர் அம் மேகக்கூட்டத்தை யடையாமையின் மழை பெய்யும் யோக்கியமற்றதாய் மத்தியிலே நாசமடைவதுபோல நாசமாய் ஒழிவானோ? இவ்விஷயங்களைப் பற்றி உண்டாகிய மயக்கத்தால் என் மனத்தில் சந்தேகமேற்படுகின்றது. இந்தச் சமுசயத்தை நீக்கத்தக்க சமர்த்தர் தேவரீரன்றி வேறொருவருமிலர்; ஆதலால், யான் கடைத்தேறும்படி இச்சமுசயத்தை நீக்கி இதற்குத்தக்க உத்தரத்தை உரைத்தருள்வீராக," என்று கேட்க, யோகத்தின் உண்மையை அறிந்த சர்வக்ஞராகிய ஸ்ரீ பகவான் இச் சந்தேகத்தைநீக்கத்தொடங்கினவராய் அருச்சுனனை நோக்கி, "விஜயா! நீ சந்தேகித்து வினவிய வினாக்களுக்கு விடை கூறுகின்றேன் கேள்: சம்சாரத்திற்குக் காரணங்களான வினைகளை யடையாத அறிவினையுடைய யோகப்பிரஷ்டர்கள் யோகசித்தியின் பொருட்டு இடையில் பரலோகசாதனங்களான கர்மங்களை விட்டிருப்பினும் சத்தியமான பிரமத்தை யடைதற்குக் காரணங்களான சிரவணாதிகளைக்கொண்டு சதா பெரும்பயனான பிரமவிசாரத்தி லிருப்பவராதலின், இகலோகத்தில் துர்க்கீர்த்தியை யடைதலாகிய விநாசத்தையும், பரலோகத்தில் நரகத்தை யடைதலாகிய விநாசத்தையும் பொருந்தமாட்டார்கள்; இதனை நீ செம்மையாகத் தெளியக்கடவாய்; இன்னும் கூறுகிறேன் கேள்: எந்தப் புருஷனுடைய மனமானது பிரமவிசாரணையில் ஒரு க்ஷணநேரமாயினும் அழுந்தியிருக்குமோ அந்தப் புருஷன் எல்லாப் புண்ணியதீர்த்தங்களிலும் ஸ்நானஞ் செய்தவனாவான்; அவனே எல்லாப் பூமிகளையும்



தானஞ்செய்தவனுமாவான்; அவனே ஆயிரம் எக்ஞஞ் செய்தவனாவான்; அவனே பிரமாதி தேவர்களைப் பூஜித்தவனாவான்; அவனுடைய பிதிர்க்கள் சம்சாரத்தினின்றும் நீங்கப்பட்டவராவர்; இன்னும் அவன், மூன்று லோகங்களிலும் பூஜிக்கத்தக்கவனுமாவன்.

அருச்சுனா! இன்னும் நீ, 'சுபகாரியஞ் செய்யும் யோகப்பிரஷ்டன் இரண்டு லோகங்களிலும் நாசமடையானாயின் வேறே என்ன பயனை யடைவான்?' என்று வினவக்கூடும். அவ்வினாவிற்கும் விடை கூறுகின்றேன் கேள்: தான் ஆரம்பித்த யோகமானது நிறைவேறாமல் மத்தியிலே மரணமானவன், உபாசனையோடு கூட அசுவமேத முதலிய அநேக கர்மங்களைச் செய்து புண்ணியவான்களால் அடையப்படும் சோகமில்லாத பிரமலோகத்தை யடைந்து, அங்கே துன்பந் தொடராமல் போகங்களை யனுபவித்துப் பிரமாவின் ஆயுள் பரிமாண வருஷபரியந்தம் வாசஞ்செய்து, அதன்பிறகு செல்வம், குணம், சுத்தம் ஆகியவைகளாற் சிறந்த அரசர்களின் திருக்குலத்திலாவது, தர்மத்தைத் தரப்பட்ட பிரமவித்தையுடைய தரித்திரராகிய பிராமணரின் குலத்திலாவது பிறந்து, அதில் அடையத்தக்கனவாகிய எல்லாவற்றையு மடைந்து, பின்னரும் முன் கழிந்த ஜனனங்களில் அனுஷ்டித்து மரணகாலத்தில் மறந்த யோகத்தை வருத்தமில்லாமல் அடைவான். பார்த்த! நான் இவ்வாறு கூறியதைக் கேட்டதனால், 'பிரமஞானிகளாயுள்ள பிராமணகுலத்தில் ஜனிக்கும் புருஷனுக்கு, மத்தியில் மறைப்புக்குக் காரணங்களான போகங்களின்மையால் பூர்வபழக்கத்தினால் மீண்டும் சர்வகர்மங்களின் சன்னியாச பூர்வகமாகச் சிரவணாதி ஞானசாதனம் பொருந்துதல் கூடும்; ஸ்ரீமான்களும், இராஜாக்களுமாகிய சக்கரவர்த்திகளுடைய குலத்திலுதித்த யோகப் பிரஷ்டனுக்குப் போகவாசனைகளின் பிரபலத்தன்மை பொருந்தியிருப்பதனாலும், பிரமாதங்களுக்குக் காரணங்களாகிய பொருள் முதலியவை கிடைத்திருப்பதனாலும், தான் க்ஷத்திரிய ராஜவாயிருப்ப

தால் சர்வ கர்மங்களின் சன்னியாசத்தில் யோக்கிய மில்லா திருப்பதனுலும் பூர்வமிருந்த ஞானப் பழக்கத்தின் பிரகாச மும், ஞானசாதனங்களின் இலாபமும் எவ்வாறுண்டாகும்?' என்று நீ இன்னும் சந்தேகங்கொண்டு வினவுதல் கூடும். இதற்கும் தக்க விடை கூறுகின்றேன் கேட்பாயாக: ஒருவன் உபகரணங்களைக்கொண்டு பழகுங் குணமில்லாதவனுயினும் பிரமான்ம ஐக்கியமாகிய தெளிவானது உளதாமென்று குரு வினுலும் சாஸ்திரத்தாலும் அறிந்து அப்பியாசித்த பழைய யோகாப்பியாசமானது, முன் பழகிய பழக்கத்தையுடைய அந்த யோகப்பிரஷ்டனை விலகுதலில்லாமல் இந்த ஜனனத் தில் அவன் தொடங்குமுன்னரே, உறங்கி விழித்தவனை விஷ யங்கள் இழுத்துக்கொள்வதுபோலத் தானே இழுக்கத் தொடங்கும்.

இனி, மீண்டும் யோகங்களைச் செய்வேனென்று கரு தும் யோகப்பிரஷ்டன் அடையும் பயனைக் கூறுகின்றேன் கேள்: போகவாசனைகளைப் பார்க்கினும் பிரபலமான சாமர்த் தியமுடைய அந்த யோகங்களைச் செய்வேன் என்று நினைக் கும் யோகப்பிரஷ்டனும் சுருதிநெறிக்கு வேறுபடாமல் அநேக கர்மங்களைச் செய்து வேள்வி முடித்தவனுவான்; கர் மங்களின்பொருட்டு அடையப்படும் கதிக்கு மேலான கதி யையு மடைந்தவனுவான். இன்னும் விஷயங்களில் நீண்டு செல்லும் மனமானது நிலையாக நிற்கப்பெருதவனுனுலும், அஃது ஓடுகின்ற வழிகளில் ஓடாமல் அதனை அடக்கி முந் தின ஜன்மத்திற் செய்த பிரயத்தனத்தைக் காட்டினும் அதி கப் பிரயத்தனஞ் செய்யும் யோகியானவன், சிரவணுதிகளைச் செய்யும் அநேக ஜனனங்களைக் கடந்து அவற்றி லேற்பட்ட ஞானப் பழக்கத்தின் வலிமையாலும், அவற்றின் புண்ணிய கர்மங்களின் மகிமையாலும் அடைந்த முடிவான ஜனனத்தி லேனும் பரமுத்தியை யடைவான்.

இனி வேறு சில வார்த்தைகளையுங் கூறுவேன் கேட்பா யாக: எல்லாத் தவங்களையும் செய்து அவற்றின் வழியில்



நின்றவனைக்காட்டினும், எல்லாச் சாஸ்திரங்களையும் கற் றுணர்ந்த பரோட்சஞானியைக்காட்டினும், அனுபவியாமல் நீங்காத யாகமுதலிய எல்லாக் கர்மங்களையும் செய்தவனைக் காட்டினும் தத்துவஞானத்தோடுகூடிய ஞானி அதிகமானவ னென்பது எனது அபிப்பிராயம்; ஆதலால், யோகப்பிரஷ்ட னுகிய நீ இப்படிப்பட்ட யோகத்தை அதிகப் பிரயத்தனத் தால் அடையக்கடவாய். இன்னும், புண்ணிய பாவமென்னும் இரண்டுவகைப்பட்ட வினைகளை அறுக்கும் யோகிகளெல்லாரி னும், அந்தக்கரணத்தையும் சிரத்தையையும், பொருந்துதற் கரிய பரமேசுரனை என்னிடத்தில் வைக்கும் ஒரு ஞான யோகிமாத்திரமே என்னுல் விரும்பப்படுகின்றவனுகிருன்; ஆதலால், ஒருவன் யோகத்தை அனுஷ்டித்தாலும் என் னிடம் பக்தியையும் செலுத்துதல் வேண்டும்,'' என்றுரைத் தருளினர்.

ஆறுவது

யோகவத்தியாயம் முற்றுப்பெற்றது.

(இதனோடு கர்மகாண்டம் முடிவுற்றது.)

---

## உபாசனு காண்டம்.

ஏழாவது

## மாயாரூபவத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

''உய்ய வன்பினெடு மென்னை யேயடையு
மியோக மேபயிலும் யோகிதான்
ஐப மின்றியெனை யேய றிந்திடுமெ
தைய நீயுமறி வாயென
வைய முண்டமறை நீர்மை யுண்டிடையர்
மாத ருண்டிட மலர்ந்திடும்
செய்ய தண்பவள வாய்தி றந்துதிரு
மாது கேள்வனிவை செப்புவான்.''

இலக்குமிக்கு நாயகனான ஸ்ரீ பகவான், முன்னே கூறிய விஷயங்களைச் சொல்லி முடித்தபின், பூமியையுண்டு, வேதவாக்கியங்களையு முண்டு, கோபிகாஸ்திரீகள் முத்தமுண்ணும்படி மந்தகாசஞ் செய்கின்ற குளிர்ச்சி பொருந்திய செம்பவளம்போன்ற திருவாயைத் திறந்து, முன் அத்தியாயத்தினீற்றில் 'மனத்தையு மன்பையும் என்னிடத்தே வைக்கும் ஒருவனே என்னால் விரும்பப்படுகிறவன்,' என்று குறிப்பிட்ட பக்தியோகத்தையும், அந்தப் பக்தியோகத்துக்கு விஷயமான தற்பதார்த்தரூபனாகிய பகவானுடைய தன்மையையும் விளக்கமாகக் கூறத்தொடங்கினவராய் அருச்சுனனை நோக்கி, "பார்த்த! இதற்கு முந்திய ஆறுமத்தியாயத்திற் சொல்லியபடி தான் உய்யும்பொருட்டு அன்புடனே பரமேசுரனான என்னையே சரணமாகவடையும் யோகத்தைப் பழகும் யோகியானவன், சிறிதும் சந்தேகமில்லாமல் பலம், சக்தி, ஐசுவரியம் முதலியவை நிறைந்தவனான என்னையே அறிவன்; அவன் எப்பிரகாரமாக என்னை அறிவானோ அப்பிரகாரத்தை நீயும் சாவதானனாய்க் கேட்டுணரக்கடவாய்," என்று பின்னும் கீழ்க்கண்ட இவ்விஷயங்களைக் கூறத் தொடங்கினார்.

அங்ஙனந் தொடங்கியவர் மீண்டும் அவனை நோக்கி, "அருச்சுனா! நன்றாக விசாரித்துப் பார்க்கும்போது இல்லாததாய்விடும் மாயையினால் மறைக்கப்படாத மனத்தின்கண்ணே, மாயாகிருத சதுர்ப்புஜ மூர்த்திக்கு வேறாய் அத்துவிதீயமாய்ப் பரிபூரணமான எனது சொரூபத்தை மெய்ம்மையாகப்பொருந்தும் வழியை மிகுதியாக அறிந்திருப்பவர்கள், இவ்வியவகாரபூமியில் அறியாத பதார்த்தம் யாதொன்றுமில்லை என்னும் இப்படிப்பட்ட பெரும்பேற்றை யளிக்கும் எனது சொரூபஞானமானது எனது அனுக்கிரகத்தா லல்லாமல் ஏற்படுவது மிகவுந் துர்லபமாம். ஆகையால், மின்னைப் போலத் தோன்றி மாய்ந்துபோகும் அநேகமாயிரம் மனிதர்களுக்குள்ளே ஒருவனே என்னை ஆராயும்படியான பிரயத்



தனம் பொருந்திய மனமுள்ளவனாவான்; அப்படி ஆராயும் அநேகமாயிரம் மனிதர்களுக்குள்ளே ஒரு மனிதனே, பரமேசுரனான என்னை வாஸ்தவ சொரூபமாக வறிந்து கிருதார்த்தனாவன்.

கைவிடா வேலையுடைய அருச்சுனா! இனி என்னை இவ்வாறு ஆராய்ந்தறிதற்கேதுவாக ஞானசொரூபமான பிரமத்தினின்றுண்டாகும் ஜடாஜடரூபங்களாகிய சர்வப்பிரபஞ்சத்தினுற்பத்தியைக் கூறுகிறேன் கேட்பாயாக: பிருதிவியும், ஜலமும், எரிகின்ற தேயுவும், வாயுவும், ஆகாசமும், மனமும், புத்தியும், கருதுகின்ற தேகேந்திரியாதி குணங்களில் 'நான்,' என்று அபிமானஞ் செய்யும் அகங்காரமும் ஆகிய இவ்வெட்டும் அபரைப்பிரகிருதியென்று சொல்லப்படும்; ஒன்றை மற்றொன்றானது செய்யாநிற்கும் தன்மையினையுடைய இவ்வெண்வகையான அபரைப்பிரகிருதியினும் விலட்சணமாய் உலகின்கண்ணுள்ள எல்லாவற்றையும் எடுத்துத் தரித்து, தேகத்தினிடத்தும் நிலைத்த சீவரூபமுமாய் நிற்பது தற்பதார்த்தரூபனான எனது மாயைதான். இது பரையென்னும் பிரகிருதியாம். இந்தப் பரையென்னும் பிரகிருதியினாலேயே இத்தேகேந்திரியாதிகளான ஜடஜகத்துக்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இன்னும், மண்ணுலகமுதலியவற்றில் நிற்பன, நடப்பன என்று சொல்லப்பட்ட அசேதனம், சேதனம் என்ற பொருள்கள் முழுவதும் மேற்கூறிய பரை, அபரை யென்னும் இருவகைப் பிரகிருதிகளாலும் வருகின்ற காரியங்களாம். இவ்வுண்மையை நீ நன்றாக உனதறிவினாலாராய்ந்து நிச்சயிப்பாய்; இன்னும், இப்பிரபஞ்சமானது தனக்குக் காரணரூபமாகச் சார்ந்துநிற்பது, ஒன்றற்கொன்று வேறு சுபாவமுடைய இந்த இருவகைப் பிரகிருதிகளையே; ஆதலால், நன்றாக ஆராய்ந்து பார்க்குமிடத்து பிரபஞ்சத்தின் நாசத்திற்கும் உற்பத்திக்கும் முன் சொன்ன பிரகிருதிவாயிலாக நானே காரணமல்லாமல் வேறு காரணம் சிறிதுமில்லை. மாயை முதலிய எவ்வகைப்பட்ட பொருள்க

ளும் மாயைக் கதிஷ்டானரூபனான என்னினும் வேறாயில்லை.
சத்தாய் விளங்காநின்ற காரணரூபனான என்னையன்றி, உல
கில் வியவகார திருஷ்டியினால் என்னினும் அன்னியமென்று
சொல்லும்படி விளங்குகின்ற பூதங்களைத் தாங்குபவர் வே
றொருவருமிலர்; யானே அவைகளிலிருந்து அவற்றைத் தாங்
குகிறேன். நான் இவ்வாறு தாங்குவது எதைப்போலுமெ
னில், சொல்லுகின்ற பெருமைபொருந்திய அநேகம் மணிக
ளுக்கூடே சென்று அவற்றைத் தாங்கிக்கொண்டிருக்கும்
ஒரு கோவை நூலினது தன்மையைப்போலும். இவ்வாறு
ஒன்றற்கொன்று வேறான பதார்த்தங்களிலெல்லாம் நான்
சார்ந்துநின்று அவைகளைத் தரிக்குந்தன்மையை இனி விஸ்
தாரமாகக் கூறுகிறேன் கேட்பாயாக:

ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற சந்திரன் சூரியன் ஆகிய
வர்களிடத்தில் விளங்குகின்ற பிரகாசம் நானாகின்றேன்; அழ
கிய வேதத்தின்கண்ணுள்ள அருமையாகிய பிரணவமும்
நானாகின்றேன்; சர்வபுருஷரிடத்தும் பொருந்தியிருக்கின்ற
புருஷத்வரூபமான பௌருஷமும் நானாகின்றேன்; பரவிய
ஜலத்திற்பொருந்திய சுவையும் நானாகின்றேன்; பிருதிவியிற்
பொருந்திய கந்தமும் நானாகின்றேன்; அக்கினியிற் றோன்று
கின்ற உஷ்ணமும் நானாகின்றேன்; ஆகாயத்தின்கண் எழு
கின்ற சப்தமும் நானாகின்றேன். தத்துவாதத்துவங்களின்
விவேக சாமர்த்தியமாகிய புத்தியையுடைய புருஷரிடத்திற்
பொருந்திய புத்தியெதுவோ அந்தப் புத்தியும் நானாகின்
றேன்; சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மையாகிய உள்தவம்,
சிங்ஙுவை, உபத்தம் முதலிய இந்திரியங்களின் நிக்கிரக
மாகிய வெளித்தவம் ஆகிய இரண்டு தவங்களையும் அனுஷ்
டித் தடங்குவோராகிய வானப்பிரஸ்தர் முதலிய தவத்தின
ரிடத்துள்ள, சீதோஷ்ணம் பசி தாகம் முதலியவற்றைச்
சகிக்கும் சாமர்த்தியரூபமான மேலாகிய தவமும் நானா
கின்றேன்; வளருகின்ற புகழ் பொருந்தினோரிடத்தில் அன்
னியராகிய சத்துருக்களை வெல்லும் சாமர்த்தியத்தா லேற்



படும் மெய்ம்மையான புகழும் நானாகின்றேன்; சமுசாரத்தி
னின்றும் நீங்கிய சாத்துவிக பலமுடையோரிடத்தில்,
கிடையாத விஷயங்களைக் கிடைக்கப்பண்ணுங் காரணமில்லா
திருந்தும், 'இவ்விஷயங்கள் நமக்குக் கிடைக்கவேண்டும்,'
என்னும் சித்தத்தின் விருத்தி விசேஷமாகிய இச்சையை
யும், கிடைத்த விஷயங்களை நாசம் பண்ணும்படியான கார
ணம் நேரிட்டிருந்தும், 'இவ்விஷயம் நாசமடையா திருக்க
வேண்டும்,' என்னும் சித்தத்தின் விருத்தி விசேஷமாகிய
இராகத்தையும் அடையாதிருக்கும்படி ஏற்படும் சாமர்த்திய
ரூபமும் நானாகின்றேன்; நிலையான தாவர ஜங்கமரூபமான
சர்வப்பிராணிகளிடத்தும் நானே ஆயுள்ரூபமான சீவன
மாகியு மிருக்கின்றேன்; அறிவுமிகுந்த அருச்சுனா! இவ்
வாறு அநேக பதார்த்தங்களை யெண்ணிக் குறிப்பிட்டுச்
சொல்வதால் பயனொன்றுமில்லை; முடிவான அபிப்பிராயத்
தைக் கூறுகிறேன் கேள்: தங்கள் தங்கள் கர்மவசத்தால்
ஜனியாநின்ற சமதம முதலிய சாத்துவிகபாவம், சந்தோ
ஷம் கர்வமுதலிய இராஜஸபாவம், சோகம் மோக முதலிய
தாமசபாவம் ஆகியவைகளை யுடையனவாய்த் தோன்றி அழி
கின்ற பிராணிகள் முழுவதும் உண்டாவதும் பரமேசுரனான
என்னிடத்தேயாம்; அவை இருப்பதுவும் என்னைப்பற்றியே
யாம்; இவ்வுண்மைகளை நீ தெரிந்துகொள்ளக்கடவாய்; இன்
னும் அந்தக் கற்பித பதார்த்தங்களில் யான் தோன்றேன்;
அச்சடபதார்த்தங்களுக்கு, பரமேசுரனான நான் சாக்ஷியாக
நிற்பேனல்லாமல் அக்கற்பித பதார்த்தங்களை ஆதாரமாக
வடைந்து ஆதேயரூபமாக யான் சீவியேன்.

ஒளிபொருந்திய வேலையுடைய அருச்சுனா! இனி நீ,
'இப்படிப்பட்ட பரமேசுரரான உம்மை என்ன காரணத்தி
னால் உலகம் அறியவில்லை,' என்று வினவக்கூடும். அதற்குத்
தக்கவிடை கூறுகின்றேன் கேள்: இருள்போல மயக்கத்தக்க
குணங்களென்று யான் முன்னே உனக்கு வகுத்துக்கூறிய
இந்தச் சத்துவாதி குணங்கள் மூன்றினாலும் மயக்கப்பட்டு,

‘இன்னது நித்தியம், இன்னது அநித்தியம்,’ என்றறியும் விவேகத்தை யிழந்து உடல்களில் ஒற்றுமையோடு பொருந்தியிருக்கின்ற இப்பிராணிகள் முழுவதும், மேற்கூறிய முக்குணங்களைக் கடந்தவனாயுள்ள பரமேசுரனான என்னை அறியுமோ? ஒருபோதும் அறியமாட்டா. ஆயினும், என்னை உபாசிப்பவர் மாயையை நிவிர்த்தி செய்வார்; எல்லாவற்றிற்கும் அதிஷ்டானமாகிய என்னைத்தானே எப்பொழுதும் மெய்யன்போடு உபாசிக்கின்ற மனமில்லாவிடில் மேற்கூறிய தன்மைகளையுடையனவாகிய முக்குணங்களின் சுபாவத்தைப் பொருந்தினதும், எவராலுஞ் செய்யுந்தன்மை யல்லாததுமாகிய என் மாயையினால் மயக்கும் மயக்கமொழிந்து இச்சமுசாரத்தினின்றும் நீங்கிப் பிழைக்குந்தன்மையேற்படுவது எவர்க்கு மரிதாம். நான் இவ்வாறு கூறியதனால் நீ, ‘பகவானே! இவ்வாறு பரமேசுரரான உம்மைச் சரணடைந்து உம்முடைய சிந்தனையைச் செய்வதால் இம்மாயை நிவிர்த்தியாகும்பக்ஷத்தில் சர்வானர்த்தங்கட்கும் மூலபூதமாகிய இம்மாயையை நாசஞ்செய்யும்பொருட்டுச் சகலரும் உம்மை ஏன் சரணடையவில்லை?’ என்று வினவக்கூடும்; இவ்வினாவுக்குந் தகுந்த உத்தரங் கூறுவேன் கேள்: நீ அபிப்பிராயப்படுகிறபடி எல்லோருமே என்னைச் சரணடையாதிருக்கமாட்டார்கள்; ஊழின் வலிமையினால் வருகின்ற சரீரேந்திரியாதி கூட்டங்களின் சம்பந்தப் பிராந்திரூபமாக விருத்தியடையும் மாயையினாலே அந்தக்கரணமானது சூனியமாகும்படி, ‘இன்ன காரியம் நமக்கர்த்தத்தைத் தரத்தக்கது, இன்னகாரியம் நமக்கனர்த்தத்தைத் தரத்தக்கது,’ என்றாராயும் விவேகசாமர்த்தியரூப ஞானமானது இவ்வுலகில் தடைசெய்யப்பட்டு அந்த மாயையின் வழியிலே நிற்பவரும், அனுபவியாமற் கெடாததாகிய பாவத்தையே தமக்குரிய தொழிலாகக் கொண்டு செய்பவரும், அதனால் தாழ்மை யடைந்தவருமாகிய இவர்கள் பரமேசுரனான என்னைச் சரணடையமாட்டார்கள்; என்னைச் சரணடைபவரும் சில பேருண்டு; இனி அவரைக் கூறுவேன் கேட்பாயாக:



இகலோக பரலோக ஐசுவரியங்களை விரும்பி என்னைத் துதிக்கும் அர்த்தார்த்திகளும், ஆபத்தடைந்த காலத்தில் அதனை நீக்கிக்கொள்ளும்பொருட்டு என்னைத் துதிக்கும் ஆர்த்தரும், ஜனன துன்பத்தைக் கெடுத்தற்பொருட்டு ஆன்மஞானத்தை யடையவேண்டி என் விஷயமான ஆராதனஞ் செய்யும் சிஞ்ஞாசுக்களும், பரிபூரணமாய் அத்துவிதீயமான எனது வாஸ்தவ சொரூபத்தை சாட்சாத்கரித்த தத்துவ ஞானியும் ஆகிய இந்நான்குவிதமானவர்களும் தங்கள் தங்கள் சக்திக்குத்தக்க அளவுப்படி பரமேசுரனான என்னை ஆராதிக்கும் தவத்தினராவர். ஆயினும் நல்ல தன்மைபொருந்திய அருச்சுனா! இங்கு நான் கூறிய இத்தன்மைகளையுடைய நால்வருள்ளே, ஞானியானவன், பரமான்மாவாகிய என்னோடு பிரத்தியகான்மாவாகிய தன்னை அன்னியமாக நினைத்தல் பொருந்தாதவனாதலால் அந்த ஞானியே சிரேஷ்டனும்; அந்த ஞானியானவன் எனது ஆன்மரூபமாவதால் எனக்கு மிகவும் பிரியனாவன்; அந்த ஞானிக்கு ஆன்பரூபமாவதால் நானும் மிகவும் பிரியனாவேன்.

அருச்சுனா! நான் இவ்வாறு கூறியதனால், ஞானியொருவனே எனக்குப் பிரியனென்றும், மற்றைய மூன்று பக்தர்களும் பிரியரல்லரென்றும் நீ கருதக்கூடும்; அங்ஙனங் கருதுதல் தகாது; அவர்களும் எனக்குப் பிரியரே; எனது பக்தியில்லாத பிராணிகளைப் பார்க்கினும் ஆர்த்தன், சிஞ்ஞாசு, அர்த்தார்த்தி என்னும் அந்த மூவரும் சிரேஷ்டரே; ஆனாலும், ஒருவராலும் வருணித்தற்கரிய ஞானியாகிய பக்தன் என்னையே எல்லாவற்றினுஞ் சிறந்த பலரூபமாக எண்ணி வாசுதேவனான எனது வாஸ்தவ சொரூபத்தின்கண்ணே சமாகித சித்தனாய்ப் பொருந்துதலினாலே அவன் எனது ஆன்மாவென்றே எனக்கு நிச்சயமாம். இப்படிப்பட்ட ஞானியாதலும், அநேகமென்று சொல்லப்படும் கர்மபலங்களில் ஆசை யொழிந்த ஜனனங்களின் முடிவிலுண்டாம். கூர்மை பொருந்திய வேலாயுதத்தைக் கையிற்றாங்கிய பார்த்

தனே! இன்னும், சாஸ்திரங்களாலும் இந்திரியங்களாலும் விசாலமாக அறிந்த மேன்மையான பொருள்கள் முழுவதும், அதிஷ்டானமென்று சொல்லுதற்குரிய வாசுதேவனான என்னையன்றி யில்லாததாகிய மரியாதையை, விளங்கும்படி அறிந்து வாசுதேவனாகிய என்னையே அபேதமாகப் பொருந்துகின்றவனெவனோ அந்த மகானே அநேகமாயிரம் மனிதர்களுக்குள்ளே அடைதற்கு மிகவுந் துர்லபனாவன்.

அருச்சுனா! இனிப் பரமபுருஷார்த்தரூபமான எனது ஆராதனத்தை யுபேட்சித்துச் க்ஷுத்திரப்பயனை யடைவிக்கும் க்ஷுத்திர தேவதைகளின் ஆராதனத்தைச் செய்யும் அன்னிய பக்தரின் தன்மையைக் கூறுகிறேன் கேட்பாயாக: அன்னியமான க்ஷுத்திர தேவதைகளின் பக்தர்களும் தம்முடைய அந்தக்கரணங்களில், மாரணம், மோகனம், உச்சாடனம், ஸ்தம்பனம், ஆகர்ஷணம், வசீகரணம் முதலியவற்றை விரும்பி வைத்த ஆசைரூபமான காமத்தினாலே தம்முடைய அந்தக்கரணங்கள் முழுவதும் பறியுண்டு, தமக்கு வேண்டுவனவற்றைத் தருகின்ற க்ஷுத்திர தெய்வவழிபாடான ஜபம், உபவாசம், பிரதக்ஷிணம், நமஸ்காரம் முதலிய நல்ல நியமங்களினின்று அந்த க்ஷுத்திர தேவதைகளை உபாசிப்பார்கள். இவ்வாறு இவர்கள் கீழான பலன்களை விரும்பி அக்ஷுத்திர தேவதைகளை உபாசித்தற்குக் காரணம் பூர்வ ஜன்மவாசனையேயாம். இவர்கள் இவ்வாறு தாங்கள் வேண்டுவனவாகிய கீழான பலன்களைத் தரும் க்ஷுத்திர தேவதைகளை உபாசிப்பார்களென்று நான் சொன்னதைக்கொண்டு நீ, 'அன்னியமாகிய க்ஷுத்திர தேவதைகளை உபாசிப்பவர்க்கும் அவ்வத் தேவதைகளின் பிரசாதத்தால் ஈசுரரூபனான பகவான் வாசுதேவனிடத்தில் அவசியமாகப் பக்தியுண்டாகும்,' என்று கருதக்கூடும்; அது சரியன்று; அவர்களுக்கு அவ்வாறு என்னிடத்திற் பக்தி யுண்டாகமாட்டாது; எந்தச் * சகாமபுருஷன் சிரத்தையினால் யாதேனு மொருதெய்வத்தைப் பூர்வ

* சகாமபுருஷன் - காமியகர்மத்தை விரும்பியவன்.



ஜனனங்களின் வாசனாவசத்தால் பொருந்துமாறு அருச்சனை செய்யப் பிரவிர்த்திப்பானோ அச் சகாமபுருஷனுக்கு வேண்டுவதான நிச்சலமாகிய சிரத்தையை அத்தெய்வத்தினிடத்து மேன்மேலும் உண்டாவதாகச் சர்வாந்தரியாமியாகிய நானே முழுதுங் கொடுப்பேன். அன்னிய தெய்வத்தினின்றும் அவனது சிரத்தையை மாற்றி என்னிடத்தே அஃதுண்டாகும்படிச் செய்துகொள்ளேன்; ஒருவரால் பிடித்து ஒளித்தற்கரிய இடியும் அஞ்சும்படிக்குப் போர் செய்த அருச்சுனா! மேற்கூறியபடி என்னாற் கொடுக்கப்பட்ட அந்தச் சிரத்தையோடும் அவ்வன்னிய தெய்வங்களை, 'இவைகளே மெய்த் தெய்வங்கள்,' என்று நாடோறும் செருக்கடைந்து ஆராதித்தவர் முன்னர் விரும்பிய மாரணம், மோகனம் முதலிய காமிய பதார்த்தங்களையெல்லாம் பிரசித்தமாக அந்தரியாமியாகிய யானே அவர்களுக்களிப்பேன்; பரமேசுரனான என்னையன்றி எதையும் உண்டுபண்ணுவதற்கு அன்னிய தெய்வங்களிடத்திற் சாமர்த்தியமில்லை; அவைகள் என்னாலேயே அந்தச் சாமர்த்தியத்தை யடைகின்றன; என்னாலேயே உண்டுபண்ணப்பட்ட மாரணம் மோகனாதிகளையே அந்தச் சகாமபுருஷர் அவ்வத் தேவதைகளாலடைகின்றனர். ஆதலால், அந்தரியாமியாகிய நானே நேரில் அல்லது யாதாயினு மொரு அன்னியவாயிலாகச் சர்வகர்மங்களின்பலன்களை அவர்களுக்குக் கொடுப்பவனாகின்றேன்; எப்படியானாலும், அந்தச் சர்வதேவதைகளும் சர்வாத்மனான எனது மூர்த்தியே; அத்தேவதைகளின் ஆராதனமும் வாஸ்தவமாக எனது ஆராதனமே; எல்லாப் பலன்களையும் கொடுப்பவனும் நானே; அப்படியானாலும் என்னுடைய பக்தருக்கும் அன்னிய தேவதைகளின் பக்தருக்கும் ஒன்றற்கொன்று விஷயமாக உண்டாகும் பலன்கள் முறையே வஸ்துவின் விவேகத்தினாலும் வஸ்துவின் அவிவேகத்தினாலுமே உண்டாகின்றன; அருச்சுனா! தமது சித்தத்தின்கண்ணே மாரணம், மோகனம் முதலிய பயன்களைத் தரத்தக்க இத்தெய்வங்கள் மெய்யான தெய்வங்களென்றே கருதி முன்னே ஆராதனஞ் செய்து நிறைவேற்றும் அற்பமனமுடைய அன்

னியதேவதைகளின் பக்தர்கள் அடைகின்ற மாரணம், மோக னம் முதலிய ரூபமான பயனனது வினாக நாசமுடைய தாகும்; அவர்களால் ஆராதிக்கப்பட்ட அத்தெய்வங்களும் நாசமுடையனவாம்.

அருச்சுன! இனி, நீ, 'பகவானே! உம்முடைய ஆரா தனை ஒருபோதும் நாசமற்ற உத்தமமான பயனை யடைவிக்கு மானல், இவ்வுலகினில் விசேஷமாக இம்மனிதர் என்ன கார ணத்தால் உம்மிடத்துப் பாராமுகமா யிருக்கின்றனர்?' என்று என்னிடம் வினவக்கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன் கேட்பாயாக: விவேகசூனியரான புருஷர்கள், 'பகவான் நாச மில்லாத நித்தியரூபன்; ஒன்றோ டொப்பிடக்கூடாதவன்; ஒருவரால் பற்றுதற்கரிய அத்துவைதானந்த சொரூபன்,' என்று பரமேசுரனை என்னைச் சிறிதும் அறிந்திலர்; பின்னை அவர் எவ்வாறு என்னை அறிகின்றனரெனில், 'இந்தக் கிருஷ் ணன் நந்தகோபன் மகன்; இராஜகுலத்திற் பிறந்த வசு தேவனுடைய புத்திரன்; இந்தக் கிருஷ்ணனும் நம்மைப் போல பல வியவகாரங்களோடு கூடியிருத்தலின் சிறந்த ஆனந்தமில்லாதவன்; சீவர்களுக்குள்ளே ஒரு விசேஷ சீவன்,' என்று கருதுவார்கள்; இக்காரணத்தாலேயே அந்த அவிவேகிகளான புருஷர்கள் பரமேசுரனை என்னை நீக்கிப் பிரசித்தமான இந்திராதிதேவதைகளையே ஆராதித்து அவ் வாராதனத்தால் அநித்தியப்பயனையே அடைகின்றனர். இன் னும், 'யாவரிடத்தும் சம்பவியாத அநேக பிரகாரமான திவ் விய குணங்களோடு கூடிய ஈசுரனாகிய உம்மை அவிவேகி கள், மனிதர் வகுப்பைச் சார்ந்தவரென்றும், ஒரு விசேஷ சீவனென்றும் எதனால் கருதுகின்றனர்?' என்று நீ வினவக் கூடும்; அதற்கும் சமாதானங் கூறுகின்றேன் கேள்: எனது பக்தியில்லாத பிராணிகள் பரமேசுரனை என்னை வாஸ்தவ சொரூபமாக அறியாதிருக்கும்படி பொருந்திய மாயையில் நான் நன்றாகப் பொருந்தி மறைந்தவனாகின்றேன்; இக்கார ணத்தால் அந்தமற்றவனெனவும், ஆனந்தசொரூபனென



வும் கூறப்படும் என்னுடைய அழகிய சொரூபமானது எவ ருக்கும் பிரகாசமாவதில்லை. அன்றியும், உலகின்கண் அஞ்சத் தக்கதான ஜனனமரணரூபமாகிய பெரிய சம்சார பிராந்தி யில் மனமானது பொருந்தி ஞானக்கண் மறைந்தமையினு லே ஜனனமரண ரகிதனுயுள்ள என்னை உலகத்தவரெல்லோ ரும் அறிவதுமில்லை. இன்னும், முன்சென்றவைகளும், இனி மேலுண்டாமவைகளும், இப்போது போகின்றவைகளு மாகிய ஸ்தாவர ஜங்கமரூபமான சர்வபிராணிகளையும் யான் அறிவேன்; எல்லாமாகிய என்னை உலகத்தில், என்னிடத் தன்பில்லாத யாவரும் அறியார்கள்; மாட்சிமை பொருந்திய கொடிய வில்லைத் தாங்கிய அருச்சுன! இன்னும் சர்வபிராணி களும் எதனால் என்னை யறியமாட்டார்களெனில், தூலசரீர மாகப் பொருந்தி ஜனனமாகும்போது, 'இவ்வநுகூல வஸ்து நமக்குக் கிடைக்கவேண்டும்,' என்னும் இச்சை, 'இப்பிரதி கூல வஸ்து நமக்கு வேண்டாம்,' என்னும் துவேஷம் ஆகிய இரண்டிற்கும் பொருத்தமாக வருகின்ற சீதோஷ்ணம் சுக துக்கம் பசிதாகம் முதலியவற்றினிமித்தமாக, 'நான் சுகி, துக்கி,' என்பன முதலாகிய நாசரூபமான மயக்கத்தால் தம் தம் தேகபாவனையைப் பொருந்துவதனாலும் அந்தரான்மாவா கிய என்னை அறியார்கள்.

விஜய! இனி நீ என்னிடம், 'சுவாமி! முன்னே உம் மை ஆராதிக்கும் பக்தர் நால்வரை விளக்கிக்காட்டி (இந்நால் வரும் வல்லதிலென்னை வணங்குதவத்தோர்) என்று கூறிப் பின்னர் (என் எழிலொருவர்க்கு மறியும் வகை வெளிநிற்ப தில்லை) என்றும், (துவந்துவ மோகத்தால் மயக்கத்தை யடைதலின் யாவருமென்னை யறியார்) என்றும் கூறியதால் முன்னுக்குப் பின் விரோதந் தோன்றுகின்றதே,' என்று வினவக்கூடும். அவ்வினவுக்கும் உத்தரம் கூறுகின்றேன் கேட்பாயாக: 'இந்நால்வரும் வல்லதிலென்னை வணங்குதவத் தோர்,' என்று நான் கூறியது புண்ணிய கர்மங்களின் அதி சயத்தால் சர்வ பாவகர்மங்களும் நாசமாய் என்னை ஆராதிப்

பவரைப்பற்றியேயாம்; 'என் எழிலொருவர்க்கு மறியும் வகை வெளிநிற்பதில்லை,' என்றும், 'துவந்துவமோகத்தால் மயக்கத்தை யடைதலின் யாவருமென்னை யறியார்,' என்றும் கூறியது புண்ணியவான்களான பக்தஜனங்களை யன்றி அன்னியப்பிராணிகளைப்பற்றியேயாம். ஆதலின் முன்னுக்குப் பின் விரோதமாகாது. யாவருந் துதிக்கும்படி யாதொரு பயனையும் விரும்பாதவர்களாய், முன்னே அநேக ஜனனங்களில் முயன்று சம்பாதித்த புண்ணிய கர்மங்களையுடைய அதிகாரிகளாகிய புருஷர், தம்முடைய புண்ணிய கர்மங்களாலே, முன் ஜனனங்களிற் செய்தவைகளும், துன்பங்களைத் தரக்கூடியவைகளும், ஞானத்திற்குத் தடையானவைகளுமாகிய பாவகர்மங்கள் முழுவதையும் பற்றற நீக்கி, அவை அவ்வாறு நீங்கவே, சோர்வைச் செய்கின்ற துன்பமுதலிய துவந்துவகுணங்களினாற் பொருந்திய, 'நான் சுகி, 'நான் துக்கி,' என்னும் மயக்கத்தைப் பொருந்தாதவர்களாய் என்னை ஆராதிக்கும் வழியிலே, 'எல்லாவிதத்தாலும் ஆராதித்தற்குரியவர் பரமேசுரனே,' என்னும் திடசித்தமுடையவராய் நின்று, பரமேசுரனாகிய என்னையே மனத்தினிடமாக வைத்துத் தியானிப்பர். ஆதலால், என்னை யறிதல் அவர்களுக்கரிதன்று.

அருச்சுனா! இன்னமுங் கேள்; ஞானத்தாலல்லாமல் வேறு எதனாலும் சேதித்து நீக்குதற்கரிய பிணி, மூப்பு, சாக்காடு, பிறப்பு என்னும் இந்தத் துக்கங்களைச் சேதித்துக் கெடுத்தற்பொருட்டு ஞானமுண்டாகும்படி கருதிச் சர்வதுக்கங்களையும் நிவிர்த்திக்கத்தக்க சகுண பரமேசுரனான என்னையே ஆராதித்துச் சாஸ்திர விகிதமான சுபகர்மங்களைப் பலனில் இச்சையில்லாமல் ஈசுரார்ப்பணமாகச் செய்துநிற்கும் அதிகாரிபுருஷர், கிரமமாகச் சுத்தமான அந்தக்கரணமுடையராய் அறிதற்கரிய தற்பதத்தின் லட்சியார்த்தரூபமான நிர்க்குணப் பிரமத்தையும், அந்த நிர்க்குணப் பிரமத்தை, 'இதுவே,' என அறியும் துவம்பத லட்சியார்த்த ரூப



மான ஆன்மாவையும், புத்தியின் வழியே அதிகாரிகளால் அனுஷ்டிக்கப்பட்டு வரும் கர்மங்களெல்லாவற்றையும் அறிவர்; இவ்வாறு இவைகளை அவர்கள் அறிந்த பின்னர் அவர்களால் அடையப்படும் பயனையுங் கூறுகிறேன் கேட்பாயாக: அதிகாரிகள், அறிவதற்காக விசாரிக்கும் பழைமையான * அதிபூத சகிதனாயும், அதிதெய்வ சகிதனாயும், அதியக்ஞ சகிதனாயும் நின்ற பரமேசுரனான என்னைச் சதாகாலமும் சிந்திக்கும் அன்புள்ள புருஷர், சமாகித சித்தராய், கிருமிகள் பொருந்திய இத்தேகம்அழியும்பொழுதும் சர்வான்மாவாகிய என்னை உள்ளபடியே அறிவார்கள்," என்றுரைத்தருளினார்.

எழாவது
மாயாரூபவத்தியாயம் முற்றுப்பெற்றது.

---

எட்டாவது

## எழுவகை வினாவுரைத்த வத்தியாயம்.

கலிவிருத்தம்.

"அடைய ஞாலத்தை யார்த்ததி லார்ப்புணு
திடையர் தாம்பிடை யார்ப்ப விருப்பவ
னுடைய னாகமுன் போதின வேகொடவ்
விடைய னானவன் மீள வியம்புவான்."

உலக முழுவதையும் தேகாபிமான ரூபக்கயிற்றினால் பிணித்து, அவ்வுலகில் ஒன்றினாலும் தாம் பந்தப்படாமல், முல்லைநிலமாக்களாகிய இடையரின் தாமணிக்கயிற்றால், தம் தாயாகிய யசோதை பிணிக்க அக்கட்டிலகப்பட்டிருந்து பாலலீலை செய்தருளிய ஸ்ரீ கிருஷ்ணபகவான், ஆசிரியத்தன்மையுடையவராயிருந்து மேற்கூறிய விஷயங்களைச் சொல்லிமுடித்த பின்பு, போரில் இடபத்தை நிகர்த்தவனான அவ்வருச்சுனன், அந்தப்பகவான்முன் அத்தியாயத்தினீற்றில் சூத்திரரூப வசனங்களால் உரைத்தருளிய பிரமமுதலிய எழுபதார்த்

* அதிபூதம் - பிரகிருதிமாயை.

தங்களில் சந்தேகங்கொண்டு, மீண்டும் அவற்றை வினவத் தொடங்கினவனாய், அவரை நோக்கி, "ஸ்ரீ பகவானே! (க) தேவரீர் முன்னே ஞேயரூபமாக உரைத்தருளிய அந்தப் பிரமமானது சோபாதிகமோ? அல்லது நிருபாதிகமோ? (உ) ஆன்மாவோடு சம்பந்தமுடைமையின் ஆன்ம சப்தமாகப் பிரதிபாதிக்கப்பட்ட அத்தேகரூபமான ஆன்மாவை ஆசிரயித்துள்ள அத்தியாத்மம், சுரோத்திரம் முதலிய கரணங்களின் சமுகமோ? அல்லது பிரத்தியக் சைதந்நியமோ? (ங) தேவரீர் விதியாநின்ற கருமமானது எக்ஞரூபமோ? அல்லது, அவ்வெக்ஞத்தைப்பார்க்கிலும் ஏதேனுமொரு அன்னிய வஸ்துவோ? (ச) உமது மனத்திற் கிசைந்த அதிபூதமென்பது பிருதிவி முதலிய பூதங்களை ஆசிரயித்துள்ள அற்பகாரியமோ? அல்லது சம்பூர்ண காரியமோ? (ரு) தெய்வத்தை ஆசிரயித்துள்ள அதிதெய்வமென்பது தேவதா விஷயமான தியானமோ? அல்லது தேவதைகளின் ஆதித்தியமண்டல முதலியவற்றில் அநுசூதமான சைதந்நியமோ? (சு) எக்ஞத்தை ஆசிரயித்துள்ள அதியெக்ஞம் யாதாயினுமொரு தேவதா விசேஷமோ? அல்லது பரப்பிரமமோ? அவ்வதியெக்ஞம் அதிகாரியினால் * தாதான்மியரூபமாகச் சிந்தனஞ் செய்தற்குரியதா? அத்தியந்த மபேதரூபமாகச் சிந்தனஞ் செய்தற் குரியதா? அவ்வதியெக்ஞம் எல்லாவிதத்தாலும் தேகத்தினிடமுள்ளதா? அல்லது தேகத்திற்குப் புறம்பேயுள்ளதா? அவ்வாறு தேகத்தின்கண்ணுள்ளதெனின், இத்தேகத்தின்கண் அவ்வதியெக்ஞம் புத்திபாதி ரூபமோ? அந்தப்புத்தியாதிகளுக்குப் பின்னமோ? (எ) பொருந்துகின்ற தேகமானது மரணமாகுஞ் சமயத்தில் பரமேசுரராகிய உம்மை உள்ளபடி அறியும் வழி எவ்வாறு? நீர் சர்வக்ஞரும், கிருபை பொருந்தியவருமாதலால், உம்மைச் சரணமாகவடைந்த எனக்கு மேற்கூறிய வினாக்களுக்குத் தக்க விடைகூறி அவற்றின் பொருள்களை விரிவாக விளக்கிக்காட்டியருளவேண்டும்," என்றுரைத்தான்.

* தாதான்மியம் - ஒருமைப்பட்டிருக்கை.



இவ்வாறு அருச்சுனன் கூறவே ஆதிசேஷன்மீது அறிதுயிலமராநிற்கும் ஸ்ரீகிருஷ்ணபகவான் அந்த எழுவகை வினாக்களுக்கும் விடைகூறத் தொடங்கி மீண்டும் அருச்சுனனை நோக்கி, "பார்த்த! நாம்கூறிய பிரமமானது ஒருவரால் அறிதற்கெளிதன்று; இன்னும் இதன் அரியதன்மையை உரைக்கப்புகுமிடத்து இது அழியாவியல்பையுடைய அக்ஷரமென்னும் *நிருபாதிக சைதந்நியமாம். ஞானத்தினாலாவது, அஞ்ஞானத்தினாலாவது, தேசகாலங்களினாலாவது, மற்றேதேனும் அன்னியங்களினாலாவது நாசமடையாதது எதுவோ அதுவே நிருபாதிக சைதந்நியமாகிய அக்ஷரமென்று சொல்லப்படும்; சைதந்நியமாகிய இவ்வக்ஷரமானது தூலமன்று, அணுவன்று, குறிலன்று, நெடிலன்று; சூரிய சந்திரர்கள் இவ்வக்ஷரத்தினாணையி லடங்கியிருக்கின்றனர்; இதினும் அன்னியமாக அறியத்தக்க பொருள் வேறொன்றுமில்லை; சர்வவுபாதிகளில்லாததும், சூரியசந்திரர் முதலிய சர்வ ஜகத்தையும் தனதாணையில் நிறுத்துவதும், † அவ்வியாகிருதரூபவாகாசபரியந்தமான சர்வப்பிரபஞ்சத்தையும் நினைத்தமைப்பதும், இச்சரீரேந்திரியாதி ரூபகூட்டங்களில் சாட்சியாயிருப்பதுமாகிய இந்த அக்ஷரமென்னும் நிருபாதிக சைதந்நியமானது இங்குள்ள தூலம், அணு, குறில், நெடில், சிறிது, பெரிது என்று சொல்லப்பட்ட எல்லாவற்றினும் பெரிதாகிய பரமானந்த சொரூபமா யுள்ளது.

இனி, 'அத்தியாத்மம் எது?' என்ற இரண்டாம் வினாவிற்கு உத்தரங்கூறுகிறேன் கேட்பாயாக: அந்தக்கரணங்களினிற்கின்ற முற்கூறிய அக்ஷரமாகிய பிரமத்தின் சொரூபபூதமான பிரத்தியக்சைதந்நியமானது, இத்தேகரூபமான மித்தியான்மாவை ஆசிரயித்திருப்பதுகொண்டு அத்தியாத்மம்என்று சொல்லப்படும்; பிரத்தியக்சைதந்நியத்தின் வேறான சுரோத்திர முதலிய கரணங்களின் கூட்டம் அத்யாத்மமாகாது.

* நிருபாதிகம் - தடையற்றது.

† அவ்வியாகிருதம் - பிரமத்தோடு பிரிவற்றது; மாயை.

இனி, 'கருமம் எது?' என்னும் மூன்றாம் வினவிற்கு விடை கூறுகின்றேன் கேள்: இத்தாவர ஜங்கமரூபமாகிய பூதங்களின் உற்பத்தியைச் செய்கின்ற யாக முதலியவை கர்மமென்று சொல்லப்படும்; உதாசீனமான கிரியைமாத்திரம் 'இங்கே கர்மம்,' என்று சொல்லப்படவில்லை. எக்ஞம், ஓமம் முதலிய கர்மங்களாலேயே சர்வபூதங்களின் உற்பத்தி சுருதி ஸ்மிருதிகளிற் பிரசித்தமாகக் கூறப்பட்டிருக்கின்றது.

இனி, 'அதிபூதம் எது?' என்னும் நான்காம் வினவிற்கு விடை கூறுகின்றேன் கேட்பாயாக: கெடுதற்குரியனவாய்ப் பொருந்திய தேகமுதலிய சர்வபதார்த்தங்களும், அப்பதார்த்தங்களை 'நான்,' என்னும் அபிமானமும், பூதத்தை யாசிரயித்துப் பௌதிகமாயிருப்பதால் அதிபூதமென்று சொல்லப்படும். வேறே யாதேனுமோர் அற்பபதார்த்தமும் அதிபூதமென்று சொல்லப்படவில்லை.

இனி, 'அதிதெய்வம் எது?' என்னும் ஐந்தாம் வினவிற்கு உத்தரம் கூறுகிறேன் கேள்: பந்தமாகப் பொருந்துகின்ற இந்தச் சரீரரூபமான சர்வபுரங்களிலும் நிறைந்திருக்கும் இரண்யகர்ப்பரூபனான புருஷன், ஆதித்தன் முதலிய தேவதைகளை ஆசிரயித்துச் சட்சுமுதலிய காணங்களின்மீது அனுக்கிரகஞ் செய்வதால் அதிதெய்வமென்று சொல்லப்படுவான்; தேவதாவிஷயமான தியானமுதலியவை அதிதெய்வசப்தத்தாற் சொல்லப்படவில்லை.

இனி, 'அதியெக்ஞம் எது?' என்னும் ஆறாம் வினவிற்கு விடை கூறுகின்றேன் கேள்: குறைவினையுடையனாகாத அந்தரியாமியென்னும் விஷ்ணுரூபமான அதியெக்ஞம், வாசுதேவனான நானே ஆகின்றேன்; ஆதலால், நான் எக்ஞத்தினும் வேறாகாமல் அபேதரூபமாகச் சிந்திக்கத்தக்கவனாகின்றேன்; இப்படிப்பட்ட அதியெக்ஞரூபமான நான் மனுடதேகத்தின்கண்ணே எக்ஞரூபமாக விருக்கின்றேன்; இத்தகைய நான் சர்வத்திர வியாபகமாவதால் பரிச்சின்னமான புத்தி



முதலியவற்றினும் பின்னமாவேன்; இவ்வாறு சொன்னதனால், 'அவ்வதியெக்ஞம் இத்தேகத்திலுளதா? அல்லது இத்தேகத்தினும் புறம்பேயுளதா? தேகத்திலுளதாயினும் புத்தியாதிரூபமா? அல்லது புத்தியாதிகளினும் பின்னமா?' என்னுஞ் சந்தேகத்திற்கு நிவிர்த்தி தானே ஏற்படும்.

இனி, 'மாணமாகுஞ் சமயத்தில் உம்மை உள்ளபடி அறியும்வழி எவ்வாறு?' என்ற எழாம் வினவிற்கு விடை கூறுகின்றேன் கேட்பாயாக: அதிகாரி புருஷனால் மாணகாலத்திலும், சித்தத்தைக் கவருகின்ற அன்னியமான வழிகளையெல்லாம் தடுத்துச் சிந்தனஞ் செய்யப்படுபவன், அதியெக்ஞரூபமான சகுணப்பிரமம், அல்லது பரமாக்ஷரரூபமான நிர்க்குணப்பிரமமாகிய நானே; சுரோத்திரம் முதலிய ஐந்து இந்திரியங்களையும், சப்தம்முதலிய ஐந்து விஷயங்களையும் நிக்கிரகித்துச் சித்தத்தை என்னிடத்தே செலுத்திச் சரீரத்தை விடுதலாகிய மாணமடைபவர், பரமேசுரனான எனது சொரூபத்தன்மையையே அடைவர்; வேறு சிந்தனை செய்வோர் அதற்குத்தக்க நிலையை அடைவர்; இதில் யாதொரு சந்தேகமுமில்லை. இப்படி அடைவது எவ்வாறெனில் இதன் விவரத்தையும் இனிக் கூறுவேன் கேள்:

அருச்சுனா! 'மாணகாலத்திலே பரமேசுரனான என்னையே தியானிக்கும் அதிகாரி என்னையே அடைவன்,' என்பது மாத்திரமன்று, இந்தத் தேகத்தை விடுதலாகிய மாணத்தையடையும்பொழுதுளவனொருவன் யாதாயினுமொரு தேவதாவிசேஷத்தையாவது, அன்னியமான யாதேனுமொரு பிரியாப்பிரியபதார்த்தத்தையாவது நினைப்பவனாய்இச்சரீரத்தை விடுவானோ அவன், அந்த மாணத்தின்பின் அந்த நினைப்பினளவாகவே அப்பாவனாதிடத்தால் தான் நினைத்த அப்பொருளையே அடைவன்; ஆதலால், பரமேசுரனான எனது சுபாவத்தையே எப்பொழுதும் மனத்தினிடம் சிந்தனையாகக் கொண்டு, என்னிடத்துள்ள சிந்தனையோடும் அஸ்திரசஸ்திரங்களைக்கொண்டு செய்யப்படும் யுத்தத்தை நீ செய்யத்

தொடங்கின் அதனால் என்னிடத் தர்ப்பித்த மனம், புத்திகளையுடையவனாய் என்னையே அடைவாய்; இதிற் சிறிதும் சந்தேகமில்லை.

அருச்சுனா! இன்னும் கேட்பாயாக: நல்ல அப்பியாசயோகத்திலும், ஞானயோகத்திலும், செல்லும்படியான யோக்கியதையுடைய தமது சித்தத்தை மிகவுஞ் செல்லும்படியாகப் பண்ணி, வேறொரு விஷயத்தையு மடையாதோர், சொல்லுதற்கரிய சூரியமண்டலம்போல விளங்குகின்ற பரமான்மாவாகிய தேவனையல்லாது வேறொன்றினையடையார்கள்; அப்பரமான்மாவின் சுபாவத்தையும், அதனை அடையும் விதத்தையும் இனி நான் கூறுகிறேன். கேள்: முக்காலங்களினுமுள்ள சர்வ வஸ்துக்களையு மறியுஞ் சர்வக்ஞனும், சர்வ ஜகத்திற்குங் காரணனாகலின் அநாதியும், சூரிய சந்திரர் முதலிய சகலரையும் தனதாணையில் நிறுத்துபவனும், ஆகாச முதலிய சர்வ ஜகத்திற்கும் உபாதானகாரணமாதலின், ஆகாசமுதலிய சூக்ஷ்ம பதார்த்தங்களிலும் மிகவும் சூக்ஷ்மரூபனும், புண்ணிய பாவ கர்மங்களுக்கு ஏற்பட்ட பலன்கள் எவ்வளவுண்டோ அவ்வளவு பயன்களையும் பிராணிகளின் கர்மானுசாரமாக வெவ்வேறாக அவர்களுக்குக் கொடுப்பவனும், அளவற்ற மகிமைகளை யுடையவனாதலின், எவராலும் சிந்தனை செய்தற்கரியவனும், எல்லாவிடங்களிலும் பரவிய இருளை நீக்கிய உதயகால சூரியன்போலப் பிரகாசமுடையவனுமாகிய பரம திவ்விய புருஷனைப் பொருந்துதற்குரிய அன்பினையுடைய உபாசகர், மரணகாலத்தில் ஏகாக்கிரமும், யோகவன்மையுமுடைய மனத்தினாலே, புருவமத்தியிலுள்ள ஆக்ஞாசக்கரத்தில் தமது குற்றமற்ற பிராணவாயுவைச் சுழிமுனைநாடி வழியாகப் புகும்படிச் செய்து நிறுத்திச் சரீரத்தைவிட்டுப் பத்தாம்வாயிலாகிய பிரமாந்திரத்தால் வெளிப்படில் இந்த யோகத்தினாலே அந்தப் பரமதிவ்ய புருஷனோடும் பொருந்துவார்கள்; எனினும், அக்காலத்தில் ஓங்காரரூபப் பிரணவநாமத்தால் ஈசுரனைச் சிந்திக்கவேண்டும்; அந்தச் சிந்தனையே மேற்கூறியபடி அடைதற் கேதுவாம். போர் செய்யும்படியான வேலாயுதத்தையுடைய அருச்சுனா! இவ்வாறு அவர்கள் அந்தப் பரம திவ்விய புருஷனோடும் பொருந்துகின்ற விவரத்தை இன்னமுங் கூறுகின்றேன் கேள்:



எந்த ஓங்காரமுடைய பிரமத்தை வேதமறிந்த பெரியோர், அழியாததாகிய அக்ஷரமென்று எடுத்துக் கூறுவரோ, எந்த அக்ஷரத்தை, விஷயசுகங்களின் இச்சையை யொழித்த சன்னியாசிகள் தமது சொரூபமாக அடைவாரோ, எந்த அக்ஷர பிரமத்தை அடைய விச்சித்த சாதகபுருஷரான நயிஷ்டிகப் பிரமசாரிகள், காமமுதலியவற்றை யிழந்து வேதாந்த சிரவண மனனாதி செய்வாரோ, எந்த வஸ்துவானது அந்த நிரதிசயப்பொருளாகுமோ அந்த அகார உகார மகாரமென்னும் மூன்று மாத்திரைகளையுடைய ஓமென்னும் அக்ஷரத்தால் எவன் பரமபுருஷனைச் சிந்திப்பானோ அவன் அந்தப் பரமபுருஷனையே அடைவன்; இந்தப் பிரணவவுபாசனை சுருதியின்கண் கூறப்பட்டுள்ளது; இத்தகைய அவ்வக்ஷரத்தால் பரமேசுரனைத் தியானிக்கும் விதத்தையும் இனிச் சங்கிரகமாகக் கூறுகின்றேன் கேட்பாயாக: சுரோத்திராதி இந்திரியரூபமாகிய துவாரங்களைத் தத்தம் விஷயங்களிற்செல்லாமற் றடுத்து, அன்னியங்களைப் பொருந்தாமல் மனத்தை இருதயகமலத்தில் வைத்துக் குறைதலில்லாத பிராணவாயுவைச் சிரசிலேறும்படி பண்ணி, 'சம்சாரத்தினின்றும் நீங்கி ஓய்ந்து முத்தியிற் புகுதும்படியான வழி இதுவே,' என்று யோகதாரணரூபமான தைரியத்தோடு கூடிநின்று, உச்சரிக்கும் சுபாவத்தோடு மேற்கூறிய ஓமென்னும் பிரமரூபமாகிய ஏகாக்ஷரத்தை வாயினா லுச்சரிக்கப்பெற்று, மனமானது அன்னிய விஷயங்களிற் கூடாமல், ஓங்காரத்தின் பொருளாய்ப் பரமேசுரனான என்னைச் சிந்திப்பதாக இருந்து தேகத்தை விட்டுச் செல்பவர், நாசமில்லாத சுபாவத்தையுடைய என்னையே தேவயானமார்க்கமாக அடைவர்.

எவரினும் மேலான அருச்சுனா! இனி நீ, 'பகவானே! மேற்கூறிய பிராணவாயுவின் நிரோதரூபமான யோகாப்பியாச மின்மையின் சாவதான முடையராய்த் தமது இச்சையால் தேகபரித்தியாகஞ் செய்யச் சாமர்த்தியமில்லாமல் மரணகாலத்தில் பரவசராய்த் தேகபரித்தியாகஞ் செய்கின்ற புருஷர் என்ன பயனை யடைவார்?' என்று வினவக்கூடும். அதற்குத்தக்க விடை கூறுகின்றேன் கேள்: முற்கூறிய விதமாக, 'ஒருவருஷமளவும் அல்லது ஓராறுமாதமளவும் பரமேசுரனைச் சிந்திப்போம்' என்னும் காலவரையறை செய்யாமல் எப்பொழுதும் ஜீவிதகால பரியந்தம் முன் கூறிய பரமேசுரனான எனது சுபாவத்தையே சிந்திக்கின்ற நிரந்தர சமாகித சித்தமுடைய புருஷர், முன் சொன்னபடி சுவாதீனராய்த் தேகத்தைப் பரித்தியாகஞ் செய்தாலும், அல்லது பராதீனராய்த் தேகத்தைப் பரித்தியாகஞ் செய்தாலும் எல்லாவிதத்தாலும் அப்புருஷர்க்குப் பரமேசுரனான நான் சுலபமாகக் கைவசமாவேன்; இன்னும் நீ, 'பகவானே! இவ்வாறு உம்மை எப்பொழுதும் சிந்தித்து, உம்மையடையும் அதிகாரி புருஷர் மீண்டும் ஜனிப்பாரோ? அல்லது ஜனிக்கமாட்டாரோ?' என்று வினவக்கூடும். அதற்கும் விடை கூறுகின்றேன் கேள்: எனது சுபாவமானது கைவசமாகும்படி யிருந்த வுபாசகர், துக்காலயமாய் நாசமுடையதாயுள்ள ஜனனத்தை மீண்டும் அடைதலைப் பொருந்தார். பின்னர் இவ்வுபாசகர் எதனை யடைவரெனில், இராசத தாமத ரூபமில்லாத சுத்தாந்தக்கரண முடையராய்ப் பிரமலோகத்தை யடைந்து அங்கே அநேகவிதமான திவ்ய போகங்களைப் புஜித்து அதனந்தத்தில் பிரமஞானமடைந்து எல்லாவற்றினும் மேலான கைவல்லிய முத்தியடைவர். இது கிரமமுத்தியென்று சொல்லப்படும்.

'எனது சுபாவமானது கைவசமாகும்படி யிருந்த வுபாசகர் பிரமலோகத்திலிருந்து மீண்டும் ஜனனத்தையடையார்,' என்று நான் இப்போது கூறியதனால், பரமேசுரனாகிய என்



னிடத்துப் பராமுகரும், தத்துவ சாட்சாத்கார மில்லாதவருமாகிய புருஷர்க்குப் பிரமலோகத்தினின்றும் * புனராவிர்த்தி யுண்டாகுமென்பது தானே ஏற்படும்: ஆதலால், அவர்களுக்கு அவ்வாறு ஏற்படும் புனராவிர்த்தியைக் கூறுகின்றேன் கேள்: தம்மாற் செய்யப்பட்டு முன் ஜனனத்தில் தம்மைப் பொருந்தின வினைகள் அனுபவித்துத் தீர்ந்தபோது, பிரமலோகத்தோடுகூடச் சர்வபோகபூமிரூபமான உலகங்களை யடைந்தவர்களாகிய மேற்கூறிய புருஷர்கள் மீண்டும் ஜனனத்தை யடைவர். அருச்சுனா! இனி நீ, 'உம்மை யடைந்தோர்க்கும் மேற்கூறியவர்களுக் கேற்பட்டதுபோலப் புனராவிர்த்தி யுண்டாகுமோ?' என்று வினவக்கூடும். அதற்கும் விடைகூறுகின்றேன் கேள்: உண்மையாக எனையடைவோர் மேற்கூறியபடியே மீண்டும் ஜனனமடையார்; அவர் மீண்டொருகாலும் ஜனியாத வழியை அடைந்தோராவர்.

இனி, கிரமமுத்தியில்லாத மேற்கூறிய புருஷாலடையப்படும் பிரமலோகத்தோடு கூடச் சர்வலோகங்களும் காலத்தினாற் † பரிச்சின்னமாவதால், புனராவிர்த்தி யுடையனவென்பதை விளக்கமாகக் கூறுகின்றேன் கேள்: சூரிய சந்திரரின் கதியினாலறியும் பகலிரவினும் வேறான பிரமாவின் பகலிரவைஆராய்ந்துசொல்லப்புகின், ஆயிரம்சதுர்யுகம்கொண்ட காலம் பிரமாவுக்கு ஒரு பகலாம்; இப்படியே ஆயிரம் சதுர்யுகங் கொண்ட காலம் ஓரிரவாம். இப்படிப்பட்ட பகலிரவு பதினைந்தாயின் ஒரு பக்ஷமாம்; இப்படிப்பட்ட இரண்டு பக்ஷம் ஒரு மாசமெனப்படும். இப்படிப்பட்ட பன்னிரண்டு மாசம் ஒரு வருஷமெனப்படும். இப்படிப்பட்ட ஒரு நூறு வருஷம் பிரமாவுக்குப் பரமாயுளாகக் குறைவற ஏற்பட்டுள்ளது; இந்த நூறு வருஷங்களிலும் முதல் ஐம்பது வருஷம் பிரதமபரார்த்தமென்றும், மற்றைய ஐம்பது வருஷம் துதியபரார்த்தமென்றும் சொல்லப்படும். அந்தப் பிரமா இப்படிப்பட்ட நூறு வருஷமான ஆயுளைப் புசித்து முடிவில்

* புனராவிர்த்தி - ஜனனம். † பரிச்சின்னம் - அழிவு.

நாசமடைவர்; இந்தப்பிரகாரம் அந்தப் பிரமாவும் காலத்தாற் பரிச்சின்னமாவதால் அநித்தியரே; அவருடைய உலகும் அநித்தியமே; ஆதலால் கிரமமுத்தியில்லாத புருஷர்க்கு மேற் கூறிபபடி பிரமலோகத்தினின்றும் புனராவிர்த்தி அவசிய மேற்படும் இனி இந்திராதி தேவதைகளோ அப்பிரமாவி னும் தாழ்ந்தோராவர்; அவர்கள் அந்தப் பிரமாவின் ஒரு பகலாகிய காலத்திஞலேயே பரிச்சின்னராவர்; அவருலகங் களும் அநித்திய முடையனவாம்; ஆதலின், அவ்விந்திராதி தேவதைகளின் உலகங்களினின்றும் புனராவிர்த்தி யுண் டென்பதைச் சொல்லவேண்டியதில்லை; எண்பத்துநான்கி லக்ஷம் பிறப்புப் பேதங்களெல்லாம் பிரமாவின் ஒரு பகலில் உற்பத்தியாய் இராத்திரியில் பிரளயமாகி அழியுந்தன்மை யுடையனவாம். பிரமாவின்பகலென்னும்சிருஷ்டியினும், இராத் திரியென்னும் பிரளயத்திலும் ஆகாசாதி பூதங்கள் உற்பத்தி நாசமாகாமல் தாமிருந்த வண்ணமே யிருக்கும்.

இனி, மெய்யாக வென்னையடைந்தோர் அடையும் மீளாத நெறியின் தன்மையைப்பற்றி விளக்கமாகக் கூறுகின்றேன் கேட்பாயாக: முற்கூறிய பிரமாவின் ஆண்டளவு சென்ற வழி யில் வருகின்ற சிருஷ்டி, பிரளயமென்னும் அவருடைய சாக்கிராவஸ்தை, சுழுத்தியவஸ்தையாகிய வியக்தம், அவ் வியக்தம் முதலியவைகளை யடையாதநிலைமையென்றும், அறி வழியும் தேகத்தில் அழியாத அறிவென்றும், நித்தியமென் றும், இந்திரியங்களால் அறிதற்கரிய அவ்வியக்தமென்றும், அழியாத பொருளாகிய அக்ஷரமென்றும், அடைந்த அதி காரிபுருஷர் பின்பு ஜனனமடையாத முறைமையுடையதென் றும் பெரியோர்களாற் கூறப்படுவது எல்லாவற்றினும் மேலான எனது சொரூபமாகும். அருச்சுனா! அதனை யடை தற்கு, எவ்வகைப்பட்ட பூதங்களும் எந்தப் புருஷனுள்ளே அடங்கினவோ, சர்வபூதங்களிலும் வியாபித்தவனாய் நிற்கின் றவனெவனோ அந்த நிரதிசய பரமான்ம புருஷனாயுள்ள என்னை அடையவேண்டும்; அவ்வாறு என்னை யடைதல் எத



னாற் கைகூடுமெனில், மிகுந்த பக்தியினாலே கைகூடும். இனி, 'எந்தப்படி வருங்காலத்தில் மாணமாய்ச்செல்பவர் பிறவாதவ ராவர்?' 'எந்தப்படி வருங்காலத்தில் மாணமாய்ச் செல்பவர் பிறப்பவராவர்?' என்று நீ வினவின் அந்தக் காலங்களின் தன்மைகளையும் நீ அறியும்படி உரைக்கின்றேன் கேட்பா யாக:

ஜோதிரூபமான அக்கினியபிமான தேவதையும், பக லும் சுக்கிலபக்ஷமு மென்னும் காலங்களின் அபிமான தேவ தைகளும் ஆகிய அவர்களோடும் பொருந்துகின்ற ஆறு மாசங்களில் உத்தராயணமென்னும் தேவயான மார்க்கத்திற் சென்று சகுணப் பிரமத்தை யடையும் சகுணப் பிரமோபாச கன், மீண்டும் இவ்வுலகத்திற் பிறக்கமாட்டான். இவன் இந்தத் தேவயான மார்க்கத்தால் பிரமலோகத்தை யடைந்து நிர்க்குணப் பிரமத்தையடையும் விதத்தையுங் கூறுகிறேன் கேள்: சகுணப்பிரமோபாசக புருஷனை மரணசமயத்தில் சரீ ரத்தினின்றும் நீக்கி, முன்னே அக்கினியபிமான தேவதை தனது லோகத்திற்குக் கொண்டுபோம்; அவ்வக்கினிலோக த்தினின்றும் பகலினபிமான தேவதை தனது லோகத்திற் குக் கொண்டுபோம்; அதினின்றும் சுக்கிலபக்ஷத்தினபிமான தேவதை தனது லோகத்திற்குக் கொண்டுபோம்; அதற்கு மேல் உத்தராயணமென்னும் ஷண்மாசத்தினபிமானதேவ தை கொண்டுபோம்; அதற்குமேல் சம்வத்ஸரத்தினபிமான தேவதை கொண்டுபோம்; அதற்குமேல் தேவலோகத்தின் அபிமான தேவதை கொண்டுபோம்; அதற்குமேல் வாயுவி னபிமானதேவதை கொண்டுபோம். அதற்குமேல் சூரியதேவ தை கொண்டுபோம்; அதற்குமேல் சந்திரதேவதை கொண்டு போம்; அதற்குமேல் மின்னலின் அபிமானதேவதை தன் னுடைய லோகத்திற்குக் கொண்டுபோம்; அந்த மின்ன லின் உலகில், அவ்வுபாசகன்முன்னே, இரண்ணியகர்ப்பாது ஆக்ஞையால், இரண்ணியகர்ப்பலோகவாசியும் இரண்ணிய கர்ப்பருக்குச் சமானரூபனுமான திவ்யபுருஷ னொருவன்

அவனைக் கொண்டுபோக வருவன்; அப்புருஷன் அந்த மின்னலின் உலகினின்றும் அவனை வருணலோகத்திற்குக் கொண்டுபோவன்; அப்போது மின்னலின் அபிமான தேவதை கூடவே வந்து வருணலோகத்தினின்றும் அவனை இந்திரலோகத்திற்குக் கொண்டுபோம்; வருணதேவதையும் இந்திரலோகபரியந்தம் இரண்ணியகர்ப்பலோகவாசியான திவ்ய புருஷனோடும் உபாசகனோடும் கூடவிருக்கும்; அதற்குமேல் இந்திரதேவதை பிரஜாபதியின் லோகபரியந்தம் அவ்விருவருடனே கூடவிருக்கும்; அதற்குமேல் பிரஜாபதி அவ்விருவரோடுகூடப் பிரமலோகத்திற்கு அவ்வுபாசகனைக் கொண்டுபோவதிற் சமர்த்தனாகான்; ஆதலால், அவ்வுபாசகன், மேற்கூறிய திவ்ய புருஷனோடுகூடப் பிரமலோகத்தை அடைவன்; பிரமலோகத்தின் அதிபதியே இரண்ணியகர்ப்பன்; சூட்சும சமஷ்டியின் அபிமானசேதனம் இரண்ணியகர்ப்பனென்று சொல்லப்படும்; அவனையே காரியப்பிரமமென்று அறிந்தோர் கூறுவர்; அந்தக் காரியப்பிரமத்தின் வாசஸ்தானமே பிரமலோகமாம். இவ்வாறு அக்கினிமுதல் பிரஜாபதிபரியந்தமான சர்வதேவதைகளுமிருக்கும் தேவயானமார்க்கத்திற் சென்று பிரமலோகத்தை யடையும் சகுணப்பிரமத்தி னுபாசகன் இரண்ணியகர்ப்பரூபமான சகுணப்பிரமத்தையே யடைவன்; பின்னர் அச்சகுணப்பிரம வாயிலாகவே அவ்வுபாசகன் நிர்க்குணப்பிரமத்தை யடைவன்.

இந்தச் சகுணப்பிரமத்தி னுபாசகனன்றி, அப்பிரமலோகத்தையடைந்த பஞ்சாக்கினி வித்தையையுடைய வுபாசகர், இந்தக் கற்பத்தின் பின்னர் மற்றோர் கற்பத்தில் பிரமலோகத்தினின்றும் புனராவிர்த்தியடைவர்; இவர்களையே முன்பு நான், 'தம்மாற் செய்யப்பட்டு முன் ஜனனத்திற் றம்மைப் பொருந்தின வினைகள் அனுபவித்துத் தீர்ந்தகாலையில் பிரமலோகத்தோடுகூடச் சர்வபோக பூமிரூபமான உலகங்களை யடைந்தோரும் திரும்பச் சனிப்பர்,' என்று கூறினேன்.



இதுநிற்க: தூமாபிமான தேவதையும், இராத்திரியும் கிருஷ்ணபக்ஷமு மென்னும் காலங்களி னபிமானதேவதைகளுமாகிய அவர்களோடு பொருந்துகின்ற ஆறுமாசங்களில் தெட்சிணாயனமென்னும் பிதிருயான மார்க்கத்தில் மாணமாய்ச் செல்லும் கர்மயோகி யென்னும் புருஷன், சுவர்க்கமென்னும் பெயரையுடைய சந்திரலோகத்தில், புண்ணிய கர்மங்களின் போககாலபரியந்தம் வாசஞ்செய்து பின்னர்ச் சேஷமாகிய புண்ணியபாவ கர்மவசத்தால் எவ்விடத்தும் பிறப்பன். இவன் இவ்வாறு சந்திரலோகத்தை யடைந்து மீண்டும் ஜனிக்கும் கிரமத்தையும் விளக்கமாகக் கூறுகிறேன் கேட்பாயாக: இந்தக் கர்மியாகிய புருஷன், மேற்கூறியபடி பிதிருயானமார்க்கத்தில் மாணமாய்ச் செல்லும்போது, முன்னே தூமாபிமான தேவதையையும், அதற்குமேல் இராத்திரியபிமான தேவதையையும், அதற்குமேல் கிருஷ்ணபக்ஷத்தி னபிமானதேவதையையும், அதற்குமேல் ஷண்மாசரூபமான தெட்சிணாயனத்தி னபிமான தேவதையையும், அதற்குமேல் பிதிர்லோகத்தி னபிமான தேவதையையும், அதற்குமேல் ஆகாசத்தி னபிமான தேவதையையும், அதற்குமேல் சந்திரனையு மடைந்து, சுவர்க்கமென்னும் பெயரையுடைய சந்திரலோகத்தில் முற்கூறியபடி புண்ணியகர்மங்களின் போககாலபரியந்தம் வாசஞ்செய்து, பின்னர்ச் சேஷமாயுள்ள புண்ணியபாவ கர்மவசத்தால் மீண்டும் பிறப்பான். இவ்வாறு தூமத்தி னபிமானதேவதைமுதல் சந்திரதேவதைபரியந்தம் கூறிய சர்வதேவதைகளும் பொருந்தியிருக்கின்ற பிதிருயான மார்க்கத்திற் செல்பவர், அக்கினிஹோத்திரம் முதலிய கர்மங்களான இஷ்டகர்மங்களையும், வாவி கூபம் தடாகம் தர்மசாலை முதலியவற்றை ஏற்படுத்துதலான கர்மங்களாகிய பூர்த்த கர்மங்களையும், தகுந்தவிடத்தில் பசு சுவர்ண முதலியவைகளைத் தானஞ் செய்யும் கர்மங்களாகிய தத்த கர்மங்களையும் செய்யும் கர்மிபுருஷராவர்; இவர், சந்திரலோகத்தில் சந்திரனு லடைவதான அக்கர்மங்களின் சுகரூபபயனை யடைந்து அக்கர்மங்கள் நசித்தபின்னர் மீண்டும் மானுடலோகத்

திற் பிறப்பார். ஆதலால், இந்தப் பிதிருயானமென்னும் பெய
ருடைய ஆவிருத்தி மார்க்கத்தினும் தேவயானமென்னும்
நாமமுடைய அநாவிருத்தி மார்க்கம் மிகவுஞ் சிறந்ததாம்.

அருச்சுனா! 'ஞானரூபப் பிரகாசத்தின் அதிகத்தன்மை
யுடைய அக்கினியாதி தேவதைகளோடு கூடினதாயும், பிர
காசரூப சகுணப்பிரம வித்தையினாலடையப்படுவதாயும், பிர
காசமயமான அநேகம் உலகங்களை யுடையதாயும், அழியாத
பிரகாசமான பிரமத்தின் பிராப்திக் கேதுவாவதை முன்
னிட்டு உத்கிருஷ்டமாயும், ஞானரூபப்பிரகாசமாயு மிருப்ப
தால் சுக்கிலமார்க்கமென்று சொல்லப்படும் தேவயான மார்க்
கம், கிரம முத்தியையே அடைவிப்பது,' என்றும், 'ஞான
ரூபப் பிரகாசமின்மையால் தமோமயமாயும், அப்பிரகாசரூப
மான தூமம், இராத்திரி முதலியவைகளோடு கூடினதாயும்,
மீண்டும் சம்சாரத்திற் கேதுவாவதால் * நிகிருஷ்டமாயு மிரு
ப்பதால் கிருஷ்ணமார்க்கமென்று சொல்லப்படும் பிதிரு
யான மார்க்கம், மீண்டும் சம்சாரத்தையே அடைவிப்பது,'
என்றும் இவ்விரண்டு மார்க்கத்தையும் ஆராய்ந்தறியும் சகு
ணப் பிரமத்தின் தியானபராயண புருஷன், இவ்வத்தியாயத்
தில் முன்னே ஏழு வினாக்களின் விடைகளாக நான் கூறியரு
ளிய அர்த்தங்களை யனுஷ்டித்து, யாதொரு மயக்கத்தையு
மடையாமல், இருக்கு முதலிய வேதங்களை அத்தியயனஞ்
செய்து, அசுவமேத முதலிய யாகங்களையும், பசு சுவர்ண
முதலியவைகளின் தானங்களையும், சாஸ்திரவிகிதமான கிருச்
சிர சாந்திராயணாதி தவங்களையுஞ் செய்பவர் தங்குமிடங்க
ளாகிய நல்ல பதங்களை யடைந்து, எல்லாவற்றினும் மேலான
மோக்ஷத்தையுமடைவன். ஆதலால், நீயும் அந்தத் தியான
யோகத்தையே அனுஷ்டிப்பாயாக; நான் இப்போது இவ்
வெட்டாமத்தியாயத்தில் உனக்குத் தியானிக்கத்தக்கரூப
மாகத் தற்பதார்த்தத்தை நன்றாக விளக்கிக் காட்டினேன்;
இதனை ஐயமின்றி உணர்ந்துகொள்ளக்கடவாய்," என்றுரைத்
தருளினார்.

எட்டாவது

எழுவகைவினாவுரைத்தவத்தியாயம் முற்றுப்பெற்றது.

---

* நிகிருஷ்டம் - சிரேஷ்டமல்லாதது.




ஒன்பதாவது

## மாயாவிகாரவத்தியாயம்

கலிவிருத்தம்.

"ஈர்வன்றுயர் களையும்பத மீதன்றுகொ லெனவே
யார்வஞ்செயும் விசயன்கொளு மாசங்கையை யறியாக்
கார்வந்தென வவனன்புறு களிகொண்டெழ வெளியே[ன்."
தேர்வெண்பரி குசைகொண்டெழு பாகன்றிரு மொழிவா

முன் எட்டாமத்தியாயத்தில், 'தியான யோகத்தால்
பிரமலோகமடைந்த வுபாசகபுருஷன், அந்தப் பிரமலோகத்தி
லுள்ள திவ்விய போகங்களை அனுபவித்தபின்னர், பிரம
ஞானமடைந்து அக்கற்பத்தி னந்தத்தில் பரப்பிரமத்தின்
பிராப்திரூபமான கிரமமுத்தியையும் அடைவான்,' என்று
ஸ்ரீ கிருஷ்ணபகவான் கூறியதைக் கேட்ட அருச்சுனனுக்கு,
'இந்தப் பிரகாரத்தினாலேயே முத்தி அடையப்படுமோ அல்
லது வேறு மார்க்கத்தாலும் முத்தி அடையப்படுமோ?' என்று
சந்தேக முண்டானபடியால் அவன் இந்தச் சந்தேகத்தை
அவரிடம் தெரிவித்தான்; இவ்வாறு கிருஷ்ணபகவானிடத்
தன்புசெய்யும் அந்த அருச்சுனன், 'சித்தத்தை அறுக்கும்
வலிமையாகிய துன்பங்களை நீக்கும் பதமானது முன் அத்தி
யாயத்திற் சொல்லிய கிரமமுத்தியோ அல்லது வேறு மார்
க்கமோ?' என்று கொண்ட சந்தேகத்தைத் தமது திருவுள்
ளத்தறிந்து, யாவர் அகத்தும் அந்தரியாமியா யிருந்தும், புற
த்தே அருச்சுனனது இரதத்திற் பூட்டிய வெள்ளைக் குதிரை
களைக் கடிவாளத்தாற் கைக்கொண் டெழுந்தருளிய ஸ்ரீ கிரு
ஷ்ணபகவான், அந்தச்சந்தேகத்தை நீக்குதற்பொருட்டு, கரிய
மேகம் எழுந்தாற்போல அவ்வருச்சுனன் அன்பு மிகுந்த
சந்தோஷங் கொண்டுயாச் சில வார்த்தைகளை நன்றாகக் கூறி
யருளத் தொடங்கினவராய் அவனை நோக்கி, "அருச்சுனா!
முன் அத்தியாயத்தில் தியானிக்கப்படும் பிரமத்தை நிரூப
ணஞ் செய்து, தியானபராயண புருஷனது கதியைக் கூறி

னேன்; அவ்வத்தியாயத்திற் கூறியபடி தியான யோகமும் கிரமமுத்தியை யடைதற்கேதுவா யிருப்பினும் ஆன்மஞானமே சாட்சாத் மோக்ஷத்தை யடைவிப்பதில் சிறந்ததாம்; ஆதலால், இவ்வத்தியாயத்தில் ஆன்மஞானத்தை விளக்கிக் காட்டி அதனா லடையப்படும் ஞேயப்பிரமத்தை நிரூபித்து, ஞானநிஷ்டாபுருஷனது கதியைக் கூறி உன்னுடைய சந்தேகத்தை நிவிர்த்திக்கின்றேன் கேட்பாயாக:

ஆன்மஞானமானது காரியத்தோடுகூட மூலாவித்தையை முழுதும் நாசம் பண்ணுவதாம்; மற்ற வித்தைகளோ? தூலாவித்தையெனவும், அவஸ்தாஞ்ஞானமெனவும் சாஸ்திரங்களிற் கூறும் ஏகதேச அவித்தைக்கே விரோதிகளாம்; ஆதலின், எல்லா வித்தைகளினும் ஆன்மஞானம் மிகவுஞ் சிரேஷ்டமாம். இன்னும், ஆன்மஞானமானது அநேக ஜனனங்களிற் செய்த நிஷ்காம புண்ணிய கர்மங்களாலேயே அடையப்படுகிறது; அப்புண்ணிய கர்மங்களைச் செய்யாத புருஷர், தம்முடைய புத்தியின் வன்மையால் அநேகம் இரகசிய பதார்த்தங்களை யறிந்திருந்தாலும் ஆன்மஞானத்தை அறியமாட்டார்கள்; ஆதலின் இவ்வான்மஞானமானது அந்த எல்லா இரகசிய பதார்த்தங்களினும் மிகவும் இரகசியமானதாம்; பாவ நிவிர்த்தியின்பொருட்டுத் தர்மசாஸ்திரங்களிற் கூறப்பட்டிருக்கும் பிராயச்சித்தங்கள் ஏதேனுமொரு பாவத்தையே நிவிர்த்திக்குமல்லாமல் எல்லாப் பாவங்களையும் நிவிர்த்தி செய்யமாட்டா; ஆன்மஞானமோ அநேகமாயிரம் பிறப்புக்களிற் சம்பாதித்த எல்லாப் பாவங்களையும், அவற்றின் காரணரூபமான அஞ்ஞானத்தையும் உடனே நாசஞ்செய்யும்; ஆதலின், இது எல்லாவற்றினும் பரிசுத்தமானதாம்.

இவ்வாறு உலகத்தினிடமாகவும், சாஸ்திரத்தினிடமாகவும் கூறப்படும் ஞானங்களெல்லாவற்றினும் முதன்மையான அனுபவசகிதமாகிய ஞானமும், இரகசியப் பொருள்களெல்லாவற்றினும் மிகுந்த இரகசியமாக எதிர்ப்படாமல்மறை



யும் இரகசியப்பொருளும், இறையளவாவது துன்பமில்லாமல் முன்னே பொருந்துகின்றதும், இனி அடையப்படுவதும் அடைந்திருப்பதுமாகிய பாவங்களெல்லாமொழியும்படி பரிசுத்தமாக நிற்பதுமாகிய அவ்வான்மஞானத்தின் தன்மையை இன்னும் நன்றாக விளக்கிக் காட்டுகின்றேன்; நீ கவனமுடையவனாக விருந்து அதனை ஐயமின்றி உணரக்கடவாய்:

அருச்சுனா! இன்னும் அவ்வான்மஞானமானது அழிவடையாத தன்மையை யுடையது; சுதர்மத்தின் பயனாகப் பொருந்தியது; குருவின் உபதேசத்தால் ஆயாசமின்றி எளிதிற் சம்பாதிக்கத்தக்கது; ஆதலின், இது எல்லாவற்றினும் மேலானதாம். இப்போது நான் இங்ஙனங் கூறியதால் நீ 'இவ்வான்மஞானமானது எளிதா யடையத்தக்கதாயும், எல்லாவற்றினு மேலானதாயும், அழிவற்ற பயனை யுடையதாயும் இருக்குமானால், எல்லாப் பிராணிகளும் இதிற் பிரவிர்த்தித்து சம்சார நிவர்த்தி யடையலாமே; அங்ஙன மடையாதிருத்தற்குக் காரண மியாது?' என்று என்னிடம் வினவக்கூடும். இவ்வினாவிற்குத் தக்கவிடை கூறுகிறேன் கேள்: இத்தன்மையையுடைய ஆன்மஞானத்தின்மீது, இதற்கு வாயிலாய் வருகின்ற சிரத்தை யில்லாததனால் இதனை எல்லோரும் அடைவதில்லை; இத்தகைய சிரத்தையில்லாதவர்கள், பரமான்மாவான என்னை எவ்விடத்து மடையாமல் இழிவைத்தரப்பட்ட ஜனனமரணங்களைக்கொண்டு, இப்படியே சுழன்று, கிருமி, விட்டில், பறவை முதலிய பிறப்புக்களிற் சிக்கித் திரிவார்கள்.

பார்த்த! இன்னமுங் கேள்: சட்சு முதலிய கரணங்களால் அறியப்படாமையின் அவ்வியக்த மூர்த்தியென்னும் சொப்பிரகாசாத்விதீய சச்சிதானந்தத்தன்மையையே எனக்கு வடிவமாகப்பெற்ற பரமேசுரனான நான், என்னை* ஆதேயமாகக் கொண்டு என்னிற்றங்கிய பூத † பௌதிக முதலிய

* ஆதேயம் - தாங்கப்படுவது.

† பௌதிகம் - பூதியத்துக்கடுத்தது; உலகம்.

ஜகங்களை முழுவதும் பொருந்த நிறைத்து நிற்பேன்; ஆதலால், உலகின்கண்ணுள்ள சராசரங்கள் என்னையே பொருந்திநிற்கும்; அவற்றை யான் பொருந்திநில்லேன்; நான் இவ்வாறு கூறியதனால், நீ, 'பரிச்சின்னராய் எனது இரதத்தின்கண் எழுந்தருளியுள்ள வசுதேவ புத்திரராகிய நீர் சர்வஜகத்தையும் வியாபித்திருக்கின்றேனென்பது பிரத்தியட்சப் பிரமாண விரோதமாமே,' என்று நினைக்கக்கூடும். அதற்குச் சமாதானங் கூறுகின்றேன் கேள்: முன் கூறிய எனது அவ்வியக்த சொரூபத்தை அறியாதவர்களின் ஊனக்கண்ணிற்கே, யான் பிரபஞ்சத்திற் பொருந்தும்படி நிற்கின்றாற்போல எனது சொரூபம் விளங்கும்; என்னுடைய அவ்வியக்த சொரூபத்தை அறிந்தோர்க்கு அப்படி விளங்காது. இனி, நீ, 'உள்ளபடி நீர் * அவ்வியக்த மூர்த்தியாதலால் உமக்கு வாஸ்தவமாகச் சகத்திற் சம்பந்த மிராதாயினும், சர்வ ஜகத்திற்கும் வாஸ்தவமாக உம்மிடத்தில் சம்பந்த முண்டாகலாமே?' என்று என்னிடம் வினவக்கூடும். அதற்கும் விடை கூறுகின்றேன் கேள்: சிருஷ்டியின் முன்னே யாதொன்றையும் சம்பந்தியாமலே பரமான்மாவாகிய யான் நிற்பேன்; எல்லாம் பழுதையிற் பாம்புபோல கற்பிதமாய் நின்ற அந்தத் தன்மையினால் பிரபஞ்சமானது, என்னோடு அவயவங்கள் சம்பந்தித்து நிற்காது; இவ்வாறான என்னுடைய செயல் மிகவும் அற்புதமானது; இத்தகைய என்னுடைய இயற்கையைச் சூட்சுமமான விசார திருஷ்டியினால் நீ பார்ப்பாய்; அருச்சுனா! பரமேசுரனான எனது மாயையானது தரும் அகங்காராதியாயுள்ள இந்தச் சகமனைத்தையும் உற்பத்தி செய்பவனும் நிலை நிறுத்துபவனும் யானே; ஆயினும், இவ்வுலகங்களில் ஆதேயரூபனாக யான் இரேன்.

இனி, நான், 'எனக்கும் பூதங்கட்கும் வாஸ்தவமாக யாதொரு சம்பந்தமு மில்லையாயினும் அப்பூதங்களுள்ளே யானுளன், என்னுள்ளே அப்பூதங்களுள,' என்று கூறியத

* அவ்வியக்தம் - அதரிசனமானது.



னால், நீ, 'அவ்வாறாயின் பரஸ்பர ஆதார ஆதேய அபாவம் எப்படிக் கூடும்?' என்று சந்தேகிக்கக்கூடும்; அச்சந்தேகத்தையும் நிவர்த்தி செய்கின்றேன் கேட்பாயாக: பிரகாசிக்கின்ற வேலாயுதத்தையுடைய அருச்சுனா! பந்தமற்ற சுபாவமுடைய பரமேசுரனான எனது சொரூபத்தில் வாஸ்தவமாக ஒருபோதும் சம்பந்தமாகாமலும், என்னைத்தவிர வேறொன்றனிடத்துத் தோன்றாமலும் மிகுந்த பூதங்கள் என்னை எப்போதும் சார்ந்துவரும் தன்மை எதைப்போலுமெனில், கருதாநிற்கும் தலங்களில் எங்கும் பூரணமாய்ப் பிரகாசிக்கின்ற † அசங்க சுபாவமுடைய ஆகாயத்தின்கண், எல்லாத் திசைகளிலும் நெருங்கிச் சஞ்சரிக்கின்ற சலன சுபாவம் பொருந்திய வாயுவானது சஞ்சரித்தலை நிகர்க்கும். ஆகாயத்திற்கும் வாயுவிற்கும் சம்பந்த மில்லையாயினும், அசங்க சுபாவமுடைய ஆகாயத்தில் சலனசுபாவமுடைய வாயுவின் ஆதாரத்தன்மையும், சலனசுபாவமுடைய வாயுவில் ஆகாயத்தின் ஆதேயத்தன்மையும் இருப்பனவாகத் தோற்றுவன போல, எனக்கும் பிரபஞ்சத்திற்கும் வாஸ்தவமாகச் சம்பந்தமில்லையாயினும், பரமேசுரனான என்னிடத்தில் கற்பிதப் பிரபஞ்சத்தின் ஆதாரத் தன்மையும் கற்பிதப் பிரபஞ்சத்தில் எனது ஆதேயத்தன்மையும் இருப்பனவாகப் பொய்யாய்த் தோன்றுகின்றன; அவை மெய்யாக இல்லை. இந்தத் திருஷ்டாந்தத்தைக் கொண்டு எனக்கும் பிரபஞ்சத்திற்கு முள்ள சம்பந்த மின்மையைத் தெரிந்துகொள்வாயாக.

யுத்தத்தில் பருவதத்தைப்போல அசையா நிலைபெற்று நிற்கும் அருச்சுனா! இன்னமுங் கேள்; இங்கே காணப்படும் ஆகாய முதலிய பதார்த்தங்களெல்லாம் பிரளய காலத்தில் என்னுடைய திரிகுணான்மகமான பிரகிருதியின்கண்ணே சூக்ஷுமமாக லயபாவத்தை யடையும்; சிருஷ்டி காலத்தில் அவை, உண்டாகும் கிரமப்படியே, பரமேசுரனான என்னால் மீண்டும் உற்பத்தியாம்; ஆதலினால், உண்மையாகப் பார்க்கு

† அசங்கம் - வேறொன்றின் சம்பந்தமற்றது; தனிமை.

மிடத்து எவ்விடத்தும் பூதங்களைச் சிருஷ்டித்து இரக்ஷித்துச் சம்மரிக்கின்றவன் சர்வசத்தி சம்பன்னனும், சர்வக்ஞனுமான நானே. இவ்வாறு நான் இக்கர்மங்களைச் செய்யுங் காலத்தில், பலன்களின் இச்சையோடு ஒருவனிடத்தேற்படும் விருப்பையும் ஒருவனிடத்தேற்படும் வெறுப்பையும் ஒழித்து மித்தியா பூதமான சிருஷ்டியாதி கர்மங்களைச் செய்வேன்; அக்காரணத்தினால் பரமேசுரனான என்னை அந்தச் சிருஷ்டியாதி கர்மங்கள் பொருந்தாவாம்; பட்டுப்பூச்சியானது, தன் வாயால் பட்டுநூலை நூற்று, அந்த நூலினாலேயே தான் கட்டுப்படுவதுபோலக் கர்த்திருத்துவாபிமானத்தோடு கூடித் தாம் செய்யுங் கர்மங்களின் பலன்களையடையக் கருதுகின்றவர், அக்கர்மங்களாலே பந்திக்கப்பட்டு, அக்கர்ம பலன்களில் அகப்பட்டு வருந்துவார்.

அருச்சுனா! இன்னும் நீ என்னிடம், 'பகவானே, மேற்கூறியபடி கர்மங்களில் உமக்குச் சம்பந்தமில்லையெனினும், நீர் செய்யும் சிருஷ்டியில் எல்லோரும் ஒரேவிதமாயிராமல் இவ்வுலகின்கண் ஒருவன் சுகியாயுளன்; ஒருவன் துக்கியாயுளன்; ஒருவன் தனிகனாயுளன்; ஒருவன் தரித்திரனாயுளன்; ஒருவன் புத்திமானாயுளன்; ஒருவன் மூர்க்கனாயுளன்; இப்படியிருப்பதனால் இச்சிருஷ்டிகள் விஷமத்தன்மையுடையனவாம்; ஆகவே விஷமசிருஷ்டி செய்கின்ற உமக்கு விஷமத்தன்மையாகிய தோஷமும், தயையற்ற தன்மையாகிய தோஷமும் அவசியமுண்டாகுமே?' என்று மற்றொருவகையாகவும் சந்தேகங்கொண்டு வினவக்கூடும்; அதற்கும் தக்கவிடை கூறுகின்றேன் கேட்பாயாக: மேகமானது ஓர் வித்தினிடத்து விருப்பமும் ஓர்வித்தினிடத்துத் துவேஷமும் செய்யாமல் எங்குஞ் சமமாக ஜலத்தை வருஷிப்பதால், அந்த அந்த வித்துக்களின் நிலைமைகளுக்குத் தக்கபடி வெவ்வேறான பலன்கள் பின்னர் எவ்வாறுண்டாகின்றனவோ அவ்வாறே பரமேசுரனான யானும் புண்ணியவானிடத்து விருப்பமும், பாவியிடத்தில் துவேஷமும் செய்யாதவனாய் இப்பிர



பஞ்சத்தைச் சிருஷ்டிக்கப் பின்னர், பிராணிகள், தங்கள் தங்கள் புண்ணியபாவங்களுக்குத் தக்கபடி சுகதுக்காதிகளான வெவ்வேறு பலன்களையடைகின்றன; ஆதலால், பரமேசுரனான எனக்கு விஷமத்தன்மையாகிய தோஷமும், தயையில்லாத தன்மையாகிய தோஷமும் இல்லை. இவ்வாறு சராசரரூபங்களாக உலகைச் சிருஷ்டிக்கும் பரமேசுரனான என்னை, எல்லாவற்றினும் மேலான பாரமார்த்திகதத்துவமாக அறியாத அவிவேகமுள்ள ஜனங்கள், 'இந்தக் கிருஷ்ணனும் நம்மைப்போன்ற மனிதனே,' என்று நிந்திப்பர்; இன்னும் நரகத்திற்கு மூலமென்று சொல்லும்படிக்குச் சித்தத்தின்கண்ணே ஆசையையும் கர்மங்களையும் நெருக்கமாகப் பொருந்தச் செய்வர். அவர்கள் எவரெனில், சாஸ்திரத்தால் விதியாத இம்சைக்கேதுவாகிய துவேஷம் பிரதானமான தாமத சுபாவமுடைய இராக்கதரும், சாஸ்திரத்தால் விதியாத விஷய போகங்கட்கேதுவாகிய இராகம் பிரதானமான இராஜத சுபாவமுடைய அசுரருமாவர்.

இனி, 'உம்மை ஆதரிப்பவரெவர்?' எனில், அவர்களைக் கூறுகிறேன் கேள்: அநேக ஜனனங்களிற் செய்துவந்த புண்ணிய மிகுதியையுடைய மகாத்மாக்களே என்னை ஆதரிப்பவராவர்; குருவுபதேசத்தாலும், சாஸ்திரவாராய்ச்சியினாலும் உண்டாகும் விவேகஞானத்தால், பரமேசுரனான என்னைச் சகல ஜகத்திற்குங் காரணரூபனாகவும், நாசரகிதனாகவும் அறிந்துகொண்டு, அடங்கின மனத்தினாலே விஷயமார்க்கங்களையடைத்து, எப்போதும் சற்குருரூபனான என்னையே சரீரத்தாலர்ச்சித்து வணங்கிச், சுருதி கூறிய வழிப்படி வாக்காற் றுதித்து, பரப்பிரமரூபனான என்னையே மனத்தினாற் றியானித்துப் பரமப்பிரமரூபமான பக்தியோடு கூடின இம்மகாத்மாக்களே தேவர்கள்போலக் காணப்பட்டவர்கள்.

இன்னும், மேற்கூறிய தத்துவஞானத்தின் சாதனங்களான சிரவண, மனன, தியானங்களைச் செய்ய அசமர்த்தரான புருஷரும் உத்தமாதிகாரி, மத்தியமாதிகாரி, மந்தாதி

காரி யென்னும் மூன்றுவகையினராகித் தங்கள் தங்கள் புத்திக்குத் தக்கபடி பரமேசுரனான என்னையே சிந்திப்பார்கள்; எப்படியெனில், சிலர், நித்தியனாதலால் காலத்தினாலும், வியாபகனாதலால் தேசத்தினாலும், சர்வான்மாவாதலால் வஸ்துவினாலும் அளவிட்டறிதற்கரிய பிரமசொரூபனான என்னைப் பரமார்த்த தரிசனத்தால், தங்களில் அன்னியமாகக் கருதாமல் அபேதமாகத் தியானிப்பர்; இவ்வாறு சிந்திப்பவர் உத்தமாதிகாரிகளாவர்; சிலர், நான் வேறு என்னை உபாசிப்பவர்களாகிய அவர்கள் வேறு எனக் கருதிப் பேதமான உபாசனை செய்வார்கள்; இவ்வாறு சிந்திப்பவர் மத்தியமாதிகாரிகளாவர்; சிலர், அன்னிய தேவதைகளை உபாசிப்பவராயும், ஏதேனுமொரு கர்மத்தைச் செய்பவராயுமாகி, ஆங்காங்கு நிறைந்திருக்கும் விசுவரூபனான என்னையே அந்த அந்தத் தேவதைகளின் உபாசனாரூபமான ஞான யாகங்களால் சிந்தனை செய்வர்; இவ்வாறு செய்பவர் மந்தாதிகாரிகளாவர்.

அருச்சுனா! நான் இவ்வாறு கூறியதனால், நீ, 'பகவானே! நீர் கூறியபடி இந்த அதிகாரிகள் பலவிதமாக உபாசனை செய்வார்களானால், அவர்கள் உம்மையே உபாசனை செய்கின்றார்களென்பது எவ்வாறு ஏற்படும்?' என்று வினவக்கூடும்; இதற்குத் தக்க விடைகூறி அவர்கள் எல்லாவிதத்தாலும் என்னையே வணங்குகின்றார்களென்பதை விளக்கிக் காட்டுகிறேன் கேட்பாயாக: சுருதியிற் சொல்லும் அக்கினிஷ்டோமாதி யாகங்களும் (அதாவது: சிரௌதகர்மமும்) சுருதிஸ்மிருதிகளில் மகா எக்ஞமென்று கூறப்படும் வைசுவதேவாதி ஸ்மார்த்த கர்மங்களும், பிதிர்க்களின் பொருட்டுக் கொடுக்கும் சிரார்த்தாதிகளும், † ஆகவநீயாதிகளும், * ஆச்சியமும், அன்னமும், இவற்றால் சிரத்தைமிக்க அதிகாரிகளாயினோர் செய்கின்ற கிரியையும் ஆகிய இவையனைத்தும்,

* ஆகவநீயம் - வேதாக்கினி மூன்றினொன்று.

† ஆச்சியம் - ஓமத்தில் விடும் நெய்.



சுவாகாவென்பது முதலிய சப்தங்களை அந்தத்திலுடைய மந்திர முதலிய பொருள்களும் நானே யாவன்; பின்னும் ஆராயுமிடத்து, பிராணிகள்நிறைந்த ஜகங்களை உற்பத்தியாக்கிப் பிரகாசமாக வளரச்செய்யும் மாதாவும், பிதாவும், பிதாமகரும், பரமேசுரனான நானே; முந்தின ஜனனங்களிற்செய்த புண்ணிய பாவகர்ம பலன்களான சுகதுக்கங்களைக் கொடுத்தல் செய்யுந் தாதாவும் நானே; பொருந்துகின்ற இருக்கு, சாமம், எஜுர் என்னும் வேதங்களோடு ஓங்காரமென்னும் அக்ஷரமும் நானே; எல்லார்க்கும் கர்மத்தினா லடையப்படும் சுவர்க்க முதலிய பலன்களாகிய கதிரூபனும் நானே; இருவினைகளின் வழியே எல்லோரையும் போஷணஞ் செய்பவனும் நானே; எல்லார்க்கும் சுவாமியும் நானே; எல்லாப் பிராணிகட்கும் சுபாசுப கர்மங்களைப் பார்ப்பவனாகிய சாட்சியும் நானே; யாவருக்கும் போகஸ்தானமும் நானே; எவர்க்கும் இடர் தீர்ப்பவனும் நானே; எவருக்கும் பிரதியுபகாரத்தை அபேட்சியாமல் உபகாரஞ் செய்பவனாகிய சுகிருதும் நானே; எப்பொருட்கும் வித்தும் நானே; முன்னே மேகம் வருஷித்ததால் பூமியினிடம் பொருந்திய ஜலங்களையெல்லாம் ஆதித்தியனாகி, அப்பூமியினின்று ஆகருஷணஞ் செய்கின்றவனும், மீண்டும் அந்த ஜலங்களை மழைகளாகக் கொடுக்கின்றவனும் சர்வான்மாவான யானே. ஆதலின், எந்தத் தெய்வத்தையேனும் ஆராதனஞ் செய்கின்றவர், சர்வாந்தரியாமியாகிய என்னையே ஆராதிக்கின்றனர்.

இனி, எவ்விதத்தினாலும் பரமேசுரனான என்னைச் சிந்தியாமல் சகாமபுருஷராய்த் தங்கள் தங்கள் விருப்பத்தின் விஷயபூதமான சுவர்க்காதி விஷயங்களை யடைதற்பொருட்டுக், காமிய கர்மங்களையே செய்பவர் அந்தக்கரணசுத்திக் கேதுவாகிய நிஷ்காம கர்மத்தின் அபாவத்தால் சிரவணாதிகளான ஆன்மஞான சாதனங்களில்லாதவர்களாய் அடிக்கடி ஜனனமரணரூப சம்சாரத்தை யடையும் விதத்தையுங் கூறுகிறேன் கேட்பாயாக: இறந்துபோன பாவத்தினை

யுடைய புருஷர்கள், சொப்பிரகாச ஞானரூபமாய் ஏகமாய் நிற்கின்ற பரமேசுரனை என்னையே இந்திரன், வசுக்கள், உருத்திரர், ஆதித்தியர் முதலியவர்களின் ரூபமாகக் கருதி அக்கினிஷ்டோம முதலிய காமிய யாகங்களால் ஆராதித்து, அவ்வாராதனையால் சுவர்க்கமாகிய வுலகத்தையடைந்து, மனிதர்க் கடையப்படாததாகிய திவ்விய போகங்களை யனுபவித்துச் சிவித்துப் புண்ணியகர்மம் நாசமானவுடனே மனிதருலகினிடமாக வீழ்ந்து, இவ்வாறே மீண்டும் இழிவாகிய சுவர்க்கத்திலுள்ள போகங்களின் இச்சையினாலே அடிக்கடி இம்மானிட லோகத்தினின்று சுவர்க்கத்திற்குப் போவதும், சுவர்க்கத்தினின்று மானிட லோகத்துக்கு வருவதுமாகத் திரிவர்.

மின்னையொப்பான பிரகாசம் பொருந்திய வேலாயுதத்தையுடைய அருச்சுனா! இனி நல்ல ஞானமுடைய நிஷ்காம புருஷரின் கதியைக் கூறுகிறேன் கேள்: பரப்பிரமரூபனான என்னைப் பிரத்தியகான்மாவாகச் சாட்சாத்கரித்து எப்போதும் சிந்திக்கின்ற துறவிகள், விரும்பின அன்னபானாதிகளெல்லாவற்றையும் பின்பு கொடுப்போமெனத் தாமதஞ் செய்யாது நான் உடனே கொடுத்து அவற்றைப் பரமேசுரனான நானே இரட்சிப்பேன்; மற்றப் பிராணிகளின் யோகக்ஷேமங்களையும் மேற்கூறியபடி நானே வகிப்பவனா யிருக்கும்போது, 'ஞானிகளின் யோகக்ஷேமங்களை நானே வகிப்பேன்,' என்றதில் விசேஷமென்னையெனின், ஏனைய பிராணிகட்குப்பிரயத்தனத்தை முன்னே உண்டுபண்ணி அந்தப் பிரயத்தனவாயிலால் அவர்களுடைய யோகக்ஷேமங்களை நான் வகிப்பதும், ஞானிகட்குப் பிரயத்தனத்தை யுண்டுபண்ணாமலே அவர்களுடைய யோகக்ஷேமங்களை வகிப்பதுமே விசேஷமாம். இன்னும் நீ, 'பகவானே! விசாரித்துப் பார்க்கில் இந்திராதியான அன்னிய தேவதைகள் உம்முடைய சொரூபமேயல்லாமல் வேறில்லை; இந்திராதி தேவர்களைப் பூஜிப்பவரும் உம்மையே பூஜிப்பவராவர்; இந்தவகையினால் உம்முடைய



பக்தர்க்கும் அன்னிய தேவதைகளின் பக்தர்க்கும் விசேஷமில்லாதிருக்க, என்னுடைய பக்தர் நற்கெதியை அடைவர், அன்னிய பக்தர் ஜனனமரணாதி துன்பங்களை யடைவர் என்று நீர் சொல்லும் உம்முடைய வசனம் எவ்வாறு பொருத்தமுடையதாகும்?' என்று வினவக்கூடும். அதற்கும் தக்க சமாதானம் கூறுகிறேன் கேட்பாயாக: மேற்கூறியபடி இந்திரன் முதலான தேவதைகளைச் சிரத்தையோடு கூடி ஜ்யோதிஷ்டோமாதி யாகங்களால் பூஜிப்பவர், உள்ளபடி அத்தேவதைகளின் ரூபமாயுள்ள பரமேசுரனை என்னையே பூஜிக்கின்றனராயினும், அவ்வன்னியதேவதைகளின் பக்தர்கள் அஞ்ஞானபூர்வமாகவே என்னைப் பூஜிக்கின்றனர். இவ்வாறு அவர்கள், எல்லாருடைய ஆன்மரூபமாக என்னை அறியாமலும், அவ்விந்திராதி தேவதைகளை என்னினும் அன்னியமாகக் கற்பனை செய்தும், என்னை அஞ்ஞானத்தோடு ஆராதனஞ் செய்கின்றதாலேயே மீண்டும் மீண்டும் ஜனனமரணரூப சம்சாரத்தை அடைகின்றனர். இவ்வாறு இந்திரன் முதலிய அன்னிய தேவதைகளை ஆராதிப்பவர்க்குப் பிறப்பறுதலாகிய பெரும்பயனில்லையாயினும், அந்த அந்தத் தேவதைகளின் ஆராதனத்தின் அநுசாரமாக அந்த அந்த அற்பபயன்களை அவசியமடைவர்; எப்படியெனில், இந்திராதி தேவதைகளை ஆராதிப்பவர்கள், அவ்விந்திராதி தேவர்களே யாவர்; பிதிர்க்களைச் சிரார்த்தாதி கர்மங்களால் பொருந்த ஆராதனஞ் செய்தோர், மரணத்தின் பின்னர்ப் பிதிர்க்களாகி விளங்குவர்; இங்ஙனம் எந்தப் புருஷர் எவர்களிடத் தன்புடையவராய் ஆராதனஞ் செய்வார்களோ அவர்களே யாவரென்றால், பரமேசுரனை என்னை ஆராதனஞ் செய்பவர் பரமானந்த ரூபமான நானேயாவதற்கு ஐயமுண்டோ? ஒருபோதுமில்லை.

அருச்சுனா! இன்னமுங் கேள்; பத்திரம், புஷ்பம், பழம், ஜலம் முதலிய இவைகளுள்ளே சுலபமாகத் தாம் அடைந்ததெதுவோ அதைக்கொண்டு, என்னை ஆராதித்து, மிகுந்த

பக்திசெய்யும் பரிசுத்தமான புத்தியையுடைய பக்தர்கள் எனக்கு அர்ப்பணஞ் செய்ததையே நான் சந்தோஷத்தோடு அங்கீகாரஞ் செய்வேன்; ஆதலால், ஈவனவும், நோற்பனவும், உண்பனவும் என்னப்பட்ட இவைகளையே பூஜாத்திரவியமாகக்கொண்டு இவையனைத்தையும் பரமேசுரனான எனக்கு அன்புடன் அர்ப்பணஞ் செய்தால், கர்மபந்தங்களினின்றும் விடுபட்டவனாய்ப் பரப்பிரமரூபனான என்னையே நீ அடையலாம். இன்னும் இந்திராதிதேவதைகளைச் சந்தோஷப்படுத்தும்பொருட்டு மிகுந்த திரவியச்செலவு, சரீரத்தின் ஆயாசம் முதலியவை அவசியப்படுவதுபோலப் பரமேசுரனான என்னைச் சந்தோஷப்படுத்தும்பொருட்டு அவை அவசியப்படுவதில்லை; மேற்கூறியபடி எனக்குப் பக்தர்களுடைய பக்தியே அபேக்ஷிக்கத்தக்கதாம்; ஆதலால், அதிகாரிகள் மற்றைத் தேவர்களை நீக்கி ஒரே பரமேசுரனான என்னையே ஆராதனஞ் செய்தல் தகுதியானதாம்.

இனி நீ, 'பகவானே! நீர் உம்முடைய பக்தர்க்கு மாத்திரம் அனுக்கிரகஞ் செய்கின்றீர்; பக்தரல்லாதவர்க்கு அனுக்கிரகஞ் செய்யாதவராகின்றீர்; இத்தன்மையால் இராகத்துவேஷங்களுடைய நீரும் எங்களைப்போல ஒரு விசேஷ சீவனே யாவீரல்லாமல் ஈசுரனாக எப்படியாவீர்?' என்று என்னிடம் வினவக்கூடும்; அதற்கும் தக்க சமாதானங் கூறுகின்றேன்கேள்: என்னிடத்தன்புடைமையையும் அன்பில்லாமையையுமுடைய எல்லாப்பிராணிகளிடத்தும் பரமேசுரனான நான் சமானமாகவே இருத்தலினால் எனக்கு எவரும் சமமானவர்களே. இங்கு, 'இன்னவர் விருப்பமுடையவர், இன்னவர் விருப்பமில்லாதவர்,' என்று என்னால் வேறு பிரித்துக் கருதத்தக்கவர் ஒருவருமிலர்; ஆயினும், அக்கினியும் கற்பக விருக்ஷமும் இராகத்துவேஷ மில்லாதவைகளா யிருந்தும், அக்கினி தன்னை யடைந்தவருடைய சீதத்தை நிவிர்த்தி செய்து விஷமத்தன்மை பொருந்தாதிருப்பதுபோலவும், கற்பகத்தரு தன்னை யடைந்தவருடைய வறுமையை நீக்கி விஷ



மத்தன்மை பொருந்தாதிருப்பதுபோலவும், பரமேசுரனான நானும் இராகத்துவேஷங்களில்லாதவனாயிருந்தும் என்னைச் சரணமாக வடையும் பக்தஜனங்கட்கே பந்தத்தை நிவிர்த்தி செய்து விஷமத்தன்மையாகிய தோஷத்தைப் பொருந்தாதவனா யிருக்கின்றேன்; என்னைச் சாராத அன்னிய பிராணிகளின் பந்தத்தை நான் நிவிர்த்தி செய்வதில்லை; எப்போதும் என்னை இப்படிப்பட்ட தன்மையை யுடையவனாக அறிந்து என்னிடத்துச் சர்வகர்மங்களையும் அர்ப்பணஞ்செய்து பக்தியோடு என்னைச் சேவிக்கும் பக்தரிடத்து யானும் அனுக்கிரகஞ்செய்து நிற்பேன்; இவ்வாறு என்னால் அனுக்கிரகஞ் செய்யப்படும் பக்தரும் முன் சொன்னபடியே என்னிடத்துப் பொருந்திநிற்பார்கள்.

வலிய புயத்தையுடைய அருச்சுனா! இன்னும் இத்தகைய எனது பக்தியின் பிரபாவத்தைக் கூறுகிறேன் கேள்: உணவாதியாகத் தாம் அனுபவிக்கும் பதார்த்தங்களைப் பரமேசுரனான என்னிடத் தர்ப்பணஞ்செய்து ஒரே சிந்தனையுடையவராய் என்னைச் சேவிப்பவர், முன்னே எப்பொழுதும் அச்சத்தை யொழித்து மிகுந்த துராசாரங்களைப் பொருந்தினவரா யிருப்பினும். அவர்கள் சாதுக்களென்றே மதிக்கத்தக்கவராவர்; நான் இவ்வாறு கூறியதைக் குதர்க்கவாதிகள் கொள்ளாரென்று மதித்து நீ வியாகுலமுறுதல் கூடும்; அவ்வாறு வியாகுலமடைதல் தகுதியன்று; அந்தக் குதர்க்கவாதிகளுடைய குதர்க்கமொழிந்து அவர் உன்னைக் குருரூபமாகக் கொள்ளும்படி அவர்க்கு உபதேசிக்கத்தக்க வார்த்தைகளையும் கூறுகிறேன்; அவற்றைக்கேட்டு உன்வியாகுலத்தை யொழிப்பாயாக: அருச்சுனா! மேற்கூறியபடி முன்னே அநேகந் துராசாரமுடையராயிருந்த அந்தப்பக்தர்க்குப் பரமேசுரனான எனது பஜனத்தின் பிரபாவத்தால், எப்பொழுதும் கெடுதலில்லாத நிரதிசயானந்தரூபமான மோக்ஷம் உண்டாகுமேயன்றி எவ்விடத்தும் யாதொரு துர்க்கதியு முண்டாகமாட்டாது; இது சத்தியமாம். நீ இவ்

விஷயத்தைக் குதர்க்கவாதிகளினெதிரேநின்று மேமேல கையை உயர்த்திக் கூறி இவ்வாறு நடப்பது சத்தியமென்று பிரதிக்ஞை செய்து அவர்களுடைய குதர்க்கத்தை நீக்கி அவர்க்கு நல்லுபதேசஞ் செய்யக்கடவாய்.

அருச்சுனா! இன்னமுங் கேள் : கிருஷி, வாணிகம் முதலிய இலௌகிக காரியங்களையுடைய வைசியரும், மற்றைச் சூத்திரரும், ஸ்திரீகளும் கூடப் பக்தியுடனே பரமேசுரனான என்னைச் சேவித்து, எனது பக்தியின் பிரபாவத்தால் பந்தத்தை விடுத்து பரமகதியை அடைவர்; இவர்களே இவ்வாறு என்னிடத்துச் செலுத்தும் பக்தியின் பிரபாவத்தால் பரமகதியை அடைவார்களென்று சொல்லில், அழகு பொருந்திய கிரீடத்தையுடைய க்ஷத்திரியரும், உத்தமஜாதியரான பிராமணரும், என்னுடைய பக்தராய் என்னை ஆராதனஞ் செய்வாரானால், அவர் எனது பக்தியின் பிரபாவத்தால் வேறொன்றால் நீங்குதற்கரிய பிறவியினின்று நீங்கிப் பரமகதியை அடைவாரென்று சொல்லவேண்டுவது முண்டோ? இல்லை; அவர்கள் நிச்சயமாகப் பரமகதியை அடைவர். ஆதலால், அருச்சுனா! மின்னையொப்பான மானுடவாழ்வில் சம்பந்தப்பட்டு நிற்கின்ற நீ பக்தியோடும் மனோவாக்குக்காயங்களால் பரமேசுரனான என்னையே நமஸ்கரித்து, எப்போதும் என்னையே சிந்திப்பாயானால், கடாகாசம் மஹாகாசத்தையடைந்தாற்போலவும், கங்கை முதலிய நதிச்சலங்கள் சமுத்திரசலத்தை யடைந்தாற்போலவும் பரமானந்தரூபனான என்னையே அபேதமாக அடைவாய்," என்றுரைத்தருளினார்.

ஒன்பதாவது:

மாயாவிகாரவத்தியாயம் முற்றுப்பெற்றது.

---

பத்தாவது:

## விபூதியோக வத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

"அரிய வெனது நிலைமையைமுன்
பளவே சொன்னே னதுகேட்டே
யுரிய மனனிற் களிகூர
வுவவா நின்ற வுனக்கதனை
விரிய மொழிவன் கேளென்று
வேதத் தலைக்கே வீற்றிருக்குங்
கரிய முகிலான் செவ்வாயாற்
காதல் கூரக் கட்டுரைப்பான்."

வேதத்தின் சிரசின்கண்ணே வீற்றிருக்கும் கரியமுகில்போலும் நிறத்தினையுடைய ஸ்ரீ கிருஷ்ணபகவான், முன் ஏழு, எட்டு, ஒன்பது என்னும் இம்மூன்றத்தியாயங்களால் தற்பதார்த்தரூபான பரமேசுரரென்னும் தம்முடைய சோபாதிகரூபத்தையும், நிருபாதிக சொரூபத்தையும் காண்பித்து, அத்தற்பதார்த்தரூபான தம்முடைய * விபூதிகள் சோபாதிகசொரூபத்தின் தியானத்திலும், நிருபாதிகசொரூபத்தின் ஞானத்திலும் உபாயபூதங்களாதலின் அவற்றை ஏழாமத்தியாயத்திலும், ஒன்பதாமத்தியாயத்திலும் † சஞ்சேபமாகக் கூறி, மீண்டும் தியானத்தின்பொருட்டும், ஞானத்தின்பொருட்டும் இதில் விஸ்தாரமாகக்கூற நினைத்து, அருச்சுனனை நோக்கி, "விஜய! யாவராலும் அறிதற்கரிய பரமேசுரனான என்னுடைய நிலைமைகளாகிய விபூதிகளை முன்னே ஏழாமத்தியாயத்திலும் ஒன்பதா மத்தியாயத்திலும் சஞ்சேபமாகவே உரைத்தருளினேன்; அவ்வாறு சுருக்கமாகக் கூறப்பட்ட அவற்றைக் கேட்டு உரிய மனத்தில் களிப்புமிகும்படி சந்தோஷிக்கின்ற உனக்கு அவ்

---

* விபூதி - உத்தமகுணம்; பெருமை; செல்வம்.

† சஞ்சேபம் - சுருக்கம்.

விபூதிகளை இனி விஸ்தாரமாக உரைக்கின்றேன் கேட்பாயாக," என்று, தம்முடைய திருவாக்கால் அருச்சுனனுக்கு அவற்றில் அன்புமிகும்படி அவற்றை உறுதிபான வாக்கியங்கள் மூலம் சொல்லத்தொடங்கினவராய் மீண்டும் அவனை நோக்கி, "அருச்சுனா! எனது சொரூபமானது, தேவர் முதலியோருக்குக் காரணமாவதால், அந்த இந்திரன் முதலிய தேவர்களும், பிருகுமுதலிய முனிவர்களும், அசுரர்களும், சித்தர்களும் ஆகிய எல்லோரும் எனது கிருபையினாலல்லாமல் என்னுடைய பிரபாவத்தை அறியமாட்டார்கள்; ஆயினும், சிலர் என்னுடைய பக்தியினாலறிவார்கள்; அவ்வாறு மரணமும் ஜனனமுமில்லாத லோகமகேசுரனான என்னைத் தமதான்மாவோடபேதமாக அறிபவர், சர்வபாவகர்மங்களையும் அறும்படி விடுத்து, நிரதிசயரூபமான முத்தியை அடைவர்.

இனி, எனது லோகமகேசுரத்தன்மையைக் கூறுகின்றேன் கேள்: சராசரங்களை ஆராய்ந்தறியும்படியான அந்தக்கரணத்தின் சாமர்த்தியம், சித்தத்தின் நிர்விகாரத்தன்மை, பல விரதங்களால் சரீரேந்திரியங்களை மெலிவித்தல், ஆன்மா, அநான்மா ஆகியவைகளை ஆராயும் ஞானம், தர்மத்தாலுண்டாகின்ற கீர்த்தி, அதர்மத்தாலுண்டாகின்ற நிந்தை, மனவாக்குக் காயங்களால் சர்வப்பிராணிகளையும் சிறிதுந் துன்பப்படுத்தாமை, மெய்ம்மை கூறல், சப்தாதி விஷயங்களினின்றும் அந்தக்கரணத்தை நிவிர்த்தித்தல், சுரோத்திரம் முதலிய இந்திரியங்களைச் சப்தாதி விஷயங்களினின்றும் நிவிர்த்தித்தல், நல்லஜபம், உத்தமமான தேசகாலங்களில் சத்பாத்திரத்தில் சிரத்தையோடும் அன்னம் சுவர்ணம் முதலியவற்றைத் தானஞ்செய்தல், மரணம், ஜனனம், பிராரப்தவசத்தாற் கிடைத்த சிறிதுயோக்கிய பதார்த்தங்களைக் கொண்டு சந்தோஷித்தல், சுகம், துக்கம், பயம், பயமில்லாமை, ஆகிய லோகப்பிரசித்தமான இவ்வளவு காரிய விசேஷங்களும், சர்வப்பிராணிகளுக்கும் பரமேசுரனான என்



னிடத்தினின்றே தத்தங் காரணங்களோடு உற்பத்தியாகின்றன; இவ்வாறுண்டாகும் விசேஷத்தை நீ அறிவாய்; இன்னும் எத்தகைய கூறுபாடான தவங்களையுடைய பிருகு முதலிய சப்தமகாரிஷிகளும், சகலவுலகத்தையும் ஸ்தாவர ஜங்கமரூபமாக வுண்டாக்கிய சுவாயம்பு முதலிய பதினான்கு மனுக்களும், சனகர் முதலிய நான்கு மகாரிஷிகளும் சிருஷ்டியின் ஆதிகாலத்தில் இரண்ணியகர்ப்பரூபனான எனது * சங்கற்பமாத்திரத்தாலேயே உதித்தனர். இவ்வாறு இவர்களுண்டானார்களென்பதையும் நீ சம்மதிப்பாய். இந்தப்படி சர்வ ஜகத்திற்குங் காரணரூபனான என்னில் சர்வலோகத்தின் மகேசுரத்தன்மை ஏற்பட்டிருக்கின்றது.

'இவ்வாறான உமது மகேசுரத்தன்மையை உணர்ந்தோர் எவ்வாறு உம்மைப் பூஜிப்பர்?' என்று நீ வினவி, அவ்விவரத்தை அறிய இச்சைகொள்வாய்; ஆதலின், அவ்விவரத்தையுங் கூறுகின்றேன் கேள்: மேற்கூறியபடி சர்வலோகமகேசுரனைக் குரு சாஸ்திர வுபதேசங்களால் உள்ளபடி என்னை அறிந்த அதிகாரிகள், பரமேசுரனான என்னிடத்தே நிலைபெற்ற பிராணனோடும் தமது சித்தத்தை அர்ப்பணஞ் செய்வர்; தம்மிடத்திற் சிரத்தையுடைய மாணாக்கரையும் அப்படியே பரமேசுரனான என்னிடத்தில் அவருடைய சித்தத்தையும் பிராணனையும் அர்ப்பணம் பண்ணும்படிச் செய்வர்; தம்மோடொத்த அறிவுடையோர் வரின் அவருக்குச் சுருதியுத்திகளால் என்னையே போதிப்பர்; இதுவே அவர் என்னைப் பூஜிக்கும் விதமாம்; இவ்வாறான எனது பஜனத்தினாலேயே அறிஞராயினோர் சந்தோஷிப்பர்; இச்சந்தோஷத்தினால் இன்பத்தையும் அடைவர்.

இனி, முன் சொன்னபிரகாரம் என்னைப் பூஜிக்கும் அதிகாரிகளுக்கு நான் செய்யும் நிர்க்குண சொரூபத்தின் பிராப்திரூபமான பயனைக் கூறுகிறேன் கேட்பாயாக: எப்பொழுதும் முன்கூறியபிரகாரம் பரமேசுரனான என்னைப் பிரீதி

* சங்கற்பம் - நியமம்.

யுடன் பஜனஞ் செய்பவர்க்கு பரப்பிரமமாகிய நான் ஆபாசத்தைப் போக்கி, எனது வாஸ்தவ சொரூபத்தை ஆராயும் புத்தியைக் காப்பாற்றிக் கொடுத்து, அவர்கள் வேண்டிய வரங்களையும் குறைவறவருளி, அவ்வரத்தினால் அவர் அறியும் பொருளாய், அவரது ஆன்மாகார விருத்தியின்கண் நின்று, அவரது அந்தக்கரணத்தின்கண்ணுள்ள அஞ்ஞானத்தால் உற்பத்தியாகின்ற ஆவரணமாகிய இருள் முழுவதையும், மறைவில்லாத முன் சொன்ன விருத்திஞானரூபமான தீபத்தினாலே நாசமாகும்படி பண்ணுவேன்,'' என்றுரைத்தருளினார்.

இவ்வாறு கூறவே, அருச்சுனன், மேற்கூறியபடி பகவானுடைய விபூதியையும், சர்வக்ஞத்வம் சர்வசக்தி சம்பந்த்வ முதலிய ஐசுவரியமாகிய யோகத்தையும் இன்னும் விசேஷமாகக் கேட்க விரும்பி அவர் முன்னே நின்று, ``பகவானே! 'நாநாபேதமுடைய ஜனனமற்றவன், ஒன்றினும் பிரிதலில்லாத விபு, பேரானந்தம், சர்வஜகத்திற்குங் காரணமாகிய சொப்பிரகாசன், அழிவில்லாதவன், சுருதிகளாற் கூறுதற்கரிய உத்தமன், எல்லாவற்றையும் தோற்றுவிப்பவன்,' என்று உம்மைப்பற்றி மெய்ம்மையான ஞானநிஷ்டையையுடைய நாரதர், அசிதர், தேவலர், வியாசர், முதலிய ரிஷிகள் என்னிடத்து உரைத்தருளிய எல்லாச் சிறப்புக்களையும் நீரே நேரில் எனக்குரைத்தருளினீர்; சர்வ பூதங்கட்கும் ஒப்பற்ற காரணரே! சர்வ பூதங்களையும் நியமிப்பவரே! உத்தமர்களால் துதிக்கத்தக்கவரே! ஆதித்தன் முதலிய தேவதைகளுக்கும், உலகங்களுக்கும் இறைவரே! நீர், 'நிருபாதிகரூபனும், சோபாதிகரூபனுமான என்னை யான் அறிவிப்பதல்லாமல் ஒருவருமறியார்; ஒருவர் உபதேசமின்றி என்னை யானே அறிவன்,' என்றுரைத்தருளிய வாக்கியங்களால் அறியத்தக்கனவாக உள்ள அப்பொருள்களெல்லாம் சத்தியமானவைகளேயாம்; யானும் அவற்றின் உண்மையை நிச்சயித்துச் சந்தேகந் தவிர்ந்தேன். ஆயினும், நான், வேறு வேறு தோற்-



றங்களுக்கு இருப்பிடமாய்நிற்கும் உலகின்கண்ணே எப்படிப்பட்ட உருவங்கள், மெய்ம்மையான தன்மையையுடைய உமது விபூதியைச் சார்ந்தவைகளென்பதை அறிந்திலேன்; ஆதலால், உமது விபூதியைச் சார்ந்த அந்தப் பொருள்களெல்லாவற்றையும் உம்மைத் தஞ்சமென நம்பிய அடியேனுக்கு மறைக்காமல் உரைத்தருளுவீராக; உம்முடைய விபூதிகளைக் கேட்டுணர்ந்துகொள்ளுதலாகிய இந்த நெறியே நான் சிந்தித்துப் பிழைக்கும்படியான வழியாம்; முன்னே ஏழாமத்தியாயத்திலும், ஒன்பதாமத்தியாயத்திலும் விபூதிகளைச் சுருக்கிக் கூறிய உம்முடைய திருவாக்காகிய மேலான வமிர்தத்தைச் செவியாகிய வாயின்வழியாகப் பானஞ் செய்த எனக்கு இன்னும் அதனால் திருப்தி யுண்டாகவில்லை; இக்காரணத்தாலேயே அவ் விபூதியோகங்களை விஸ்தாரமாக வுரைத்தருளவேண்டுமென்று உம்மிடம் இப்போது விண்ணப்பஞ் செய்துகொண்டேன்; என் விருப்பப்படியே அவற்றை உரைத்து எனக்கு மனத்திருப்தி யுண்டாகும்படிச் செய்வீராக,'' என்று கூறினான்.

இவ்வாறு அருச்சுனன் கூறவே * பூத † பவிஷ்ய ‡ வர்த்தமானமென்ற இம்மூன்று காலங்களிலும் பெருகுதலும் அருகுதலுமில்லாத பெருமையையுடைய ஸ்ரீ கிருஷ்ணபகவான், அவன் விருப்பத்தின்படியே தம்முடைய விபூதிகளைக் கூறத்தொடங்கினவராய் அவ்வருச்சுனனை நோக்கி, ``அறஞ் செய்ய விரும்பும் மனத்தையுடைய விஜயா! விஸ்தாரமான என்னுடைய விபூதிகட்கு ஓர் அந்தமில்லை யாதலால், ஜனித்தனவான அவ்விபூதிகளை முடிவுபெறச் சொல்லுதல்கூடுமோ? கூடாது. ஆதலின், விஸ்தாரமான அவ்விபூதிகளிலே சிறந்த சில. விபூதிகளை இப்போதுனக்குரைக்கின்றேன் கேட்பாயாக: எங்கும் பரவிநிற்கும் பிராணிகட்கெல்லாம் இருதயத்தின்கண்ணுள்ள பிரத்தியகான்மாவாகிய வாசுதேவன் நானே ஆகின்

* பூதம் - இறந்தகாலம். † பவிஷியம் - எதிர்காலம். ‡ வர்த்தமானம் - நிகழ்காலம்.

றேன்; என்னை இத்தன்மையுடையவனாகக் கருதி அபேதமாகத் தியானித்தல் உத்தமாதிகாரியின் இலக்ஷணமாம்; ஆதாலல், நீ இவ்வாறு பரமேசுரனாகிய என்னை அபேதமாகத் தியானிப்பாயாக; இன்னும் நாநாபேதமாக விருக்கும் இப்பிராணிகட்கெல்லாம் உற்பத்தியும், ஸ்திதியும், நாசமும் பரமேசுரனான நானே ஆகின்றேன்; இத்தன்மை யுடையவனாகக் கருதி என்னைத் தியானித்தல் மத்தியமாதிகாரியின் இலக்ஷணமாம்; மேற்கூறியபடி உத்தமாதிகாரியின் இலக்ஷணப்படி என்னைத் தியானிக்க உனக்குச் சாமர்த்திய மின்றாயின், இந்த மத்தியமாதிகாரியின் இலக்ஷணத்தையனுசரித்தாயினும் நீ என்னைச் சர்வப் பிராணிகளின் உற்பத்தி, ஸ்திதி நாசரூபமாகவும், அச்சர்வப் பிராணிகளின் காரணரூபமாகவும் கருதித் தியானிப்பாய்; இவ்வகைத் தியானத்திலும் உனக்குச் சாமர்த்திய மின்றாயின் மந்தாதிகாரிகளுக் குரியனவாக அடியிற் கூறப்படும் என்னுடைய விபூதிகளை மனத்திட்கொண்டு அவற்றின் மூலமாயேனும் என்னைத் தியானிக்கக்கடவாய். இனி அவற்றைக் கூறுகிறேன் கேள்:

துவாத சாதித்தியருள்ளே விஷ்ணுவென்னும் பெயருடைய சிறந்த ஆதித்தியன் நானாகின்றேன்; சப்தமருத்துக்களுள்ளே மரீசியென்னும் சிறந்த மருத்துவும் நானாகின்றேன்; அக்கினி முதலிய பிரகாச வஸ்துக்களுள்ளே எங்கும் வியாபித்த பிரகாசத்தையுடைய சூரியன் நானாகின்றேன்; ஆகாயத்தின்கண்ணுள்ள அசுவினிமுதலிய சர்வ நக்ஷத்திரங்களுள்ளே அவற்றிற் கதிபதியாகிய சந்திரன் நானாகின்றேன்; இருக்கு முதலிய நான்கு வேதங்களுள்ளே கானத்தின் மதுரத்தன்மையினால் மிகவும் இரமணியமான சாமவேதம் நானாகின்றேன்; அக்கினி, வாயுமுதலிய சர்வ தேவதைகளுள்ளே எல்லாத் தேவதைகளின் அதிபதியாகிய இந்திரன் நானாகின்றேன்; பதினோரிந்திரியங்களுள்ளே, சர்வேந்திரியங்களையும் பிரவிர்த்திப்பிக்கின்ற சங்கற்பவிகற்பான்மகமான மனம் நானாகின்றேன்; இயந்திரம்போலுஞ் சுழல்வனவாகும் பிராணிகளின் சம்பந்திகளான காரியகாரண * சங்காதங்களில் சைதந்நியத்தை † அபிவியக்தியாகப் பண்ணும் புத்திவிருத்திரூபமான சேதனம் நானாகின்றேன்; ஏகாதசவுருத்திரர்களுள்ளே மந்திரரூபனான சங்கரன் நானாகின்றேன்; யட்சர், ராக்ஷதர் ஆகிய இவருள்ளே சிறந்த குபேரன் நானாகின்றேன்; சிகரங்களையுடைய பர்வதங்களுள்ளே மிகவும் சுந்தரமான மகாமேருவும் நானாகின்றேன்; அஷ்டவசுக்களுள்ளே சிறந்த அக்கினியும் நானாகின்றேன்; சேனாதிபதிகளுள்ளே சிறந்த தேவசேனாதிபதியாகிய ஷண்முகன்நானாகின்றேன்; தடாகங்களுள்ளே சமுத்திரம் நானாகின்றேன்; கெடுதலில்லாத அசுவமேதம், ஜ்யோதிஷ்டோம முதலிய சர்வ யாகங்களுள்ளும், இம்சை முதலிய சர்வதோஷங்களு மின்மையின் மிகவுஞ் சுத்தி செய்வதாயுள்ள ஜபரூபமான யாகம் நானாகின்றேன்; உலகத்தில் சலனமற்று நிலைபெற்றனவாகிய சர்வ ஸ்தாவரபதார்த்தங்களுள்ளும் இமாலயபர்வதமாய் நிற்கின்றவனும் யானாகின்றேன்; பிரமாவின் புத்திரர்களான மஹாரிஷிகளுள்ளே பிருகுவென்னும் ரிஷியும் நானாகின்றேன்; சகலராஜர்களினுடைய புரோகிதர்களுள்ளே இந்திரனுடைய புரோகிதனான பிருகஸ்பதி நானாகின்றேன்; அர்த்தத்தின் வாசகமென்னும் பதரூபமான சர்வ வாக்குகளுள்ளும், பிரமத்தின் வாசகமென்னும் ஏகாக்ஷரரூபமான ஓங்காரம் நானாகின்றேன்; சர்வவிருக்ஷங்களுள்ளும் அரசவிருக்ஷம் நானாகின்றேன்; தேவரிஷிகளின் மத்தியில் உவமை சொல்லுதற்கரிய நாரதனென்னும் பெயருடைய தேவரிஷியும் நானாகின்றேன்; சிறந்த கானமுள்ள கந்தருவர்களுக்குள்ளே உயர்ச்சிபெற்ற சித்திரரதனென்னும் கந்தருவனும் நானாகின்றேன்; பிரயத்தன மில்லாமலே ஜனனமாத்திரத்தினாலே தர்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியத்தன்மை முதலிய குணங்களும், பரமார்த்த வஸ்து நிச்சயமும் அடைந்துள்ள சித்தர்களின் மத்தியில் கபிலமுனி நானாகின்றேன்; அசுவங்க

* சங்காதம் - கூட்டம்.

† அபிவியக்தி - பிரத்தியக்ஷ யோக்கியதை.

ளுள்ளே பாற்கடலிலே யுண்டான முதன்மையாகிய அசுவமென்று சொல்லப்பட்ட உச்சைச்சிரவம் நானேயாகின்றேன்; கைகளையுடைய யானைகளுள்ளே யான் ஐராவதமாகின்றேன்; அறிவுடைய மநுடஜனனத்தில் யான் வேலாயுதத்தைத் தாங்கிய அரசாகின்றேன்; ஆயுதங்களுள்ளே ததீசியின் அஸ்தியினின்று முண்டான வச்சிரமும், விஷமுள்ள சர்ப்பங்களுள்ளே, அந்தச் சர்ப்பங்களுக்கு அரசான வாசுகியும், விஷமில்லாதனவாகிய நல்ல நாகங்களுள்ளே உபமானித்தற்கரிய நாகராஜாவான சேஷனும், பசுக்கூட்டத்தில் வேண்டியவற்றைக் கொடுக்கும் வசிஷ்டருடைய காமதேனுவும் ஆகிய இவையெல்லாம் இங்குச் சொல்லிவந்த முறைப்படி யானே ஆகின்றேன் என்பதை நீ அறிவாய்.

இன்னும், ஜலத்தின்கண் சஞ்சரிக்கின்றவைகளுள்ளே அவற்றிற் கரசனான வருணனும், தண்டஞ் செய்பவருள்ளே யமனும், போகமாத்திரத்தைப் பிரதானமாகவுடைய விருப்பங்களுள்ளே புத்திரோற்பத்திக் கேதுவான இச்சையும், செருக்கடைகின்ற தைத்தியருள்ளே சிறந்த பிரகலாதனும், மிகுதியாகக் கணிக்கப்பட்டவைகளுள்ளே காலகணிதமும், பரமேசுரனான நானேயென்றுசந்தேகம்நீங்கும்படி நீ நிச்சயிப்பாய்; மிகுந்த போரைச் செய்யும் தோளிணையுடைய அருச்சுனா! இன்னும், பக்ஷிகளுக்குள்ளே பக்ஷிராஜனாகிய கருடன் நானாகின்றேன்; மிருகங்களுள்ளே ஒருவரால் கிட்டுதற்கரிய மிருகங்களின் அரசாகிய சிம்மம் நானாகின்றேன்; வேகமுடைய பதார்த்தங்களுள்ளே வாயு நானாகின்றேன்; யுத்தத்தில் மிகவும் அஸ்திர சஸ்திரங்களைத் தரித்திருப்பவராகிய வீரர்களுக்குள்ளே தசரத புத்திரனாகிய இராமன் நானாகின்றேன்; மச்சங்களுள்ளே மகரமச்சமும் நானாகின்றேன்; யமுனை, கோதாவரிமுதலிய நதிகளுள்ளே மிகவுஞ் சிரேஷ்டமாகிய கங்கை நானாகின்றேன்; ஒரு குருவினிடத்து அத்தியயனம் பண்ணும் இரண்டு மாணாக்கராயினும், அல்லது குருமாணாக்கரிருவருமாயினும் தத்துவ நிர்ணயபரியந்தம் விவ



கரிக்கும் வினவிடைரூபமான கதையென்னும் வாதம், ஒருவரை யொருவர் ஜயித்தற்கு இச்சையுள்ள புருஷர், தங்கள் தங்கள் பக்ஷத்தை ஸ்தாபனஞ்செய்யுங் கதையென்னும் ஜல்பம், ஒருவரையொருவர் ஜயிக்கும்படியான இச்சையுடைய புருஷர், தமது பக்ஷத்தைத் தாபனம் பண்ணாத கதையென்னும் விதண்டை ஆகிய இவற்றுள் சிறந்ததாகிய வாதம் நானாகின்றேன்; வித்தைக ளெல்லாவற்றுள்ளும் மோக்ஷத்திற் கேதுவான அரிய பிரமவித்தை நானாகின்றேன்; வர்ணரூபமான அக்ஷரங்க ளெல்லாவற்றுள்ளும் சர்வ வாக்குகளின் உருவமாகச் சுருதியிற் கூறியுள்ள அகாராக்ஷரம் நானாகின்றேன்; அழிவற்றகாலம் நானாகின்றேன்; அதுவுமல்லாமல், சமாச சமூகங்களுள்ளே மேலான * துவந்துவ † சமாசம் நானாகின்றேன்; பயனைக் கொடுப்பவருள்ளே புண்ணிய பாவமென்னும் இருவினைகளின் பயனைக் கொடுப்பவனான அந்தரியாமியும் நானாகின்றேன்; சம்ஹார கர்த்தருள்ளே நிலைபெற்ற சர்வ வுயிர்களையும் சம்ஹாரஞ் செய்யும் மிருத்யுவும், அவ்வுயிர்களை உற்பத்தி செய்பவனும் நானாகின்றேன்.

இன்னும், பெண்களுள்ளே பிரக்கியாதியை உண்டாக்கும் கீர்த்தியென்னும் சக்தி, தர்மார்த்த காமமென்னும் மூன்றையும் உண்டாக்கும் திருவென்னும் சக்தி, சர்வார்த்தங்களையும் விளக்குவதான சம்ஸ்கிருத வாணிரூபமான சரஸ்வதியென்னும் வாக்கு சக்தி, அநேக கிரந்தங்களின் அர்த்தங்களைத் தாரணஞ் செய்யும் மேதையென்னும் சக்தி, விருப்பு வெறுப்பு ஆகிய இரண்டினும் சித்தத்தை விகாரமடையாதிருக்கச்செய்வதாகிய க்ஷமையென்னும் சக்தி, அநேகமான பீடைகள் வந்தடையினும் சரீரேந்திரியரூப சங்காதங்களை ஸ்திரத்துவமாகப் பண்ணுவதாகிய திருதியென்னும் சக்தி, முன்னே அநுபவித்த பொருள்களை அநேக

---

* துவந்துவம் - ஒன்றையொன்று தொடர்ந்துநிற்கும் இரட்டைச்சொற்றொடர்; அஃது இராமகிருஷ்ணர் என்பது போன்றது.

† சமாசம் - பதங்களின் சந்தி.

காலத்திற்குப் பின்னரும் நினைக்கும்படி பண்ணுவதாகிய ஸ்மிருதியென்னும் சக்தி என்று வகுத்துக் கூறப்படும் சப்த மாதரும் நானுகின்றேன்; ஆறிருதுக்களுள்ளே சுகந்தமுள்ள புஷ்பங்கட் குறைவிடமாய் வருகின்ற வசந்த இருது நானுகின்றேன்; எனக்கு நண்பனுன அருச்சுனு! கானத்திற்குரிய ஏழு சாமங்களுள்ளும் சர்வத்தையும் ஈசுரரூபமாக இந்திரனுல் ஸ்துதிக்கப்பட்ட சிறப்புள்ள பிருகத்சாமம் நானுகின்றேன்; தாம் செய்யும் உபகாரங்களால் மண்ணுலகத்திலுள்ளவர் சந்தோஷிக்கும்படி வரும் பன்னிரண்டு மாதங்களுள்ளே யாவரும் புகழத்தக்கதும், தேவர்களுக்கு விடியற்கால நேரமானதுமாகிய மார்கழி மாதமும் நானுகின்றேன்.

மலையை நிகர்த்த புயங்களையுடைய அருச்சுன! இன்னும், நியமமாக அட்சரங்களையும், பாதங்களையுமுடைய சந்தஸென்பவைகளுள்ளே இருபத்துநான் கட்சரங்களையுடைய காயத்திரியென்னும் பெரிய சந்தஸுமு நானுகின்றேன்; வஞ்சிப்பவைகளுள்ளே பழமையான சூது நானுகின்றேன்; முயற்சி செய்பவரிடத்தில் நியமமாகப் பயனை யடைவிக்கும்படியான முயற்சியும் நானுகின்றேன்; சத்துருக்களை வெல்லுகின்ற வீரர்களிடத்தில் சத்துருஜயமென்னும் வெற்றியும் நானுகின்றேன்; மிகுந்த வல்லமையுடையோரிடத்தில் வல்லமையும் நானுகின்றேன்; சாத்துவிக புருஷரிடத்தில் சத்துவகுண காரியமாகிய தர்மம் வைராக்கியம் முதலியவைகளும் நானுகின்றேன்; ஞானிகளிடத்தில் பிரமான்ம ஐக்கியரூபமான ஞானமும் நானுகின்றேன்; யாதவர்களுக்குள்ளே உனக்கிப்போது பிரமவித்தையை உபதேசிக்கின்ற வசுதேவ புத்திரனுகிய இந்தக் கிருஷ்ணனும் நானுகின்றேன்; சாஸ்திரங்களை ஆராய்ந் தறிந்தவர்களுக்குள்ளே சுக்கிரனென்னும் கவிசிரேஷ்டனும் நானுகின்றேன்; மிக்க கிருபை பொருந்திய பாண்டவர்களுக்குள்ளே அருச்சுனனுகிய நீயும் நானுகின்றேன்; மேலுலகங்களிற் சஞ்சரிக்கின்ற வேதார்த்த மனனசீலருள்ளே ஸ்ரீ வேதவியாசமுனியும் நானுகின்றேன்; எண்ணுதற்கரிய மறைபொருள்களில் வாக்கேந்திரிய நிக்கிரகரூபமான மௌனம் நானுகின்றேன்; பெருமைபொருந்திய இச்சகத்தனைத்திற்கும் சேதனரூபமான காரணம் நானுகின்றேன்; பரமேசுரனுன என்னைத் தவிர்ந்து யாதொரு பொருளுமில்லை; எல்லாம் என்னுடைய சொரூபமே; சர்வக்ஞராயுள்ளோர் வருந்தி யுரைக்கப்புகுந்தாலும் அவரால் என் பெருமைக்கு அளவுரைத்தல் முடியாது. இப்போது இவ்வாறு அந்தமற்ற என்னுடைய விபூதிகளை உனக்கு உத்தேசமாக வகுத்துக் கூறினேன்; இவ்வுலகின்கண்ணே பெருஞ் செல்வத்தை யுடையனவும், மெய்ம்மையான பெரிய முயற்சியை யுடையனவுமானவையென்று சொல்லப்பட்ட இந்த அரிய பிராணிகளும் பொருள்களும் எனது சக்தியின் அம்சத்தால் உற்பந்நமாயினவென்று நீ அறியக்கடவாய். இனி அநேகமாக என்னுடைய விபூதிகளை விரித்துரைப்பதால்யாது பயன்? முடிவாகச் சொல்லுமிடத்து இங்குள்ள பலவிதமான பிராணிகள் முழுவதும், எல்லா வுலகங்களும் அடங்கிநிற்பது பரமேசுரனுன என்னிடத்திலேயாம். அப்படியாயினும் அப்பிராணிகளோடும் அவ்வுலகங்களோடும் யான்சம்பந்தியேன்; ஆதலின், நீ,என்னுற்கூறப்பட்ட இவ்விபூதிகளையெல்லாம்.மனத்துட்கொண்டு பரமான்மாவாகிய என்னைச் சர்வஜகத்தினும் வியாபகனுகச் சிந்திக்கக்கடவாய்," என்றுரைத்தருளினர்.

பத்தாவது
விபூதியோகவத்தியாயம் முற்றுப்பெற்றது.

---



பதினோராவது
## விசுவரூபவத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

"சுருளார் கின்ற துழாய்முடியாய்
  சொல்லு மனமுந் தொடர்வரியா
யுருளார் சகட மிறவுதைத்தா
  யுயிர்கட் கெல்லா முள்ளுயிரே

இருளார் பவத்தே கிடந்துழைக்கு
மென்பா லிரங்கி நீயிசைத்த
வருளா ரமுதென் செவிகளா
லாரப் பருகி யயர்வொழிந்தேன்."

"தெரியா வகைநீ யெங்குமாய்
நின்ற வந்தத் திருக்கோல
மரியாய் மெய்யே யடியேற்குங்
காண லாமோ வெனவன்பாற்
பரியா நின்ற சிந்தையொடும்
பார்த்தன் வினவப் பழமறைதேர்
கரியா னவனுக் கப்பரிசே
காட்ட வேண்டிக் கட்டுரைப்பான்."

முன்னம் பத்தா மத்தியாயத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் தம்முடைய பலவிதமான விபூதிகளை யுரைத்தருளி, ஈற்றில், "இந்தப் பலவிதமான பிராணிகள் முழுவதும், சகலமான ஜகத்தும் அடங்கிநிற்பது என்னிடத்திலேயாம்," என்று தம்முடைய சர்வவிசுவான்மக சொரூபத்தைக் கூறியருள அருச்சுனன் அதனைக் கேட்டதனால் மிக்க சந்தோஷமடைந்து, அந்த விசுவான்மக சொரூபத்தைத் தரிசிக்கவேண்டுமென்னும் இச்சை பொருந்தினவனாய் அவரை நோக்கி, "சுருளாகப் பொருந்தியிருக்கின்ற துளபமணிந்த முடியையுடையவரே! வாக்கும் மனமும் சென்று பற்றுதற்கரியவரே! உருளை தங்கிய சகடவடிவமான சகடாசுரன் மரணமாகும்படி அவனை உதைத்தவரே! பிராணிகட்கெல்லாம் அந்தரான்மாவா யிருப்பவரே! சோகமோகங்கள் நிறைந்த சம்சாரசாகரத்தில் மூழ்கிக்கிடந்து வருந்துகின்ற தீனனை என்மீது கருணைகூர்ந்து, சர்வஞ்ஞராகிய நீர் உரைத்தருளிய உம்முடைய திருவாக்காகிய அரிய அமிர்தத்தை என் செவிகளாகிய வாய்களால் உள் நிறையப் பருகி, எனது மோகம் நீங்கப்பெற்றேன்; ஒருவராலுங் காணுதற்கரிய புருஷோத்தமராகிய பிரபுவே! இனி, ஒருவருடைய திருஷ்டிக்குந் தோன்றாதபடி நீர் எவ்



விடத்தும் வியாபித்தவராய் ஞானம், ஐசுவரியம், சக்தி, வீரியம் முதலியவைகளோடு கூடி நிற்கின்ற அற்புதமான அந்த உமது விசுவரூபம், உள்ளபடியே அடியேனுக்குங் காணக் கூடியதாகுமோ? அங்ஙனங் கூடுமாயின் அதனை எனது திருஷ்டிக்கு விஷயமாகச் செய்தருளவேண்டும்," என்று அன்பினால் வருந்துகின்ற மனத்தோடும் கூறினான்.

அங்ஙனம் பார்த்தன் கூறவே பழைய வேதங்களால் ஆராயப்பட்ட பரமகாருணியரான ஸ்ரீ கிருஷ்ணபகவான் அவனுக்கு அவ்வாறே தமது திருவுருவத்தைக் காட்டவிரும்பினவராய் அருச்சுனனை நோக்கி, "விஜயா! நீ பார்க்கவிரும்பும் என்னுடைய விசுவரூபமானது, அபரிமிதமான அநேகம் அவயவ விசேஷங்களை யுடையது; அபரிமிதமான நீலம், சிவப்பு முதலிய பலவர்ணங்களையுடையது; கற்பனை பண்ணி ஒருவர் சிருஷ்டித் தறியப்படாதது; மிகவும் விரிந்த ஆகாயமும் தன்னை நோக்கி வெட்கிச் சுருங்கும்படியாக விசாலித்தது; கண்ணாற் பார்த்தளவிடுதற்கரியது. இத்தகைய உருவத்தை உனக்குக் காட்டுகின்றேன் நீ காண்பாய். நாற்பத்தொன்பது மருத்துவரும், பன்னிரண்டு சூரியரும், எட்டு வசுக்களும், பதினொரு உருத்திரர்களும், அசுவினிகுமாரர் இருவரும் என்னிடத்தேயுள்ளார்; முன் காணாமையினாலே யாவரும் காண விரும்பும் அற்புதமாகிய அநேகம் உருவங்களும் ஜயாபஜயங்களும் என்னிடத்தே யுள்ளன. இத்தகைய உருவத்தை உன் புத்தியின்கண் பொருந்தும்படி நன்றாக உணரக்கடவாய்," என்று சொல்லி, உடனே அவ்வருச்சுனனுடைய * பிராகிருதமான ஊனக்கண்களிரண்டும் தமது திவ்யரூபத்தை நன்றாக அறியமாட்டாவென்று கருதி, திவ்ய ஞானக் கண்ணை அவனுக்குக் கொடுத்தருளித் தாம் முன்னே கூறியபடியே விசுவரூபங்கொண்டு அவ்வருச்சுனன் தவிர அக்குருக்ஷேத்திரத்தில் நின்ற அரசர் முதலியோர் அறியாதபடி அவனுக்கு முன்னே நின்றார்,''' என்று கூறினார்.

---

* பிராகிருதம் - அழியத்தக்கது.

சஞ்சயர் இவ்வாறு கூறவே திருதராஷ்டிரன் அவரிடம், "சஞ்சயரே! இனி ஸ்ரீகிருஷ்ணமூர்த்திகொண்ட விசுவரூபத்தின் தன்மைகளை எனக்கு விளக்கமாகக் கூறியருள்வீராக," என்று வேண்டினன். அப்போது சஞ்சயர் அவ்வாறே கூறத் தொடங்கினவராய் அவனை நோக்கி, "'திருதராஷ்டிரரே! ஸ்ரீ கிருஷ்ணபகவான் அருச்சுனனுக்கு ஞானோபதேசஞ் செய்த அக்குருக்ஷேத்திரத்தில், அவ்வருச்சுனன் பொருட்டு அவர் கொண்டருளிய அவ்விசுவரூபத்தை இங்கு ஒருவரால் அளவிட்டுச் சொல்லுதல் கூடுமோ? கூடாது. ஆயினும், தெரிந்தவரையில் அவ்வுருவத்தின் இலக்ஷணங்களுட் சிலவற்றைக் கூறுகின்றேன்; அந்தப் பகவான் எடுத்த விசுவரூபமானது, வண்டுகள் நெருங்கித் தேனையுண்ணும் புஷ்பங்கள் செறிந்த திவ்வியமான மாலைகளும், பீதாம்பர முதலிய திவ்விய வஸ்திரங்களும், சந்தன முதலியவைகளும் கொண்ட கோலமுடையதாகி, முடிவற்று எங்கும் நிறைந்ததாகி, எண்ணிறந்த பல கோடி சூரியர்கள் மேகங்களையுடைய ஆகாயத்தின் கண்ணே ஏககாலத்தில் வந்துதித்ததை நிகர்த்துப் பிரகாசித்தது; அந்த விசுவரூபத்தின்கண்ணே பொருந்துந் தன்மையை யுடையனவான பாதங்களும், கரங்களும் அநேகங்களாக விருந்தன; முன்பக்கம் அழகுபொருந்தும்படி அலங்கரித்திருக்கும் ஆபரணங்களும் அநேகங்களாக விளங்கின; வாய்களும் அநேகங்களாய்ப் பொருந்தியிருந்தன; பிரகாசிக்கின்ற ஒளிபொருந்திய முகங்களும் அநேகங்களா யிருந்தன; கரங்களில் எடுத்துக்கொண்ட சக்கரம் கதை முதலிய ஆயுதங்களும் அநேகங்களாக விளங்கின; இன்னும் அநேகம் அற்புத வஸ்துக்களும் அவ்வுருவத்தில் விளங்கின; எல்லாம் அதற்குள்ளடங்கியிருந்தன. அப்படிப்பட்ட தமது விசுவரூபத்தை ஸ்ரீ கிருஷ்ணபகவான் காட்டவே அருச்சுனன் அடங்கா மகிழ்ச்சியை அடைந்தான். திருதராஷ்டிரரே! அவன் அவ்வாறு அளவற்ற ஆனந்தத்தை யடைந்தபின்னர் நடத்திய செய்கைகளையுங் கூறுகின்றேன் கேட்பீராக:



அருச்சுனன் மேற்கூறியபடி ஆனந்தமடைந்த பின்னர் ஸ்ரீ கிருஷ்ணபகவான் கொண்டருளிய விசுவரூபத்தின் சிறிதுபாகத்தில் எவ்வகைப்பட்ட பொருள்களும் அடங்கியிருக்கும் விசேஷத்தை நேரே பார்த்து, 'இனி யான் பிழைக்குந்தன்மையை யுடையவனுயினேன்,' என்று கூறி, மேற்சொல்லிபபடி உண்டான சந்தோஷமானது மேலும் மேலும் அதிகரித்தபடியால், செய்வதின்னதென் றறியாமல் பரவசமுடையவனுகித், தனது சிரசானது பூமியிற் பொருந்தும்படி, விசுவரூபங்கொண்டருளிய நாராயணனென்னும் தேவனை நமஸ்கரித்தான்; தேகம் புளகித்தான். பின்னர் கண்களும் மனமும் உருகும்படி அவன் இருகரங்களையுங் குவித்து, கருதுகின்ற உலகங்களையும் அவ்வுலகங்களிலுள்ள சர்வப் பிராணிகளையும் முன்னே சிருஷ்டிகாலத்தில் சிருஷ்டியாநிற்கும் அந்த ஸ்ரீ பகவான் சந்நிதியில் நின்று, "எவரும் வணங்குதற்குரிய தேவர்களும் வணங்கும் தேவனே! உம்முடைய அழகிய விசுவரூபத்தினுள்ளே எவரும் அளவிட்டறியமுடியாத ஸ்தாவரஜங்கமரூபமான பொருள்களெல்லாவற்றையும் உம்மாற் கொடுக்கப்பட்ட ஞானக்கண்ணுற் சந்தேகமறக் கண்டேன்; மும்மூர்த்திகளில் முதல்வனுன சதுர்முகப்பிரமாவை வசிஷ்டர் முதலிய முனிவர்களோடுங் கண்டேன்; பொருந்துதற்கரிய வாசுகி முதலிய சர்ப்பங்களையுங் கண்டேன்; வசு, உருத்திரர், ஆதித்தியர் முதலிய தேவர் கூட்டங்களையுங் கண்டேன்; இன்னும், தண்ணிய கிரணத்தையுடைய மகுடமும், கதையும், சக்கராயுதமும் தரித்தருளி, அழகிய சூரியன் அக்கினியென்னும் அவைகளோடும் ஏகமாய் அவைகளின் பிரபையை யொப்பான பிரபையைப் பொருந்திய உமது விசுவரூபத்தின்கண்ணே நன்றாகப் பார்க்கும்போது நேத்திரங்களும், முகங்களும் அநேகமாக வுடையனவாகிய அநேகம் வடிவங்களைக் கண்டேன்; இந்த உருவமானது இன்ன வுருவமென்று நிச்சயிக்க என்னுல் முடியவில்லை; நான் இதற்கு ஆதியும், அந்தமும், மத்தியுமாகிய இவையனைத்தையு மறியேன்; நழுவுதலை யறியாத அட்சர

மான பிரமத்தை, நான்கு வேதங்களும் ஆராய்ந்து நிச்சயித்து முமுட்சுக்களுக் கறியும்படி உபதேசித்த நிர்க்குணப் பிரமரூபமாகிய வஸ்துவை, மாயையா லுண்டாக்கப்பட்ட ஜகத்துக்கு * அதிஷ்டானத்தை, என்றுமுள்ள நித்தியவஸ்துவை, சாசுவதமான தர்மங்கள் முழுவதும் தம் நிலையினின்றும் வேறுகாதபடி அவற்றைப் பரிபாலனஞ் செய்யும் நெறியுடைய செல்வத்தை, ஒருகாற் பெருகி ஒருகாற் குறையாததை, எனது அநாதியான தெய்வத்தை இவ்வடிவத்தினால் தரிசித்தேன்; இன்னும் இவ்வடிவர், பாலூட்டக்கருதிக் கன்றைத் தொடரும் பசுவைப்போல, எனக்கு நற்கதியைக் கொடுக்க விரும்பி என்னெதிரே நிற்கவுங் கண்டேன்; அன்றியும், இவ்வடிவம் வெற்றியைத் தருகின்ற திறமையோடும் வருகின்ற சந்திர சூரியரையே நேத்திரங்களாகக் கொண்டு விழிப்பதையும், சேர்ந்தாரைக் கொல்லும் உஷ்ணத்தையுடைய அக்கினியை விரிந்தெழும் முகமாகக் கொண்டிருப்பதையும், இதன் தேஜஸானது உலகமெங்கும் வியாபித்து எவரும் அஞ்சும்படி சுடுந்தன்மையையும் உம்மாற் கொடுக்கப்பெற்ற ஞானக்கண்ணாலே நான் ஆச்சரியமுற்றுக் கண்டேன். இவ்வாறு பூமியோடுகூட ஆகாயமும் நிறையும்படி உயர்ந்து திக்குகளிலும் நேரே சென்று விலகுதலில்லாமல் நீர் உமது சொரூபத்தை விரியப்பண்ணியதனால் இவ்வுலகங்களெல்லாம் கலக்கத்தை யடைகின்றன; அற்புதமாயும் உக்கிரமாயுமுள்ள இத்தகைய உமது திருமேனியைக் கண்டு கலக்கமடையாதிருப்பவரெவர்? ஒருவருமில்லை. சுவாமி! உமது விசுவரூபத்தாலேற்படும் இவ்விசேஷங்களை நீர் பார்ப்பீராக.

பகவானே! இன்னும் உமது திவ்வியமான இந்த விஸ்வரூபத்தில், தேவகணங்கள் பயத்தினால் உம்மைச் சரணடைந்து வணங்கவும், அருமையான பெரியதவத்தினையுடைய நாரதர் முதலிய ரிஷிகள் கரங்கள் கூப்பிநின்று உலகுக் கிதமுண்டாகும்படி உம்மை ஸ்துதிக்கவும், கபிலர் முதலிய சித்தர்கூட்டங்கள் கூட்டமாகக் கூடிக்கொண்டு ஜயஜயவென்று உம்மைப் புகழும் தோற்றத்தையும் நான் கண்டேன்; சோரா நிற்கும் உயிரையுடைய விரோசனன் முதலிய அசுரகணங்களையும், கந்தருவர்களாயுள்ளவர்களையும், பின்னும் கிட்டி இத்தன்மையரென் றறியத்தகாதவர்களையும் எனக்கெதிரே கண்டேன். எமது பிதாவாகிய பகவானே! இன்னும் ஆகாயமுற்றும் வியாபித்து அநேக வர்ணங்களையுடையதாய் விளங்கும் உம்முடைய விசுவரூபத்தின் தோற்றமானது, பேயினொழுக்கத்தை விரும்பிய பிறைபோன்ற வக்கிர தந்தங்களையும், பெரிய வாய்களையும் உடையனவாகிய பற்பல முகங்கள் வளரக்கூடியதா யிருக்கின்றது; ஆதலால், உம்முடைய இந்த விசுவரூபமானது யான் அடையலாகுந் தன்மையையுடையதன்று. சர்வான்மாவாகிய ஸ்ரீ பகவானே! இன்னும், ஸ்தாவர ஜங்கமரூபமான இவ்வுலகிற்குத் தஞ்சமாயும், உலகமுழுதுமாயும் நீரே நிற்குந்தன்மையை யான் இப்போது கண்டேன்; இதனால் அடியேனாகிய நான் உய்ந்தனனாயினும், உமது இவ்விசுவரூபத்தைப் பார்க்கப்பார்க்க ஒன்றுக்கு மஞ்சாத என்னுடைய அந்தக்கரணமும் நடுங்கித் தேகேந்திரியாதிகளைத் தரித்துநிற்கத் தைரியமுடையதாகவில்லை; திக்குகளையும் நான் கண்டிலேன்; ஆதலால், நீர், 'பயப்படாதே,' என்று கூறி எனக்கு இச்சமயம் கிருபை செய்தருளவேண்டும்.

சுவாமி! இன்னும் திருதராஷ்டிரருடைய புத்திரர்களாகிய துரியோதனாதியரும், அவர்களுடைய சேனைக்கூட்டங்களும், அத்துரியோதனாதியரின் பொருட்டு யுத்தத்தை மேற்கொண்டு எங்களோ டெதிர்த்து வந்துள்ளவர்களாகிய சல்லியன் முதலிய அரசர்களும், என் படையி லுள்ளவர்களாகிய சிகண்டி, திருஷ்டத்துய்மன் முதலிய அரசர்களும் விசுவரூபமாகிய உம்முடைய நமனையொப்பான வக்கிரதந்தங்களிலகப்பட்டுப் பேதப்பட்டுச் சிதைந்த வுடல்களையுடையவர்களாய் நின்று, வாயுசம்பந்தித்த வேகமான அக்கினியை

* அதிஷ்டானம் - இடம்; நிலை.

யொப்பான உம்முடைய முகங்களிலே விழக்கண்டேன்; உம்மிடத்தினின்று முண்டாகிய சூரவீரர்களென்னும் துரியோதனாதிகளான மனிதரும், மற்றப் பொருள்கள் முழுவதும் மேற்கூறியபடி உம்முடைய முகங்களிலே வீழ்ந்து, சொல்லுதற்கரிய கங்கை யமுனை முதலிய நதிகளெல்லாம் சமுத்திரத்தினின்று முண்டாகி அபுத்திபூர்வமாக அச்சமுத்திரத்திலேயே பிரவேசித்தாற்போலப் பரமேசுரரான உம்முடைய பிரகாசரூபமான வாய்க்குள்ளே அபுத்திபூர்வமாகப் பிரவேசிக்கக் கண்டேன். இன்னும், ஜொலியாநின்ற அக்கினியில், மிகவும் வேகமுடையனவாய்த் தமது நாசத்தின் பொருட்டு விட்டில்கள் பாய்ந்தாற்போல ஆதித்தமண்டலம் போற் பிரகாசிக்கின்ற உம்முடைய முகங்களிலே துரியோதனன் முதலியவர்களும் மற்றப் பிராணிகளும் புத்திபூர்வமாகப் பிரவேசித்து இறக்கின்ற செயல்களையுங் கண்டேன். இலக்குமிக்கு நாயகரே! சர்வத்திர வியாபக விசுவரூபமான பகவானே! இன்னும் நீர் அக்கினியைப்போலப் பிரகாசமான உம்முடைய முகங்களால், மிகவும் வேகமாக முன் சொன்ன பிரகாரம் பிரவேசித்த துரியோதனாதிகளான எல்லோரையும் உணவாக உண்டழித்து அவர்கள் உணவுக்குப் பற்றாமல் மேலும் வெளியிலே நாவை நீட்டி நீட்டி வெறுஞ்சுவை கொள்கின்றீர்; இப்படிப்பட்ட உக்கிரரூபரான உம்மை இத்தன்மையதென்று நான் அறிகிலேன்; உம்முடைய பிரவிர்த்தியும் இன்னதென்றறியாதவனாகின்றேன்; தேவசிரேஷ்டரே! உமக்கு நமஸ்காரம்; நீர் யாவர்? உம்மை உள்ளபடி அறிய விரும்பிய அடியேனுக்கு உம்முடைய தன்மையைக் கூறியருள்வீராக," என்று வணங்கினான்.

இவ்வாறு அருச்சுனன் வணங்கிக் கேட்கவே, எல்லையின்றி எல்லாமாய் நிறைந்துநின்ற ஸ்ரீ பகவான், அவனை நோக்கி, "பார்த்த! அருச்சுனனான நீ தவிரப் பூமிக்குப் பாரமாய் நின்ற துரியோதனன் முதலிய எல்லோரையும் நான் சம்மரித்து அவர்களுயிரை யுண்ணப் பிரவிர்த்தித்திருக்கிறேன்; யுகாந்தமானது கிட்டிய அப்போது உலகமுழுவதையும் சம்மரிக்கும் காலரூபனான பரமேசுரனும் நானாகின்றேன்; இவ்வாறான என்னையும் என்னுடைய பிரவிர்த்தியையும் நீ உணரக்கடவாய்; அருச்சுனா! இங்கே உன்னுடைய சத்துருக்களாகிய துரியோதனாதியர் யாவரும் காலரூபனென்னும் பரமேசுரனாகிய என்னால் இறந்தவர்களென்றே எண்ணுவாய்; நீயோ, அவர்களென்னால் இறத்தலுக்கு * நிமித்தமாத்திரமாவாய்; இவ்வாறு நிமித்தமாத்திரமாய்ப் பீஷ்மதுரோணாதியரை நீ கொன்றாயாகில் அச்சத்துரு ஜயமானது உனக்குத் தர்மமும், இராச்சிய லாபமும், சாசுவதமான கீர்த்தியுமாம். ஆதலின், சகல செல்வங்களாலும் உயர்ந்திருப்பதாகிய இராச்சிய லாபத்தையும், ஜயலட்சுமியையும், பூமியில் ஜனித்தோர்களாலடைதற்கரிய பெருங் கீர்த்தியையும் அடைய விரும்பி நீ யுத்தத்தின்கண் முயற்சியுடையவனாவாய்," என்றுரைத்தருளினார். திருதராஷ்டிரரே! அந்தப் பகவானுடைய பெருமையை அளவிட்டுக் கூறுதல் எவராலியலும்?''' என்று கூறினார்.



பின்னர் திருதராஷ்டிரன் சஞ்சயரை நோக்கி, "சஞ்சயரே! மேற்கூறியபடி ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்லியதைக் கேட்ட அருச்சுனன் அதன்மேல் என்ன செய்தான்? இனி அவன் செய்த காரியத்தையும் மற்ற விருத்தாந்தங்களையும் உரைப்பீராக," என்று கூறினான். அவன் அவ்வாறு கூறவே சஞ்சயர் அத் திருதராஷ்டிரனை நோக்கி, "'திருதராஷ்டிரரே! உம்முடைய விருப்பத்தின்படியே மேல் நடந்த விருத்தாந்தங்களைக் கூறுகின்றேன் கேளும்: மேற்கூறியபடி ஸ்ரீ கிருஷ்ணபகவான் உரைத்ததைக் கேட்டவுடனே அருச்சுனன், கைகளைச் சிரசின்மேல் வைத்துக் கூப்பிக்கொண்டு, வார்த்தையானது குளற, கண்ணீரானது மெல்ல மார்பில் வழிய, அன்பினோடும் அச்சத்தோடும், மேகஞ் சூழ்ந்த கோவர்த்தனகிரியை எடுத்த அந்த ஸ்ரீ பகவானது பெரு

* நிமித்தம் - கருவி; ஏது.

மையை ஸ்துதிக்கத் தொடங்கினவனுய் அவரை நோக்கி, "ஞானேந்திரியங்கள் முதலிய சர்வேந்திரியங்களையும் நடத்துபவரே! ஊனமாகிய வினை விலங்கை அறுப்பவரே; உம்முடைய கீர்த்தியைச் செவிகளாற் கேட்கில் தேவர்களும் சித்தர்களும் மனங்களித்துச் சந்தோஷத்தை யடைவார்கள்; அசுரர்களும் இராக்கதர்களும் மாணதுக்கத்தை யடைவார்கள். திருக்கரங்களும், திருப்பாதங்களும், திருவாயும், திருக்கண்களும் சிவந்திருக்கப்பட்ட கரிய மேகம்போன்ற திருமேனியை யுடையவரே! இருபத்தைந்து தத்துவங்களாலும் அறிதற்கரியவரே! பிரமாவுக்குங் காரணமானவரே! தேசகால வஸ்துக்களால் அளவிடக்கூடாதவரே! சத்தும் அசத்துமாக இல்லாதவரே! சத்து, அசத்தென்னும் இவை முழுதுமாய் விரிந்திருப்பவரே! பிழைக்கும்படி கருதினவர்களுள்ளே குருரூபமாகிய உம்மை நமஸ்கரிக்காதவர்களுண்டோ? இல்லை; ஜகத்தின் உற்பத்திக் கேதுவாவதால் ஆதிதேவனுகின்றவர் நீரே; சர்வ சரீரங்களினும் நிறைந்த அரிய புருஷரும் நீரே; உம்முடைய உருவத்தில் சிறிதையும் ஒருவரால் அறியப்படாதவரும் நீரே; பிரபஞ்சமெல்லாம் முடிவிற் புகும் லயஸ்தானமும் நீரே; இன்னும் சொல்லில், சர்வக்ஞராய்ச் சர்வ ஜகத்தையும் அறிகின்றவரும் நீரே; அறிவால் அறியப்படும் * திருசியப் பிரபஞ்சமுழுதும் நீரே; இக்காரணத்தால் விஷ்ணுவின் பரமபதமும் நீரே; நீதியையுடைய யமனுய் உலகை அழிப்பவரும் நீரே; வருணனும் வாயுவுமாகின்றவர் நீரே; இவ்வுலகங்களை யெல்லாம் பொருந்தும்படிக்கு எப்போதும் உண்டுபண்ணுகின்ற மாதாவும் பிதாவுமாகிய பிரஜாபதியாகின்றவர் நீரே; அப்பிரஜாபதிக்கும் தந்தையாகிய காரணப்பிரமமும் நீரே; யான் ஆராயும்படி சர்வ தேவதைகளுமாக வாகியும் ஆகாத ஸ்ரீ பகவானே! உம்மை அடியேன் என்னுடைய மாய்கின்ற பிறவித் துக்கங்கள் நீங்கும்பொருட்டு அநேகமாயிரந்தரம் நமஸ்கரித்தேன்; என்னுடைய பெரிய சம்சார துக்கங்கள் கெடும்

* திருசியம் - தோற்றமுள்ளது.



படிக்கு மேலும் நமஸ்கரித்தேன்; எம்முடைய சுவாமி! உம்முடைய * அக்கிரபாகத்திலும் நமஸ்கரித்தேன்; உம்முடைய † பிருஷ்டபாகத்திலும் விதிப்படி நமஸ்கரித்தேன்; என்னுடைய நேசரூபமானவரே! என்னுடைய அரிய ஆன்மாவே; ஞானமன்றி மற்றொரு உபாயத்தாலும் நீங்காத இந்தப் பெரிய பிறவியினது வலிமையானது கெடும்பொருட்டுச் சர்வான்மரூபமான உம்மைச் சர்வதிக்குகளிலும் மீண்டும் மீண்டும் நமஸ்கரித்தேன்; தேவர்களுக்கும் தேவரே! உம்மைக் காட்டினும் சிறந்த வேறு தேவர் இங்கியாவர்? ஒருவருமில்லை; உம்மில் வேறாகச் செய்திடும் பாவமேது? அறங்களியாவை? பற்று யாது? வீடியாது? நீரறியாமல் சாவதேது? வாழ்வதேது? எல்லாம் நீரே யாகின்றீர்; இவ்வாறு நீரே எல்லாமாகும் தன்மை எப்படி? மாயனே! நான் ஒன்றையுமறிந்திலேன்; இன்னும் நீதிபொருந்திய வேதங்களும்,வானிலுள்ள ஞானம் பொருந்திய தேவர்களும், பூமியிலுள்ள அறிஞரும் முன்னமே உம்மை நினைந்து சம்சார துக்கம் நீங்கும்படி வருந்தி மனங் கசிந்து, உம்முடைய கீர்த்திகளைச் சொல்லிச் சொல்லித் துதித்து, உமது சொரூபத்தை யுணர்ந்தும், நான்மாத்திரம், உம்மை, பல ஜாதி பேதங்களாகி உலகத்தில் வாழ்கின்ற சராசரங்களுக் கெல்லாம் மூலமாகியவரென்று அறிந்திலேன். இன்னும், நிழலைப்போலப் பொய்யாகத் தோன்றும் வாழ்வு, மாடு, வீடு, தந்தை, தாய் என்னும் பேதங்களாகத் தோற்றும் பேயைப்போன்ற உலகமாயையிற் சிக்கி ஞானமில்லாத மானிடர் மாறி மாறிப் பிறந்திறக்கும் இச்செய்கைகளெல்லாம், பரிசுத்த முடையவராகி எவ்வித பந்தமு மின்றி நின்ற உம்முடைய மாயையின் செயல்களென்பதையும் நான் அறிந்திலேன்; நீர், கஞ்சனுலனுப்பப்பட்ட இடபத்தைப் போரில் வென்று, யாதவரைக் காத்தற்பொருட்டுக் கோவர்த்தனகிரியை யெடுத்துக் குடையாகப் பிடித்த உம்முடைய வல்லமையை நினைத்தே, தேவர்கள், தங்கள் துன்பமும் நீங்குமாறு உம்மை நோக்கி ஸ்துதி

* அக்கிரபாகம் - முன்பக்கம். † பிருஷ்டம் - பின்பக்கம்.

கூறத்தக்க கொண்டல் வண்ணரே! இன்னும் நீர் வேறு பிரித்துக் கூறத்தக்க பொருளு மில்லை; ஒன்றான பொருளுமில்லை; மெய்ம்மையாகக் கூறத்தக்க மானிடர்க்குரிய அந்த ஆறு தொழில்களைச் சார்ந்தவரு மில்லை; நன்றாக யோசிக்குமிடத்து எல்லாமானவராயும், ஒன்று மில்லாதவராயு மாகின்றீர் என்றும் நான் உணர்ந்திலேன்.

சுவாமி! எவ்விதத்தாலும் அளவிடற்கரிய மகிமையையுடைய உம்முடைய உயர்வை அறியாக்காரணத்தால் உம்மை நான் என்னைப்போன்ற மனிதரென்றும், எனக்கு மைத்துனரென்றும் நினைத்து, உம்மை நோக்கி, 'அடா யாதவா! அடா என்னுடைய மைத்துனா! அடா அசோதை புத்திரா! அடா பசுநிரைகளை மேய்க்கும் இடையா! அடா கிருஷ்ணா கிருஷ்ணா!' என்று சொல்லத்தகாத வார்த்தைகளையெல்லாம் சொன்னதுந் தவிர, மேலும் அநேகம் தீமையான வார்த்தைகளை யெல்லாம் கூறினேன்; ஐயோ! என்னுடைய தெய்வமே! அவற்றையெல்லாம் சொல்லத்தகாத வார்த்தைகளென்று நான் முன்னர் அறிந்திலேன்; இவ்வாறு உம்மை என்னுடைய சிநேகரென்றும், சமான வயதுடையவரென்றும், மாமன் மகனென்றும் மதித்து, உம்முடைய ஐசுவரியரூபமான மகிமையை எவ்வகையினாலும் சிறிது மறியாமல் வலோற்காரத்தால் உம்முடைய வார்த்தைகளைத் தடுத்து எதிர்மறையாகக் கூறிய அநுசித வார்த்தைகளான இவ்வபராதங்களைப் பொறுத்தருளவேண்டும்; இன்னும் உண்ணல், விளையாடுதல், நித்திரை செய்தல், சிம்மாசன முதலியவற்றில் வீற்றிருத்தல், ஆகிய இவைகளைச் செய்த காலங்களில், உமது பழைமையான மகிமையை நாடி அறியாமையினால் உம்மை நோக்கி நான் கூறியதனால் வந்த அநுசிதமான வார்த்தைகளாகிய அபராதங்களையும் பொறுத்தருளவேண்டும்.

கண்ணா! கருணாகரா!! 'சிருஷ்டியாதியில் உண்டாகிய சராசரரூபமான பிரபஞ்ச முழுவதையும் பிதாவாய்ச் சிருஷ்டித்தவர் நீரே; இப்படிப்பட்ட உமது உண்மை ரூபத்தை



யுணர்ந்து உம்முடைய கிருபையைப்பெற்ற யாவராலும் ஈசுரனாகப் புகழ்ந்து துதிக்கப்படுகின்றவர் நீரே; குருவுருவாகி உண்மையை உபதேசித்து அஞ்ஞான முதலிய தோஷங்களைத் தவிர்க்கின்றவரும் நீரே,' என்று பெரியோர் கூறினும், சுருதிகள் முழுவதும், உம்மினும் மிக்கோர் இல்லையென்று ஒரேமுகமாகநின்று எதுக்களை யெடுத்துப் பன்முறை காட்ட அவற்றைத் தாம் காணினும் உமது கிருபையைப் பெறாதவர்கள், உம்முடைய * அசிந்திய மகிமையைக் காணமாட்டார்கள்; கண்ணில்லாத அந்தகராயினோர் உலகத்திலுள்ள உருவங்களைக் காண்பதுண்டோ? இல்லை. அதுபோல மேற்கூறியபடி உம்மிடத்திற் பக்தியைச் செலுத்தாதவர்களுக்கு உம்முடைய சொரூபம் தெரியாது. ஆதலால், நானும் அறியாமையினால் உம்முடைய சொரூபந் தெரியாதவனாயிருந்தேன்; ஆயினும் இனி, விவரமறியாத இளம்பருவத்தையுடைய புத்திரன் செய்த அபராதத்தை அரிய பிதாவானவன் குணமாகக்கொண்டு பொறுத்தாற்போலவும், பிராணனைப்போல நீங்காத பிரியமுடைய சிநேகிதன் செய்யும் அபராதத்தை, சிநேகத்தின் மிக்கவர்கள் குணமாகக் கொண்டு பொறுத்தாற்போலவும், நான் பேதைமையுடையவனாய் உம்மை மதியாமற் செய்துவந்த அபராத முழுவதையும் குணமாகக் கொண்டருளவேண்டும்,'' என்று வாசனை மிகுந்த தாமரைமலர்போன்ற அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்.

இவ்வாறு வணங்கின அருச்சுனன் மீண்டும் சில வார்த்தைகளைக் கூறத்தொடங்கினவனாய், ஸ்ரீ கிருஷ்ணபகவானை நோக்கி, ''சுவாமி! முன்னே ஒருபோதும் நான் தரிசியாத பழைய விசுவரூபத்தை இப்போது தரிசிக்க, எனது மனமானது பூரணசந்தோஷத்தை யடையாமல் பயத்தால் வியாகுலமுற்றுச் சந்தோஷிக்கின்றது. ஆதலால், நீர் என்மேற் கிருபைசெய்து, தண்டமும், நீண்ட முடியும், சங்கும், சக்கர

* அசிந்தியம் - சிந்தைக் கெட்டாமை.

மும், தரித்த உம்முடைய சதுர்புஜரூபத்தையே கொண்டரு ளக்கடவீராக," என்று கூறினன். இவ்வாறு கூறிய அவ னுடைய வார்த்தைகளைக் கேட்டவுடனே, எவ்வகைப்பட்ட உருவங்களும் தன்னுடைய ஓருருவமாக நின்ற ஸ்ரீ கிருஷ்ண பகவான் அவனை நோக்கி, "அருச்சுனு! பூரணமான ஒளியை யுடையதாய், சிருஷ்டியின் ஆதியில் சகல ஜகத்தையும் உண் டாக்கும் காரணவஸ்துவுமாய், முழுதுமாகிய எனது விசுவ ரூபத்தை இப்போதறிந்த உன்னையன்றி முன்னே வேறொரு வரு மறிந்திலர்; வேதாத்தியயனத்தாலும், பூர்வமீமாஞ்சை கல்பசூத்திர முதலியவற்றால் வேதங்களிற் சொல்லிய கர்ம ரூபமான யாகங்களின் அர்த்த விசாரரூபமென்னும் அத்தி யயனத்தினாலும், கிருச்சிர சாந்திராயணாதிகளென்னும் உக் கிரமான தவசுகளாலும், பிராணிகள் சந்தோஷித்தற்குக் காரணமான தான வகைகளாலும், தரிசிக்க ஆசையுடைய வர்களால் தரிசிக்கக்கூடாத இவ்விசுவரூபத்தை, தோஷங்களி லொன்றையு மறியாத எனது யோகமாயையின் சாமர்த்தி யத்தால் கிருபைகொண்டு யான் தரிசிப்பிக்க நீ தரிசித்தாய்," என்று கூறி சங்கு, சக்கரம், கதை, பத்மம், ஆகியவைகளைத் தரித்திருக்கும் சதுர்புஜம், கிரீடம், மகாகுண்டலம்,* ஸ்ரீவத் ஸம், கௌஸ்துபம், வனமாலை, பீதாம்பரம் முதலியவற்றால் அழகுபொருந்திய தம்முடைய அந்தப் பழைய ரூபங்கொண் டருளி, அவ்வருச்சுனனுக்கு, கோரமாகிய விசுவரூப தரிசன த்தாலுண்டாகிய சரீரவச்சத்தை யொழிவித்துப் பின்னும் வேறே தமக்குச் சமானமானவரும் அதிகமானவரும் இல் லாத உயர்வையுடைய அந்தப் பகவான் அவனை நோக்கி "அருச்சுனு! நீ முன்னே கண்ட என்னுடைய விசுவரூபத் தை, மேற்கூறியபடி வேதாத்தியயனம், தவசு, தானம், கர் மம் ஆகிய இவைகளால் முந்தியும் தரிசித்தவர்களொருவரு மில்லை; இனிமேலும் தரிசிப்பாரொருவருமிலர்; இவ்வாறு காணுதற்கரிய எனது விசுவரூபத்தைத் தரிசித்தற்கு இந் திரன் முதலிய தேவர்களும் விரும்புகின்றனர். 'இவ்வாறு

* ஸ்ரீவத்ஸம் = கிருஷ்ணபகவான் மார்பிலுள்ள மறு.



தேவர்களால் விரும்பத்தக்கதும், காணுதற் கரியதுமாகிய விசுவரூபத்தையுடைய நீர் மற்றெவ்வுபாயத்தால் பிறருக்குக் காணுதற் கெளியராவீர்?' என்று நீ வினவக்கூடும். அதற்கு விடை கூறுகின்றேன் கேள்: நிரதிசயப் பிரீதிரூபமான மிகு ந்த பக்தியினாலேயே நான், காணுதற்கும், அபேதரூபமாக வடைதற்கும் உரியவனாவேன்; ஆதலின், என்னிடத்தன்பு மிக்க பக்தராய்ப் பரமேசுரனான எனது சந்தோஷத்தின் பொருட்டே சகல கர்மங்களையும் செய்பவரும், 'பரமேசுர னே அடையத்தக்க சொரூபன், சுவர்க்காதிகளல்ல,' என் னும் நிச்சயமுடையோரும், ஸ்திரீ, புத்திரன், தனம், மனை முதலிய அநான்ம பதார்த்தங்களின் இச்சையொழிந்தவரும், தமக்கபகாரம் பண்ணின பிராணிகளிடத்துத் துவேஷமின் மையருமாய், என்னையல்லாமல் யாதொரு சம்பந்தமு மில் லாத தன்மையைப் பொருந்தின அதிகாரிபுருஷர், பரமே சுரனான என்னை அபேதமாக அடைவர்; நான் அவரடைதற் கெளியனாவேன்; என்னை அவரடைதற்குத் தக்கவுபாயம் மேற்கூறிய எனது பக்தியேயாம்; நீயும் என்னிடம் பக்தி யைச் செலுத்தி என்னை அபேதமாக அடையக்கடவாய்," என்றுரைத்தருளினர்.

பதினோராவது
விசுவரூபவத்தியாயம் முற்றுப்பெற்றது.

---

பன்னிரண்டாவது
## பக்தியோகவத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

"ஏயநா னெதிரே கண்ட
வுருவமே யிசைகிற் பாரோ
தூயநான் மறைக்கு மெட்டாப்
பொருளையே தொடர்கிற் பாரோ
தாயனைப் பெரியோ ரென்று
தனஞ்சயன் வினவத் தானே

ராயனாய் நிரைகண் மேய்க்கு
மாயன்வே றருளிச் செய்வான்."

முன் அத்தியாயத்தின் முடிவில், 'என்னை யல்லாமல் யாதொரு சம்பந்தமு மில்லாத தன்மையைப் பொருந்தின அதிகாரி புருஷர் என்னை அபேதமாக அடைவர்,' என்று ஸ்ரீ கிருஷ்ணபகவான் பொதுப்படக் கூறினமையால், அவர் முன்னர் ஸாகாரவஸ்து, நிராகாரவஸ்து ஆகிய இரண்டையும் ஆங்காங்கே உபதேசித்திருப்பதை முன்னிட்டு, "இப்போது 'என்னை,' என்று கூறிய மொழிக்குப் பொருள் ஸாகாரவஸ்துவோ? நிராகாரவஸ்துவோ?" என்று அருச்சுனனுக்குச் சந்தேக முண்டாயிற்று; அதனால் அவன், அச்சந்தேகத்தை நீக்கிக்கொள்ளும்பொருட்டு, ஸகுணவித்தை, நிர்க்குணவித்தை ஆகியவைகளின் விசேஷத்தன்மைகளையறிய இச்சையுடையவனாய், ஸ்ரீ கிருஷ்ணபகவானை நோக்கி, "தாயையொப்பான ஸ்ரீ பகவானே! மனத்திற்குப் பொருந்தும்படி நான் நேரே தரிசித்த பரமேசுரனான உமது உருவமென்னும் ஸாகாரத்தையே எப்போதும் சிந்திப்பவர் யோகமறிந்த பெரியோராவரோ? சுத்தமான நான்கு வேதங்கட்கும் எட்டாத *அட்சரமென்னும் நிர்க்குணப் பிரமமாகிய உம்மையே எப்போதும் சிந்திப்பவர் யோகமறிந்த பெரியோராவரோ? என்னாற் கொள்ளத்தக்கது ஸகுணப்பிரம மறிந்தவர்களுடைய ஞானமோ அல்லது நிர்க்குணப்பிரம மறிந்தவர்களுடைய ஞானமோ?" என்று வினவினான்.

அருச்சுனன் இவ்வாறு வினவவே, தாம் ஓர் இடையராய்ப் பசு நிரைகளை மேய்த்த ஸ்ரீ பகவான் மேற்கூறிய இருவருடைய பேதங்களைக் கூறத்தொடங்கினவராய் அருச்சுனனை நோக்கி, "விஜய! உன்னுடைய விருப்பத்தின்படியே நீ வினாவிய வினாக்களுக்கு விடை கூறுகின்றேன் கேட்பாயாக: நீ தரிசிக்கும்படி நான் முன்னே உனக்குக் காட்டிய ஸாகாரமான எனது விசுவரூபத்தை ஏகாக்கிர சித்தத்தோ

* அட்சரம் = நாசமில்லாதது.



டும் சாத்துவிக சிரத்தையோடும் கூடி மனத்தினாற் சிந்தித்தலும், வாக்கினால் ஸ்துதித்தலும் செய்கின்ற எல்லோரும் பரமேசுரனான என்னையே அடைவதல்லாமல் வேறொன்றையுமடையார்; இவர் சர்வ யோகிகளினும் சிரேஷ்டராவரென்பது எனதபிப்பிராயம். இனி, இங்கே சொல்லிய ஸகுணோபாசகரல்லாமல்நிர்க்குணோபாசகரின் நெறியைக் கூறுகிறேன் கேள்:

மேற்கூறியபடி ஸகுணோபாசகர் சிறந்தவர்களாயினும் நிர்க்குணோபாசகரும் அவர்களைப்போலவே என்னையடையத் தக்கவரே; எவ்வித சப்தத்தினாலும் வசனித்தற் கரியதாய் மனத்தினால் விஷயமாக அறியப்படாததாய், எங்கும் நிரந்தரமாக வியாபித்து, போக்குவரவில்லாததாய், மாயாப் பிரபஞ்சத்திற் கதிஷ்டானமான கூடஸ்தமாய், நித்தியமாய்ச் சிறந்த நிர்க்குணப் பிரமரூபமான அட்சரத்தை, யாவராலும் நிக்கிரகித்தற்கரியனவாகிய சுரோத்திராதி இந்திரிய சமூகங்களைத் தத்தம் சப்தாதி விஷயங்களினின்றும் நிவிர்த்தி செய்து சமுசயமின்றித் தமதான்மரூபமாக அறியும் அவர் பிரமரூபமாகிய யானே யாவர்; அவர்களை என்னினும் வேறென்று சொல்லக்கூடுமோ? கூடாது. அருச்சுனா! நான் இவ்வாறு கூறியதனால் நீ, 'பகவானே! நிர்க்குணோபாசகர் யானே; அவர்களை என்னினும் அன்னியமென்னலாமோ? என்று நீர் கூறுவதால், ஸகுணோபாசகரை யாரினும் நல்லர் என்று முற்கூறிய வார்த்தை பொருத்தமற்றதாகுமோ?' என்று கேட்கக்கூடும். அக்கேள்விக்குத் தக்க விடை கூறுகின்றேன் கேள்: தனக்கொரு காரணமில்லாமல், அந்தரிந்திரிய பகிரிந்திரியங்களுள் ஓர் இந்திரியத்திற்கும் தனதறிவில் அகப்படாததான நிர்விசேஷ அக்ஷரதத்துவத்தை அடைகின்றவருடைய கிலேசமானது வேறு கிலேசங்களோடு சேர்த்து ஒப்பிட்டுச் சொல்லக்கூடியதன்று. நேத்திராதி இந்திரியங்களினால் அறிதற்கரிய பிரமவிஷயமான இந்நிஷ்டையானது, அகந்தை மமதைரூப தேகாபிமானமுடைய மநுடரால்

கிலேசமில்லாமல் எளிதில் அடையத்தக்கதோ? அன்று; இதனை அடைதற் கெய்தும் வருத்தம் அளவிடற்கரியதாம். இவ்வாறு அளவிடற்கரிய வருத்தத்தை யெய்தியாயினும் இதனை அடைந்தால் அப்படி யடைந்தவருடைய பெருமையை வரையறுத்துக் கூறுஞ் சாமர்த்திய முடையவர் ஒருவருமாகார்; இத்தகைய பெருமையை மிகுந்த கஷ்டத்தை யடைந்து சம்பாதிக்கவேண்டும்; நான் சிறந்தவராகக் கூறிய ஸகுணோபாசகர்க்கும் சர்வவிஷயங்களினின்றும் தமதுமனத்தை நிவிர்த்திசெய்து சகுணப்பிரமத்திற் சேர்ப்பிப்பது முதலிய அதிககிலேசமுமுண்டு; ஆயினும், நிர்க்குணோபாசகர்க் கேற்படுவதுபோல இவர்களுக்கு அதிக கிலேசமில்லை. ஸகுணோபாசகர்க்கும், நிர்க்குணோபாசகர்க்கும் மோக்ஷரூபமாகிய பயன் ஒன்றேயாயினும், அப்பயனை மேற்கூறியபடி அரியவுபாயத்தாலடையும்நிர்க்குணோபாசகரைக்காட்டினும்,எளியவுபாயத்தா லடையும் ஸகுணோபாசகர் சிரேஷ்டராவரென்பது எனதபிப்பிராயம்; இக்காரணத்தினாலேயே இந்த ஸகுணோபாசகரை, 'யாரினும் நல்லர்,' என்று நான் கூறினேன்.

இனி, நீ, முன்னே ஒன்பதா மத்தியாயத்தில், 'ஞானம் அரியதன்று என்று கூறி இங்கே, அறிதற்கரிய பிரமவிஷயமான நிஷ்டையை அடைபவர் எய்தும் வருத்தம் அளவிட்டுச் சொல்லமுடியாததாம் என்று கூறினது முன்னுக்குப் பின் விரோத மாகின்றதே?' என்று என்னிடம் வினவக்கூடும்; இவ்வினாவிற்கும் தக்க விடை கூறுகிறேன் கேள்: முன்னே, 'ஞானம் அரியதன்று' என்று கூறியது விவேகாதி சர்வசாதன சம்பந்நரான நிஷ்காமாதிகாரிகட்காம்; இங்கே அந்த ஞானத்தை யடையும் விஷயத்தில் அளவற்ற வருத்தமுண்டாம்,' என்று கூறியது தேகாதிகளில் அகந்தைமமதைரூப அபிமானமுடைய புருஷர்க்காம்; ஆதலால், முன்னோடு பின் விரோதமாகாது.

இனி,மேற்கூறிய ஸகுணோபாசகராகிய எனது பக்தராயினோர், எனது கிருபையினாலே, முன் நிர்க்குணோபாசகர்க்



குக் கூறிய கிலேசமின்றியே மோக்ஷரூபமாகிய பயனை அடைவர் என்னும் விவரத்தைக் கூறுகிறேன் கேள்: எவர்கள், நித்தியம், நைமித்திகம், சுவாபாவிகம் முதலிய சகல கர்மங்களையும் ஸகுணபரமேசுரனான என்னிடத்தே அர்ப்பணஞ்செய்து தமது சித்தத்தை * அநந்நியரூப சமாதியோகத்தால் என்னிடத்தே செலுத்துவார்களோ அவர்களை மரணமாதியாயுள்ள துக்கசமுத்திரத்தினின்றுந் தாங்கிச் சிறிது காலத்தினுள்ளே பரமேசுரனான நான் நிலைநிறுத்துகிறேன். ஆதலால், உனது சங்கற்ப விகற்பான்மக மனத்தையும், நிச்சயான்மக புத்தியையும், அந்நியமான சப்தாதி விஷயங்களில் வையாமல் சகுணப்பிரமமான என்னிடத்தே வைத்தால் எனது கிருபையினால் நீ தேகாந்தத்தில் ஆன்மரூபமடைந்து நிர்க்குண சுத்தப்பிரமமான என்னில் வேறாகாமல் அபேதரூபமாக † நிவாசம் பண்ணுவதற்குச் சிறிதும் சந்தேகமில்லை. இவ்வாறு சகுணப்பிரமமான என்னிடத்தே உன் சித்தத்தை ஸ்திரமாகச் செய்வது உன்னால் முடியாவிடின், நீ அப்பியாசயோகத்தையே அடிக்கடி பழகுவாயாக; உண்மையாக அவ்வப்பியாசத்தையும் செய்ய நீ சமர்த்தனாகாவிடின், 'சர்வத்திர வியாபகமான விஷ்ணுபகவானது இராமகிருஷ்ணாதி நாமங்களை ஒருவன் சிரவணஞ் செய்தல், அவ்விஷ்ணுவின் நாமங்களைத் தனது வாயாற்சொல்லுதல், தனது மனத்தால் விஷ்ணுவைச் சதாகாலமும் ஸ்மரணஞ்செய்தல், விஷ்ணுவின் பாதங்களைச் சேவித்தல், சந்தனம் அக்ஷதை புஷ்பம் தூபம் தீபம் முதலிய பதார்த்தங்களால் விஷ்ணுவை அர்ச்சித்தல், மனோவாக்குக் காயங்களால் விஷ்ணுவினிடத்தே நமஸ்காரரூபமான வந்தனஞ்செய்தல், விஷ்ணுவின் தாசபாவஞ் செய்தல், விஷ்ணுவின் சிநேகபாவஞ் செய்தல், விஷ்ணுவினிடத்தே சரீரரூபமான ஆன்மாவை அர்ப்பணஞ் செய்தல் என்னும் இவ்வொன்பது காரியங்களுமே பகவானுடைய பஜநரூபகர்மங்களாம்,' என்று சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கும் பஜந

* அநந்நியம் - பகவானையன்றி அந்நியத்திற் பற்றின்மை.

† நிவாசம் - தங்குதல்.

ரூபகர்மங்களாகவே உன்னுடைய கரணங்களாற் செய்யுங் கர்மங்களைப் பரமேசுரனான என் சந்தோஷத்தின்பொருட்டுச் செய்வாய்; இவ்வாறு செய்யும் இக்கர்மங்களையும் செய்ய உனக்குச் சக்தியில்லையாயின் என்னைச் சரணடைந்து மனத்தை வசமாக்கி, 'அந்தரியாமிரூபமான ஈசுரனது பிரேரணையினால் நாம் கர்மஞ் செய்கின்றோம்; கர்மங்களின் பயன் பரமேசுரனுக் குரித்தானதாம்,' என்று சர்வகர்மங்களின் பயனைத் தியாகஞ்செய்து அக்கர்மங்களைச் செய்யக்கடவாய்; இவ்வாறு செய்யின் என்னுடைய கிருபையினால் கிருதார்த்தனாவாய்.

இனி, முன்னே அதிகாரிகளின் பேதத்தால் விதித்த ஸகுணப்பிரமோபாசனை, அப்பியாசயோகம், பாகவததர்மம், கர்மபலத்தியாகம் என்னும் நான்கு சாதனங்களுள்ளே தியாகரூபமான சாதனத்தின்கண்ணேயே மற்றைச் சாதனங்கள் அடங்கியிருப்பதால் அதன் சிறப்பைக் கூறுகின்றேன் கேள்: ஞானத்தின்பொருட்டுச் செய்யும் சிரவண அப்பியாசத்தினும் ஞானமே சிரேஷ்ட முடையதாம்; சிரவணத்தினாலும் மனனத்தினாலு முண்டாகும் ஆன்மவிஷயமான நிச்சயமென்னும் அந்த ஞானத்தினும், மெய்ம்மையான தியானமானது நேரே ஆன்மசாட்சாத்காரத்துக் கேதுவாமாகலின் சிரேஷ்ட முடையதாம்; அந்தத் தியானத்தினும் ஜனனத்திற்கு வித்தாகிய கர்மபலத்தியாகம் சிரேஷ்டமாம்; அந்தத் தியாகத்தின் பின்னர் சம்சாரத்தின் * உபசமரூபமான சித்தசாந்தி பொருந்தும்.

அருச்சுனா! மந்தாதிகாரிக்கு நிர்க்குண அட்சரப்பிரமோபாசனை அடைதற்கரியதாதலால், எளியதான ஸகுணப்பிரமோபாசனையை விதித்து, அச்சகுணப்பிரமோபாசனை செய்வதிலும் அசமர்த்தரான புருஷர்க்கு அவ்வவர் விருப்பத்தின் தாரதம்மியத்திற்கேற்ப, அப்பியாசமுதலிய வேறு மூவகைச் சாதனங்களையும் இப்போது விதித்தேன்; இவ்வாறு விதித்த சர்வசாதனங்களும் நிர்க்குண பிரமவித்தியாரூபமான பயனை

* உபசமம் - சமாதானம்.



யடைதற்பொருட்டேயாம். 'நிர்க்குணப் பிரமோபாசனை செய்வதில் அதிக துன்பமுண்டு,' என்று நிர்க்குணப்பிரமோபாசனையை நான் இப்போது நிந்தித்தது, ஸகுணப்பிரமோபாசனையைத் துதித்தற்பொருட்டே யல்லாமல் அந்நிர்க்குணப் பிரமோபாசனையை நிஷேதித்தற்பொருட்டன்று. நிர்க்குண அட்சரப்பிரமோபாசகனே வாஸ்தவமாக யாரினும் நல்லனென்பது என் அபிப்பிராயம். ஆதலால், இனி, அந்நிர்க்குணப் பிரமோபாசகரின் சிறப்பைக் கூறுகிறேன்; நீயும் அதிகாரத்தைச் சம்பாதித்து நிர்க்குணப்பிரமத்தை யறிந்தவர்களுடைய ஞானத்தையும், அவரது சுபாவத்தையும் அனுசரிக்கக்கடவாய். பார்த்த! ஸ்தாவர ஜங்கமரூபமான இருவகைப் பிராணிகட்கும் சிநேகமுடையவனாய், 'இது சுகம்,' 'இது துக்கம்,' 'இஃது யான்,' 'இஃது என்னது,' என்று தனக்கன்னியமாக ஒன்றையுமறியாமல், சரீரநிலைக்குக் காரணங்களான அன்ன வஸ்திர முதலிய பதார்த்தங்களின் பேறு, இழவு ஆகியவைகளில் விருப்பும் வெறுப்பு மற்ற ஒரே நிலையையுடையவனாய்ச், சித்தமும் ஒரேவழியிற் செல்ல, ஒப்பற்ற ஆன்மாவின்கண் திடநிச்சயமும், துக்கிப்பிராணிகளிடத்துத் தயையுமுடையனாய், இந்திரியவாயிலால் விஷயங்களை ஆராயும் நிச்சயரூபமான புத்தியைச் சுத்தப்பிரமமான என்னிடத்தே அர்ப்பணஞ்செய்து சஞ்சரிக்கின்ற யோகியென்பவனே பரமேசுரனான எனக்கு மிகவும் பிரியன்; அருச்சுனா! இன்னும், உலகமும் தானும் அன்னியமாக இல்லாமையினால் தான் எந்தப்பிராணிகட்கும் பயப்படாமலும், எண்ணிறந்த பிராணிகளிடத்தும் தான் சிநேகமுடையனாதலால் அவ்வெண்ணிறந்த பிராணிகளும் தன்னைக்குறித்துப் பயப்படாமலும் அறிஞராயினோர் துதிக்கும்படி நிகழ்பவனாயும், பிறர்க்கு இலாபம் வந்தவிடத்துச் சகியாமையாகிய பொறாமையும், பயமுதலியநிமித்தத்தாலுளதாகும் சித்தவிட்சேபமாகிய மயக்கமும், தனக்கு இலாபம் வந்தவிடத்து உற்சாகங் கொள்ளுதலாகிய களிப்பும் நிகழாத சித்தமுடையவனாயும் விளங்கும் யோகியென்பவனே பிரியமுடைய யாவரினும் பரமேசுரனான

எனக்கு அத்தியந்தப் பிரியன். இன்னும், தாமே வந்தணையும் போகசாதனங்களுள்ளே எவற்றினும் ஆசையில்லாமல், இந்திரியங்களின் வழியே தான் போகாமல் அவற்றைத் தன் வசமாக்கி, ஒருவன் செய்யும் உபகாரம், அபகாரம் ஆகிய இரண்டிலும் ஒரே மனதுடையவனாய்ச் சுகதுக்கங்களை யுண்டாக்கும் சுபாசுப கர்மங்களை நீக்கி, தேகமானது அழிதற்கேதுவாகிய அபாயங்கள் வரினும் அவற்றின்பொருட்டுத் துன்புற்றிரங்காமலும், பிரிய வஸ்துவை யடைந்தவிடத்து சந்தோஷித்தலும், பிரியமில்லாத வஸ்துவை யடைந்தவிடத்துக் கிலேசித்தலும் எப்போதும் இல்லாமலும், முன்னே இழந்துபோன இஷ்ட வஸ்துவின் நாசத்திற்கு இரங்காமலும், இனிவரும் இஷ்டவஸ்துவின் சேர்க்கைக்கு இச்சை செய்யாமலும், சத்துரு மித்துரு என்னும் பேதமின்றி இரண்டிடத்தும் சமசித்தமுடையனாய், இன்பம் துன்பம், கர்மவசத்தால்தோன்றுவனவாகிய மானாவமானம், சீதோஷ்ணம், புகழ், நிந்தை ஆகிய இவைகளிலும் ஒத்த மனதுடையவனாய், பொருந்தி வாசம்பண்ணுகின்ற ஸ்தானம் ஒன்றில்லாமல் சஞ்சரிக்கும் யோகியே பரமேசுரனான எனக்கு மிகவும் பிரியன். இன்னும், பிரயத்தனத்தாற் சம்பாதிக்கத்தக்கதும், தன்னை யடைந்தோர் சம்சாரதுக்கம் நீங்கி உய்யும்படிக்கு அவர்களை அதினின்றும் நீக்கி முத்தியிற் கொண்டுபோகத்தக்கதும், முற்கூறிவந்த தர்மரூபமானதுமாகிய ஞானாமிர்தத்தை யான் உரைத்தருளியபடியே தமக்குச் சுபாவமாகப் பொருந்தச், சிரத்தையோடும் பிரயத்தனத்தால் அறிந்து சம்பாதிக்கும் முமுட்சுக்களாகிய பக்தஜனங்களுக்குப் பரமேசுரனாகிய நான் அத்தியந்தப்பிரியன். ஆதலால், சோபாதிகமான சகுணப்பிரமத்தியானத்தின் பரிபக்குவத்தின் பின்னர், நிருபாதிகமான நிர்க்குணப்பிரம்மத்தைச் சிந்தனஞ் செய்பவனும், பிராணிகளைத் துவேஷியாமை முதலிய குணங்களோடு கூடினவனுமாய் எப்போதும் சிரவண மனன முதலியவைகளைச் செய்கின்ற உத்தமாதிகாரிக்கு வேதாந்த வாக்கியங்களின் பொருளாகிய தத்துவ சாட்சாத்காரம் அவசியம் உண்



டாகும்; அந்தத் தத்துவ சாட்சாத்காரத்தால் அவசியமாக முத்தி அடையப்படும்,'' என்றுரைத்தருளினார்.

பன்னிரண்டாவது

பக்தியோகவத்தியாயம் முற்றுப்பெற்றது.

(இதனோடு உபாசனாகாண்டம் முடிவுபெற்றது.)

---

## ஞானகாண்டம்.

பதின்மூன்றாவது

## க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞவிபாகயோகவத்தியாயம்.

கலிவிருத்தம்.

''விடம்படு பணாமுடி யரங்கின்மிசை யேறி
நடம்பயிலு நாயகன் மறித்துமிகு ஞானஞ்
சடம்படு பிணிப்பிறவி யென்றிவை தரிக்கு
முடம்பொடுயி ரானவை யுரைத்தருள லுற்றான்.''

விஷம் பொருந்திய காளிங்கனென்னும் பாம்பின் முடியாகிய அரங்கின்மீதேறி நடனஞ் செய்யும் ஸ்ரீ கிருஷ்ணபகவான், முன்னர் முதல் அத்தியாயந்தொடங்கி ஆறாமத்தியாய பரியந்தமான முதற்காண்டத்தில் துவம்பதார்த்த நிரூபணமும், ஏழாமத்தியாயந் தொடங்கிப் பன்னிரண்டாமத்தியாய பரியந்தமான இரண்டாங் காண்டத்தில் தற்பதார்த்த நிரூபணமுஞ்செய்து, தத்துவஞானத்தைப் பிரதானமாகவுடைய இப்பதின்மூன்றாமத்தியாயந் தொடங்கிப் பதினெட்டாமத்தியாய பரியந்தமான மூன்றாங் காண்டத்தில், மேற்கூறிய தற்பதார்த்த துவம்பதார்த்தங்களின் அபேதரூபமான மஹாவாக்கியத்தின் பொருளை உரைத்தருள நினைத்து, முதலில் முன் ஏழாமத்தியாயத்தில் அபரை, பரை என்னும் இருவகைப் பிரகிருதிகளை க்ஷேத்திரரூபமாகவும், க்ஷேத்திரக்ஞரூபமாகவும் குறிப்பிட்டுக்காட்டிய விவரத்தை இவ்வத்தியாயத்தில் விளக்கிக்காட்டும்பொருட்டு மீண்டும் மேலானஞான

மும், ஜடமும், உண்டாகாநின்ற பிணியும், ஜனனமும் என்ற இவைகளைத் தரித்திருக்கும் அந்த உடம்பும், உயிருமாகிய க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞனென்பவைகளைச் சொல்லத்தொடங்கினவராய் அருச்சுனனை நோக்கி, ''பார்த்த! முன் பன்னிரண்டா மத்தியாயத்தில், 'எவர்கள் சகல கர்மங்களையும் என்னிடத்தே அர்ப்பணஞ் செய்து தம்முடைய சித்தத்தை என்பாற் செலுத்துவரோ அவர்கள் எவர்களாயினும் அவர்களைச் சிறிது காலத்தினுள்ளே மரணமாதியாயுள்ள துக்க சமுத்திரத்தினின்றுங் கரையேற்றித் தாங்கி நான் எடுக்கின்றேன்,' என்று பிரதிக்ஞை செய்தேன்; அதுவும் பிரமஞானத்தாலல்லாமற் கைகூடாது; அந்த ஞானத்தை யடைதற்கு க்ஷேத்திரம் க்ஷேத்திரக்ஞன் என்னும் இவைகளை யுணரவேண்டும்; முன் ஏழாமத்தியாயத்தில் அபரை, பரை என்று இரண்டு ரூபமாகக் கூறப்பட்ட எந்தப் பிரகிருதிகளின் அவிவேகவசத்தால் சேதனத்தின் அம்சமானது ஜீவபாவமடைந்து சம்சாரியாயிற்றோ? எந்தப் பிரகிருதிகளிரண்டினால் ஜீவர்க்கு போஜநாதி ஜந்நிய சுகாநுபவார்த்தம் பரமேசுரனாகிய எனக்குச் சிருஷ்டியாதிகளின் பிரவிர்த்தி யுண்டாயிற்றோ? அந்தப் பிரகிருதிகளிரண்டுமே க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞன் என்னும் மொழிகளுக்குப் பொருள்களாம். ஒன்றற்கொன்று பின்னமான அந்தப் பிரகிருதிகளை உள்ளபடி விளக்கிக் காட்டுகின்றேன். உணர்ந்துகொள்வாயாக:—

அருச்சுனா! உயிரால் அனுபவிக்கப்படுபவைகளான சுகதுக்கபோகங்களெல்லாவற்றையும் பூமிரூபமான க்ஷேத்திரம் போல விசாலமாக உண்டாக்குவதால், எதிரே காணப்படுகின்ற இச்சரீரமானது க்ஷேத்திரமென்று சொல்லப்படுகின்றது. சாமான்யமாகவும் விசேஷமாகவும் இச்சரீரரூபமான க்ஷேத்திரத்தை ஆராய்ந்தறியும் சீவான்மாவை, இந்த க்ஷேத்திரத்தின்கண்ணே பொருந்திய போக்தாவான க்ஷேத்திரக்ஞனென்று, அவ்விரண்டையு மறிந்த பெரியோர் கூறுவர். இனி, அசம்சாரியான பரமான்மாவோடுகூட ஏகத்வரூபமான



க்ஷேத்திரக்ஞனென்னும் ஜீவான்மாவினது பாரமார்த்திக சொரூபத்தைக் கூறுகிறேன். கேட்பாயாக: அருச்சுனா! முன் சொன்ன தேகேந்திரியாதி சங்காதரூபமான சர்வக்ஷேத்திரங்களிலும் அதிஷ்டானமாகப் பொருந்திச் சொப்பிரகாச சைதந்நியமாய் நின்று, அந்த க்ஷேத்திரத்தை, 'யான்,' 'எனது,' என்று கருதும் க்ஷேத்திரக்ஞன் அத்துவிதீய பிரமரூபமானே நானே; ஆதலால் க்ஷேத்திரக்ஞனிடத்து அவித்தையினால் ஆரோபிதமான கர்த்திருத்வ, போக்திருத்வாதி தர்மங்களைப் * பரித்தியாகஞ் செய்து அத்துவிதீய பரமாநந்தரூபனாக அந்த க்ஷேத்திரக்ஞனை அறிவாயாக; க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞன் என்னும் இவ்விரண்டினையும் ஓர்பொழுது அவற்றின் றன்மைகளோடும் எஃதறியுமோ? அதனையே † அவித்தையின் விரோதியான ஞானமென நீ அறியக்கடவாய்; இது, தத்துவமஸியாதி சுருதி சம்மதமாவதுமன்றிப் பரமேசுரனான எனக்கும் சம்மதமாம்.

அருச்சுனா! தேகேந்திரியாதி ஜடவர்க்கரூபமான மேற்கூறிய க்ஷேத்திரத்தினது உற்பத்தியையும், ஜடம் திருசியம் பரிச்சின்ன முதலிய அதன் சுபாவத்தையும், இச்சை துவேஷ முதலிய அதன் தர்மத்தையும், உற்பந்நமாகி அந்த க்ஷேத்திரமானது பொருந்தாநிற்கும் இந்திரிய முதலிய விகாரங்களையும், க்ஷேத்திரக்ஞனது சொப்பிரகாச சைதந்நியானந்த சுபாவத்தையும், உபாதியினாற் செய்யப்பட்ட சத்திரூபமான பிரபாவமெதுவோ அந்தப் பிரபாவத்தையும், நல்ல தவத்தினையுடைய வசிஷ்டர் முதலிய முனிவர்கள் யோகசாஸ்திரங்களில், தாரணை தியானாதிகட்கு விஷயமாகவும், பலவிதமாகவும் கூறியிருக்கின்றார்கள்; இனிப் பரமேசுரனான யானும் தொகுத்த சொற்களால் அவைகளைச் சுருக்கமாகக் கூறுகிறேன் கேட்பாயாக:

நல்ல தவத்தையுடைய அருச்சுனா! எவ்வகைப்பட்ட தம்முடைய விகாரங்களினும் வியாபித்து, எவ்விடத்துமிருக்

* பரித்தியாகம்-முற்றும் விடுதல். † அவித்தை-அஞ்ஞானம்.

கும் அம்மகாபூதங்களைந்தும், ஒப்பிடுதற்கரிய அப்பூதங்களை உண்டாக்காநிற்கும் அபிமான லட்சணமுடைய நானென்னும் அகங்காரமும், அவ்வகங்காரமானது உண்டாகிப் பூதங்கட்கு முன்னே தோன்றுதற்கு விரோதமாக இல்லாத மித்தையான நிச்சய லட்சணமுடைய மகத்தத்துவமென்னும் புத்தியும், அம்மகத்தத்துவமென்னும் புத்திக்குக் காரணரூபமாகிய பிரதானரூபமான அவ்வியக்தமும் ஆகிய இவ்வெண்வகைப் பிரகிருதிகளும், புண்ணியபாவ வினைகளுக்குக் காரணமான அந்தக்கரணமொன்றும், வியஷ்டியாதலின் ஒன்றென்று சொல்லக்கூடாத ஞானேந்திரியங்களைந்தும், அவ்விந்திரியங்களால் அனுபவிக்கப்படுகின்றனவும் தம்மால் உண்டாகின்றனவுமாகிய சுகதுக்கங்களை யறியாத ஜடமாகிய சப்தாதி விஷயங்களைந்தும், அந்த ஞானேந்திரியங்களாலும் சப்தாதி விஷயங்களாலும் குற்றம் பொருந்திய செய்கைகளைச் செய்யாநிற்கும் கர்மேந்திரியங்களைந்துமாக வகுத்துக் கூறிய பஞ்சமகாபூதம் முதல் கர்மேந்திரிய பரியந்தமான இவை முழுமையும், இன்னும், இச்சை த்வேஷம் சுகம் துக்கம் இந்திரியங்களோடு கூடிய சரீரம் ஞானரூபமான மனோவிருத்தி தைரியம் இவை யாவும் ஆகி, நெருங்கிப் பொருந்தியுள்ள விகாரத்தன்மைகளோடு கூடிய இத்தொகையைத்தான் பெரியோர் உடம்பு என்னும் க்ஷேத்திரமென்று கூறுவர். இனி இந்த க்ஷேத்திரத்தின் சாக்ஷிரூபமான க்ஷேத்திரக்ஞனை க்ஷேத்திரத்தினும் வேறாகத் தெரிந்துகொள்ளும்பொருட்டு அந்த க்ஷேத்திரக்ஞனை அறியத்தக்கனவான ஞானசாதன குணங்களை உரைப்பேன் கேட்பாயாக:

விஜய! ஒருவன், தன்னுடைய குணங்களைச் சிலாகிப்பதும், பிறர் தன்னை நன்குமதிக்கும்படி தனது தர்மத்தைக் காட்டுதலும், மோக்ஷமார்க்கத்திற் பிரவிர்த்தியாத குறைபாடும், அன்னியப் பிராணிகட்குத் துன்பஞ் செய்வதும், நான் என்னும் அகங்காரமும், இவ்விகலோகபரலோக விஷய



போகங்களில் உண்டாகும் பேராசையும் ஆகிய இவைகளைக் கெடுக்கும்படியான வலியும், தான் அடைந்திருப்பதான நல்ல கிரகத்துடனே மனைவி மக்களிடத்துப் பொருந்தி பெருகின்ற ஆசைப்பெருக்கத்தை விடுதலும், சரீரத்தூய்மையடைதலும், மோக்ஷத்திற்குப் பிரதிகூலங்களான சப்தாதி விஷயங்களில் தேகேந்திரியங்கள் சுபாவமாகப் பிரவிர்த்திக்கும் பிரவிர்த்தியும் துஷ்ட புருஷாற் பண்ணப்பட்ட அபராதத்திலெழும் த்வேஷமும் மூடர் சேர்க்கையும் ஆகிய இம்மூன்றையும் விடுதலும், ஒப்பற்ற வாசுதேவனான என்னையே சர்வத்தினும் உத்கிருஷ்டமாகவும் பரமகதியாகவும் நிச்சயித்துச் சித்தத்தின்கண்ணே வைக்கும் நிரதிசயப் பிரீதிரூபமான பக்தியும், புண்ணியபாவமென்னும் இருவினைகளைக் கடப்பவர் வசிக்கும் நதிதீரம் பருவதக்குகை முதலிய ஸ்தானங்களை யடைதலும், குருவை வழிபடும் சுபாவமும், குற்றமற்ற ஆன்மா அநான்மாக்களை உள்ளபடி பகுத்தறியும் விவேகமும், முன்னே தோன்றுகின்ற ஜன்மம் மூப்பு இறப்பு ஆகியவைகளால் வந்து பொருந்தும் துக்கங்களை அடிக்கடி சிந்தித்தலும் என்ற இவையெல்லாம் ஞானசாதனமாதலால் ஞானமாம்; இந்த ஞானசாதன குணங்களால் முமுட்சுக்கள் கிரமமாகச்சென்றடையாநிற்கும் ஞேயவஸ்துவை இனிக் கூறுவேன்; நீ அதன் சொரூபத்தைக் கவனத்தோடு கேட்பாயாக:

அருச்சுனா! அந்த ஞேயவஸ்துவானது உற்பத்திநாசமில்லாதது; அழியாமல் நின்ற மாட்சிமையுடையது; இன்னும் அந்த ஞேயவஸ்துவின் தன்மையைச் சொல்லில், அது சத்து அசத்து என்று கூறும் குறைபாடில்லாமல் பிரகாசிப்பது; உண்மையாகப் பார்க்குமிடத்து அது, தான் முழுதுமாய் முழுதிலும் நிறைந்திருத்தலின் இவ்வளவென்று வரையறுத்துச் சொல்லுதற்கரிய கை செவி தலை கால்கள் ஆகியவைகளை எங்கு முடையதாயிருக்கிறது. நான் இவ்வாறு கூறியதனால், நீ, 'அப்படியாயின் அந்த ஞேயவஸ்துவுக்கு வாஸ்

தவமாகக் கைகள் பாதங்கள் முதலியவைகள் உண்டோ?' என்று வினவக்கூடும்; அதற்குத் தக்கவிடை கூறுகிறேன் கேள்: அந்த ஞேயவஸ்துவானது விஷயங்களைக் காணுகின்ற ஞானேந்திரியம் கருமேந்திரியம் அந்தக்கரணரூபமான மனம் புத்தி ஆகிய இந்திரியங்களெல்லாவற்றிலும் அறிவாய் நின்று அவ்வவ்விந்திரிய வியாபாரங்களையுடையதாகத் தன்னைத் தோற்றுவிப்பது; விரும்பப்பட்ட இந்திரியங்களில் வாஸ்தவமாகத் தனக்கு யாதொன்றுமில்லாமலே பொருந்துகின்ற தன்மையையுடையது; எவ்வித பதார்த்தங்களோடும் சம்பந்திக்கும் சம்பந்தமானது அசங்கமாகலின் தனக்கு வாஸ்தவமாக இல்லாமலே சர்வகற்பித பிரபஞ்சங்களையும் அந்த ஞேயவஸ்துவானது தானே தனது சத்ரூபத்தினால் தரிக்கின்றது; மாட்சிமை பொருந்திய சத்வ ரஜஸ் தமோகுணங்கள் வாஸ்தவமாகத் தனக்கில்லாமலே அந்தச் சத்வ ரஜஸ் தமோ குணங்களைப் பொருந்தி அந்த க்ஷேத்திரக்ஞன் அனுபவிப்பதாகும். இன்னும் அந்த ஞேயவஸ்துவானது எப்படிப்பட்டதெனின் கூறுகின்றேன் கேள்: அந்த ஞேயவஸ்துவானது இவ்வியவகாரதசையில் காரியமாகிய பஞ்சபூத பௌதிகங்களின் உள்ளினும் புறம்பினும் காரணரூபமாக வியாபித்திருக்கின்றது; தனது சொரூபத்திற் கெடுதலில்லாமல் இருந்தபடியிருந்தே ஜங்கமரூபமாயும் ஸ்தாவரரூபமாயும் விளங்குவது.

'இங்ஙனம் ஞேயவஸ்து சர்வான்மாவாயின் சாதாரணமாக எல்லோராலும் என் அறியப்படவில்லை?' என்று நீ வினவின் அதற்கும் தக்கவிடை கூறுகின்றேன் கேள்: அந்த ஞேயவஸ்துவானது சர்வத்தின் ஆன்மாவாக இருந்தும் இத்தன்மையதென்று சொல்லவும் அறியவுங் கூடாதபடிக்குச் சூட்சுமமாகியது. இன்னும் அது, வாஸ்தவமாக ஸ்தாவர ஜங்கமரூபமான பிராணிகளிடத்தில் ஏகமாகி யிருந்தும் தேகங்களோடு பொருந்தியிருப்பதால் பேதமுண்டானதுபோலச் சரீரங்கடோறும் நின்று விளங்கப்படுகின்றது; உருவமில்லாத



தாகி, விவேக வைராக்கியாதி சாதனங்களில்லாத புருஷர்க்கு ஆயிரங்கோடி வருஷங்களாலு மடையப்படாமையின் இலக்ஷங்கோடி யோஜனை மார்க்கமுடைய தேசம்போல மிகவுந் தூரமாகியது; விவேக வைராக்கியாதி சாதனங்கள் நிறைந்த புருஷர்க்கு எல்லாந் தானாய்த் தமது ஆன்மரூபமாகலின் மிகவுஞ் சமீபத்திலுள்ளதுமாகியது; ஸ்தாவர ஜங்கமங்களான உருவங்களெல்லாவற்றையுஞ் சிருஷ்டித்து, மீண்டும் சம்மரிக்குங் காலத்தில் சம்மாரஞ் செய்வது; இன்னும் அந்த ஞேயப்பிரமமானது, ஒன்றோடுவமிக்க முடியாத ஆதித்தியன், சந்திரன், அக்கினி, மின்னல் முதலிய வெளி ஜோதிகளும்; மனம், புத்தி முதலிய உள்ஜோதிகளுமாகிய சர்வ ஜோதிகட்கும் உள்ளே ஜோதியாகிப் பிரகாசிக்கின்றது; பிராணிகளின் புத்திவிருத்தியின்கண்ணே பேதம் விடுத்த ஞானரூபமாகியும், அதன் விஷயமாயும் பொருந்தியது. இவ்வாறான அந்த ஞேயப்பிரமமானது முற்கூறிய ஞானசாதன குணங்களாலேயே அதிகாரிகளானோர் தரிசிக்கும் பொருளாம்; ஆதலால், அதனை மற்றையயாவரு மறிதல் கூடாது.

குறைவற்ற நல்ல சித்தத்தையுடைய அருச்சுனா! மகாபூதமுதல் தைரியபரியந்தமான க்ஷேத்திர சொரூபமும், தனக்கு வேறான க்ஷேத்திரத்தின்கட் பொருந்திய ஞானசாதன குணங்கள் முழுவதும், அந்த ஞானசாதன குணங்களால் தரிசிக்கப்படும் ஞேயப்பிரமத்தின் நல்ல இலக்கணமும் குறைவற்ற விதமாகவும் சுருக்கமாகவும் உனக்கிப்போது கூறினேன். இனி மற்றவற்றையுங் கூறுகின்றேன் கேள்: என்னிடத் தருணையினால் எனதுவாக்கை இகழ்வதையொழித்து, யான் முன்னே கூறிய க்ஷேத்திரம், ஞானம், ஞேயம் என்னும் இப்பொருள்கள் மூன்றனையும் உள்ளபடி, முன் அத்தியாயத்திற் கூறிய இலக்கணமுடைய எனது பக்தர்களை உணர்ந்து, உற்பவங்களென்று சொல்லப்பட்ட குற்றம் நிறைந்துள்ள மாயையாகிய கடலைக் கடந்து, பிறவிக்கஞ்சினோர் அடைய விரும்பும் நிரதிசயானந்தரூபனான என்னை அடைவார்,' என்று கூறியருளினார்.

இவ்வாறு கூறிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் பின்னு மொன்றைக் கூறுதற்குக் கிருபை பொருந்தினவராய்ப் பார்த்தனை நோக்கி, "அருச்சுனா! முன்னே கூறிய க்ஷேத்திரத்திற்கும், க்ஷேத்திரக்ஞனுக்கும் வாஸ்தவமாகக் காரணத்தை ஆராய்ந்தறிபவர் ஒருவருமில்லை; ஆதலின் அவ்விரண்டனையும் அநாதியெனவும், ஆகாசமுதலிய பஞ்சமகாபூதங்களும் சுரோத்திராதி ஞானேந்திரியங்களும் வாக்காதி கர்மேந்திரியங்களும் மனமும் ஆகிய விகாரங்களும், சுகதுக்க மோகரூபமாகிய சத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் குணங்களும் க்ஷேத்திரமென்னும் பிரகிருதியினின்றே உற்பந்நமாயினவெனவும் நீ அறியக்கடவாய். குற்றமற்ற பிரகிருதியும் புருஷனுமாகிய அவ்விரண்டினது செய்கை யாதென்று நீ கேட்க விரும்பின், சுருதிவழியாக அவ்விரண்டின் செய்கைகளையும் உனக்குத் தோன்றும்படி இனிக் கூறுகிறேன் கேட்பாயாக: சுகதுக்க மோகரூபமாகப் பொருந்திய சத்துவ முதலிய குணங்களின் *சாமியாவஸ்தையே பிரகிருதியெனக் கூறப்படுவதால் †காரிய ‡காரணரூப வேறுபாடுகட்கு மாயாரூபப் பிரகிருதியே காரணம்; இவ்விஷயம் கபிலாதி ரிஷிகளாற் கூறப்பட்டிருக்கின்றது. பிரகிருதி ஜந்நியமாகக் கருதிய துன்பம் இன்பம் என்ற இவைகளை உண்ணுநிற்கும் எதுவானது புருஷனாகிய உயிரென்று சொல்லப்படுவதாம். இந்த க்ஷேத்திரக்ஞனென்னும் புருஷனானவன், இவ்வுடம்பாகிய மாயாரூபப் பிரகிருதியின் கண்ணே மித்தியா தாதான்மியபாவ முடையனாய் நின்று, அந்தப் பிரகிருதியினால் நேரும் சத்துவமென்னும் குணம், ரஜஸ் தமஸ் என்னும் தோஷங்கள் ஆகியவைகளில், 'இவை நான்,' 'இவை என்னுடையன,' என்றிருக்கும் அபிமானரூபமான சம்பந்தத்தால் பிறப்பிறப்புக்களை யடையாநிற்பன். எனது தோழனான அருச்சுனா! இத்தேகத்தை வலியுடையதாகச்செய்து, இதன்கண்ணே ஜீவரூபமாகி இதற்கு வேறாய் நிற்கின்ற க்ஷேத்திரக்ஞனென்னும் புருஷனானவன்,

* சாமியாவஸ்தை - ஒப்புமைநிலை. † காரியம் - சரீரம். ‡ காரணம் - சுகதுக்க சாதனங்களான இந்திரியங்கள்.



நிர்விகாரனானாலும் சுகதுக்க மோகரூபமாகிய விருத்தி விசேஷங்களின் சமீபசம்பந்த முடையவனாகலின், புஜிப்பவைகளான சுகதுக்காதிக ளெல்லாவற்றையும் புஜிக்கும் போக்தாவுமாவன்; தேகேந்திரியாதிகளின் வியாபாரத்தில் தான் வியாபாரமுடையனாகாமல் விலட்சணனாய் வியாபாரமுடைய தேகேந்திரியாதிகளைப் பார்க்கின்றனன் ஆதலின் மெய்ம்மையான தனது திருஷ்டியைக்கொண்டு தேகேந்திரியாதிக ளெல்லாவற்றையும் சமீபத்திலிருந்து பார்க்கின்ற உபதிருஷ்டாவுமாவன்; தேகேந்திரியங்களின் பிரவிர்த்தியில் தான் பிரவர்த்தனாகாதிருந்தும் பிரவர்த்தனானவன்போலச் சமீபத்தன்மை மாத்திரத்தால் அவைகளுக் கநுகூலமாவதால் அநுமந்தாவுமாவன்; சைதந்நியத்தின் ஆபாசத்தோடு கூடிச் சங்காதமான தேகேந்திரியாதிகளைத் தாரணஞ் செய்வதனாலும், போஷணஞ் செய்வதனாலும் பர்த்தாவுமாவன்; சர்வத்திற்கும் ஆன்மரூபமாவதனாலும், சுதந்தரனாவதாலும் எவ்வகைப்பட்ட பொருள்களிடத்தும் அதுவதுவாகப் பொருந்தியிருக்கும் மஹேசுரனுமாவன்; அவித்தியாவசத்தால் ஆன்மசொரூபமாகக் கற்பனை செய்துள்ள தேகமுதல் புத்திபரியந்தமான சர்வஜடபதார்த்தங்களின் மேலாயிருப்பதனாலும், உபதிருஷ்டாமுதலிய விசேஷண விசிஷ்டான்மாவா யிருப்பதனாலும் பரமான்மாவுமாவன்.

இங்குக் கூறியபடி உபதிருஷ்டா முதலிய ரூபனான க்ஷேத்திரக்ஞனையும், சுகதுக்காதி குணசகித பிரகிருதியையும் குருசாஸ்திர உபதேசங்களால் உள்ளபடியே சாட்சாத்கரித்தறிந்தவன், மிகவும் பிரபலமான பிராரப்த கர்மவசத்தால் தன்னால் விரும்பப்பட்ட போகங்களைப் புஜித்து, சாஸ்திர விதிகளை அநுசரியாமலே சஞ்சரித்துச் சீவித்தாலும், பொய்யாகிய ஜனனத்தின்கண்ணே மீண்டும் செல்லான். அருச்சுனா! அதிகாரிகளின் பேதத்தால் இவ்வான்மஞான சாதனங்களில் விகற்பங்களுண்டாம்; அவற்றையும் இனிக் கூறுகிறேன் கேள்:

பிரமாதிஸ்தம்பபரியந்தமான சகல சரீரங்களிலும் நிறைந்திருக்கும் பிரத்தியக்சைதந்நியமாகிய இவ்வான்மாவைச் சில உத்தமாதிகாரிகள், தியானரூபமான ஆன்மசிந்தனத்தாலே தமது புத்தியின்கண்ணே சாட்சாத்கரிப்பர்; சில மத்திமாதிகாரிகள், மேற்சொன்ன தியானரூபமான ஆன்மசிந்தனைக்கு முன்செய்யும் சிரவண மனனரூபமான ஆன்மசிந்தனையென்னும் அறிதற்கரிய சாங்கியயோகமாகிய மார்க்கத்தால் பிரத்தியகான்மாவைச் சர்வத்திர வியாபகமாய் நிற்கத் தமது புத்தியின்கண்ணே தியானத்தின் உற்பத்திவாயிலாகச் சாட்சாத்கரிப்பர்; முன்னே கூறிய தியானம், சாங்கியயோகமென்னும் இருவகை உபாயங்களாலும் பிரத்தியகான்மாவைச் சாட்சாத்கரித்தறிதற்கு விசாலமான புத்தியில்லாத சில மந்ததராதிகாரிகள், பரமகாருணிகனான ஒரு ஆசாரிபுருஷன், 'இதுவே தெய்வம்; இதனை இவ்வாறு சிந்தனை செய்வீராக,' என வுபதேசித்த ஒரு ஆன்மாவையே மிகவுஞ் சிரத்தையினால் சிந்தனை செய்வர்; அவ்வான்ம சிந்தனத்தின் மகிமையினால் குருவினுபதேச சிரவணமாத்திர பாராயணரான அவ்வதிகாரிகளும் சம்சாரத்தை யடையமாட்டார்கள்.

அருச்சுனா! அதிஷ்டானப் பிரமத்தினாசிரிதமாய், அவ்வதிஷ்டானப் பிரமத்தை விஷயம்பண்ணும் அநிர்வசனீயமான அவித்தையினாலேயே இச்சம்சாரம் உண்டாயிற்று; ஆதலால், அதிஷ்டானப் பிரமத்தை விஷயம் பண்ணுவதாயுள்ள ஆன்மஞானரூபமான பிரமவித்தையினாலே அவ்வவித்தை நீங்கிய அதிகாரிக்கு மோட்சமானது உளதாம். அவ்வாறு அம்மோட்சமுண்டாகுமென்னும் பொருளை நிச்சயித்தற்பொருட்டுச் சம்சாரத்தையும், சம்சார நிவிர்த்திக் கேதுவான ஆன்மஞானத்தையும் இனி விஸ்தாரமாகக் கூறுகிறேன் கேட்பாயாக: * சரமும் † அசரமுமாகிய உடல்களைத் தரித்துக்கொண்டு, எல்லாச் சீவர்களும் துன்பத்தை யடைகின்ற இச்செய்கைகளெல்லாம், அவித்தையும் அதன்காரியங்களான

* சரம் - அசைவுள்ளது. † அசரம் - அசைவற்றது.



அநிர்வசனீய திருசியப் பிரபஞ்சங்களுமாகிய க்ஷேத்திரத்தின் விலட்சணத்தன்மையையும், அந்த க்ஷேத்திரத்தின் விலக்ஷணமாயும், அதன் பிரகாசகமாயும், சொப்பிரகாச பரமார்த்த சத்தாயும், அசங்கோதாசீனமாயும், சர்வதர்மங்களும் விடுபட்டதாயுமுள்ள அத்துவிதீய சைதந்நியமாகிய க்ஷேத்திரக்ஞனுடைய விலட்சணத்தன்மையையும் மாயாவசத்தால் விசாரித்தறியாத அவிவேகத்தினாலேயே நேர்வனவாம். நாசமாகின்ற பூதங்களோடும் கெடாமற் சகல தோஷங்களு மற்றுச் சமமாயும் நிர்விகாரரூபமாயும் நிறைந்திருக்கும் சுருதியின்பொருளான பரமேசுரரூபமென்னும் ஆன்மாவைச் சர்வபூதங்களிலும் ஏகரூபமாய்ச் சகல விகாரங்களும் விடுபட்டுள்ள நித்தியவஸ்து எதுவோ அதுவேயென்றும், அதுவே நான் என்றும் சாஸ்திரதிருஷ்டியினால் சாட்சாத்கரித்த வித்துவானானவன், அநர்த்தநிவிர்த்தி ஆநந்தப்பிராப்தி முதலியவைக ளெல்லாவற்றையும் கடைகளாவது தவிராது கண்டவனாவான்; இன்னும், ஸ்தாவரஜங்கமரூபமான சர்வபூதங்களிலும் சமமாய் நிறைந்திருப்பதாகிய, சகல பவவிகாரங்களும் விடுபட்ட அந்த ஈசுரரூபமான ஆன்மாவை, மேற்கூறியபடியே சாட்சாத்கரித்தறியும் அவ்வறிஞனே, இறந்தும் பிறந்தும் சுழலாதபடி தன்னைத் தன்னாலே மெய்ம்மையான மோக்ஷகதியிற் புகவிடுகின்றவனாவான்.

இனி, நீ, 'சுபாசுப கர்மங்களைப் பண்ணுகிறவனையும், தேகந்தோறும் வேறுவேறாய் அவ்வச் சுகதுக்காதிரூபமான விசித்திரப்பயனைப் புஜிக்கிறவனையுமுள்ள விஷமசுபாவமுடைய ஆன்மாவைச் சர்வபூதங்களிலும் ஏகமாகக் காணுதல் எவ்வாறு கூடும்?' என்று வினவக்கூடும்; அதற்கும் விடை கூறுகின்றேன் கேள்: க்ஷேத்திரக்ஞனான புருஷன் விகாரமற்றவனென்றும், இலௌகிக வைதிகமான சர்வ கர்மங்களும் தேகேந்திரியாதி ஆகார பரிணாமமுடைய பிரகிருதியினுடனே சம்பந்த முடையனவென்றும் சாஸ்திரரூபமான பார்வையினாற் கண்ட விவேகிபுருஷனே, 'ஆகா

யத்தில் கடமடாதி உபாதி திருஷ்டியினுல் பேதமே யல்லாமல் ஆகாயத்தின் சொருப திருஷ்டியினுல் பேதமில்லாதது போல ஆன்மாவின்கண்ணும் சரீரவுபாதி திருஷ்டியினுலல்லாமல் சொருபதிருஷ்டியினுல் பேதமும், கர்த்திருத்வ போக்திருத்வமும் இல்லை,' என்னும் உறுதியோடு பொய்யற்ற மெய்ப்பொருளைக் கண்டவனுவான். இன்னும் நீ, 'ஆன்மா, சுபாவத்தால் அகர்த்தாவாயினும் சரீரசம்பந்தரூப உபாதியினுல் கர்த்தாவாகலாமே,' என்று சொல்லக்கூடும்; அதற்கும் விடை மொழிகின்றேன் கேட்கக்கடவாய்: கொத்தாகிய மலர்களாற் றொடுக்கப்பெற்ற மாலையை யணிந்த கிரீடத்தையுடைய அருச்சுனு! சரீரமானது இலௌகிக வைதிகமான சர்வ கர்மங்களையும் செய்யினும் ஆன்மா நிர்க்குணுதலின், அக்கர்மங்களோடு சம்பந்தித்திரான். இவ்வாறு ஆன்மா, கர்மங்களோடு சம்பந்தித்திரானென்பதற்குத் தக்க உதாரணங்களையுங் கூறுகிறேன் கேட்பாயாக: கருதிய ஆகாயமானது எங்கும் நல்லன தீயனவான திரவியங்களில் உள்ளும் புறம்பும் வியாபித்திருப்பதானுலும், தனது அசங்க சுபாவத்தினுலே, அந்நியமான அத்திரவியங்களின் சுகந்தம், துர்க்கந்தம், மழை, வெய்யில், அக்கினி, புகை முதலிய குணதோஷங்களோடு சம்பந்தப்படுவதுண்டோ? இல்லை; இதுபோல நிலைபேறுடைய ஆன்மதேவன், தேவ மனுட பசுபட்சியாதிகளென்னும் உயர்வு தாழ்வான தேகங்களில் உள்ளும் புறம்பும் வியாபித்திருப்பவனுனுலும் அசங்கசுபாவமுடையவனுதலால் மேற்கூறியபடி அத்தேகங்களாற் செய்யப்படும் சுபாசுப கர்மங்களோடு சம்பந்தப்படமாட்டான்.

இன்னும், சூரியனுனவன், தானெருவனேயாகி நின்று இவ்வுலகில் உருவமுடைய தேகமுதலிய எல்லா வஸ்துக்களினும் பொருந்திய இருளை நீக்கி, அவற்றைப் பிரகாசிப்பிக்கும் தன்மைபோலத் தம்மை யுண்டாக்குதற்கு எவரையும் முன்னே உடையாராகப் பெறுத நடப்பன நிற்பனவான சராசரங்களிடோறும், யான் முன்னே புகழ்ந்து கூறிய க்ஷேத்திரக்ஞனை ஆன்மா வொருவனே வியாபித்து அவைகளைப் பிரகாசிப்பித்து நிற்பன். ஆயினும், அவற்றின் கர்மங்களோடு சம்பந்தப்படமாட்டான். ஆதலால், அருச்சுனு! ஆராயுமிடத்து, தேகேந்திரியாதிக ளனைத்திற்கும் அதீதமாய் நிற்கின்ற க்ஷேத்திரக்ஞனேடு, க்ஷேத்திரத்தையும், அதற்குரிய நாமகற்பனையோடு பிறப்பு மூப்பு இறப்பு என்னும் தர்மங்களையும் வேருக இப்பூமியின்கண் ஞானரூபமான நேத்திரத்தால் அறிபவர் கைவல்ய முத்தியைப் பொருந்தினவராவார்," என்றுரைத்தருளினுர்.



பதின்மூன்ருவது
க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞவிபாகயோகவத்தியாயம்
முற்றுப்பெற்றது.

---

பதினுன்காவது

## குணுதீதவத்தியாயம்.

கலிவிருத்தம்.

"செய்ய மாமலர் மேலுறை செல்வியும்
வைய மாமட வாளு மகிழ்ந்ததோள்
ஐயன் மெய்யையன் பாலடி யோமெலாம்
உய்ய மீள வுரைக்கத் தொடங்கினுன்."

அழகிய தாமரைமலரின்கண்ணே வீற்றிருக்கும் ஸ்ரீதேவியும், பூமிதேவியும் அணைந்து சந்தோஷிக்கப்பட்ட திருப்புயங்களையுடைய ஸ்ரீ பகவான், முன் பதின்மூன்ருமத்தியாயத்தில் க்ஷேத்திரம்க்ஷேத்திரக்ஞன் என்னும் இரண்டின் சம்யோகத்தால் சர்வ ஸ்தாவர ஜங்கம பூதங்களினுற்பத்தியைக் கூறியருளியபடியால், ஈசுரனை அங்கீகாரஞ் செய்யாத நிரீசுரசாங்கியமதத்தைக் கண்டித்து அந்த க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞாது சம்யோகத்திற்கு ஈசுராதீனத்தன்மையுளதென்பதையும், அதில் குணசங்கத்தையே ஜன்மத்திற்குக் காரணமென்று கூறியபடியால் இந்த இந்தக் குணத்தில்

இந்த இந்தப் பிரகாரமாகச் சங்க முளதென்பதையும், அக்குணங்கள் இவையென்பதையும், அக்குணங்கள் இந்தப் பிரகாரமாகச் சிவனைப் பந்திக்கின்றனவென்பதையும், சத்துவாதிகுணங்களினின்றும் அதிகாரிக்கு இவ்வாறு முத்தியுளதாமென்பதையும், முத்தனான புருஷனுக்கு இலக்ஷணம் இவை யென்பதையும், அவசியமாகக் கூறியருளவேண்டுமாதலின், இவைகளை இவ்வத்தியாயத்தில் விஸ்தாரமாகக் கூற உத்தேசித்து, அடியேமாகிய நாங்களெல்லாம் பிழைக்கும்பொருட்டுத் தமக்குள்ள கருணையினால் மேற்கூறியவற்றையறிதற்கேதுவான மெய்ம்மையான ஞானத்தை மீண்டும் உரைத்தருளத் தொடங்கினார்:

அவ்வாறு தொடங்கிய ஸ்ரீ கிருஷ்ணபகவான், அருச்சுனனை நோக்கி, "வலிமைபொருந்திய புயங்களையும், கிரீடத்தையுமுடைய அருச்சுனா! இன்னும் ஞானத்தின் உயர்வைப் பற்றிக் கூறுகிறேன் கேள்: இப்போது யான் சொல்லத் தொடங்கிய அந்த ஞானத்தின் துணிவானது, ஞானத்தின் பகிரங்க சாதனங்களாகிய மகம், தவம் முதலிய எல்லாவற்றுள்ளும் உத்தமமானது; துன்பம் நீங்கிய தவத்தினையுடைய முனிவர்கட்கு அறிவாயிருப்பது. இப்படிப்பட்ட தன்மையையுடைய ஞானத்தின் சுபாவானுஷ்டானத்தால் அத்துவிதிய நிர்க்குண சொரூபனான என்னை அபேதமாகவடைந்த வித்துவான்களாகிய புருஷர்கள் இவ்வுலகின்கண் மீண்டு சிருஷ்டிகாலத்திலும் உற்பத்தியாகமாட்டார்கள்; பிரளயகாலத்திலும் இறக்கமாட்டார்கள். இப்படிப்பட்ட ஞானத்தின் தன்மையாதென்று நீ வினாவில் அதனையும் இனிக் கூறுவேன் கேட்பாயாக:

முதிர்ந்த தவத்தையுடைய அருச்சுனா! இனிக் கூறப்படும் சத்துவாதி முக்குணங்களாற் பேதமாக வேறுபாடுகளை யடையும் கர்ப்பாதானத்திற்கு ஸ்தானமான எனது மாயையின்கண்ணே, உலகைச் சிருஷ்டிப்போமென்னும் இச்சையினால் யான் சங்கற்பரூபமான கருப்பத்தைத் தரிப்



பிப்பேன்; அக்கர்ப்பாதானத்தினாலேயே பூதங்களியாவும் உற்பத்தியாகின்றன. இந்த விதத்தினால் இவ்வுலகின்கண், தேவர், பிதுரர், மனுடர், பசுமுதலிய சர்வ யோனிகளிலும் உற்பத்தியான * சராயுஜம், † அண்டஜம், ‡ சுவேதஜம், § உத்பீஜம் என்னும் நானா பேதங்களையுடைய சரீரங்களெல்லாவற்றையும் உற்பத்தியாக்கும் கருப்பாதான கர்த்தாவாகிய பிதா, பரமேசுரனான நான்; அச்சரீரங்களைப்பெற்று வளர்க்கின்ற மாதாவானவள், முன் சொல்லிய பரமேசுரனான என்னுடைய அவ்வியாகிருதமென்னும் மாயையாம்.

இப்போது பரமேசுராதீனமான பிரகிருதி, புருஷரின் வாயிலாகப் பிராணிகளின் உற்பத்தி ஏற்படுவதைக் கூறினேன்; இனி அந்தப் பிரகிருதியின் சங்கத்தால் புருஷனுக்குச் சம்சாரமாகிய அவஸ்தை யுளதாமென்பதை விஸ்தாரமாகக் கூறுகிறேன் கேட்பாயாக: குணமென்று முன்னே நான் அங்கீகரித்துக்கூறிய மூன்றும் ஈசுரனது மாயையென்னும் மூலப்பிரகிருதியினின்றே உண்டாயிருக்கின்றன; அவை ஜீவான்மாவைப் பிடித்து இத்தேகத்தினிடம் பலமாகப் பந்தித்துள்ளன; இனி அக்குணங்களின் நாமங்களையும், அவை ஜீவான்மாவைப் பந்திக்கும் விதத்தையும் அறிவிக்கின்றேன் தெரிந்துகொள்வாயாக:

அருச்சுனா! ஜீவான்மாவைப் பந்தித்துநிற்குங் குணங்கள் சத்துவமெனவும், ரஜஸெனவும், தமஸெனவும் பெரியோர்களா விடப்பெற்றுவந்த நாமங்களையுடைய மூன்றுமாம்; இவை சுகதுக்காதிகளான எவ்வகைப்பட்ட துவந்துவங்களையும் ஜீவான்மாவுக்குக் கொடுப்பனவாம்; மிகுதியாய் வந்த அச்சத்துவாதி குணங்களின் செய்கைகளின் வேறுபாடுகளை இனிக் கூறுவேன் கேட்பாயாக: மேற்கூறிய முக்

---

* சராயுஜம்-கருப்பையிற் பிறப்பன. † அண்டஜம்-முட்டையிற் பிறப்பன. ‡ சுவேதஜம் - வேர்வையிற் பிறப்பன. § உத்பீஜம்-நிலத்திற் பிறப்பன.

குணங்களுள் சத்துவகுணமானது பற்றுகின்ற மாசில்லாத தன்மையினாலே பளிங்குமணிபோலப் பிரகாசம்பொருந்தியது; அனுகூலமான நல்லஞானத்தை யுண்டாக்குவது; என்றும் சுகத்தையல்லாமல் துக்கமென்பது சிறிதுமில்லாததாம். இராஜோகுணமென்று சொல்லப்படுவது: கிடையாத வஸ்து கிடைக்கவேண்டுமென்னும் அபிலாஷையாகிய திருஷ்ணை, கிடைத்த வஸ்துவில் ஏற்படும் பிரீதியாகிய ஆசங்கம் என்னும் இரண்டும் தன்னிடத் துண்டாவதால் சொல்லாநின்ற இராகரூபமுடையது; காவிக்கல்லைப்போன்ற உள்நிறம்பொருந்தியது; மதிமயக்கஞ்செய்யும் இலௌகிக, வைதிக கர்மங்களோடு ஜீவான்மாவைப் பந்தித்தற் கேதுவா யிருப்பது. தமோகுணமென்று சொல்லப்படுவது: கருநிறமுடையதாய், மயக்கமும், குற்றமற்ற நல்லொழுக்கங்களை இகழாநிற்கும் ஆலசியமும் நித்திரையும் பொருந்தியதாய், இவற்றால் திடமாக ஜீவனைப் பந்தித்து வருத்துவதாம். பூமியினிடமாக நிறைந்த கீர்த்தியையுடைய அருச்சுனா! இன்னும், முன்சொன்ன சத்துவகுணமானது தேகியைச் சுகவழியிற் செலுத்தும்; இராஜோகுணமானது தேகியை இலௌகிக வைதிக கர்மங்களோடு கூடும்படி பண்ணும்; தமோகுணமானது அவசியமாக அறியவேண்டுவதை அறியாமையாகிய பிரமாதத்தைச்செய்து, அழுக்கையே அடைந்து பெரியோர் கூட்டுறவா லுண்டான ஞானத்தை மறைக்கும். இனி, முன்னே கூறிய சத்துவாதி குணங்கள் தத்தம் காரியங்களை எந்தக் காலத்திற் செய்யுமென்று நீ வினவின் அதற்கும் விடை கூறுகிறேன் கேள்: மற்றைய இராஜோகுணம், தமோகுணம் ஆகிய இரண்டையும் எழவொட்டாம லடக்கிச் சத்துவகுணமானது விருத்தியடையும்; தமோகுணமானது விருத்தியடையின் இராஜோகுணம், சத்துவகுணம் ஆகிய இரண்டும் அடங்கிவிடும்; இராஜோகுணமானது விருத்தியடையின் சத்துவகுணம் தமோகுணம் ஆகிய இரண்டும் அடங்கிவிடும்; ஜீவர்களின் புண்ணிய பாவ வசத்தினால் இங்கேகூறியபடி இரண்டு குணங்களடங்கி ஒருகுணம் அதிகரித்திருக்கும்.



அருச்சுனா! இனி மேற்கூறியபடி மூன்று குணங்களும் விருத்தியடையும் விதத்தையுங் கூறுகிறேன் கேட்பாயாக: எக்காலத்தில் சமமாய்ச் சுரோத்திரமுதலிய சர்வேந்திரியங்களிலும் நல்ல ஞானரூபப்பிரகாசமானது மிகுந்துண்டாகின்றதோ அந்தக்காலத்தில் சத்துவகுணமானது விருத்தியடைந்ததாம்; சதா வியாபாரத்தில் மனத்தைக் கொடுத்திருத்தலாகிய பிரவிர்த்தி, காமியம் நிஷித்தம் முதலிய வியாபாரங்களாகிய கர்மம், அவற்றின் முயற்சியாகிய ஆரம்பம் ஆகியவைகளை உண்டாக்கிக்கொண்டு புருஷனை அவற்றிற் பிரவிர்த்திப்பித்து, ஆசையானது உண்டாகி அதிகரிக்கும்படி உலோபமானது மிகவும் வந்தடைந்த காலத்தில் மத்திமமான இராஜோகுணமானது மிகவும் விருத்தியடைந்ததென்று நீ அறியக்கடவாய். அருச்சுனா! ஏதேனு மொருபதார்த்தத்தை, 'இது தகுதியானது,' 'இது தகுதியல்லாதது,' என்று தான் அறியாதகாலத்தும், எவ்வகைப்பட்ட கருமங்களிடத்தும் பிரவிர்த்தியாதகாலத்தும் மெய்ம்மயக்கத்தோடுகூடப் பொருந்த நித்திரை வந்தடைந்த காலத்தும் தமோகுணம் அதிகரித்ததென்று நீ தெரிந்துகொள்வாயாக.

இனி, மரணகாலத்தில் விருத்தியடைந்துள்ள சத்துவாதிகுணங்களின் பலன்களைக் கூறுகிறேன் கேள்: மேலான சத்துவகுணமே விருத்தியடைந்தபோது மரணமாயினோர் தேவயோனிகளிலே ஜனிப்பார்கள்; இராஜோகுணமே விருத்தியடைந்தபோது சரீரத்தை விட்டவர்கள், கர்மங்களிலும் அவற்றின் பலன்களிலும் அதிகாரிகளாகிய மனிதர் யோனிகளில் ஜனிப்பார்கள்; மிகுந்தெழுகின்ற தமோகுணமே விருத்தியடைந்தபோது மரணமாயினோர் பசுமுதலிய மூடயோனிகளிலே உற்பத்தியாவர். இன்னும் இச்சத்துவாதி குணங்களா லேற்படும் வேறு பயன்களையும் கூறுகிறேன், அவற்றையும் விளக்கமாக நீ அறியக்கடவாய்: அடைதற்கரிய குணமாகிய சாத்துவிகதர்மத்தின் பலன், மலம் நீங்குதலாம்; இராஜஸதர்மத்தின் பலன், பெரிய துன்பத்தை யனு

பவித்தலாம்; தாமஸதர்மத்தின் பலன் அஞ்ஞானமாம். இங்குச் சொல்லிய வொழுங்கின்படியே புண்ணியபாவவசத்தாற் பொருந்திய இந்தச் சத்துவ முதலிய முக்குணங்களாலும் பிராணிகூட்டங்களெல்லாவற்றிற்கும் சுரோத்திராதி இந்திரிய துவாரங்களால் வரும் அழகாகிய ஞானம், உலோபம், அஞ்ஞானம் என்று சொல்லப்படுகின்ற இத்தன்மையனவான பயன்களுள்ளனவாம். இன்னும், சத்துவகுணப் பிரதான மனுடர் பிரமலோகபரியந்தமான பரலோகத்தை யடைவர்; நித்திரை, ஆலசியாதிரூபமான தமோகுணவிருத்தியிற் பிரீதியுடைய தாமஸ புருஷர், பசுவாதியோனிகளில் உற்பத்தியாவர்; மத்திமமான இரஜோகுணப் பிரதானமுடைய புருஷர் மத்தியவுலகில் மானுட ஜன்மமாய் வாழ்வார்கள். ‘இப்புத்தியாதி * ஆகாரங்களாகப் † பரிணாம மடைந்திருப்பனவான சத்துவாதி குணரூபங்களே இலௌகிக வைதிகமான சர்வ கர்மங்களின் கர்த்தாவாம்; அவைகளின் அன்னியமாக ஒரு கர்த்தாவுமில்லை; அவைகளின் சாக்ஷிபூதனான நான் அகர்த்தாவாம்,’ என்று இவ்வாறு இச்சத்துவாதிகுணங்களையும், இவைகளின் ‡ விலட்சணனான தன்னையும் உள்ளபடி விலட்சணமாக அறிந்த புருஷனானவன் அவ்வாறு அறிந்தவுடனேயே முத்தியின்ப மடைந்தவனாகின்றான்; ‘இவன் எவ்வாறு முத்தியின்ப மடைவன்?’ என்று நீ வினவக்கூடும்; அதற்கும் விடை கூறுகிறேன் கேட்பாயாக: தேகத்தோடு கூடிச் சீவிப்பவனாகவிருந்தே, தேகோற்பத்திக்குப் பீஜமாகச் சொல்லிய சத்துவாதி முக்குணங்களையும் மேற்கூறியவாறு உள்ளபடியே மாயாமயமென்றறிந்து பரித்தியாகஞ் செய்தவன், பிறப்பு, மூப்பு, இறப்பு என்று உறுதியாகச் சொல்லுகின்ற விஷத்தையொப்பான துக்கங்களெல்லாவற்றையும் நீக்கி மோக்ஷசுகம் உண்டாகப்பெறுவான்,” என்றுரைத்தருளினார்.

விசாலமான திருப்பாற்கடலின்கண்ணே கண்வளர்ந்த ஸ்ரீ கிருஷ்ணபகவான் இவ்வாறு கூறவே, அருச்சுனன்

* ஆகாரம் - வடிவு, அடையாளம். † பரிணாமம் - வேறுபாடு.
‡ விலட்சணம் - வித்தியாசம்.



வேறு விஷயங்களைப்பற்றி வினவத் தொடங்கினவனாய் அவரை நோக்கி, “சுவாமி! முத்தி யடைவதற்குக் காரணமாகக் கருதிய இவ்வுலகில், ஒருவரால் கடத்தற்கரியனவாகிய சத்துவம் முதலிய முக்குணங்களையுங் கடந்து, அவற்றிற் கதீதமான புண்ணிய மூர்த்திகளின் ஆசாரத்தையும், அவர்கள் குணங்களைக் கடந்திருக்கும் உபாயத்தையும், அவர்களின் இலக்கணரூபமான அடையாளத்தையும், உபதேசித்தருள்வீராக,” என்று வினவினான். அவன் இவ்வாறு வினவவே, பதினான்காக எண்ணிய வுலகங்களையும், அவ்வுலகங்களில் வாழும் பிராணிகளையும், இருவினைகளுக்கீடாகிய சரீரங்களையும் உண்டாகும்படி படைத்தும், துடைத்தும் விளையாடுகின்ற ஸ்ரீ பகவான், அவ்வருச்சுனனுடைய வினாக்களுக்கு விடை கூறத்தொடங்கினவராய் அவனை நோக்கி, ‘அருச்சுனா! மாயாமயமாகிய சத்துவம் முதலிய முக்குணங்களினுடைய காரியங்களாய் வருகின்ற ஞானரூபப் பிரகாசமும், பிரவிர்த்தியும், மோகமுமாகிய இம்மூன்றையும் தூரமாய் நீங்கினவென்று அடையாதபோது சுகபுத்தியினால் அவைகளை இச்சித்தலும், அந்தப் பிரகாசம் முதலியவைகளை அடைந்தபோது துக்கபுத்தியால் அவற்றைத் துவேஷித்தலும் செய்யாதவனெவனோ அவனே குணாதீதனென்று சொல்லப்படுவான். இந்தக் குணாதீதன், தான் உதாசீன புருஷன்போல இராகத்துவேஷங்களை யடையாதவனாய்ச் சாட்சியாய்ச் சுகதுக்காதி ஆகார பரிணாமங்களை படையும் சத்துவம் முதலிய குணங்களோடு கூடியிருந்தே அக்குணங்களினால் தனது நிலையினின்றும் அசைக்கப்படாதவனாவான். இன்னும் அந்தக் குணாதீதன் எத்தகையனெனில், மானாவமானங்களிலும், வருகின்ற சுகதுக்கங்களிலும், மண்ணிலும், பொன்னிலும், சுகதுக்கங்களுக்குச் சாதனங்களான பிரியாப்பிரிய பதார்த்தங்களிலும், சத்துரு மித்திரரிடத்தும், ஸ்துதி நிந்தை ஆகியவை பொருந்தினகாலையிலும், சமனாயிருப்பவனாவான்.

முற்கூறிய தன்மைகளோடு கூடி உதிக்கின்ற சத்துவம் முதலிய குணங்களைக் கடந்து, மெய்த்தன்மையதாகிய பெரிய வீட்டை யடைபவர் எவரெனில், எவ்வகையினாலும் இடையூறின்றி எழும் பக்தியோகத்தினால், ஒப்பாரெவருமில்லாத பரமான்மாவென்னும் வாசுதேவனான என்னைச் சிந்தனஞ் செய்பவரேயாவர். எப்போதும் ஒழியாமல் யாவர்க்கும் யானே போதித்து வருவதால் கெடாத ஞானமும், அமிர்தமான மோக்ஷமும், கேடில்லாத சுகமும், சாசுவதமான தர்மமும், என்னிடத்தினின்றே உண்டாகின்றன; ஆதலால், பரமேசுரனான எனது பக்தியினால் அதிகாரிக்கு மோக்ஷம் உண்டாதல் கூடும்,'' என்றுரைத்தருளினார்.

பதினான்காவது

குணாதீதவத்தியாயம் முற்றுப்பெற்றது.

---

பதினைந்தாவது

## பிரபஞ்சவத்தியாயம்.

கலித்துறை.

“சாயை யன்னவென் வினைத்தளை யறுக்கவோ தகவில்
பேயை யின்னுயிர் செகுக்கவோ பிள்ளையாய் வளர்ந்தான்
வேயை யொன்றிய வரிசிலை விசயற்கு மீள
மாயை தன்னையோர் மாமொக்க வருணிக்க லுற்றான்.”

தேகத்தின் சாயைபோல் விட்டு நீங்காத புண்ணிய பாவரூபமான என்னுடைய வினையாகிய விலங்கை அறுக்கவோ, கிருபை சற்றுமில்லாத பூதகியைக் கொல்லவோ, நந்தகோபன் திருமனையில் பிள்ளையாய் வளர்ந்த ஸ்ரீகிருஷ்ண பகவான், முன் அத்தியாயத்தி னீற்றில், ‘ஏகாந்தமான பக்தியினால் பரமேசுரனான என்னைச் சிந்தனஞ் செய்பவர் எனது கிருபையினால் ஞானவாயிலாக முத்தராவார்,’ என்று கூறியருளியபடியால் அவ்வேகாந்தமான பக்தி, ஞானம் ஆகியவை யுண்டாதற்கேதுவான மார்க்கத்தைக் கூறவேண்டுமென்றும், அவ்வேகாந்தமான பக்தியும், ஞானமும் சம்சாரத்தினின்றும் விரக்தியடைந்த புருஷனுக்கே யுளவாமன்றி மற்றையர்க் குண்டாகமாட்டாவாதலின் அச்சம்சார விரக்திக் கேதுவான மார்க்கத்தையுங் கூறவேண்டுமென்றுங் கருதி, அச்சம்சாரவிரக்திக் கேதுவாகும்பொருட்டுச் சம்சாரரூபமான மாயையை முன் அத்தியாயங்களில் ஆங்காங்கே சொன்னதுந் தவிர மீண்டும் இவ்வத்தியாயத்தில் முன்னர் அச்சம்சாரத்தை ஓர் விருக்ஷத்துக்கு நிகராகச் சிறப்பித்துக் கூறத் தொடங்கினார்:



அவ்வாறு தொடங்கிய ஸ்ரீபகவான் பார்த்தனை நோக்கி, “அருச்சுனா! முன் அத்தியாயத்தி னிறுதியில் ஏகாந்தமான பக்தியினால் பரமேசுரனான என்னைச் சிந்தனை செய்பவர் எனது கிருபையினால் ஞானவாயிலாக முத்தராவாரெனக் கூறினேன்; அவ்வேகாந்தமான பக்தியும் ஞானமும் சம்சாரத்தினின்றும் நீங்கிய புருஷனுக் குண்டாகுமேயன்றி மற்றையர்க் குண்டாகமாட்டா; ஆதலால், அச்சம்சார விரக்தியுண்டாய் ஏகாந்தமான பக்தியும் ஞானமும் ஏற்பட்டு நீ முக்தனாவதற் கேதுவாக இப்போது அந்தச் சம்சாரத்தை விருட்சரூபமாக உருவகப்படுத்திக்கூறி உனக்குத் தெளிவை உண்டாக்கி அதனைச் சேதிக்கும் விதத்தையுங் கூறுகிறேன்; நான் சொல்லும் விஷயங்களைக் கவனித்துக் கேட்டுணர்வாயாக: மகாமாயையினாற் செய்யப்பட்ட சம்சாரரூபமான பெரிய விருக்ஷமானது, மேலானதை மூலமாகவுடையது; கீழானவைகளைச் * சாகைகளாகவுடையது; நாசமாகாதது; வேதத்தினது கர்மகாண்ட வாக்கியங்களை இலைகளாகவுடையது; நிறைந்த அசுவத்தமென்று சுருதி ஸ்மிருதிகளெல்லாம் வர்ணித்தலால் அரசினது பெயரைப் பொருந்தியது.

கூர்மை பொருந்திய வாளாயுதத்தையும், வலிமையையுமுடைய வீரனாகிய அருச்சுனா! இந்தப்பிரகாரம் சுருதி ஸ்மிருதிகளிற் கூறிய இச்சம்சாரவிருக்ஷத்தின் சுபாவமாகிய

* சாகை - மரக்கொப்பு.

வகைகள் எவையென்று விவரமாகக் கேட்க நீ விரும்புவாய்;
ஆதலின், அவற்றை விவரித்துக் கூறுகிறேன் கேட்கக்கட
வாய்: மகத்தாகிய பிரமத்தின் சொரூபத்தின்கண்ணின்றே
உண்டாகுங் கிரமப்படியே உண்மைபோல ஆகாசமுதல் தூல
தேகபரியந்தமான ஜகத்தனைத்தும் உண்டாகின்றன வாத
லால், சொப்பிரகாசமாய், நித்தியமாய்ச் சர்வகாரணங்கட்கும்
மேலான காரணமான அந்தப் பிரமமானது இந்தச் சம்சார
விருக்ஷத்திற்கு மூலமாம். இன்னும் இச்சம்சார விருக்ஷமா
னது, பிராணிகளின் அதிர்ஷ்டவசத்தால் வாராநின்ற உல
கங்களாயும், உயிர்களாயும் எழுவதால் காரிய வுபாதிகளை
யுடைய இரண்ணியகர்ப்பாதிகளைச் சாகைகளாகப் பொருந்
தும். தோற்றம், ஸ்திதி, நாசம் ஆகியவைகள் பெருக்கமாய்ப்
பந்தரூபமாகிய இச்சம்சார விருட்சத்தின் பிரவாகமானது எக்
காலத்தும் முழுவதும் சூனியமாகும்படி அழியாமையால்
இது அழியாத ஒரு தன்மையதாம். கருப்பத்தி லுண்டான
நாள்முதலாகப் புண்ணிய பாவரூபகர்மங்களால் இச்சம்சார
விருட்சமானது வளருகின்ற அபேக்ஷையுடையதா யிருத்த
லால் அரிய நான்கு வேதங்களே தர்மாதர்மங்களைப் பிரகாசிப்
பிக்கும் வழியாக இதற்கு இலைகளாமென நீ அறியக்கடவாய்.
வருகின்ற தினங்களுள்ளே இது ஒரு நாளிருக்குமென விசு
வசிக்கும்படி யில்லாமையினாலே பெரிய வுலகப்பிரசித்தமான
அசுவத்தமென்பது இதற்குரிய நாமமாயிற்று.

இவ்வாறு விளங்குகின்ற இச்சம்சார விருட்சத்தி
னுடைய தன்மையாகிய வகைகள் இவையே யல்லாமல் வேறு
தன்மைக ளில்லாமையினாலே இங்குக் கூறியபடியே இதனை
நுட்பமாக அறிபவர் வேதார்த்தங்கள் முழுவதையும் அறிந்
தோராவர்; இத்தன்மையுடைய இப் பெரியசம்சார விருக்ஷத்
தின் கூறுபாடான அவயவகற்பனைகள் இன்னும் சிலவுள;
அவற்றையுங் கூறுகிறேன் கேட்பாயாக.

என்னையும், எனது கண்மணியையும் நிகர்த்தவனான
அருச்சுனா! இன்னும் இந்தச் சம்சார விருட்சமானது, பல



வித ஜனனங்களாகிய கதிகளின் வழியே பூமிமுதலிய கீழுல
கங்களில் வளர்வனவும், விண்முதலிய மேலுலகங்களில்
நெருங்கி நிற்பனவுமாகிய அளவிறந்த பிறவிகளென்னுங்
கிளைகளோடு கூடிநிற்கும். மேலுலகங்கள், கீழுலகங்கள் ஆகி
யவைகளில் புஜித்த நாநாவித போகாநுபவவாயிலா லுண்டா
கின்ற இராகத்துவேஷாதி வாசனைகளென்னும் வேரானது,
பல மநுட வுலகின்கண்ணே அஞ்ஞானத்தோடுகூடத் திட
மாய் வீழ்ந்திருத்தலால் இச் சம்சார விருட்சத்திற்கு வேரா
னது கீழேயு முளதாம். இன்னும் இவ்விருக்ஷம் ஜலத்தால்
வளரும் விருக்ஷம்போல நீங்காதெழுகின்ற சத்துவம் முத
லிய குணங்களாகிய * உபாதானத்தன்மைகளால் வளரு
கின்ற இந்திரியங்களால் ஜனிக்கும் விருத்திகளோடு சம்பந்த
மான சப்தாதி விஷயங்களானவை தளிர்களைப்போன்று அழ
காகப் பொருந்தப்பெற்றது. அன்றியும், இச்சம்சார விருக்ஷ
மானது சொப்பன பதார்த்தமும், பொய்யாய் விளங்குகின்ற
பேய்த்தேரும், மேலான கந்தர்வநகரமும் போலத் தோன்றி
யழிவதால் தனக்கெனச் சிறிதும் உருவ மில்லாதது; முன்
னே தானில்லாதிருந்து உண்டாகும் ஆதிகாலமும், பின்னர்த்
தான் அபாவமாகும் அந்தகாலமும் இல்லாமையினாலே தன்
னுடைய அந்தமும் ஆதியும் எந்தப் பிராணிகளாலும் அறி
யும்படி யில்லாதது.

அருச்சுனா! இனி இந்தச் சம்சார விருக்ஷத்தைச் சேதி
க்கும் உபாயத்தையுங் கூறுகிறேன் கேட்பாயாக: அச்சுவத்த
மென்று வேதத்திற் சொல்லப்பட்ட இந்தச் சம்சார விருட்
சத்தை, அதிகாரியாயினோர், தம்முடைய மிகவும் திடமா
கிய வைராக்கியமென்னும் வாளால் வெட்டி நீக்கவேண்டும்;
அவ்வாறு சேதித்த பின்னர் பிரமபத மறியவேண்டும்; 'அந்
தப் பிரமபதத்தை எவ்வுபாயத்தா லடையலாம்?' என்று நீ
வினவக்கூடும்; அதற்கும் விடை கூறுகிறேன் கேள்: அருச்
சுனா! அதிகாரிகள், பிரமசொரூபமா யிருந்தவண்ணமிருந்தே,

* உபாதானம் - துணைக்காரணம்.

இந்திரஜாலம்போல மாயாமயமான இப்பிரபஞ்ச மெல்லாவற்றையும் தோற்றுவிக்கின்ற அந்தமற்ற என்னைச் சரணடைதலே பிரமபதத்தை யறிதற்குரிய உபாயமாம். இன்னும், ஊழ்வசத்தால் தம்மை நெருக்குகின்ற பிரியாப்பிரிய விஷயங்களா லுண்டாகும் இராகத்துவேஷ முதலியவற்றைக் கடந்த ஞானிகள் காணும்படி தோன்றுகின்ற எனது சொரூப சுபாவத்தை நீ அறிய விரும்பின் அதனையுங் கூறுகின்றேன் கேள்: எல்லா ஜகத்தையும் பிரகாசிக்கச் செய்கின்ற நிலையான சூரியன், சந்திரன், அக்கினி என்னும் ஒளிகளினால் விளக்கிக் காட்டப்படாத தன்மையுடைய சொப்பிரகாச சொரூபத்தையும், வந்தடைந்தோர்கள் சமுத்திரத்தையடைந்த நதிகள்போலப் பின்னர்த் தமது சுபாவம் வேறாகாத தன்மையையும் உடையவனென்று என்னைச் சுருதிகள் கூறும்.

நான் இவ்வாறு கூறியதனால் நீ, 'பகவானே! சுவர்க்கம் முதலியவற்றை யடைந்த கர்மிகள் அவசியம் மீளுவதும், சுழுத்தி பிரளயம் ஆகியவற்றில் ஆன்மபாவத்தை யடைந்த பிராணிகள் மீளுவதும் பிரசித்தமாவதால் உமது பதத்தை யடைந்தோர் ஏன் மீளார்?' என்று வினவக்கூடும். இவ் வினாவிற்குத் தக்கவிடை கூறுகின்றேன் கேள்: கடங்கடோறும் * அவச்சின்னமாய்த் தோன்றுகின்ற கடாகாயமும், அசைதற்கேற்ப தடாக ஜலங்கடோறும் பிரதிபிம்பித்துத் தோன்றும் பிரதிபிம்ப சந்திரனும்போலச்சரீரங்கடோறும்அன்னியமாய், ஜீவன்போல நின்றே, அந்தச் சரீரங்களில் அஞ்ஞான ரூபமான பிரகிருதியின்கண்ணே ஸூக்ஷ்மரூபமாக அடங்கியுள்ள சுரோத்திரம், சட்சு, சிங்குவை, கிராணம், துவக்கு, மனம் என்னும் ஆறிந்திரியங்களையும், போகத்திற் கேதுவான கர்மமானது உதயமாயின் அப் போகத்தின்பொருட்டு அவ் விந்திரியங்களின் சுபாவ விஷயங்களில் பரமான்மதேவனான நான் நடத்துவிப்பேன். கட, தடாக ஜலவுபாதிகளின் நாசத்தில் கடாகாசமும், பிரதிபிம்ப சந்திரனும்போல ஆன்ம

* அவச்சின்னம் - பிரிவு.



ஞானத்தால் அஞ்ஞானம் நீங்கின் அவ்வாறு அஞ்ஞானம் நீங்கிய சீவான்மா, தனது சொரூப பூதமான பிரமத்தை யடைந்து பின் அந்தப் பிரமத்தினின்றும் நீங்கி ஜனியான்; அஞ்ஞானம் நீங்கப்பெறாத சீவான்மா மீண்டும் ஜனனத்தை யடைவான். இந்த நியாயத்தின்படியே எனது பதத்தை யடைந்த ஞானிகள் மீளாத நிலையை யடைகின்றார்கள்; மற்றைய அஞ்ஞானிகள் ஆறிந்திரியங்களை இழுத்துக்கொண்டு மீண்டும் ஜனிக்கின்றார்கள்.

இனி, 'இவ்வாறு ஜனிக்கும் சீவான்மா எந்தக்காலத்தில் மனமுதலிய ஆறிந்திரியங்களையும் * ஆகர்ஷணஞ் செய்கிறான்?' என்று நீ வினவக்கூடும்; அதற்கும் விடை கூறுகின்றேன் கேள்: அக்கினியைப்போலப் பிரகாசிக்கின்ற வேலாயுதத்தையுடைய அருச்சுனா! வேகம்பொருந்தியவாயுவானது, மலர்களில் பரிமளிக்கின்ற வாசனையைக் கிரகித்துக்கொண்டு செல்லுந் தன்மைபோல, தேகம் முதலிய கூட்டங்களுக்குச் சுவாமியாவதால் ஈசுவரூபனென்னும் சீவான்மா, கர்மவசத்தால் ஒரு சரீரத்தினின்றும் மற்றொரு சரீரத்தையடையும்போதும், அச்சரீரத்தைவிட்டுப் பரலோகத்திற் கேகும்போதும், நீக்குதற் கரியனவாகிய மனமுதலிய ஆறிந்திரியங்களையும் கிரகித்துக்கொண்டு செல்லுவான்; 'இந்தச்சீவான்மா எந்தப் பிரயோஜனத்தின்பொருட்டு ஆறிந்திரியங்களையுங் கிரகித்துக்கொண்டு செல்கின்றான்?' என்று நீ வினவக்கூடும். அதற்கும் விடை கூறுகின்றேன் கேள்: மின்னலைப்போலத் தோன்றி மறைந்துபோகின்ற சரீரத்தை விடுவதும், மீண்டும் அடைவதுமாகி முன் சொன்ன இந்திரியங்களைக் கொண்டே சப்தம், ஸ்பரிசம் முதலிய விஷயங்களை யனுபவித்தற் பொருட்டே தனக்கு யாதொன்றும் இணையில்லாதவனாகிய இந்தச் சீவான்மா அவற்றைக் கிரகித்துக்கொண்டு செல்கின்றான். இப்படிப்பட்ட இந்தச் சீவான்மாவினுடைய தன்மையை அசுத்தாந்தக்கரணமுடைய அவிவேகிகள் பிரயத்தனஞ்

* ஆகர்ஷணம் - இழுத்தல்.

செய்தும் அறியமாட்டார்கள்; சுத்தாந்தக்கரணமுடைய விவேகிகள் தியானம் முதலிய வுபாயங்களாலே அதனைத் தமதெதிரே தோன்றக் காண்பர். இங்குக் கூறிய பிரகாரமாக இவ்வான்மாவின் சுபாவத்தை நீ தெரிந்துகொள்ளக்கடவாய். இன்னுங் கூறுகின்றேன் கேள்:

இப்போது பரமேசுரனான எனது பதமானது சூரியனொளி முதலியவைகளால் பிரகாசிப்பிக்கப்படாத சொப்பிரகாச சொரூப மென்பதையும், அதனை யடைந்தோர் மீண்டும் ஜனியா ரென்பதையும், ஜனியாமைக்குக் காரணம் இன்னதென்பதையும், தேகத்திற் கன்னியமாய்ச் சம்சாரி இன்ன சொரூபனாயுள னென்பதையும், அவனுடைய தன்மையை விவேகிகளன்றி அவிவேகிகள் அறியாரென்பதையும் உரைத்தருளினேன்; இனி எனது சர்வான்மத் தன்மையையும், சர்வ வியவகாரங்களின் சாதனத்தன்மையையும் நீ தெரிந்துகொள்ளும்பொருட்டு எனது விபூதிகளைச் சுருக்கமாகக் கூறுகின்றேன் கேட்பாயாக:

தூணைப்போன்ற புயங்களையுடைய அருச்சுனா! சட்சு முதலிய இந்திரியங்களுக்கும், மனத்துக்கும், வாக்குக்கும் தத்தம் விஷயங்களைப் பிரகாசிப்பிக்கும் சாமர்த்தியரூபமான தேஜஸு நானாகின்றேன்; இந்திரியங்களிடத்து அனுக்கிரகஞ்செய்கின்றசூரியன், சந்திரன், அக்கினி என்னும் இவைகளிடத்தில் உதித்துப் பிரகாசிக்கும் ஒளியும் நானாகின்றேன்; பிருதிவிதேவதா ரூபமாகி நின்று, கந்தம்முதலிய குணங்களை அந்தப் பிருதிவிற்குத் தந்து, எனது பலத்தையும் அதில் வைத்து, அதனை மிகவுந் திடமாக்கி, அதிலுள்ள ஸ்தாவர ஜங்கமரூபமான பூதங்க ளெல்லாவற்றையும் தாங்குகின்றவனும் பரமேசுரனான நானேயாவன்; முதன்மையாகிய ஆகாயத்தின்கண்ணே சர்வரசங்களின் ஆகாரமான சந்திரன்ரூபமாய் நின்று, உண்ணத்தக்கவைகளான நெல், யவை முதலிய ஓஷதிக ளெல்லாவற்றிலும், ஒவ்வொன்றிற்கு முரியனவாய்ப் பொருந்துகின்ற இரதங்களைக் கொடுத்து அந்த அந்த



ஓஷதிகளிலே அவ்விரசங்கள் கெடாதபடி அவற்றை விருத்தி செய்கின்றவனும் பரமேசுரனான நானேயாவன். என்னுடைய அன்பனாகிய அருச்சுனா! தின்பனவும், நக்குவனவும், சுவைப்பனவும், உண்பனவுமாய் நல்லயனைச் செய்கின்ற நான்குவகையான உணவுகளையும் சுகத்திற் கேதுவாகும்படி பிராணிகளின் சரீரங்கடோறும் ஜடராக்கினிரூபமாய்ப் பிராணாபானன்களோடு கூடிநின்று பரிபாகஞ் செய்கின்றவனும் நானே யாவன். யுத்தச்செயல் பொருந்தி விளங்காநின்ற வில்லைத்தாங்கிய புஜங்களையுடைய வீரரில் அதிவீரனான அருச்சுனா! புண்ணிய கர்மங்களையுடைய மனிதரின் பேரறிவும், நன்மையற்ற பாவிகளுடைய சிற்றறிவும் பரமேசுரனான நானே யல்லாமல் வேறில்லையென்று நீ தெரிந்துகொள்வாயாக. இன்னும், அசைவற்ற நான்கு வேதங்களின் பொருள்களை அறிபவனும் நானே; நிந்தையற்ற அந்த வேதங்களினுடைய உண்மைப் பொருளையும் மெய்ம்மையாகிய இசையினால் எடுத்துப் போதிக்கும் குருவும் நானே; அருச்சுனா! இப்போது எனது சோபாதிக சொரூபத்தை யுரைத்தேன்; இனி க்ஷராக்ஷர மென்னும் பெயர்களையுடைய காரிய காரணரூபமான இரண்டு உபாதிகளு மில்லாத நிருபாதிகமான எனது சுத்த சொரூபத்தைக் கூறுகிறேன் கேட்பாயாக:

பொருந்துகின்ற இவ்வுலகினிடமாக அழியும் இயல்பைப் பொருந்திய வடிவத்தையுடைய க்ஷரமென்னும் ஓர் பொருளும், அருவமாய் ஓரேதுவினாலும் அழிவில்லா வியல்பைப் பொருந்திநிற்பதாகிய அக்ஷரமென்னும் ஓர் பொருளும் உண்டு. க்ஷரமென்றும், அக்ஷரமென்றும் கூறப்படும் இவ்விரண்டு பொருள்களையும் அறிவினால் உள்ளபடி ஆராய்ந்து பார்க்குமிடத்து அழியு மியல்பையுடைய க்ஷரமென்று சொல்லப்படுவது பிரமாமுதல் ஸ்தாவரபரியந்தமான சரீரங்களாம்; அழியா வியல்பையுடைய அக்ஷரமென்று சொல்லப்படுவது யாதென்றால், சரீர மழியினும் அழியாமல் நிர்விகாரமா யிருக்கின்ற* சேதனமான உயிரென்று சொல்லப்

* சேதனம் - அறிவு.

படுவதாம். இங்குக் கூறிய க்ஷரம், அக்ஷரம் என்னும் இரண்டிற்கும் அன்னியமாய், அவ்விரண்டின்கண்ணுள்ள எத்தோஷமு மில்லாமல், உற்பத்திநாசமுதலிய விகாரங்க ளில்லாமல், எவையும் தன்னிடத்தே பரமார்த்தமாக இல்லாமல், யாதொரு குறைவுபாடுமில்லாமல், மூவுலகங்களிலும் தனது சக்தியால் வியாபித்துத் தனது சத்பாவத்தால் அவைகளைத் தரித்து நின்றதெதுவோ அதுவே யாதொரு விசேஷணமுமில்லாத ஆனந்த வுருவமான பரமான்மா வென்பதாம்.

இவ்விதமாக முன் சொன்ன எல்லா விகாரங்களும் நீங்கிய நிரதிசயானந்தரூபமாகிய என்னை உள்ளபடியே தமது புத்தியின்கண்ணே அறிந்தோர் பந்தத்தை யடையமாட்டார்கள். எவற்றிற்கு முன்னேயுள்ள இந்தப் பரமான்ம வஸ்துவிற்கு அந்தமும் ஆதியும் வேறே யுண்டென் றறிதல்கூடுமோ? கூடாது; இன்னும் இருக்கு முதலிய நான்கு வேதங்களும் ஒரேமுகமாக நின்று சொல்லத் தொடங்கினும் இதன் தன்மை சொல்லக்கூடியதன்று; உலகந்தான் இதன் சொரூபத்தை யறிந்ததுண்டோ! இல்லை. அருச்சுனா! நீ, ஈசுரனாகிய எனக்குப் பிரியமாகிய சிநேகனுதலால் உன்மீது கருணைகொண்டு மேற்கூறியவாறு வேதங்களாலும், உலகத்தாலும் அளவிட்டறியமுடியாத மிக்க இரகசியமான எனது சொரூபத்தை உனக்கறியும்படி ஓதினேன். புத்தியை எந்த விஷயங்களிலும் செலுத்தாமல், மேற்கூறிய நிரதிசயானந்தரூபமாகிய பரமான்மாவினிடமாகவே நிலைபெறச் செய்தால், ஆசைகளோடு கூடிச் செய்கின்ற சாஸ்திர விகிதமான கர்மங்களெல்லாம் செய்து முடிந்தனவாகவே யாகும்," என்று கூறியருளினர்.

பதினைந்தாவது

பிரபஞ்சவத்தியாயம் முற்றுப்பெற்றது.

---

பதினாறாவது

## தேவாசுரசம்பத்து விபாகயோகவத்தியாயம்.

கலிவிருத்தம்.

"மறந்தி ருந்த மனத்திரு ணீங்கிடத்
திறந்தி றப்படச் செப்புதன் மேயினான்
அறந்தி றந்தெறிந் தாக்குதற் காகவே
பிறந்தி றந்துழல் கின்றபே ராளனே."

நல்லோர் வேதவிகிதமான தர்மவிதங்களை யறிந்து அநுஷ்டித் துய்தற்பொருட்டே பிறந்திறந்து அவற்றை நடத்திக் காட்டி நடிக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணபகவான், முன் அத்தியாயத்தில் மநுடதேகத்தின்கண்ணே பூர்வஞ் செய்த சுபாசுப கர்மங்களின் அனுசாரமாக வுண்டாகும் சுபாசுப வாசனைகளைச் சம்சார விருக்ஷத்திற்கு மூலரூபமாகக் கூறி, அவைகளை முன் ஒன்பதா மத்தியாயத்திலும் தேவசம்பத்து, அசுரசம்பத்து, இராட்சதசம்பத்து என மூன்று வகைகளாகப் பிரித்துக் குறிப்பிட்டு விளக்கியிருப்பதோடு இவ்வத்தியாயத்தில் இரண்டாகப் பிரித்து நன்றாக விளக்கிக் காட்ட எண்ணினவராய், அத்தேவசம்பத்தைத் தெய்வசம்பத்தென்றும், இராட்சதசம்பத்து அசுரசம்பத்து ஆகிய இரண்டையு மொன்றாக்கி அசுரசம்பத்தென்றும் அவ்வாசனைகளை இருவித பேதங்களாகக் கொண்டு, அவற்றுள் தெய்வசம்பத்தென்னும் சுபவாசனை மோக்ஷத்திற் கேதுவாதலாலும், அசுரசம்பத்தென்னும் அசுபவாசனை பந்தத்திற் கேதுவாதலாலும், அதிகாரிகளாயினோர் அவ்விரண்டின் தன்மைகளையும் தெரிந்து சுபவாசனையைக்கொண்டும் அசுபவாசனைகளைத் தள்ளியும் உய்யும்பொருட்டும், பரமான்மாவாகிய தம்மை அறியாதிருந்த அதிகாரிகளின் மனத்திருள் நீங்கவும், சுத்தவாசனுரூபமாகிய ஞானசாதனகுணங்கள் அவ்வதிகாரிகளுக்குத் திடப்படவும் அச்சுபாசுப வாசனைகளின் சொரூபங்களைக் கூறத் தொடங்கினர்.

அவ்வாறு தொடங்கிய ஸ்ரீ பகவான் பார்த்தனை நோக்கி, "அருச்சுனா! முன் அத்தியாயத்தில் மநுடதேகத்தின்கண்ணே முன்னே செய்துள்ள சுபாசுபகர்மங்களின் அநுசாரமாக வுண்டாகும் சுபாசுப வாசனைகளைச் சம்சார விருக்ஷத்திற்கு மூலமாகக் கூறியதன்றி, இவ்வாசனைகளையே முன் ஒன்பதா மத்தியாயத்திலும் தேவசம்பத்து அசுரசம்பத்து இராக்ஷஸசம்பத்து என மூவகையாகக் குறிப்பிட்டுக் காட்டினேன். அம்மூன்றனுள் அசுரசம்பத்தையும் இராக்ஷஸசம்பத்தையும் ஒன்றாக்கி அசுரசம்பத்தி லடக்கி அவைகளைத் தேவசம்பத்தென்றும், அசுரசம்பத்தென்றும் இரண்டாகவுங் கூறலாம். அவற்றுள் தெய்வசம்பத்தென்னும் சுபவாசனை மோக்ஷத்திற் கேதுவாதலால் அதிகாரிக ளாயினோர் அதனைக் கைக்கொள்ளல் வேண்டும்; அசுரசம்பத்தென்னும் அசுபவாசனை பந்தத்திற் கேதுவாதலால் அதனைத் தள்ளல் வேண்டும்; இவ்வாறு சுபவாசனையைக் கொள்ளுதலும், அசுபவாசனையைத் தள்ளுதலும் அவைகளின் சொரூப மறிந்தா லல்லாமற் கூடாது; ஆகலால், அச்சுபாசுப வாசனைகளின் சொரூபங்களைக் கூறுகின்றேன் கேட்பாயாக:

இவ்வுலகத்திலுள்ள மனிதர்க ளெல்லோரும், தேவர் அசுரர் என்று இவ்விரு தன்மைகளை யுடையவராய் வாழ்வார்கள். ஒருவன் சாஸ்திரங்களா லுபதேசிக்கப்பட்ட பொருளில் சமுசய மில்லாமல் அதனை யனுஷ்டிப்பதில் தற்பரத்தன்மை பெற்றிருத்தலும், பரமேசுர சொரூபத்தை யறியும்படியான யோக்கியதையாகிய அந்தக்கரண சுத்தியாகும்படிச் செய்தலும், சித்தத்தை ஆன்மாவின்கண் ஏகாக்கிர மாகும்படி பண்ணும் யோகமும், சாஸ்திர வாராய்ச்சியா லுண்டாகும் ஆன்மசொரூப நிச்சயமானது ஒன்றா லழியாமையும், ஒருவர் நிந்தித்தபோதும் அடித்தபோதும் வெவ்விய சினங் கொள்ளாதிருத்தலும், கண்டதையும் கேட்டதையும் அந்தப்படியே மெய்யாகக் கூறுதலும், மறுமைக்குத் துணையாமென யாகங்களையும் தவத்தையும் செய்தலும், வேதாத்தி



யயனஞ் செய்தலும், தன்னைப் பூஜ்யனாகப் பாவித்திராமையும், கோட் சொல்லாதிருத்தலும், ஜீவஹிம்சை செய்யாதிருத்தலும், அன்னியப் பிராணிகள் செய்யும் அபராதங்களைப் பொறுத்தலும், சந்நியாசமென்னும் தியாகம், சிரத்தையோடு கேட்பவனிடத்தில் நிச்சயித்த பொருளை மறையாமையென்னும் ஆர்ஜவம், அந்தக்கரணத்தின் உபசமமென்னும் சாந்தி, விஷயங்கள் சமீபத்திலடைந்திருப்பினும் அவற்றை யனுபவிக்கும் சாமர்த்திய மிருப்பினும் இந்திரியங்கள் அவற்றிற் செல்லாதிருத்தலென்னும் அலோலுத்துவம், குரூரசுபாவமில்லாமை யென்னும் மார்த்தவம், செய்யத்தகாதவைகளில் இலச்சை யடைதலென்னும் ஹிரீ, வாக்கு பாதம் பாணி முதலியவைகளால் வியர்த்தமான கிரியைகளைச் செய்யாமை யென்னும் அசாபலம், பெண்டிர் பாலர் முதலிய மூடஜனங்களால் அவமானம் பண்ணப்படாதிருத்தல் அல்லது புதிது புதிதாக மேன்மேலும் விளக்கமுள்ள பிரக்ஞையுடையவனாயிருத்தல் என்னும் தேஜஸு, யாதேனு மொரு பிராணியைக் கொல்ல விச்சித்து ஆயுத மெடாதிருத்தலென்னும் அத்துரோகம், வியாகுல மடையினும் தேகேந்திரியங்களை ஸ்திரமாகப் பண்ணுவிக்கும் பிரயத்தன விசேஷ மென்னும் திருதி ஆகிய பெருமையையுடைய இவ்வொழுக்கங்களை யடைந்திருத்தலும், அன்னம் சுவர்ணம் பசு பூமி மனை முதலியவற்றைத் தன் சக்திக்கேற்றவளவாக அதிதி, பிராமணர் முதலியவர்களுக்குக் கொடுத்தலாகிய தர்மமென்னும் வலியுடைய தானத்தைச் செய்தலோடு துக்கமுடைய பிராணிகளிடத்தில் கருணையைச் செலுத்துதலும், உள்ளும் புறமும் தூய்மையா யிருத்தலும், சுரோத்திரம் முதலாகிய வெளியிந்திரியங்களைத் தத்தம் விஷயங்களிற் செல்லாமல் நீக்கி, ஏகாக்கிரப்படுத்துவதும் ஆகிய இச் செயல்களெல்லாம் தெய்வத்தன்மை யுடையவர்களாய்ப் பிறந்தோர் செய்யத்தக்க தொழில்களாம்; யுத்தஞ் செய்தற்பொருட்டு அரிய காண்டீபமென்னும் வில்லைக் கரத்திலேந்திய அருச்சுனா! இவற்றை நீ ஐயமறத் தெரிந்துகொள்ளக்கடவாய்; இன்

னும், இப்போது சொல்லியவைகளே கொள்ளத்தக்கனவாகிய தெய்வசம்பத்தாம். இனித் தள்ளக்கூடியனவாகிய அசுரசம்பத்தைக் கூறுகிறேன் கேட்பயாக:

தீமையான செய்கைகளைச் செய்கின்ற அசுர சுபாவமுடையவர்களாய்ச் சனித்த மனிதர்கள், தர்மாதர்மங்களுள்ளே தர்மம் செய்யக்கூடியதென்றும், அதர்மம் செய்யத்தகாததென்றும் அறியாதவராவர்; இக்காரணத்தினாலேயே அகம்புற பரிசுத்தங்களையும், மநு முதலியோரால் தரும சாஸ்திரங்களிற் கூறப்பட்ட புனிதமாகிய ஆசாரங்களையும் அனுசரிக்காமல் விட்டவராவர்; ஒருவிதத்தாலும் சத்தியமான வார்த்தைகளைக் கூறாதவராவர்; அவிவேகமே பொருந்தியவராவர்.

இனி, 'வேதவிகிதமான தர்மாதர்மங்களின் பிரவிர்த்தி, நிவிர்த்தி ஆகியவைகளை ஆசுரசுபாவமுடைய மனிதர் எதனாலறியார்கள்? தர்மாதர்மங்களை அங்கிகரியாவிடில் ஜகத்தில் சுகதுக்கம் முதலிய விவஸ்தை எப்படி யுளவாம்? சுத்தம், ஆசாரம் முதலியவைகளில் ஈசுரனுடைய ஆக்ஞையை அவர்கள் எப்படிக் கடக்கின்றனர்? ஈசுரனை அங்கிகரியாமல் ஜகத்துற்பத்திக்கு எதைக் காரணமாகக் கூறுகின்றனர்?' என்று நீ வினவக்கூடும். இவ்வினாவிற்குத் தக்க விடை கூறுகின்றேன் கேட்கக்கடவாய்: அசுர சுபாவமுடைய மனிதர், வேதமுதலிய பிரமாணங்களை அங்கிகரியாமையின், பிரமாணங்களால் உண்டென்று கருதிய ஜகத்தும், அந்த ஜகத்திற்குக் கர்த்தாவாகிய ஈசுரனும், ஜகத்தினது விவஸ்தைக்குக் காரணங்களான தர்மாதர்மங்களும் அசத்தியமென்றே கொள்வர். இவ்வாறு ஈசுரனையும், சுகதுக்கம் முதலியவற்றிற்குக் காரணங்களான தர்மாதர்மங்களையும் அங்கிகரியாத நாஸ்திக ஜனங்கள் மற்றெதனை இச்சகத்திற்குக் காரணமாகக் கூறுவரெனில், விஷயசுகத்தின் அபிலாஷைரூபமான காமதேவனால் தூண்டப்பெற்ற ஸ்திரீயும் புருஷனும் அந்நியோந்நியமாய்க்கூடுகின்றதன்மையினாலேயே ஜகத்து முழுவ



தும் உற்பத்தியாயின; ஆதலால், இச்சகத்திற்குக் காமமே காரணமாம் என்று ஸ்தாபிப்பர். இஃது உலகாயதருடைய கொள்கையென்றுங் கூறப்படும். 'இத்தகைய உலகாயதருடைய கொள்கையும் சாஸ்திரீய கொள்கைபோல இஷ்டப்படத்தக்கதுதானோ?' என்று நீ வினவக்கூடும். இவ்வினாவிற்கும் விடை கூறுகின்றேன் கேள்:

இந்தக் கொள்கை விரும்பத்தக்கதாகாது; எனினும், இத்தகைய உலகாயதருடைய கொள்கையை அனுசரித்தே, அசுரசுபாவமுடைய புருஷர், மேற்கூறியபடி சாஸ்திரங்களிற் கூறிய வருணாசிரமாசாரங்களை விரும்பாதவர்களாய் வெறுத்து விட்டுவிடுவார்கள்; சுத்தத்தையும், சத்தியத்தையும் ஒழித்துவிடுவார்கள்; காமம், குரோதம், லோபம், மோகம் முதலிய ரூபமான இராஜஸ தாமஸ தோஷங்களால், பெரும்பேறான விவேகபுத்தியை யடையாமல் நஷ்டமடைவர்; மிகவுந் * துச்சமான மாலை, சந்தனம், ஸ்திரீசுகம் முதலிய விஷய போகங்களினும், நிலையற்ற தேகத்தினும் பற்றி நிற்பதாகிய அற்ப புத்தியோடு கூடியிருப்பார்கள்; பெரும்பழிக் கேதுவான நிஷித்த கர்மங்களையே எப்பொழுதும் செய்வர்; தாம் செய்கின்ற தொழில்களால் வரும் நஷ்டம் இலாபம் ஆகியவற்றில் ஒன்றையும் அறியமாட்டார்; இவ்வாறு அவர்கள் இத்தொழில்களை யனுசரிப்பதால் முடிவில் இவ்வுலகத் துயிர்களுக்குத் துன்பஞ் செய்யுஞ் சத்துருக்களாய்ப் புலி, சர்ப்பம் முதலியவைகளாக ஜனிப்பார்கள்; இந்த விதமாக அவர்கள் புலி, சர்ப்பம் முதலிய தாமத யோனிகளில் ஜனித்து அநேககாலஞ் சுழன்றவர்களாகி ஒரு கர்மவசத்தால் ஒருசமயம் மனிதஜன்ம மெடுப்பினும் அப்போதும், சதகோடி வருஷங்களானாலும் விஷயபோகங்களாற் பூரணமடையாத போக இச்சையைத் தானே நிறைக்க வேண்டி, வாஸ்தவமாகத் தாம் பூஜிக்கத்தகாதவரா யிருந்தும் பூஜிக்கத்தக்கவராகக் காட்டிக்கொள்ளும் மானம், தம்

* துச்சம் = கீழ்மை.

மிடத்தே அதிகத்தன்மை யில்லாதிருந்தும் அத்தன்மையை ஆரோபித்துக்கொள்ளுதலாகிய மதம், தாம் தர்மநிஷ்டரா யில்லாதிருந்தும் வெளியில் தர்மநிஷ்டராகக் காட்டிக்கொள்ளுதலாகிய தம்பம் ஆகியவைகளைப் பொருந்திநின்றும், குறைவில்லாத அவிவேகத்தோடு த்வேஷத்தை யடைந்து நின்றும், மயானம் முதலியவிடங்களில் *உச்சிஷ்டத்தன்மை முதலியவை பொருந்திய மதுமாம்சாதி பக்ஷணம் முதலிய அசுத்த வஸ்துக்களைக் கொண்டு நிறைவேற்றும் விரதமாகிய அசுசி விரதத்தைக் கைக்கொண்டு அசத்தான தவங்களையே செய்வர். இன்னும், மேற்கூறிய அசுரசுபாவமுடைய புருஷர், மரணகாலமளவும் அடைந்தவைகளும், அடையாதவைகளுமாகிய வஸ்துக்களையே சிந்திப்பர்; அனுபவிக்கும்படி யுண்டாகின்ற மாலை, சந்தனம், வனிதைசுகம் முதலிய விஷயபோகங்களையல்லாமல் தர்மமென்றாவது மோக்ஷமென்றாவது வேறொரு பொருளில்லையென்று கூறுவர்; இன்னும், பூமியினிடமாக ஜனித்துப், பேராசையாகிய கயிற்றினால் கட்டுண்ட அவ்வசுரசுபாவமுடைய புருஷராயினோர், மிகுந்த மாலை, சந்தனம், வனிதைசுகம் முதலிய விஷயபோகங்களின் பொருட்டே அனியாயத்தினால் தனமுதலிய பதார்த்தங்களைச் சேகரிப்பார்கள்.

இவ்வாறு பொருள் முதலியவற்றைச் சேகரித்துக் கொண்டபடியால் அவர்கள், 'இந்த திரவியத்தை இவ்வுபாயத்தினால் இப்போதடைந்தோம்; இனி, இப்பொருளினும் வேறே மனத்தைச் சந்தோஷிக்கச் செய்வதான திரவியத்தைச் சீக்கிரமாக அடைவோம்,' என்றும், 'இப்போது இந்தச் சத்துருவைக் கொன்றோம்; இனி மற்றச் சத்துருக்களையும் கொல்லுவோம்,' என்றும், 'விஷயங்களை யனுபவிப்பவருள்ளே எம்மைப்போல விஷயபோகங்களை யனுபவிக்கத் தக்க சமர்த்தர் வேறொருவருமில்லை,' என்றும், 'எமக்குச் சமானமானவரும், அதிகமானவரும், இவ்வுலகினிடமாக

* உச்சிஷ்டம் = எச்சில்.



வுளரோ? இல்லை,' என்றும் தம்மையே மேன்மையுடையவராகக் கருதுவார். இஃதன்றியும், 'ஜனக்கூட்டத்தையும், வல்லமையையும், சுகத்தையும் நாம் அடைந்திருக்கின்றோம்; மிகவும் தனத்தை யுடையவராகவு மிருக்கின்றோம்; எம்மினு மேம்பட்டவரொருவருமில்லை; ஆகையால், யாமே ஈசுரன்,' என்றும் அவர்கள் தம்மையே வியந்துகொள்வர். இன்னும் அவ்வசுர சுபாவமுடைய புருஷர், 'எமது மனமானது சந்தோஷிக்கும்படியான யாகத்தைச் செய்வோம்; மேகத்தைப் போலத் தானங்களைக் கொடுப்போம்,' என்று நாடோறும் மனோராச்சியம் செய்வதே யல்லாமல் வேதத்திற் சொல்லியபடி எதையுஞ் செய்யார்கள். இவ்வாறு பந்தம் நீங்குதற் கேதுவாக இல்லாத அநேகவித துஷ்ட சங்கற்பங்களென்று சொல்லப்பட்ட சுழியிற் பொருந்தியே சுழலாநிற்பவரும், அடக்குதற்கரிய மோகமென்று சொல்லப்பட்ட வலைக்குள்ளே அகப்பட்டு நிற்பவருமாகிய அவ்வசுர சுபாவமுடைய புருஷர், சரீரமாகிய சிற்றில்லினது ஆயுளாகிய புல்நுனியின் பனிநீரானது கூற்றுவனாகிய வெயிலால் வற்றிடில் (அதாவது எமனால் உயிர் கவரப்பட்டுத் தேகமழியின்) உயிரானது நடுக்குற்றிறந்து கடத்தற் கரியனவாகிய நரகங்களென்று சொல்கின்ற கடல்களிலே வீழ்வர்.

இனி, 'அசுரசுபாவ புருஷர்களுள்ளும் சிலர் யாகாதி கர்மங்களிற் பிரவிர்த்திக்கின்றனரே; அவர்க்கு அவற்றின் பயனுண்டோ இல்லையோ?' என்று நீ வினவக்கூடும். அதற்குத் தக்கவிடை கூறுகின்றேன் கேள்: அருச்சுனா! நீ கூறியபடி யாகாதி கர்மங்களிற் பிரவிர்த்திக்கும் அசுரசுபாவமுடைய புருஷர், வேறு சாதுக்களா லல்லாமல் தங்களைத் தாமே எல்லாக் குணங்களோடுங் கூடினவர்களாக மதித்து அதிசயித்து, மெய்ம்மையுடைய சாதுக்களைச் சிரேஷ்டராக மதித்துக் கொண்டாடமாட்டார்கள்; யாகங்களை ஈசுரனா லருளிச்செய்யப்பட்ட பழைய வேதங்கள் விதித்தபடி திரவியம், தேவதை, மந்திரம், தக்ஷிணை முதலிய அங்கங்களோடுகூடச்

செய்யாமல் பயன்களை யிச்சித்து, 'நல்ல எக்ஞ முதலியவற்றைச் செய்த தீக்ஷிதர், சோமயாஜி,' என்று பிறர் தம்மை ஸ்துதித்தற்பொருட்டே விதியல்லாத விதிகளோடு கூடிச் செய்வர். இங்ஙனம் அவர்கள் யாகங்களைச் சிரத்தை யில்லாமற் செய்வதனாலே அவற்றின் பயனை யடையமாட்டார்கள். இவ்வாறு அவர்களுக்குப் பகிரங்க சாதனரூபமான யாகம், தானம் முதலியவைகள் சித்தியாமற்போவதோடு விசாரம், வைராக்கியம், தேவபக்தி முதலிய அந்தரங்க சாதனங்களும் சித்தியாமற்போம். அதனால், பெரியோரை அவமதித்தற்குக் காரணமான சித்தத்தின் தோஷவிசேஷமாகிய களிப்பும், அந்நியப்பிராணிகளை வெல்லுதற்பொருட்டுச் சரீரத்தின்கண் ஏற்பட்டுள்ள சாமர்த்திய விசேஷமாகிய வலிமையும், இஷ்டவஸ்து விஷயமான அபிலாஷையாகிய காமமும் நிறைந்து, நான் என்னும் அகங்காரமாகிய மயக்கம் பொருந்தியுள்ள அவ்வசுரசுபாவமுடையபுருஷர், தம்முடைய தேகங்களிலும் தங்கள் புத்திரர், பாரி முதலியோர்களான எல்லாருடைய தேகங்களிலும், புத்தி முதலியவற்றிற்குச் சாக்ஷியாயும், நிரதிசயப் பிரீதிக்கு விஷயமாயுமுள்ள பரமேசுரனான எனது சுபாவத்தை அன்னியமாகக் கருதிக்கொண்டு எனது விஷயத்தில் துவேஷத்தையே செய்வார்கள். இன்னும் அவர்கள் குரு வசனத்திலும் சிரத்தை செய்வதில்லை; அதனால் அவர்களுக்குக் குருவும் ஞானோபதேசஞ் செய்வதில்லை. இவ்வாறு அவர்கள் அந்தரங்கசாதனம், பகிரங்கசாதனம் ஆகியவற்றைக் கைவிடுவதால் நற்பயனை யடையாது நரகில் வீழ்வது நிச்சயம்.

அரசனான அருச்சுனா! இனி நீ, 'பரமேசுரரான உமது கிருபையினால், அவ்வசுரத்தன்மையுடைய புருஷர்க்கும் ஒருபோது நற்கதி யுண்டாகாதோ?' என்று என்னிடம் வினவக்கூடும். அதற்கு விடை கூறுகின்றேன் கேள்: அவர்க்கு ஒருபோதும் உய்வுண்டாகமாட்டாது. மனிதர்களெல்லோரினும் கிழானவர்களாகிய அதமரும், பிராணிகளை இம்சிக்கும் குரூரத்தன்மையினால் சர்ப்பம் போன்றவருமாகிய அந்த அசுரசுபாவ புருஷரை, சோர்வில்லாத துன்பங்கள் பொருந்துகின்ற புலி, சர்ப்பம் முதலிய அசுரயோனிகளாகிய புற்றுகடோறும் பரமேசுரனான நானே அடிக்கடி புகும்படி வீழ்த்துகின்றேன்; அவர்கள் பரமேசுரனான எனதாக்ஞையைப் பரிபாலனஞ் செய்யாமையினாலே அவர்களிடத்து எனக்குக் கிருபை யுண்டாகமாட்டாது; அந்த அந்தப் பிராணிகளின் கர்மத்துக் கீடாக நன்மை தீமைகளை யானடையப் பண்ணுதலின் பரமேசுரனான எனக்கு விஷமத்தன்மையும், நிர்த்தயைத்தன்மையும் இல்லை. மேற்கூறியபடி என்னால் அசுரயோனியிற் புகுத்தப்பட்ட அவ்வசுரசுபாவ புருஷர்க்குப் பல ஜனனங்களின் அந்தத்திலும் உய்வில்லை. அவர்கள் தாங்களடையும் ஜனனங்கடோறும் மெய்த்தன்மையான விவேகஞானத்தை அடையாமற்போவதனாலே உய்தற்கேதுவான வேதமார்க்கத்தை அடையாமல், மேலும் மேலும் முன்னடைந்த கதிகளினும் தீமையான கிருமி, * கீடம் முதலிய ஜனனங்களாகிய அதோகதிகடோறும் சுழன்று திரிந்து வருந்துவார்கள்.



இனி, 'முன் பலவிதமாகக் கூறியருளிய அசுரசம்பத்தனைத்தும், ஒருவன் தனதாயுள் பரியந்தம் பிரயத்தனஞ் செய்யினும் நிவிர்த்தி செய்யக்கூடுமோ?' என்று நீ வினவக்கூடும். அதற்குத் தக்கவிடை மொழிகின்றேன் கேட்பாயாக: ஒரு புருஷனை அசுரயோனிகளாகிய மிகுந்த அதமயோனிகளை யடையும்படிச் செய்வனவும், எக்காலத்தும் கடத்தற்கரிய நாகத்திற் சேர்ப்பனவுமாக வருகின்ற வழிகள் மூன்றுண்டு. அவை: விஷயப்பிரீதியினா லுண்டாகிய விஷயபாவசரூபமான காமமும், உலோபமும், குற்றம் பொருந்தச் சுடுகின்ற அக்கினியை யொப்பான குரோதமுமேயாம். இவையே ஒருவனுக்கு நாகத்திற்கும் நாசத்திற்கும் காரணமாம். ஆதலினால், இக்காமம் முதலிய மூன்றையும் நீக்கின

* கீடம் - புழு.

வர் எத்தகையராயினும் சகல துன்பங்களும் நீங்கிய நிரதிசயானந்தரூப மோட்சம் தமக்குளதாக அடைந்தவராவர். ஆயினும் மேற்கூறியபடி காமம் முதலியவற்றை நீக்குவது சுதர்மத்தின் அனுஷ்டானத்தாலன்றி வேறுபாயத்தாற் கைகூடமாட்டாது; அது கைகூடவேண்டுமானால் அந்தச் சுதர்மத்தைக் கைக்கொள்ளவேண்டும்; 'இவ்வதிகாரிக்கு இது செய்யத்தக்க காரியம்,' 'இது செய்யத்தகாத காரியம்,' என நன்மை தீமைகளை விதித்த சாஸ்திர மார்க்கத்தில் பொருந்தும் எண்ணத்தை விரும்பாதொழித்து, மனம் போனவழியே செய்பவர் இகலோகமும், இதற்கு வேறான இயல்பைப் பொருந்திய பரலோகமும் உண்டாக்கும் சுகங்களென்னும் பயன்களையும், அந்தக்கரண சுத்தியையும், இதனா லடையப்படும் முத்தியையும் அடையமாட்டார்கள். ஆதலின், அருச்சுனா! காரியாகாரியங்க ளெல்லாவற்றையு மறிதற்குப் பிரமாணமாகிய சுருதி, ஸ்மிருதி, புராண இதிகாச ரூபங்களான சாஸ்திரங்கள் சொல்லிய வழியினாலேயே தோஷங் கருதாமல் சித்தசுத்திபரியந்தம் உன்னுடைய யுத்தம் முதலிய கருமங்களையே நீ பொருந்திச் செய்வாயாக," என்று கூறியருளினார்.

பதினாறாவது

தேவாசுரசம்பத்து விபாகயோகவத்தியாயம்

முற்றுப்பெற்றது.

---

பதினேழாவது

## குணவிகாரவத்தியாயம்.

கலிவிருத்தம்.

"உண்டு மீள வொளித்தல கியாவையுங்
கண்டு காப்பவன் கட்டுரைத் திட்டதே
கொண்டு பார்த்தனக் கொண்டல்வண் ணன்றனைத்
தொண்டு கூறிப் பணிந்திது சொல்லுவான்."



முன் அத்தியாயத்தி னீற்றில் ஸ்ரீ கிருஷ்ணபகவான், 'சாஸ்திரவிதியை விட்டுத் தமது இச்சைமாத்திரத்தால் சில கர்மங்களை யனுஷ்டிப்பவர்க்குத் தத்துவஞானம் உண்டாகமாட்டாது,' என்று கூறியபடியால் உலகம் எல்லாவற்றையும் திருவமுதுசெய்து மறைத்து மீண்டும் சிருஷ்டித்து இரட்சிக்கின்ற அந்தப் பகவான், அவ்வாறு உறுதியாகக் கூறியதைச் சந்தேகமாகக்கொண்டு அருச்சுனனானவன், 'ஆலசியமுதலிய தோஷவசத்தால் சாஸ்திரவிதியைப் பரித்தியாகஞ் செய்து தம்முடைய பிதாக்கள், பாட்டன்மார் முதலியவர்கள் அனுஷ்டித்துவந்த வழக்கத்தை யனுசரித்துச் சிரத்தையோடு விகிதகர்மமாத்திரம் அனுஷ்டிக்கும் புருஷர்க்குத் தத்துவஞான முண்டாகுமோ உண்டாகமாட்டாதோ?' என்று வினவி நிச்சயம் தெரிந்துகொள்ளவேண்டி அந்த மேகவண்ணனான கண்ணபிரானை, 'நான் உமதடிமை,' என்று நமஸ்கரித்து இங்குக் கூறிய இவ்விஷயத்தைக் கூறத்தொடங்கினான்.

அவ்வாறு தொடங்கிய அவ்வருச்சுனன் ஸ்ரீ கிருஷ்ணபகவானை நோக்கி, "சுவாமி! முன் அத்தியாயத்தின் முடிவில், 'சாஸ்திரவிதிகளை யறிந்துகொள்ளாமலே அவரவர் மனம்போனபடி கர்மங்களைச் செய்பவர்க்கு ஞானமுண்டாகாது,' என்றும், 'சாஸ்திரவிதிப்படியே மனிதர் அவரவருடைய சுதர்மத்தை யனுஷ்டித்து மோக்ஷத்தை யடையவேண்டும்,' என்றும் கூறியருளியது சரியே; வேதம்முதலிய சாஸ்திரவிதிகளை ஆலசியம் முதலியவற்றால் பரித்தியாகஞ் செய்து, தம் முன்னோர்கள் செய்துவந்த வழக்கத்தை யனுசரித்துச் சிரத்தையோடுகூடித் தேவபூஜை, எக்ஞம்முதலியவற்றைச் சிலர் செய்கின்றனர்; இவர்கள் முன் அத்தியாயத்திற் சொல்லிய தேவாசுரரென்னும் இருவரினும் வேறுபட்டவராதலின், இவர்களுக்குச் சாஸ்திரங்களிற் சொல்லியபடி தத்துவஞானம் உண்டாகுமோ உண்டாகமாட்டாதோ? இவ்வாறு சாஸ்திரவிதியை விட்டு உலகிலுள்ள சில புருஷர்கள்

சிரத்தையோடு கூடினவர்களாய்ச் செய்யும் தேவபூஜை முதலிய கர்மங்கள், தோஷத்தை யுடையனவான சத்துவம் முதலிய மூன்று குணங்களிலும் சாத்துவிகத்தைச் சார்ந்தவைகளா? இராஜஸத்தைச் சார்ந்தவைகளா? தாமஸத்தைச் சார்ந்தவைகளா?" என்று வினவினான்.

இவ்வாறு அருச்சுனன் வினவவே பெரிய கடல் போன்ற நிறத்தினையுடைய ஸ்ரீ கிருஷ்ணபகவான் அவ்வருச்சுனனை நோக்கி, இவ்வினவுக்கு விடைகூறத் தொடங்கினவராய், "அருச்சுனா! உன்னுடைய வினவுக்குத் தக்கவிடை கூறுகின்றேன் கேள்: சாஸ்திரவிதிகளை யறிந்து பரமேசுரனான என்னை யுபாசிப்பதெதுவோ அதுவே சாத்துவிக சிரத்தையாம்; அதுதான் ஞானத்தை யுண்டாக்கி மோக்ஷத்தைக் கொடுக்கும்; அதைவிட்டுத் தங்களுடைய பூர்வாசாரத்தைக் கொண்டாவது லோகாசாரத்தை யனுசரித்தாவது செய்யும் தேவபூஜைமுதலிய கர்மங்கள் மோக்ஷத்திற் கேதுவாக மாட்டா. அவற்றிற்குத் தக்க வெவ்வேறு பயன்களுண்டாம். இவ்வாறு சாஸ்திரவிதிகளை விட்டுப் பூர்வாசாரத்தை யனுசரித்துச் சிரத்தையோடு செய்யப்படும் கர்மங்களும் சாத்துவிகம், இராஜதம், தாமதம் என்னும் மூன்றையும் சம்பந்தித்திருக்கும்; இவற்றுள் சாத்துவிக கர்மம் பின்னர் சாஸ்திரத்திற் கூறிய சாதனங்களை யடைதற்கேதுவாம். பொருந்துதற்கரிய அக்குண வேறுபாடுகளா லுளவாகிய சிரத்தையின் வேறுபாடுகளெல்லாவற்றையும் இனி உனக்குத் தெரியும்படி கூறுகின்றேன் கேட்பாயாக:

கொற்றவனான பற்குனா! மேற்கூறியபடி சாஸ்திர விதிகளைவிட்டுப் பூர்வாசாரத்தை யனுசரித்துத் தேவபூஜை முதலிய கர்மங்களைச் செய்யும் புருஷருள் சாத்துவிக சிரத்தையுடைய புருஷர், வசு, உருத்திரர் முதலியவர்களான சாத்துவிக தேவர்களையே பூஜிப்பார்; தாமஸபுருஷர், தம்மை இரட்சிக்கின்றவைகள் தமோகுணமுடைய பேய்களும் பூதங்களுமாமென்றெண்ணி அவற்றை உறுதியாகப் பற்றிப்



பூஜிப்பர்; இராஜஸகுணமுடைய புருஷர், இரஜோகுணமுடைய குபேரன்முதலிய இயக்கரையும் நிருதிமுதலிய இராக்கதரையும் தங்களை இரட்சிக்கத்தக்க கடவுளரென்று நினைத்துப் பூஜிப்பர். இந்தப்பிரகாரம் சுருதிஸ்மிருதிரூபமான சாஸ்திரங்களைப் பரித்தியாகஞ்செய்து பூர்வாசாரத்தின்படி கர்மங்களை யனுஷ்டிக்கும் சாத்துவிக, இராஜஸ, தாமஸ புருஷருள்ளும் சில இராஜஸ தாமஸ புருஷரும் பூர்வஞ்செய்த புண்ணிய கர்மபரிபாகத்தால் சாத்துவிக முடையவர்களாய்ப் பின்னர் சாஸ்திரத்திற் சொன்ன சாதனங்களையடைவர்; எந்தப் புருஷர் தமது துராக்கிரகத்தாலும், முன் செய்த பாவகர்மத்தின் பரிபாகத்தா லடைகின்ற துர்ச்சனசங்க முதலிய தோஷங்களாலும் இராஜஸ தாமஸங்களைப் பரித்தியாகஞ் செய்யவில்லையோ அந்தப் புருஷர் சாஸ்திரத்திற் சொன்ன சன்மார்க்கத்தினின்றுந் தவறினவராய்ச் சாஸ்திர விரோதமான அசன்மார்க்கத்தை யனுசரித்து இகலோகத்திலும் பரலோகத்திலும் துக்கத்திற்கே உரியராவர். இவ்வாறு அசன்மார்க்கத்தை யனுசரித்து அகங்காரம், தம்பம், காமம், இராகம், விஷயங்களைச் சம்பாதிப்போமென்னும் ஆக்கிரகமாகிய பலம் என்னும் இவை அடங்காதவர்களாய், விசாலமாகப் பொருந்திய சாஸ்திரங்களின் விதியை அனுசரியாமலே பூதசமூகமான தேகத்தையும், சரீரத்தினுள்ளே போக்திருரூபமாயுள்ள பரமேசுரனான என்னையும் வீணான உபவாசாதிகளால் மெலிவிக்கின்ற கோரமான தவத்தை முயலும் இவர்கள் மனிதராயினும் இவர்களிடத்தில் வேதார்த்தங்கட்கு விரோதமான அசுரநிச்சய மிருக்கின்றபடியாலும், துஷ்டகர்மங்கள் பொருந்தியிருப்பதனாலும் இவர்கள் அசுரயோனியிற்றோன்றிய அசுரசுபாவ முடையவரேயாவர்.

அருச்சுனா! இப்போது எவர் சாத்துவிகரோ அவர் தேவர் என்பதையும், எவர் இராஜஸ தாமஸரோ அவர் விபரீத புத்தியுடையராதலின் அசுரர் என்பதையும் கூறினேன்; இனி உள்ளபடி சுருதி சம்மதமும் பெரியோர் சம்ம

தமுமாகிய சாத்துவிக தர்மங்களைக் கைக்கொள்ளும்பொருட்
டும், இராஜஸ தாமஸங்களைப் பரித்தியாகஞ் செய்தற்பொருட்
டும் ஆகாரம், எக்ஞம், தவம், தானம் ஆகிய நான்கின் திரி
விதத் தன்மைகளைக் கூறுகின்றேன் கேள்: எல்லாப் பிராணி
கட்கும் பிரியமான ஆகாரமும், யாகமும், யாவருஞ் செய்யுந்
தவமும், தானமும் என விளக்கமாகக் கூறிய இந்நான்க
னுள்ளும் ஒவ்வொன்றும் சேர்திருந்திய சத்துவம் முதலிய
குணங்களாலே மூவகையாகும். அவ்வாறுகும் அவற்றில்
ஆகாரங்களின் வகைகளை முதலில் தெரிந்துகொள்வாயாக:
யுத்தத்தில் சிம்மத்தை யொப்பான அருச்சுனா! சாத்துவிக
புருஷர்க்குப் பிரியமான உணவுகளைச் சொல்லுமிடத்து
அவை பார்க்கும்போதே சித்தத்திற்குப் பிரியத்தை யுண்
டாக்கும்படியான அழகினைப் பெற்று, மதுரமான இர
சங்களை யுடையனவாய், இரசாம்சத்தால் சரீரத்தில் அநேக
காலபரியந்தம் பசையா யிருப்பனவாய்ச், சிநேகத்தோடு
கூடிச் சரீர சாமர்த்தியத்தையும் ஆரோக்கியத்தையும்
பெருக்கி, உற்சாகத்தையும் நல்ல ஆயுளையும் இன்பத்தை
யும் அதிகரிக்கும்படிச் செய்கின்றனவாய்ப் பொருந்தியவைக
ளாம். வேலாயுதத்தையுடைய அருச்சுனா! இனி இவற்றிற்கு
வேறுகிய இராஜஸபுருஷர்க்குப் பிரியமாகிய ஆகாரங்களைக்
கூறுகிறேன் கேள்: அவை கைப்பனவும், புளிப்பனவும்,
உவர்ப்பனவும், உறைப்பனவும், கொடிய வெம்மையுள்ள நெய்
யோடு கூடிய அக்கினியைப்போலச் சுடுகின்றவைகளுமாம்.
அவ்வுணவுகளினாலே சரீரத்தில் வாத பித்த சிலேஷ்ம முத
லிய தாதுக்களின் விஷமத்தன்மை வாயிலாகப் பொருந்தா
நின்ற வியாதியும், சித்தத்தினிடமாகத் துன்பமும் உண்
டாம். இனி, இராகம் முதலிய தோஷங்களை யடைந்துள்ள
சித்தத்தையுடைய தாமஸ புருஷர்களுக்குப் பிரியமான
ஆகாரங்களைக் கூறுகிறேன் கேள்: அவை, ஊசிப்போன
பழஞ்சோறும், எச்சிலானவைகளும், தேவர்களின் ஆரா
தனத்துக்காகாதனவும், நிந்திக்கப்பட்ட மாம்ச முதலியன
வும், அக்கினியால் முழுதும் வெந்து பக்குவ மாகாதனவும்



ஆகிய இப்படிப்பட்ட வுணவுகளாம். இவ்வுணவுகளினாலே
பிறரை வெறுக்கும் சினம் முதலாகவுள்ள துன்பமுழுவதும்
உண்டாகும்.

இனிச் சாத்துவிகயாகம் முதலிய மூவித யாகங்களின்
தன்மைகளைக் கிரமமாகக் கூறுகிறேன் கேட்பாயாக: அஞ்
ஞானவிருளா லடையப்படும் பயன்களை இச்சியாமலே அவ
சியம் நம்மாற் செய்யத்தக்கனவாமென்று மனத்தின்கண்
ணே நிச்சயித்து, மனிதரால் சாஸ்திரவிதிப்படி விளங்கச்
செய்யப்படும் யாகங்கள் சாத்துவிகமாகப் பொருந்திய
யாகங்களாம். சுவர்க்கம் முதலிய பயன்களை இச்சித்தாவது,
பலர் புகழவேண்டியாவது செய்கின்ற யாகங்கள் முழுவதும்
இராஜஸயாகங்களாம். சாஸ்திரங்களிற் கூறிய விதியுமில்லா
மல், அந்த யாகத்தொழிலில் நுட்பமான தேர்ச்சியை
யுடைய இருத்துவிக்குகளின் தாற்பரியமு மில்லாமல், (அதா
வது, இருத்துவிக்குகளாலாகிய பிராமணவிஷயமான துவேஷ
முதலியவற்றுல் சிரத்தையு மில்லாமல்) முறைமைப்படி
ஜபிக்கத்தக்க மந்திரமும் இல்லாமல், வந்து யாசிப்பவர்க்குக்
கொடுக்கும் அன்னதானம், தக்ஷிணைகள் ஆகியவைகளு
மில்லாமல் செய்கின்ற யாகங்கள் தாமதயாகங்களாம்.

மாலை விளங்காநின்ற மார்பையுடைய அருச்சுனா!
இனித் தவங்களின் தன்மை யெப்படியெனில், அத்தவங்
கள்: வாக்கு, மனம், சரீரம் ஆகியவற்றுற் செய்யப்பட்டுச்
சாத்துவிகம், இராஜதம், தாமஸம் என்னும் மூவகைப்
பேதங்களை யுடையனவாம். அவ்வாறு அவை, வாக்கால் வசி
னிக்கப்படுதலும், மனத்தாற் செய்யப்படுதலும், சரீரத்தாற்
செய்யப்படுதலுமாகிமூன்றுவகையாகப்பிரியும்விதத்தையும்,
சாத்துவிகம், இராஜஸம், தாமஸம் என்னும் மூன்றுவகை
யாகப் பிரியும்விதத்தையும் விவரித்து முறையேகூறுகிறேன்
கேட்கக்கடவாய்: பரிசுத்தனான அருச்சுனா! கேட்பவர்
யாவர்க்கும் துக்கத்தை யுண்டாக்காததும் அவருடைய
சுரோத்திரேந்திரியத்திற்குச் சுகத்தை யுண்டாக்குவதும்

மாட்சிமை பொருந்திய அமுதமென்று சொல்லத்தக்கதுமான வார்த்தையை வசனித்தலும், ஆராய்ந்து சத்திய வசனத்தை வசனித்தலும், வேதத்தை அப்பியசித்தலும் வாக்காற் செய்யப்படும் சிறந்த தவமாம்; தெளிவில்லாத மனத்தைத் தெளியும்படி ஆன்மாவின் சிந்தனையால் வசமாக்குதலும், விஷயங்களிற் செருக்கைச் செய்யும் மனத்தை அச்செருக்கினின்றும் நீக்குதலும், குரூரவிருத்தியை மனத்திற் பொருந்தாதிருத்தலும், அரிதாகிய மனத்தாற் செய்யப்படும் தவமாம். இடைவிடா ஆசாரத்தோடு கூடிய பிராமணரிடத்தும், சிவன், விஷ்ணு முதலிய தேவர்களிடத்தும், பிதா மாதா ஆசாரியர் பிரமநிஷ்டர் முதலிய முதியோரிடத்தும் மயக்கமில்லாமல் வழிபடுகின்ற செல்வமும், பிராணிகளுக்கு ஹிம்சை செய்யாமையும், சாஸ்திர விரோதமான போகவிச்சையை நிவிர்த்தித்தலும், சரீரத்தாற் செய்யப்படும் தவமாம்.

அக்கினியைப்போலப் பிரகாசிக்கின்ற கூர்மை பொருந்தியவேலாயுதத்தையுடைய அருச்சுனா! இங்குக்கூறிய வாக்கு, மனம், காயம் என்னும் திரிகாணங்களாலும், உலகமானது சந்தோஷமடையும்படிச் செய்கின்ற சிறந்த தவங்களில், பயன்களை இச்சியாமல் செய்கின்ற அரியதவந்தான் சாத்துவிக தவமென்று மேலோர் சொல்லுவர். நல்ல தவத்தினையுடைய சாதுவென்று ஜனங்கள் ஸ்துதித்தற்பொருட்டும், அவிவேக ஜனங்களாற் செய்யப்படும் சாஷ்டாங்க நமஸ்காரமுதலியவற்றோடு தனமுதலிய பதார்த்தங்களை அன்னியரிடத்தில் தானமாக அடைதற்பொருட்டும், இடம்பமாகச் செய்கின்ற தவம் இராஜஸதவமாம்; இதனை மிகவும் பெரியோர் செய்யினும் அந்த இராஜஸதவமென்றே நீ தெரிந்துகொள்வாயாக. அவிவேகத்தை மிகவும் உடைத்தானதாகவும், தன்னுயிர்க்கும் பிறருயிர்க்கும் குற்றமிகுந்த பெரிய துன்பத்தையும் நாசத்தையுமே செய்வதாகவும், பகலில் சூரிய கிரணத்தின் வெப்பத்தினாலும் இரவில் பனியின் சீதளத்தினாலும் உடல் வருந்திச் செய்கின்ற அரிய தவமானது தாமத தவமாம்.



பூந்தாதுக்கள் பரந்து விரிகின்ற மலர்மாலையை அணிந்த நீண்ட முடியையுடைய அருச்சுனா! இனித் தானத்தின் வகைகளைக் கூறுகிறேன் கேட்பாயாக: ஒருவன், முன்னே தனக்கோருபகாரஞ் செய்ததன்பொருட்டில்லாமல் தானத்தைச் செய்துமுடித்து இத்தானத்தினால் மறுமையில் சுவர்க்கம், பசு, புத்திரப்பேறு முதலிய ஒப்பற்ற நல்ல பொருள்கள் உண்டாகுமென்பதையும் விரும்பாமல், இது நமக் கவசியஞ் செய்யத்தக்கதேயென்று நிச்சயித்து, சூரியகிரகண முதலிய நல்ல காலத்திலே, குருக்ஷேத்திரம் முதலிய நல்லவிடத்திலே, வித்தை, தவம் ஆகியவற்றையுடைய உத்தமர்க்குச் சுவர்ணம், அன்னம், பூமி, பசு முதலிய தன் பதார்த்தங்களைக் கொடுப்பதுவே சாத்துவிக தானமாம். எட்டுத்திக்குகளிலும் நிறைந்த புகழினையுடைய அருச்சுனா! 'இந்தத் தன முதலியவற்றைக்கொண்டு அவசியம் நாம் செய்யத்தக்க காரியம் இத்தானமே,' என்னும் கருத்துச் சிறிதுமின்றியே முன்பு சில பிராமணர் தமக்கு உபகாரஞ் செய்ததற்குப் பிரதி யுபகாரமாகப் பிரியத்தோடு செய்வனவும், 'இந்தத்தானஞ் செய்வதனால் மறுமைப் பயன்களுண்டாம்', என்று அறிவானது நீண்டு சுவர்க்கம் முதலிய பயன்களிற் பற்றும்படிச் செய்வனவும் இராஜஸ தானங்களாம். அழியாத மிகுந்த வலிமையையுடைய அருச்சுனா! தனக்கு நியாயமாகக் கிடைக்காததான ஒரு பொருளைக் கொடுக்கக்கூடாததான நேரத்திலே அசுசியான ஸ்தானத்திலே *நடர், †விடர் முதலிய அபாத்திரர்க்கே அவிவேகத்தோடும், அப்பிரியத்தோடும் கொடுக்குந் தானமானது தாமஸதானமாம்.

அருச்சுனா! இப்போது, குணவேறுபாட்டால் ஒன்றற்கொன்று சமனாக இல்லாத ஆகாரத்தோடு, எக்ஞம், பொருந்துகின்ற தவம், தானம் என்று பெரியோர்களாற் கூறப்பட்ட அந்த வகைகளையெல்லாம் அறியும்படி உனக்கு உரைத்தருளினேன்; இனி, 'உள்ளபடி சுருதி சம்மதமும் பெரி

---

* நடர் - கூத்தர், † விடர் - தூர்த்தர்.

யோர் சம்மதமுமாகிய இராஜஸ தாமஸங்கட்கு வேறாகிய சாத்துவிகமான எக்ஞம், தவம், தானம் ஆகியவைகளைச் செய்வதால் மோக்ஷத்தையடைவதற்குரிய தர்மமானது உண்டாவது எப்படி?' என்று நீ வினவி அதனையறிய விரும்புதல் கூடும்; ஆதலின், அந்த எக்ஞம் முதலியவைகள் தோஷம் விடுபட்டுத் தர்மோற்பத்தி வாயிலாகப் பயன்களைக் கொடுக்கும் விதத்தையும் உனக்குத் தெரியும்படி கூறுகிறேன் கேட்பாயாக.

மணிவடமும், மணம்பொருந்திய பூமாலையும் அணியப்பட்டு விளங்காநின்ற மார்பையுடைய அருச்சுனா! ஓம் என்னும் ஏகாக்ஷரமும், ஸ்துதித்தற்கரிய தத் என்னும் பதமும், ஸத் என்று கூறப்படுகின்ற ஒப்பற்ற பதமும் ஆகிய இம்முப்பதங்களும் பரப்பிரமத்தின் நாமங்களாம்; இந்நாமங்களாலேயே பிராமணர் முதலிய கர்த்தாவும், நாம் முன்னமே அறியாநிற்கும் கரணரூபமான வேதமும், கர்மரூபமான எக்ஞமும் சிருஷ்டியின் ஆதிகாலத்தில் பிரமாவினால் உற்பந்நமாயின. ஆதலால், மோக்ஷமடைந்த அறிஞர்கள் ஓமென்னும் சப்தத்தை உச்சாரணஞ் செய்தே எக்ஞம், தவம், தானம் ஆகியவற்றின் ரூபமான கிரியைகளை எப்போதுஞ் செய்வர். மோக்ஷத்தை யடையும்படியான யோக்கியதையுடைய முமுட்சுக்களும் முற்கூறிய தற்பதத்தை உச்சாரணஞ் செய்தே பலனை விரும்பாமல் நாநாவிதமான எக்ஞம், தவம், தானம் ஆகியவற்றின் ரூபமான கிரியைகளைச் செய்வார்கள்; எக்ஞத்திலும் தவத்திலும் தானத்திலும் தாற்பரியமான நிலையும், அவ்வெக்ஞாதிகளின் அனுகூலமான கர்மங்களும், மேற்கூறிய அக்ஷரத்தின் ஓரங்கமாகிய சத்தென்றே கூறப்படுகின்றன; அன்றியும், விவாகமுதலிய மங்கள கர்மங்களிலும் அறிந்தோர் சத்தென்னும் அந்த நாமத்தைப் பிரயோகிப்பர். ஞானநூல்களைக் கற்று அவற்றின் பொருள்களை உணர்ந்த அதிகாரிகள் இவ்வாறு எக்ஞம் முதலியவற்றைச் செய்யும்போது சிரத்தையினால், ஓம், தத், சத் என்னும் இம்



மூன்று பதங்களையும் இவற்றின் பொருளோடும், உச்சரிக்குங் காரணத்தோடும் உரைத்தலால் அந்த எக்ஞம், தவம், தானம் முதலியவைகள் தோஷ நீங்கித் தர்மோற்பத்திவாயிலாகப் பயன்களைக் கொடுக்கின்றன. ஆதலின், பிரமத்தின் நாமங்களான இந்தப் பதங்களை உச்சரித்தே ஒவ்வொருவரும் தத்தம் வருணத்திற்குரிய கர்மங்களைச் செய்வதே தக்கதாம்; இங்ஙனம் சிரத்தையில்லாமற் செய்யப்படும் எக்ஞம், தவம், தானம் முதலியவை இகபரங்களின் பயன்களைப் பயவாவாம். அருச்சுனா! இவ்வத்தியாயத்தில், 'ஆலசியம் முதலிய தோஷங்களால் சாஸ்திரவிதியைப் பரித்தியாகஞ்செய்து தம் முன்னோர்களின் ஆசாரத்தை அனுசரித்து எக்ஞ முதலிய கர்மங்களிற் பிரவிர்த்திக்கும் புருஷரிடத்துச் சாஸ்திரவிதியின் பரித்தியாகரூபமான அசுரதர்மமும், சிரத்தாபூர்வக கர்மாநுஷ்டானரூபமான தேவதர்மமுங் காணப்படுதலின் அப்புருஷர் அசுரரா? அல்லது தேவரா?' என்று நீ வினவிய அவருக்குள்ளே, எவர் இராஜஸ தாமஸ சிரத்தாபூர்வகமான இராஜஸதாமஸரூப எக்ஞமுதலியகர்மங்களையே செய்கின்றனரோ அவர் அசுரர் என்றும், இப்படிப்பட்ட அவர் சாஸ்திரங்களிற் பிரதிபாதிக்கின்ற ஞானசாதனங்களின் அதிகாரிகளல்லர் என்றும், எவர் சாத்துவிக சிரத்தாபூர்வகமாகச் சாத்துவிக எக்ஞ முதலியவற்றைச் செய்கின்றனரோ அந்தப் புருஷர் தேவர் என்றும், அவர் சாஸ்திரங்களிற் பிரதிபாதியாநின்ற ஞானசாதனங்களின் அதிகாரிகளாவர் என்றும் கூறினேன்; இவற்றின் விவரங்களை நன்குணர்ந்துகொள்வாயாக," என்றுரைத்தருளினார்.

பதினேழாவது

குணவிகாரவத்தியாயம் முற்றுப்பெற்றது.

---

## பதினெட்டாவது
## சஞ்சேபவத்தியாயம்.

கலிவிருத்தம்.

"ஏகமே கருதுவா ரிதயமே விளைவதோர்
போகமே யுலகிலோர் பொருவிலா வொருவனை

நாகமே யமளியா நளினமே மலர்வதோர்
மேகமே பணியென விசயன்மேல் வினவுவான்."

முன் அத்தியாயம் முடிவுவரை ஸ்ரீ கிருஷ்ணபகவான் கூறிவந்த விஷயங்களையெல்லாம் கேட்டபின், அருச்சுனனானவன், முந்திய அத்தியாயங்களில் ஆங்காங்கே அந்தப் பகவானால் கர்மசந்நியாசமும், பலமாத்திரத் தியாகத்தால் கர்மாநுஷ்டானமும் உபதேசிக்கப்பட்டமையின், அந்தக் கர்மசந்நியாசம், கர்மாநுஷ்டானம் ஆகியவைகளின் அவிரோதப்பிரகாரமறிய இச்சை நண்ணி, அவரை நோக்கி, "பிரமான்ம ஐக்கியரூபனான உன்னையே எப்போதும் ஆதரவோடு தியானிக்கும் யோகிகளின் இருதயத்தினுள்ளே விளைவதான ஒப்பற்ற ஆனந்தமே! உலகின்கண்ணே ஒருவமையற்ற ஏகனே! ஆதிசேஷனையே ஓர் அமளியாகக்கொண்டு தங்கி, திருப்பதங்களும், திருக்கரங்களும், திருநயனங்களும், திருவுந்தியுமாகிய தாமரைமலர்கள் மலர்ந்திருப்பதான ஒப்பற்ற கருமுகிலே! இனி நான் இன்னும் சில விஷயங்களையறிய விரும்பி அவற்றை இப்போது வினாவப்போகின்றேன்; ஆதலின், அவ்வினாவிற்குத் தக்க விடைகூறி என் சந்தேகத்தைத் தீர்ப்பீராக," என்று பின்னர் அவற்றை வினவத்தொடங்கினவனாய், அவர் திருச்சமுகத்தை நோக்கி, "சுவாமி! சந்நியாசமென்று சொல்லப்படுவதும், அதிகாரிகளாற் செய்தற்குரிய தியாகமென்று சொல்லப்படுவதும் என்ன சொரூபம்? அவைகளைச் சுருக்கமாக அறிய யான் இச்சிக்கிறேன்; ஆதலால், உள்ளபடியே அவைகளை "உரைத்தருள்வீராக," என்று வினவினான்.

அருச்சுனன் அவ்வாறு கேட்கவே, ஆகாயம், வாயு, அக்கினி, நீர், மண் ஆகிய பஞ்சபூத பௌதிகரூபமான பிரபஞ்ச முழுதும் தானாகிய அந்த ஸ்ரீ பகவான், இவ்வத்தியாயத்தில் இக்கீதாசாஸ்திரார்த்தங்கள் முழுவதையும் சங்கிரகித்து இதுவே பரமார்த்தமாமென நிர்ணயஞ்செய்தற்பொருட்டு முன் அத்தியாயங்களில் ஆங்காங்கே வகுத்துபதேசித்து



வந்த பழமையான சந்நியாசம், தியாகம் என்னும் இரண்டின்
பொருள்களைச் சஞ்சேபமாகக் கூறத் தொடங்கினவராய்
அருச்சுனனை நோக்கி, "பார்த்த! நீ வினவிய சந்நியாசம்,
தியாகம் ஆகியவற்றின் பொருள்களை உனதிஷ்டப்படியே சுரு
க்கி விளக்கமாகக் கூறுகிறேன் கேட்பாயாக: புருஷருடைய
அபீஷ்டவிஷயங்களென்றுசொல்லப்படும்சுவர்க்கம், புத்திரப்
பேறு, பசுமுதலிய பயன்களைத் தரும் அசுவமேதம் முத
லிய கர்மங்களெல்லாவற்றையும் பலத்தோடுகூடப் பரித்தியா
கஞ்செய்வதே சந்நியாசமாம். இங்கே யாதொரு மயக்கமு
மில்லாமல் நித்திய நைமித்திக கர்மங்களின் பயன்களைத்
தையும் தீமையாமென்று கருதிப் பரித்தியாகஞ் செய்திருத்
தலே தியாகமாம். இவைகளைப்பற்றி வெவ்வேறு மதஸ்தர்
வெவ்வேறு விதமாகவுங் கூறுவர். அவர்கள் அபிப்பிராயத்
தையுங் கூறுகிறேன் கேள்: 'தீமைகளைச் செய்வனவாகிய
பாவவினைகளின் விதங்களை விடுதல்போலவே இங்கே கர்மாதி
காரிகளான புருஷராற் செய்யப்படுவனவாகிய புண்ணிய
வினைகளின்விதங்களனைத்தையும், அவை பந்தவேதுவாதலால்
அந்தக்கரண சுத்தியில்லாத கர்மாதிகாரிகளாகிய புருஷரும்
அனுஷ்டியாமல் பரித்தியாகஞ் செய்திருத்தலே சந்நியாச
தியாகசப்தங்களின் பொருளாம்,' என்று சாங்கியசாஸ்திரத்
தைப் படிக்கும் தவத்தினையுடைய விவேகிகள் கூறுவார்கள்.
இன்னும், 'எக்ஞம், தவம், தானம் ஆகியவற்றின் ரூபங்க
ளான கர்மங்கள் அந்தக்கரணசுத்திவாயிலாக ஞானத்திற்
குங் காரணங்களாமாதலால் அவற்றை விடுதல் தகாத செய்
கையாம்,' என்று பூர்வமீமாஞ்சகர் கூறுவர். இவருடைய
அபிப்பிராயமே எனக்குச் சம்மதமானதும் சிறந்ததுமாம்.
இவர்கள் இங்ஙனங்கூறு மேதுவினால், அறிய வேண்டுவதை
அறிந்தடங்கினோர்க்கன்றி மற்றையர்க்கு எக்ஞம், தவம்,
தானம் ஆகியவைகளைப் பரித்தியாகஞ் செய்திருத்தல் கூடா
தென்பது நன்கு விளங்கும். எக்ஞம், தவம், தானம் என்று
சொல்லப்படுகின்றவை, பயனை விரும்பாத புருஷரின் அந்தக்
கரணத்தைப் பரிசுத்தமாக்குமாதலால், அருச்சுனா! அந்தக்

காண சுத்தியை அடைய விரும்புவோர் அவற்றைப் பரித்தி
யாகஞ் செய்தல் கூடாது. அவசியம் அவற்றைச் செய்தல்
வேண்டும்; எப்படிச் செய்யவேண்டுமெனில், இவ்வெக்ஞாதி
கர்மங்களால் மறுமையில் பொருந்தும் சுவர்க்கம் முதலிய
பயன்களையும், கர்த்திருத்துவாபிமானத்தையும் பரித்தியா
கஞ்செய்து அவ்வெக்ஞாதி கர்மங்களைச் செய்யவேண்டும்.
இவ்வாறு செய்யவேண்டுமென்பதே பூர்வாசாரியர்க்கும்,
பரமேசுரனுன எனக்கும் முடிந்த அபிப்பிராயமாம்.

அருச்சுன! இன்னமுங் கேள்; தியாகமானது: தாமஸ,
இராஜஸ, சாத்துவிகமென்று மூன்றுவகையாகச் சொல்லப்
படும். அவையாவன:—நித்திய கர்மங்களை, உன்மத்தரைப்
போல ஒரு புருஷனுனவன் அஞ்ஞானத்தினுல், வேதவிகித
மான நித்திய கர்மத்தை நிஷித்தமென்றும், அநர்த்தவேது
வல்லாததை அநர்த்தவேதுவென்றும், தர்மத்தை அதர்ம
மென்றும், அனுஷ்டானஞ் செய்யத்தக்கதை அனுஷ்டானஞ்
செய்யத்தக்கதன்றென்றும் கருதும் பிராந்திஞானத்தைக்
கொண்டு பரித்தியாகஞ் செய்கின்ற அத்தன்மையே தாமஸத்
தியாகமாம். இது மேற்கூறிய சாங்கியநூலோர்க் குரியதாம்.
நித்திய கர்மங்களைச் செய்வதால் சரீரவருத்த முண்டாமெ
ன்று அவற்றைப் பரித்தியாகஞ் செய்வது இங்கே சந்தேக
மில்லாமல் இராஜஸத் தியாகமென்று சொல்லப்படும். இப்
படிப்பட்ட இராஜஸத் தியாகத்தால் புருஷனுனவன் இனிக்
கூறப்படும் சாத்துவிகத் தியாகத்தின் ஞானநிஷ்டாரூபமான
பயனை ஓர்போது மடையான். மறுமையிற் சித்திக்கும் சுவர்
க்கமுதலிய பயனும், கர்த்திருத்துவாபிமான சங்கமும் ஒழி
யும்படி அவற்றைப் பரித்தியாகஞ்செய்து, செய்தற்பாலன
வாகிய நித்திய கர்மங்களைச் செய்வது சாத்துவிகத் தியாக
மாம். இவற்றுள் முந்திய இரண்டும் மேற்கூறியபடி விடற்பா
லனவாம்; பிந்தியவொன்றும் அனுஷ்டிக்கற்பாலதாம்.

இனி, இங்குக்கூறிய சாத்துவிகத் தியாகத்தில் மிகவும்
நிஷ்டையுடைய புருஷனது இலக்கணத்தைக் கூறுகிறேன்



கேள்: வேதத்திற் சொன்ன விதிநிஷேதங்களுள்ளே எத
னிடத்தும் சந்தேகம் சிறிதுமில்லாமல் அவற்றையறிந்து நல்
வழியைப்பற்றிய குற்றமற்ற தத்துவஞானியும் சாத்துவிகத்
தியாகியுமான புருஷன், குற்றமில்லாத சுகத்தையும், துக்
கத்தையும், மிகுந்த சோபனுசோபனங்களி லேற்படும் பிரி
யத்தையும், பிரியமில்லாமையையும் விட்டிருப்பான். இனி,
'கர்மப்பிரவிர்த்திக் கேதுவான இராகத்துவேஷாதிக ளில்லா
மையால் ஞானிக்குச் சர்வ கர்மங்களின் பரித்தியாகங்கூடும்;
அஞ்ஞானிக்குச் சர்வகர்மங்களின் பரித்தியாகங் கூடாது;'
என்பதற் கேதுவைக் கூறுகிறேன் கேள்: இப்பூமியின்
கண்ணே ஒருவர் தேகத்தோடு கூடியிருப்பாராயின், புண்
ணிய பாவமென்னும் இருவினைகளும் அவரால் சேஷமின்
றிப் பரித்தியாகஞ் செய்யப்படாவாம். ஆதலால், பந்தத்திற்
கேதுவான கர்மத்தின் பலனைத் தியாகம்பண்ணின அஞ்
ஞானிகளும், தியாகஞ் செய்யக்கூடாத கர்மங்க ளனைத்தை
யும் தியாகஞ் செய்தவரென்றே சொல்லப்படுவர். கர்மகர்த்தா
வாய் அஞ்ஞானியாகிய புருஷனைத் தியாகியென்று சொன்
னது தியாகசப்தத்தின் கௌணீவிருத்தியினுல் என்றும்,
தேகாபிமான ரகிதனுன பரமார்த்த தரிசியைத் தியாகி
யென்று சொல்லுவது தியாகசப்தத்தின் முக்கிய விருத்தி
யால் என்றுங் கொள்க.

அருச்சுன! இனி நீ, 'கௌண சந்நியாசி, முக்கிய சந்நி
யாசி ஆகிய இருவர்க்கும் கர்மபலத் தியாகத்தன்மையா
னது சமமாகவேயிருக்க, அவரிடத்து கௌணத்தன்மை
யென்பதும், முக்கியத்தன்மை யென்பதும் வேறே என்ன
பல விசேஷத்தா லேற்பட்டன?' என்று நீ வினவக்கூடும்.
இவ் வினுவிற்கு விடையாக அவ்விருவரிடத்தும் உண்டாகும்
பல விசேஷங்களைக் கூறுகிறேன் கேட்பாயாக: பாவமும்,
புண்ணியமும், இவ்விரண்டின் மிசிரமுமாகக் கருதுகின்ற
மூவித கர்மங்களும், அந்தக் கர்மங்களா லுண்டாகின்ற பய
னுகிய நரகம் திரியக்காதி சரீரப்பிராப்தியென்னும் அநிஷ்

டம், தேவாதி சரீரப்பிராப்திபென்னும் இஷ்டம், மனுட சரீரப்பிராப்தி யென்னும் மிசிரம் ஆகிய சரீரப் பிராப்திகளும், பொன்னும் ஆபரணமும்போலக் காரியகாரண ரூபங்களாக இருக்கும். இம் மூவகைக் கர்மங்களின் பயனாகிய அநிஷ்டம், இஷ்டம், மிசிரம் என்னும் இந்திரஜாலம்போன்ற சரீரப்பிராப்திகளானவை ஆன்மாவைச் சாக்ஷாத்காரமாக வறியாத கௌண சந்நியாசிகட்கே, அவித்தை, காமம், கர்மம் என்னும் காரணம் நசியாமையினாலே மரணத்தின் பின்னர் உள்ளனவாம்; ஆன்மாவைச் சாக்ஷாத்காரமாக வறிந்த முக்கிய சந்நியாசிகட்குக் காரணம் நசித்துப்போனமையாலே அநிஷ்டாதிரூபச் சரீரப்பிராப்திகள் மீண்டுள்ளனவாய்த் தோற்றுவாம்.

இனிமேல், 'அஞ்ஞானிக்குக் கர்மத்தியாகங் கூடாதென்பதற்கு ஏதுவென்னை?' என்று நீ வினவக்கூடும்; இவ்வினாவிற்கும் விடை கூறுகின்றேன் கேள்: கர்மத்திற் கேதுக்களாகிய அதிஷ்டானமுதலிய ஐந்தன்கண்ணுள்ள தாதான்மியாபிமானமே மேற்கூறியதற் கேதுவாம்; தேவரும் மனிதராய் வர விரும்பும் சிறப்பினையுடையதாகிய இவ்வுலகின்கண்ணே மேன்மையான புண்ணியமும், தீமையுள்ள பாவமுமாகிய எல்லாவற்றையும் செய்தற்குச் சர்வ கர்மங்களின் சமாப்தியுடைய வேதாந்த சாஸ்திரத்திலே சாதனங்களாகக் கூறிய அவ்வைந்தின் விவரத்தையும் இங்கே நீ அறியும்படி இனி எடுத்துக் கூறுகிறேன்: இச்சை, துவேஷம், சுகம், துக்கம், ஞானம் முதலிய தர்மங்களின் அபிவியக்திக் காசிரயமான ஸ்தூலசரீரமென்னும் அதிஷ்டானமும், நான் கர்த்தாவென்னும் அபிமானமுடைய ஞானசக்திப் பிரதானமான அபஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களின் காரியரூபமான அகங்காரமென்னும்கர்த்தாவும், அபஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களினின்றும் உற்பந்நமாய்ச் சப்தாதிவிஷயங்களின் உபலப்திக்குச் சாதனரூபமான சுரோத்திராதி ஞானேந்திரியங்களூந்தும் வாக்காதி கர்மேந்திரியங்களூந்தும் மனமும் புத்தியு



மாகிய கரணங்களும், பிராணாதிவாயுக்களால் விருப்பத்தோடு வேறுவேறாக வரும் சேஷ்டைகளும், இவற்றுள் சரீரரூபமான அதிஷ்டானத்திற்குப் பிருதிவியும் கர்த்தாரூபமான அகங்காரத்திற்கு உருத்திரனும் சுரோத்திரம் துவக்கு சட்சு ரசனம் கிராணம் என்னும் ஞானேந்திரியங்களூந்திற்கும் முறையே திக்கு வாயு சூரியன் வருணன் அசுவநி என்னும் இவர்களும் வாக்கு பாதம் பாணி பாயுரு உபத்தம் என்னும் கர்மேந்திரியங்களூந்திற்கும் முறையே அக்கினி இந்திரன் உபேந்திரன் மித்திரன் பிரஜாபதி என்னும் இவர்களும் மனத்திற்குச் சந்திரனும் புத்திக்குப் பிருகஸ்பதியும் பிராணன் அபானன் வியானன் உதானன் சமானன் என்னும் சேஷ்டாரூபமான பஞ்சப்பிராணன்கட்கும் முறையே சத்தியோஜாதன் வாமதேவன் அகோரன் தற்புருஷன் ஈசானன் என்பவர்களுமாகி அததற்குத் தக்கபடி கிரமமாக அனுக்கிரகம் பண்ணுகின்ற பொருள்களாகிய தெய்வங்களின் கூட்டமுமாகிய இவைகளே கர்மங்களுக்குக் காரணமாக மேற்கூறியவைகளாம்.

சத்துருக்களின் வலிமையை அழிக்கும் நீண்ட வில்லையுடைய அருச்சுனா! இவ்வுலகின்கண்ணுள்ள மனிதர் யாவரும் வாக்கினாலாவது, மெய்ம்மையான மனத்தினாலாவது, தம்முடைய சரீரத்தினாலாவது புண்ணிய பாவமென்னும் இரண்டு வினைகளில் ஒன்றைச் செய்ய ஆரம்பிக்குங்காலையில் இவ்விடத்து முன்னே கூறிய அதிஷ்டான முதலிய ஐந்து காரணங்களும் வேண்டும். நான் சொல்லிய இந்தக் கிரமத்தின்படியே அதிஷ்டான முதலிய ஐந்து காரணங்களால் உண்டாகின்ற புண்ணியபாவங்களிரண்டையும் செய்யுந்தன்மையுடையவன், ஜலத்திற் பிரதிபிம்பித்துச் சல முதலியவற்றைப் பிரகாசிக்கச் செய்யும் சூரியன், அவற்றிற்கு வேறாக விருப்பினும், அச்சலத்தோடு சூரியனது தாதான்மிய பாவகற்பனைசெய்து மூடர் எப்படிச் சலத்தின் சலனத்தாற் சூரியனைச் சலிப்பவனாகப் பார்க்கின்றனரோ அப்படி அதிஷ்டானாதி

களைப் பிரகாசிக்கச் செய்யும் அசங்காத்விதீயமான ஆன்மாவிற்கும் அவ்வதிஷ்டானாதிகளோடுகூடத் தாதான்மியபாவத்தைக் கற்பனை செய்து அதிஷ்டானாதிகளின் கர்மங்களை அசங்கமாகிய ஆன்மாவின்கண்ணே ஆரோபணஞ் செய்து, உண்மையாக யானேயல்லாமல் வேறில்லையென்று, அசங்கோதாசீனமாத்திரமான ஆன்மாவைக் கர்த்தாவாக அறிபவனாவன்; இவன், தான்உய்யும்படிக்குஉள்ளபடியே ஆன்மாவை உணரமாட்டான். எதனால் இவ்வாறு உணரமாட்டானெனில், குருவாலும் சாஸ்திரங்களாலும் உண்டாகும் விவேகஞானமில்லாமற் போவதனாலேயாம். எந்த வித்துவானான புருஷன், தனது தேகத்தை நானென்று கருதும் தன்மை நீங்கினானோ? எவன் தன்னுடைய அந்தக்கரணமானது எவ்வகைப்பட்ட கர்மங்களோடும் சம்பந்தப்பட வில்லாதவனோ? அந்த வித்துவானான புருஷன், இலௌகிக திருஷ்டியால் இவ்வுலக முழுவதையும் சம்மரித்தானானாலும், 'ஆன்மா அசங்கன்,' என்னும் பரமார்த்த திருஷ்டியாற் சம்மரித்திலனாதலால், அதனாலுண்டாகும் ஒரு பாவமுமில்லை; அவன் கொன்றதனாலுண்டாகும் நிந்தையுமில்லை; பூமியை யாளும் அரசனான அருச்சுனா! இப்படிப்பட்ட ஞானத்தின் மகிமையை நீ தெரிந்துகொள்ளக்கடவாய்.

அருச்சுனா! இப்போது அதிஷ்டானாதிகள் ஐந்திற்குமே சர்வகர்மங்களின் ஏதுத்துவமுண்டு என்றும், ஆன்மாவுக்கு எந்தக் கர்மங்களின் சம்பந்தமு மில்லையென்றும் கூறினேன்; இனி அந்தக் கருத்தையே வேறொருவகையாக வர்ணித்துக் கூறுகின்றேன் கேட்பாயாக: இஃது இஷ்டசாதனமென்னும் போதமாகிய ஞானமும், இஷ்டசாதனரூபமான கர்மமென்னும் ஞேயமாகிய அறியப்படும் பொருளும், ஞானத்திற்காசிரயமாகிய பரிக்ஞாதாவென்னும் அறிபவனுமாகிய இம்மூன்று வழியில், கர்மங்களை விதிக்கின்ற விதியின் இயல்பானது நிற்கின்றது; கர்த்தாவுக்குக் கிரியையினாற் பொருந்தும்படியான கர்மமும், கிரியைகளைச் செய்யும் கர்த்தாவும்,



செய்தற்குரியனவான சுரோத்திரம் முதலிய புறக்கரணங்களும் மனம் புத்தி முதலிய உட்கரணங்களுமாகிய இம்மூவகைக் குறியில் கர்மங்கள் முடிந்திருக்கின்றன. ஆதலின், இவைகளே சர்வகிரியைகளுக்கும் ஆசிரயமாம்; கூடஸ்தான்மா எந்தக்கிரியை களுக்கும் ஆசிரயமில்லை. இன்னும் நீ குணான்மகமாக அரியத்தக்கவை சிலவுள; அவற்றையும் இனிக் கூறுகிறேன் கேட்பாயாக.

மேற்கூறியபடி சர்வ கிரியைகளுக்கும் ஆசிரயமான மாட்சிமைபொருந்திய அந்தக்கரணவிருத்திரூப ஞானமும், எக்ஞாதிரூபகிரியையும், அக்கருமங்களைச் செய்யும் கர்த்தாவும், அழுத்தமாகவறியும் புத்தியும், தைரியம் என்று சொல்லப்பட்ட திருதியும், விளங்கவுண்டாகின்ற சுகமும் ஆகிய இவற்றுள் ஒவ்வொன்றும் முன்னே பதினான்காமத்தியாயத்திற் சொன்ன சத்துவம், இராஜஸம், தமஸம் என்னும் முக்குணங்களின் சம்பந்தத்தாலே மூன்றுவகையாம். இவற்றுள் முதலில் ஞானத்தின் தன்மைகளைக் கூறுகிறேன் கேள்: ஆனந்தமாய் ஞானத்திரளாகி எவ்விடத்தும் அநேகவிதமாக விரிந்து, அழிகின்ற பிரமாதிஸ்தாவராந்தமான பூதங்களெல்லாவற்றிலும் கூடஸ்தநித்தியமாய் ஏகரசமாய் நிற்கும் அத்துவிதீயமான பிரத்தியகான்மாவை அப்படியே சாட்சாத்கரித்தறியும் ஞானத்தைப் பெரியோர் சாத்துவிகஞானமென்று கூறுவர்; ஒன்றற்கொன்று விலட்சணமாகக் காணப்படும் இத்தேகங்கடோறும் நிறைந்துள்ள ஆன்மாவை மேற்கூறியபடி அறியாமல், சுகதுக்காதிரூப வேறுபாட்டால் சரீரங்கடோறும் வேறுவேறாகக் குதார்க்கிக புருஷாலறியும் ஞானமானது இராஜஸஞானமாம். இப்படி அறிவதுமின்றிச் சர்வ தேகங்களிலும் ஞானத்திரளாய் நின்ற ஆன்மாவை ஒரு தேகரூபமான காரியத்திலும், ஒரூரில் பிரதிமைமுதலியரூபமான ஒரு காரியத்திலும், முறையே, 'இவ்வளவு மாத்திரமே ஆன்மா,' 'இவ்வளவு மாத்திரமே ஈசுரன்,' 'இதைப் பார்க்கிலும் வேறோரீசுரனில்லை,' என்று அறியும் ஞானமானது தாமஸஞானமாம்.

அருச்சுனா! இப்போது அத்துவிதியான்மவிஷயமான சாத்துவிகஞானமோ முமுட்சுக்களாற் கொள்ளத்தக்கது, அநேகான்ம விஷயமான இராஜஸஞானமும் பரிச்சின்ன தேகாதிரூப ஆன்மாவை விஷயம்பண்ணும் தாமஸஞானமும் தள்ளத்தக்கது என்னும் அபிப்பிராயத்தைக் கூறி மூவகை ஞானங்களின் பேதங்களை விளக்கிக்காட்டினேன்; இனிக் கர்மங்களின் மூவிதத்தன்மைகளையுங் கூறுகிறேன் கேட்பாயாக: எனக்குச் சமானர் வேறொருவருமில்லையென்னும் அகங்காரமும், இனி அனுபவிப்போமென்று கருதும் கர்மபலத்தின் இச்சையும், புத்திரப்பேறு முதலியவைகளிடத்துப் பிரீதிரூபமான இராகமும், சத்துருக்களிடத்துச் செய்யும் வெறுப்புரூபமான துவேஷமும் ஆகிய இவற்றுள் ஒன்றுமில்லாமல் நிஷ்காமபுருஷனால் ஆரம்பிக்கப்படும் எக்ஞம், தானம், ஓமம் முதலிய கேடில்லாத நித்திய கருமம் எதுவோ அது சாத்துவிககர்மம் என்று சொல்லப்படும்; இனிமேல் உண்டாகும் சுவர்க்கம் முதலிய பலன்களின் இச்சையோடும், முன்னே சொன்ன அகங்காரரூபமான கர்வத்தோடும் ஸகாமபுருஷனால் அநேகம் கிலேசத்தோடு கூடி ஆரம்பித்துச்செய்யப்படும் காமிய கர்மங்களெல்லாம் இராஜஸ கர்மமென்று சொல்லப்படும்; ஒருவன், தான் நடுங்கும்படி பின்னே அடையும் அசுபரூபமான பயனும், பிராணிகளுக்கு வருந்தும்படி பொருந்துகின்ற பீடையும், தனமுதலியவற்றின் நாசமும், தனது சாமர்த்தியமும் ஆகிய இவற்றைப் பெரியோர் சொல்லிய நியாயத்தோடும் நூல்களை நாடியாராய்ந்து உள்ளபடி யறியாமல் பெருமை குறையும்படி அவிவேகத்தால் ஆரம்பித்துச் செய்யப்படுகின்ற கருமங்களெல்லாம் தாமஸகர்மங்களென்று சொல்லப்படும்.

இனிக் கர்த்தாக்களின் தன்மைகளைப்பற்றிக் கூறுகிறேன் கேள்: கர்மபலத்தினிச்சையையும், கர்வவசனத்தையும் குற்றமற நீக்கிச் சர்வகர்மங்களிலும் கூடியெழுகின்ற உற்சாகத்தோடும், தைரியத்தோடும் பொருந்தி,



என்னும் தான் செய்கின்ற கர்மபலன்களின் கேடு, இலாபம் ஆகியவற்றில், 'இது துன்பம்,' என்றும், 'இஃதின்பம்,' என்னும்கருதுகின்றதாகிய சலிப்பில்லாதிருக்கும்தலைவனெவனோ அவனே சாத்துவிக கர்த்தாவென்று கூறப்படுவான்; கர்மபலன்களை இச்சித்தலும், புத்திரப்பேறு முதலியவைகளிடத்திற் சிநேகமும், ஒருவர்க்கும் ஒன்றைக்கொடாத உலுத்தத்தன்மையும், தூய்மையில்லாமையும், நஷ்டம் இலாபம் ஆகியவற்றின்பொருட்டு முறையே வாடுதலும் மிகச்சந்தோஷித்தலும் ஆகிய இவ்வித தன்மைகளோடு கூடி வாழ்பவர் எவரோ அவர் இராஜஸ கர்த்தாக்களென்று சொல்லப்படுவார்; செய்பத்தக்க கர்மங்களிற் சாவதானமாகும்படி மனத்தை அடக்குதலும், பெருமை பொருந்திய ஞானசாஸ்திரங்களை, 'இவையே நமக்குப் பெருஞ்செல்வம்,' என்று நினைத்துக் கற்குதலும், பெரியோர் கூட்டஞ் சந்தோஷிக்கும்படியான வணக்கமும் ஆகிய இக்குணங்களில் ஒன்றுமில்லாமல், ஒருதினத்தில் முடிக்கத்தக்க காரியத்தை ஒரு மாசத்திலுங்கூட முடிக்கமாட்டாதவரெவரோ அவர் தாமஸ கர்த்தாக்களென்று சொல்லப்படுவார்.

இனிப் புத்தியின் வகைகளைக் கூறுகிறேன் கேள்: 'இழிவில்லாத துறவறம் இப்படிப்பட்டது,' 'இல்லறம் இப்படிப்பட்டது,' 'மோக்ஷம் இப்படிப்பட்டது,' 'பந்தம் இப்படிப்பட்டது,' 'இது காரியம்,' 'இஃதகாரியம்,' 'இவை அஞ்சத்தக்கவை,' 'இவை அஞ்சத்தகாதவை,' என்று இவைகளை உள்ளபடியே அறியும் புத்தி யெதுவோ? அதுவே சாத்துவிக புத்தியென்று சொல்லப்படும்; தர்மாதர்மங்களையும், தனக்குச் செய்பத்தக்கனவாகும் காரியங்களையும், செய்பத்தகாதனவாகுங் காரியங்களையும் உள்ளபடியே அறியாத அறிவு எதுவோ அது, சந்தேகரூபமான இராஜஸ புத்தியென்று சொல்லப்படும்; தர்மத்தை அதர்மமாகப் பாவித்தலும், செய்யத்தகாதனவாகிய காரியங்களைச் செய்யத்தகுங் காரியங்களாமென்று பாவித்தலும், துன்பத்தைச் செய்கின்ற சிந்தனை

யானது மற்றத் தீங்கான சர்வ விஷயங்களிலும் செல்லுதலுமுடைய தெதுவோ அதுவே தாமஸபுத்தியென்று கூறப்படும்.

இனித் தைரியத்தின் வகைகளைக் கூறுகிறேன் கேட்பாயாக: மனத்தினாற் செய்யப்படும் கிரியைகள், நிலைபேறுடைய பிராணவர்க்கங்களாற் செய்யப்படும்கிரியைகள், கூட்டமாகிய இந்திரியங்களாற் செய்யப்படும் கிரியைகள் என்று சொல்லப்படுகின்ற இச்சேஷ்டைகள் பாரமாக அதிகரித்தாலும் அவற்றைக் கண்டு சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மையால் பொறுத்தலும், துவேஷஞ் செய்யாமையுமுள்ளதெதுவோ அது சாத்துவிக தைரியமென்று சொல்லப்படும்; ஆசையினால் தரப்பட்ட சுவர்க்க முதலிய பலன்களை அடையும் பொருட்டு அவற்றிற் கேதுவான தர்மங்களைச்செய்து, 'தர்மம், காமம், அர்த்தம் ஆகிய இம்மூன்றுமே அவசியமாகச் சம்பாதிக்கத்தக்கன,' என்றெண்ணி. அவற்றைத் தாங்கும் தைரியமெதுவோ அது இராஜஸ தைரியமென்று சொல்லப்படும்; புத்தியில் சோகம், களிப்பு, உறக்கம், பயம் ஆகிய இவைகளை எப்பொழும் விடாமற் பொருந்தித் தாங்கும் தைரியமெதுவோ அது தாமஸ தைரியமென்று சொல்லப்படும்.

இனிச் சுகத்தின் தன்மைகளைக் கூறுகிறேன் கேள்: அன்பனான அருச்சுனா! அதிகாரிகள் யாவருக்கும் ஞான, வைராக்கிய, தியான, சமாதிகளின் ஆரம்பகாலத்தில் அத்தியந்தம் ஆயாச சாத்தியமாவதால் பிரசித்தமான விஷத்தைப் போற் றுக்கமாய், ஞான, வைராக்கியாதிகள் பரிபாகமாகுமிடத்துச் சுகமாய் விளங்கி, 'அரியவமுதமே,' என்று சொல்லத்தக்க தெதுவோ அதுவே சாத்துவிக சுகமென்று கூறப்படும்; இந்திரியங்களுடனே விஷயங்களிற் சம்பந்தமாய் அனுகூலமாக வெழுந்து, பிரதமக்ஷணத்தில் அரியவமுதமென்று சொல்லலாவதாய்ப் போகத்தின் அந்தத்தில் வெறுப்பாய் விஷத்தைப்போலப் பிரதிகூலமாகி யிருக்கும் சுகமெதுவோ அது இராஜஸசுகமென்று சொல்லப்படும்;



முந்திய வினைவசத்தால் தொடருகின்ற நித்திரை, சித்தத்தின் அசாவதானமாகிய * பிரமாதம், † ஆலசியம் என்னும் இவைகளால் பொருந்தத் தோன்றினதாய், ஆரம்பகாலத்திலும், விரைவாய் முடிந்தகாலத்திலும் தனக்குரிய கடனாக மோகத்தைச் செய்வதாயுள்ள சுகமெதுவோ அது தாமஸ சுகமென்று சொல்லப்படும்.

கிரீடத்தையுடைய அருச்சுனா! இன்னமுங் கேள்: முன்னே பதினான்கா மத்தியாயத்திற் சொன்ன சுபாவமென்னும் பிரகிருதியினாலுண்டாகும் இந்தச் சத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்களையும் விட்டவர்கள் இவ்வுலகத்திலாவது சுவர்க்கத்திலாவது ஒருவருமில்லை. இவ்வுலகில் பிராமணருக்கும், க்ஷத்திரியருக்கும், வைசியருக்கும், சூத்திரருக்கும் தங்கள் தங்கள் இயற்கைக்குத் தகுதியாக இந்த முக்குணங்களின் சம்பந்தமாகவே செய்கைகள் ஏற்படும்; அங்ஙனம் ஏற்படுவதில், பிராமணர் சத்துவகுணப் பிரதானராகையினாலும், க்ஷத்திரியர் அற்பஞ் சத்துவகுணங் கலந்த இராஜோகுணப்பிரதான ராகையினாலும், வைசியர் அற்பந் தமோகுணங்கலந்த இராஜோகுணப்பிரதான ராகையினாலும், சூத்திரர் அற்பம் இராஜோகுணத்தோடு தமோகுணப்பிரதான ராகையினாலும் மேற்கூறிய இவர்களுடைய செய்கைகளும் வெவ்வேறு வகைகளாக விருக்கும்; அவ்வாறு இவர்களுக்குச் சத்துவம் முதலிய முக்குணங்களின் தன்மையினால் உண்டாகுங் கர்மங்களின் கூறுபாடுகளையும் இனி உரைக்கின்றேன் கேட்பாயாக:

அந்தக்கரணங்கள் நான்கினுடனே குற்றத்தை உண்டாக்கக்கூடியவைகளான சுரோத்திரம் முதலிய இந்திரியங்களைந்தையும் அவற்றின் விஷயங்களிற் செல்லாமல் நிக்கிரகஞ் செய்தலும், முன் பதினேழா மத்தியாயத்திற் கூறிய சாரீரம், மானசம், வாசிகம் என்னும் மூவித தவங்களைச் செய்தலும், சரீரசுத்தி செய்தலும், அந்தக்கரணசுத்தி

* பிரமாதம் - மதியீனம், வெறி. † ஆலசியம் - சோம்பல்.

செய்தலும், பிறர் செய்யும் அவமானத்தால் குரோதம் முத
லிய விகாரங்களை யடையாதிருத்தலும், சாஸ்திரஞான முடை
த்தாயிருத்தலும், அனுபவபரியந்தம் பொருந்துகின்ற விஞ்
ஞானத்தைப் பெற்றிருத்தலும், வஞ்சகத்தன்மை யில்லா
திருத்தலும், பரலோக முண்டென்னும் நிச்சய மடைந்திரு
த்தலும் ஆகிய இவ்வொன்பதும் பிராமணருடைய சுபாவத்
தொழில்களாம்; இவை பிராமணர்களுக்கே உரியவைக
ளென்று சாஸ்திரங்களில் வகுத்துக் கூறப்பட்டிருக்கின்றன.

மனிதரைப் பரிபாலித்தற்பொருட்டுத் தம்முடைய
சேவகர் முதலியவர்களின் சமீபத்தில் தமது பிரபு சக்தியைப்
புலப்படுத்தல் அல்லது சாஸ்திர நிஷித்த மார்க்கத்திற் பிர
விர்த்திக்கின்ற துஷ்டப்பிராணிகளை நல்வழியிற் றிருப்புதல்
என்னும் ஈசுரபாவமும், சுவர்ணம் பசு அன்னம் பூமி முத
லியவற்றைப் பிராமணர் முதலியோருக்குக் கொடுத்தலாகிய
தானமும், பலமுடைய புருஷரையும் அடிக்கத்தக்க அஞ்சாத்
தன்மைபொருந்திய சாமர்த்தியமும், பெரிய விபத்து வந்தா
லும் தேகேந்திரியாதி ரூபக்கூட்டங்கள் வியாகுலமடை
யாத தன்மையாகிய தைரியமும், அன்னிய சத்துருக்களால்
அவமானமடையாத சாமர்த்தியமும், கொல்லுதலைப்பொருந்
திய யுத்தங்களிலே தோற்றோடாமையுமாகிய இவை க்ஷத்
திரியரின் விகித கர்மங்களாம்.

பூமியை உழுது பயிர்செய்தலும், பசுக்களைக் காத்த
லும், கிரயவிக்கிரயரூப வியாபாரங்களை வழுவாமற் செய்தலு
மே வைசியருடைய சுபாவகர்மங்களாம்.

பிராமணர், க்ஷத்திரியர், வைசியர் என்னும் இம்மூன்று
வருணத்தார்களையும் சிசுரூஷையினால் பாதுகாத்தலே சூத்
திரர்க்குச் சிறந்த கர்மங்களாம்.

அருச்சுனா! சுருதி ஸ்மிருதிரூபமான சாஸ்திரங்களில்
வருணங்களையும் வருணாசிரமங்களையும் ஒழுங்காகக் கூறப்
பட்டிருப்பதால், ஒவ்வொரு வருணத்தாரும் மேற்கூறியபடி
யமைந்த தங்கள் தங்கள் கர்மங்களை யனுஷ்டிப்பார்களா



னால், அவ்வாறு செய்யும் அவ்வனுஷ்டானமே நாராயண
னென்னும் காரணபிரமத்திற்குப் பூஜனையாம்; அந்தப் பூஜனை
யால் அந்த நாராயணனே, தம்முடைய கர்மங்களை விடாது
செய்கின்ற அந்தப் புருஷருக்குப் பிறவாநெறியாகிய வரத்
தைக் கொடுப்பான். தங்கள் தங்கள் வருணாச்சிரம தர்மமே
மூடர்க்குப் பரமேசுரப் பிரசாதத்திற் கேதுவாவதால் அதி
காரிகளாகிய மனிதர் சுதர்மானுஷ்டானமே செய்யவேண்
டும்; ஆதலின், நன்மை தீமைகளின் வகைகளை யறிந்த க்ஷத்
திரியர் முதலிய பெரியோர்கள் தமக்கல்லாதவையாகிய பிட்
சாடனாதி யதிதர்மங்கள் எவ்வித தோஷங்களு மில்லாதன
வாய்ப் பொருந்தி வருமாயினும் அவை பயத்திற் கேதுவாத
லால் அந்தப் பரதர்மங்களிற் செல்லமாட்டார்கள்; தங்களுக்
குரியவைகளையே அனுஷ்டிப்பார்கள்; அவர்கள், அந்தப் பர
தர்மங்களை யனுஷ்டிப்பதைப் பார்க்கிலும் தொன்றுதொட்டு
அனுஷ்டிக்கப்பட்டு வரும் க்ஷத்திரியகுலம் முதலியவற்றிற்
கே உரிமையாகிய யுத்தம் முதலிய கர்மங்கள் பந்துஜனங்க
ளின் இம்சையோடு கூடினவைகளா யிருந்தாலும் வேத
விகிதமாதலால் அவைகளை அனுஷ்டிப்பது தர்மமாம்; அதர்ம
மாகாது. இன்னும், ஒலிக்கின்ற அக்கினியானது, புகை
யோடு கூடியே எதிரே காணப்படும்; அதுபோல சர்வதர்மங்
களும் தோஷங்களோடு பொருந்தியே யிருக்கும்; புகை
யோடு கூடிய அக்கினியானது தோஷத்தோடு கூடியிருந்தா
லும் உலகமானது புகைரூபமான தோஷத்தை நாடாமல்,
இருள், சீதம் ஆகியவைகளின் நிவிர்த்தியின்பொருட்டு அத
னைச் சேவிப்பதுபோலச் சுதர்மமும் தோஷத்தோடு கூடி
யிருந்தாலும் அத்தோஷத்தைக் கருதாமல், குணத்தை
மாத்திரம் நாடி அந்தக்கரண சுத்தியின்பொருட்டு அதனை
யனுஷ்டிக்கவேண்டும்; ஆதலால், அசுத்தாந்தக்கரணமுடைய
அஞ்ஞானி சுதர்மங்களைத் தோஷமுடையனவென்று கருதி
நீக்குதல் கூடாது; தமது வருணாசிரமத்திற் குரியவைகளா
கிய அக்காரியங்களைச் சிரேஷ்டமானவைகளாமென்று நினை
த்து அனுஷ்டிப்பதே நியாயமாம்.

இனி, 'அசுத்தாந்தக்கரணமுடைய அஞ்ஞானி சர்வ கர்ம பரித்தியாகஞ் செய்வதிற் சமர்த்தனாகாவிடில் அதில் எவன் சமர்த்தனாவன்?' என்று நீ என்னிடம் வினவக்கூடும். இவ்வினாவிற்குத் தக்கவிடை கூறுகின்றேன் கேள்: வெல்லப்பட்ட மனத்தினையுடையவனாய் அதனால், புத்திரப்பேறு இல்வாழ்க்கை முதலிய தனக்கந்நியமானவைகளில் எதையும், 'இதற்குரியவன் நான்,' 'இஃதெனக்குரியது,' என்று அபிமானியாமல், துன்பப்படுத்துகின்ற தேகத்தின் ஜீவனத்துக் கேதுவான அன்னபானாதி போகங்களில் ஏற்படும் இச்சையையும் ஒழியும்படியாக நிவிர்த்தித்த சுத்தாந்தக்கரணமுடைய அதிகாரிபுருஷன், கர்மங்கள் முழுவதையும் ஒழிந்துபோகும்படி பரித்தியாகஞ் செய்தவனும்; அந்தச் சந்நியாச பூர்வகமான வேதாந்த விசாரத்தினால், மனமுதல் சித்தமீறாகச் சொல்லப்பட்ட அந்தக்கரணங்கள் நான்கும் சுத்தமாய்விடும்; இங்குக் கூறிய இந்த அந்தக்கரணங்கள் நான்கும் சுத்தியாய் விடவே, அவ்வந்தக்கரண சுத்தியினால் இவ்வதிகாரிபுருஷன், சரீரேந்திரிய சங்காதங்களைச் சாஸ்திர நிஷித்தமார்க்கப் பிரவிர்த்தியினின்றும் நிவிர்த்தி செய்யும் சாமர்த்தியமாகிய மகத்தான சாத்துவிக தைரியத்தையுடையவனாவன்; அச்சாத்துவிக தைரியத்தால் பின்னர் ஞான நிஷ்டைக்கு விக்கினஞ்செய்யும் சப்தாதி விஷயங்கள் ஐந்தையும், சரீரநிலைமாத்திரத்தில் உபயோகமான சப்தாதி விஷயங்களி லுண்டாகும் இராகமும், துவேஷமும் என்று சொல்லப்படுகின்ற இரண்டையும் தன்னை வருத்தா தொழியும்படி பரித்தியாகஞ் செய்வன்; அவ்வாறு அவற்றைப் பரித்தியாகஞ் செய்தபின்பு புவனத்தையும், பருவதத்தையும், மலைக்குகையையும், கொடுமையுள்ள மிருகம் முதலியவை தியானத்திற்கு விரோதமாக வருத்துதலில்லாத ஓடுகின்ற நீரையுடைய நதியுள்ளடங்கிய இடத்தையுமே தான் வசிக்கும் ஸ்தானமாகக் கொண்டு, யாவராலும் சம்பாதிக்கத்தக்க இகலோக பரலோகங்களிலுள்ள பொருள்களுள் ஒன்றிலும் ஆசையில்லாமல் வைராக்கியத்தைக் கைக்கொண்டு, நித்திரை



ஆலசியம் முதலியவை யுண்டாதற்குக் காரணங்களான அன்னங்களைப் புஜியாமல் இதமாயும் * பவித்திரமாயுமுள்ள அன்னங்களை அற்பமாகப் போஜனஞ்செய்து நித்தியம் தியான யோக பராயணனாய், எங்கும் சென்று சலிக்கின்ற மனம் வாக்கு, சரீரம் ஆகியவை தன் வசமாகப் பெறுவன். அருச்சுனா! இன்னும் அவ்வதிகாரியானவன், மேற்கூறியபடி மனோவாக்குக் காயங்கள் நிரோதமாய் வசமாகவே, சந்தோஷத்தாற் றோன்றும் மதமும், விஷயாபிலாஷையாகிய காமமும் 'என்னது,' 'யான்,' என்கின்ற மமகார அகங்காரங்களும், அக்கினியைப்போற் சுடுகின்ற குரோதமும், சுருதி ஸ்மிருதிரூப சாஸ்திர விருத்தமான அசத்தில் ஆக்கிரகித்தலாகிய வலியும் ஆகிய இவற்றைக் கருதுதலொழிந்து சாந்தியடைவன்; அவ்வாறு சாந்திபெறவே யாதோரிடத்தும் வேறுபாடடையாமல் ஏகரசமாயுள்ள பிரமத்தின் பூரணரூபத்தையடைவான்; பின்னர், அந்தப் பிரமபாவமடைந்த புருஷன், தனக்குத் தேகம் முதலியவைகளில் அபிமான மின்மையின் சம்சார விஷயங்களில் எந்த நஷ்டம் வந்தாலும் துன்பமடையான்; இவ்வுலகில் ஒருவர்க்குச் சுகம் வந்தபோது அது தனக்கு வந்ததுபோலவும், ஒருவர்க்குத் துக்கம் வந்தவிடத்து அது தனக்கு வந்ததுபோலவுங் கருதி எல்லாப் பிராணிகளிடத்தும் சமசித்தமுடையவனா யிருப்பான்; இவ்வாறான ஞானநிஷ்டையையுடைய அந்தச் சந்நியாசி பின்னர், பந்தரூபமான வாசனைகளெல்லாவற்றையு மொழித்துப் பரமான்மதேவனான என்னைச் சாட்சாத்கரித்தற்குக் காரணமாகிய ஞானலட்சணமான எனது பக்தியை அடைவன்; அந்தப் பக்தியினால் தனது சித்தத்தின்கண்ணே பரமான்மதேவனான என்னை உள்ளபடியே அகண்டைகரச அத்துவிதீயாநந்தரூபப் பிரமமென்று சாட்சாத்கரிப்பன்; அவ்வாறு செய்யும் எனது சாட்சாத்காரத்தால் தேகத்தின் அந்தத்தில் பரப்பிரமரூபனான என்னையே அபேதமாக அடைவான்.

---

* பவித்திரம் - தூய்மை.

அருச்சுனா! இங்குக் கூறியபடி அதிகாரிபுருஷன், பரமேசுரனான என்னைப் பற்றிக்கொண்டுநின்றே நித்திய நைமித்திகமாகிய சர்வகர்மங்களையும் அனுஷ்டிப்பதனால் அவன், மீண்டும் ஜனனமாகாத விஷ்ணுபதத்தை எனது கிருபையினால் அடைவனென்பது நிச்சயமாதலால், க்ஷத்திரியனாயுள்ள உன்னைச் சம்பந்தித்தவைகளான யுத்தம்முதலிய கர்மங்களெல்லாவற்றையும் விவேகபுத்தியினால் பரமேசுரனான என்னிடத்தர்ப்பணம்பண்ணிச்செய்வாயாகில் என்னிடத்தேசித்தமுடைய நீ என்னுடைய பிரசாதத்தால் சர்வ கர்மங்களையும், கடத்தற்கரிய சம்சாரதுக்கங்களெல்லாவற்றையும் கடத்தற்குரியவனாவாய். குவிந்த மனத்தினாலே பரமேசுரனான நான் உரைத்தருளிய மெய்ம்மையான வாக்கியங்களின் அர்த்தத்தை, 'இது நன்று,' என்று நீ உணர்ந்து அனுஷ்டானஞ்செய்யாயாயின், சர்வ புருஷார்த்தங்களினின்றும் பிரஷ்டனாய் நஷ்டத்தையே அடைவாய்; இஃதன்றியும், மேற்கூறிய என் வார்த்தையைத்தட்டி க்ஷத்திரியரெல்லோருக்கும் அடுத்த காரியமாயுள்ள சத்துருஜயத்தையடைய இச்சியாவிடில் உனக்கு வேறே இனி உண்டாகுந் துன்பங்களையுங் கூறுவேன் கேட்பாயாக: வாசனை பொருந்திய மாலையையணிந்த அருச்சுனா! நீ, 'தர்மத்தினின்றும் நான் பிரஷ்டனாவேனாயினும் பந்து ஜனங்களோடு யுத்தஞ் செய்யேன்,' என்று உன்னுடைய சுதர்மமான யுத்தத்தைச்செய்ய விரும்பாவிடினும், க்ஷத்திரியர்க் குரியதென்று வரையறுத்துக் கூறிய இராஜோகுணசொரூபப் பிரகிருதி, யுத்தத்திற் புகும்படி உன்னைக் காலா லுதைத்துத் தள்ளும்; க்ஷத்திரியரின் சுபாவகுணமாகிய ஆண்மையும் குற்றம்பொருந்திய வாள்முதலிய ஆயுதங்களைக்கொண்டு செய்யப்பட்ட யுத்தத்தில் உன்னை க்ஷணத்திற் புகுவிக்கும். இவ்வாறு இவை புகுவிப்பதனால் அப்போது இந்த யுத்தத்தை நீயேசெய்து பந்து ஜனங்களைக் கொன்றதாகக் கருதி மிக்க துன்பங்களை யடைவாய்.

ஆதலால், அருச்சுனா! மரத்திற் செய்யப்பட்ட யானை முதலிய பிரதிமைகளினுள்ளே மறைந்து நின்று, அவைகளின் சம்பந்தங்களான கை, பாதம், கன்னம் முதலியவற்றின் செய்கைகள் முழுவதையும் உலகில் எவருமறியும்படி செய்விக்கும் சூத்திரதாரியைப்போல அந்தரியாமியாகிய ஈசுரனும் சர்வப்பிராணிகளின் லிங்கதேகமென்னும் இருதயங்கடோறும் மறைந்து நின்று, தனது மாயாசக்தியினால் அவ்வப்பிராணிகளின் சுபாசுபகர்மங்களை நடத்தும் எண்ணங்களைச் செய்விப்பன் என்றே நீ மனத்திற்கொண்டு உனக்குரிய யுத்தம் முதலிய கர்மங்களைச் செய்யக்கடவாய். பார்த்த! இப்போது மற்றொருவருக்கும் உபதேசிக்கத்தகாத மந்திரயோகாதி இரகசியார்த்தங்களெல்லாவற்றினும் அதிரகசியமான ஞானார்த்தங்கள் முழுவதையும் கருணையினால் உனக்குக் கூறினேன்; இனிமேல் நீ என் கருத்தாயுள்ள இவைகளை நன்றாக ஆராய்ந்தறிந்து உனக் கிச்சையானபடி எதைச் செய்யவேண்டுமோ அதைச் செய்வாயாக.



இனி, மிகவும் கெம்பீரமான கீதா சாஸ்திரார்த்தங்கண் முழுவதையும் விசாரணை செய்வதா லுண்டாகும் * பரிசிரம நிவிர்த்தியின்பொருட்டு இக்கீதா சாஸ்திரத்தின் சாரார்த்தங்களைத் தொகுத்துக் கூறுகின்றேன்கேள்: நீ, 'இந்தப் பகவான் கிருபைசெய்யின் நீங்காத தீமைகளு முண்டோ?' என்று நிச்சயித்து வாக்காற் றுதித்தலினாலும், மனத்தாற் சிந்தித்தலினாலும், பரமேசுரனான என்னையன்றி வேறொரு தெய்வத்தையு மறிந்திலை; ஆதலினால், எவர்களாலு மறியப்படாத மிக்க இரகசியமாகிய மேற்கூறிய கீதாசாஸ்திர சாரார்த்தங்களைத் தொகுத்து மீண்டும் உரைக்கத் துணிந்தேன்; இவற்றை உறுதியாக மனத்திற் பற்றுவாய்:

அருச்சுனா! நீ, வாசுதேவனான என்னையே நினைந்தெழும்படி, உன்னுடைய மனத்தை என்னிடத்தே தொடர்ந்த விருப்பமுடையதாக வைத்து, எக்காலத்திலும் என்னையே சிந்தனை செய்துகொண்டிருப்பாய்; இன்னும், என்னிடத்துத் தொடர்ந்த விருப்பமுள்ள பக்தியானது உனக்குக்

* பரிசிரமம் - பிரயாசை; வருத்தம்.

கிடைத்தற்பொருட்டு எக்காலத்திலும் என்னிடத்தே பூஜாபராயணனாவாய்; பூஜைக்குரிய சாமக்கிரிகைகள் கிடைக்காவிடில் அந்தப் பக்தியானது கிடைத்தற்பொருட்டுச் செய்யத்தக்க வுபாயமென்னையெனின், பரமேசுரனான என்னையே சற்குரு மூர்த்தியாகக் கொண்டு, முன்னே பன்னிரண்டாமத்தியாயத்திற் கூறியபடி நவவிதமான பாகவத தர்மங்களால் வழிபடுவாய்; எப்போதும் நீ இப்பாகவத தர்மங்களையனுஷ்டிக்கில், என்னிடத்துத் தொடர்ந்த விருப்பம்பொருந்திய பக்தியுடையவனாய், வேதாந்தவாக்கியங்களா லுண்டாக்கப்பட்ட ஆன்மசாட்சாத்காரத்தால் அபேதரூபமாக அத்விதீய நிர்க்குண பரப்பிரம்மரூபனான என்னையே வந்தடைவாய். இது சத்தியம்! சத்தியம்!! ஒளி பொருந்திய வேலாயுதத்தையுடைய அருச்சுனா! இன்னும், முன்னுரைத்த இரகசியத்தைக் காட்டினும் அதிகமான இரகசியத்தையுங் கூறுகிறேன் கேள்: 'தர்மம், அதர்மம் என்னும் இரண்டுவகையினையுடையனவாகிய வேறுவேறான சர்வகர்மங்களையும் இனிப் பொருந்தேன்,' என்று, அவற்றின் விருப்பமொழிய அவற்றைப் பரித்தியாகஞ் செய்து, மாயையினாலே மறைத்தற்கரிய அத்துவிதீயனான என்னையே, 'நானே நீ,' என்று சரணமடையக்கடவாய்; இவ்வாறு என்னைச் சரணமடைவாயானால், நீ ஜனனரூபமாகிய கடலைத் தாண்டிக் கரையேறுமாறு நான் உனக்குக் கைகொடுத் தாதரித்துக் கிருபைசெய்வேன்; ஆதலால், நீ சோகத்தை விட்டொழிவாயாக.

அருச்சுனா! உனக் குபதேசித்த இக் கீதாசாஸ்திரத்தின் இரகசியார்த்தங்களை, இந்திரியநிக்கிரகரூபமான அல்லது, சுதர்மரூபமான தவமில்லாதவர்க்கும், எல்லாத் தோஷங்களையும் நிவிர்த்தித்துப் பிரமான்ம ஐக்கியஞானத்தை உபதேசித் தருளுகின்ற குருவழிபா டில்லாதவர்க்கும், என்னிடத் தசூயையினால் துவேஷ மனமுடைய அறிவிலிகட்கும், என்னிடத் தன்பைச் செலுத்தி என்னை நினையாத தன்மை யுடையவர்க்கும் அச்சமறத் தெரிந்துபதேசித்தல்



கூடாது. இவ்வா றுபதேசித்தல் கூடாதென்னும் விஷயத்தை நீ தெரிந்துகொள்வாயாக. இன்னும் சகலமான இரகசியார்த்தங்களிலும் பரமரகசியமான இக்கீதார்த்தத்தைப் பரமேசுரனான என்னுடைய பக்தர்களுக்கு மனத்திற் பொருந்தும்படி தமது வாக்காற் போதித்தறிவிப்பவர், என்னிடத்திற் பரமமான பக்திநிறைந்து வாசுதேவனான என்னையே அடைந்து ஜனன மரணரூப சம்சாரத்தினின்றும் நீங்கிச் சீக்கிரம் முத்தராவர்; நல்ல மனிதர்களுள்ளே பரமேசுரனான எனக்குச் சந்தோஷமாகிய நன்மையைச் செய்கின்றவரும் அவரே; இக்கீதையை மேற்கூறியபடி என்னுடைய அன்பர்க்கு உபதேசியாதவர், வர்த்தமான காலத்திலும் என்னைச் சந்தோஷப்படுத்துகிறவர்க ளாகமாட்டார்கள்; இனிமேலும் என்னைச் சந்தோஷப்படுத்துகிறவர்க ளாகமாட்டார்கள். அருச்சுனா! இன்னும் நாமிருவரும் பேசிக்கொண்ட வினாவிடைரூபமாகியதும், தர்மரூபமாகியதுமான இக்கீதாசாஸ்திரத்தைக் குருமுகமாகப் பெற்று, நியாயமாகப் படிக்கும் அதிகாரி புருஷன், நான்கா மத்தியாயத்திற் கூறிய திரவிய எக்ஞமுதலிய சர்வ எக்ஞங்களினுஞ் சிரேஷ்டமாகிய ஞான எக்ஞத்தால் பரமேசுரனான என்னையே ஆராதனஞ் செய்பவனாவன்; அவனை இவ்வாறு ஆராதனஞ் செய்பவனாகவே நான் கருதுவேன்; படிப்பவன்பேரில் கொள்ளும் அசூயை விடுத்து, ஆஸ்திகபுத்திரூபமான சிரத்தையோடும் இக்கீதாசாஸ்திரத்தைக் கேட்பவனும், சர்வ பாவங்களினின்றும் விடுபட்டவனாய், அசுவமேத முதலிய புண்ணிய கர்மங்களைச் செய்பவரா லடையப்படும் உத்தம லோகங்களை யடைவன். இக் கீதாசாஸ்திரத்தை மேற்கூறியபடி அர்த்தஞானமில்லாதவனாய்க் கேவலம் அக்ஷரமாத்திரத்தைக் கேட்கும் புருஷனும் உத்தம லோகத்தை யடைவானானால், இதனை அர்த்தஞானத்தோடு கேட்கும் புருஷன் அவ்வுத்தம லோகத்தை யடைவா னென்பதைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? அவன் இதனால் மேலான பதவியை அடைவா னென்பதில் எவ்வித சந்தேகமுமில்லை.

அருச்சுனா! பிரமவித்தியாரூபமான எனது கீதையினால், பரமேசுரனான நான் உபதேசித்த ஞானத்தாலே உனக்கு அநான்மரூபமான தேகாதிகளை ஆன்மாவாகக் கருதும் புத்தியும், சுதர்மரூபமான யுத்தத்தை அதர்மமாகக் கருதும் புத்தியும் ஏற்படுவதற்குக் காரணமாகிய அஞ்ஞான மயக்கங் கெட்டதோ? என்னால் உபதேசிக்கப்பட்ட இந்த அர்த்தங்களை யெல்லாம் ஏகாக்கிரசித்தத்தால் நிச்சயஞ் செய்தனையோ?" என்று புன்னகைகொண் டுரைத்தருளினார்.

ஸ்ரீ கிருஷ்ணபகவான் இவ்வாறு கூறவே, அருச்சுனனவன் மிகவும் மகிழ்ச்சியடைந்து அவர் திருமுகத்தை நோக்கி, "அரசனே! எனது மாயனே! மதுசூதனா! நான்கு வேதங்களுக்கும் கர்த்தாவே! தேவரீர் உபதேசித்தருளிய சிறந்த வாக்கியங்களால் எனக் கேற்பட்டிருந்த எல்லாக் குறைகளும் நீங்கின; உமது பக்தனான எனக்கு இனிச் செய்யவேண்டியதும், அறியவேண்டியதும் இலவாயின; இன்னும் நீர் பூமி முழுவதையும் திருவமுது செய்த உமது திருவாக்கைத் திறந்து, அடியேன் பிழைத்தற்பொருட்டு முன்னே கிருபையினா லுரைத்தருளிய கீதாசாஸ்திரத்தினாலே நான் எல்லாச் சமுசயங்களும், எல்லா மயக்கங்களும் நீங்கும்படி அவற்றை ஒழித்து ஆன்மரூபமான என்னுடைய அறிவையும் அடையப்பெற்றேன்; இனி, நான் எனது ஜீவனுள்ளபரியந்தம் உமது கட்டளையையே நிறைவேற்றுதல் எனக்குரியதாம்; படத்தையுடைய ஆதிசேஷன்மீது சந்தோஷமாக அறிதுயிலமரும் ஸ்ரீ பகவானே! நீர் அநாதிகாலந் தொடங்கி, உலகங்களையும், இவ்வுலகங்களிற் பொருந்தியிருக்கும் பிரமாமுதல் ஸ்தம்பபரியந்தமான பிராணிகளெல்லாவற்றையும் சிருஷ்டிப்பதும் சம்மரிப்பதுமாகிய இவற்றை உண்மையாக ஆராயின், இவையெல்லாம் நீர் விளையாடுஞ் செய்கைகளென்றே விளங்குகின்றன; அழகிய பெருமை பொருந்திய சோதியே! நிர்மலரூபரே! உம்முடைய கிருபையினாலே அளவிடுதற் கரிதாகிய ஜனனமாகிய சமுத்திரத்தைக் கடந்து கரையேறினேன்; என்னை அநாதிகாலந்



தொடங்கிப் பந்தித்துவந்த மகா மாயாமோகமானது கெட்டு நஷ்டமாய்விட்டது; என்னுடைய கடவுளே! இனித் தேவரீர் ஆக்ஞாபித்த ஆக்ஞையேயல்லாமல் வேறே அடியேன் செய்யத்தக்கதுண்டோ? இல்லை; அநாதிகாலந் தொடங்கி என்னைப் பந்தித்த ஜனனமாகிய பெரிய விலங்கை முறித்தொழித்து, என்னுடைய பெரிய அறியாமையாகிய வியாதியைத் தணித்த இறைவரே! எனக்குத் தக்கதாக அல்லது தகாததாகச் சுருதிகள் நிச்சயித்த வலிமைபொருந்திய யுத்தத்தை, 'ஆரம்பிப்பாய்,' என்று தேவரீர் இவ்விடத்து ஆக்ஞாபித்த ஆக்ஞையையே இனி நான் செய்யக்கடவேன்,' என்று கூறி யுத்தஞ் செய்வதற் குடன்பட்டான்,'" என்பதாக வுரைத்தார்.

இவ்வாறு சஞ்சயர் கூறவே திருதராஷ்டிரன் அவரை நோக்கி, "சஞ்சயரே! ஸ்ரீ கிருஷ்ணபகவானும், அருச்சுனனும் யுத்த பூமியிலிருந்து, ஒருவரிடத் தொருவர் மகிழ்ச்சியடைந்து பேசிக்கொண்ட பரம இரகசியமான இந்த விஷயங்களை யெல்லாம் நீர் இங்கிருந்தபடியே எப்படி அறிந்தீர்?" என்று வினவினான். இவ்வாறு அவன் வினவியமாத்திரத்தில் சஞ்சயர் கண்ணில்லாதவனாகிய அத்திருதராஷ்டிரனை நோக்கி, "மன்னனே! உம்முடைய வினாவுக்கு விடை கூறுகின்றேன் கேளும்: ஸ்ரீ வேதவியாசருடைய மெய்ம்மையாகிய கிருபைபை நான் மிகவும் உடையேனாதலின், அவருடைய கிருபையின் மகிமையினாலேயே இங்கிருந்தபடியே அந்தக் கிருஷ்ணார்ச்சுன சம்வாதத்தை உணர்ந்தேன்; அந்த வியாசபகவானுடைய கிருபை யில்லாவிடில் வேறுபாயத்தைக்கொண்டு இவ்விஷயங்களை யறிதல் கூடுமோ? ஒருபோது மியலாது; திருதராஷ்டிரரே! அந்தக் கிருஷ்ணார்ச்சுனாது புண்ணியரூபமான அற்புத சம்வாதத்தை நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் அதிசயமாகிய மனமகிழ்ச்சியும், சரீரப் புளகமும் அடிக்கடி யுண்டாகின்றன; அந்தக் கிருஷ்ணபகவான், தான் எல்லாமாகி யிருக்கின்ற தன்மையை அருச்சுனனுக்கு விரித்துக் காட்டும்பொருட் டெடுத்த மிகவும் அற்புதமான

அந்த விசுவரூபத்தை எண்ணும்போதெல்லாம் என் சிந்தையுள்ளே சொல்லுதற்கரிய மகா சந்தோஷமானது அடிக்கடி யுண்டாகின்றது,'' என்று கூறிப் பின்னரும் அவனைப் பார்த்து, ''துரியோதனன் முதலிய நூறுபுத்திரர்க்கும் பிதாவாகிய திருதராஷ்டிரரே! நீர் 'என் புத்திரராகிய துரியோதனன் முதலியோர்க்கு ஜயமுண்டாகுமா அல்லது பாண்டவர்க்கு வெற்றி யுண்டாகுமா?' என்று வினவக்கூடும்; அதற்கு விடையாக ஜயத்தின் விவரத்தையுங் கூறுகிறேன் கேட்பீராக: பிறரை வஞ்சிக்கும் வஞ்சனையையே கண்ணாகக் கொண்டு வாழ்கின்ற உம்முடைய புத்திரராகிய துரியோதனாதியரைப் பார்க்கிலும் பாண்டு புத்திரர்களே வலிமையுடையவராவர்; இராஜ்ஜியலட்சுமியும், தர்மமும், நியாயமும், சத்துரு ஜயமும், கீர்த்தியும் ஆகிய இவையெல்லாம் பொருந்துதற்கரிய மாயையைப்பண்ணும் ஸ்ரீ கிருஷ்ணபகவானும், சத்தியத்தையும் தர்மத்தையும் விட்டு நீங்காத அருச்சுனனும் ஆகிய இருவரும் சேர்ந்திருக்கின்ற பக்கத்திலேயே உண்டாகுமென்பது நிச்சயம்; ஆதலால், நீர் உம்முடைய புத்திரர்க்கு வெற்றியுண்டாகுமென்னும் வீணாசையையொழித்து, தர்மர் முதலிய பாண்டவர்களோடு சேர்வீராக,'' என்று கூறி முடித்தார்.

இந்தக் கீதார்த்த இரகசியங்களை, இப்படிச் * சோபானக் கிரமமாக உபதேசித்தற்கு, ஒருவராலெடுக்கமுடியாத கோவர்த்தன கிரியைக் குடையாக வெடுத்துப் பசுக்களையும் கோபாலர்களையும் இரட்சித்தருளிய மேகவண்ணராகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானே வல்லவர்; பின்னர் அதைச் சுலோகரூபத்தால் விளக்குதற்கு இந்திரியங்களை வென்றவராகிய வியாசபகவானே வல்லவர்; அவ்விருவரொழிந்த மற்றவருக்கு இரகசியங்களுள்ளே மிகவும் இரகசியமான இக்கீதையை விளக்கமாக எழுதுதலும் சொல்லுதலுங் கூடுமோ? கூடா. ஆயினும், உலகமுய்தற்பொருட்டுப் பெருமைபொருந்திய அலையையுடைய சமுத்திரஞ் சூழ்ந்த இவ்வுலகத்தி

* சோபானம் – படி.



னிடமாக ஸ்ரீ வியாசபகவானுக்குப் பிற்காலத்தில் வேதசாஸ்திரங்களின் முடிவைப் பாஷியரூபமான வியாக்கியானத்தால் விருத்தியாகும்படி செய்த சமர்த்தரும், குற்றமற்ற சம்பிரதாய நெறியை யுணர்ந்த கோவிந்தயோகீந்திரருடைய பாததாமரையைப்பற்றி நிரதிசயானந்தரூபமான மோக்ஷசுகத்தை யாவர்க்கு முண்டாக்கியவருமாகிய பூஜ்ய சங்கரபகவத்பாதாசாரியரென்னும் குருவினுடைய கிருபையினால் ஸ்ரீ பட்டனாரென்பவர் பெரிதாகிய தர்மரூபமான இக் கீதாசாஸ்திரத்தை வடமொழிக் கிணங்கத் தமிழில் செய்யுள்ரூபமாக மொழிபெயர்த்தருளினார். அச் செய்யுட்களைத் தழுவி யான் இக் கீதாசாஸ்திரத்தை வசனமாக எழுதி முடித்தனன். இதனைப் பக்தி சிரத்தையோடு படிப்போருங் கேட்போருமாகிய உத்தமர்கள் ஸ்ரீ பகவானருளால் இகலோக பரலோக சுகங்களை யடைந்து முடிவில் முத்தியாகிய நித்திய சுகத்தை யடைவார்கள். சுபம்.

பதினெட்டாவது

சஞ்சேபவத்தியாயம் முற்றுப்பெற்றது.

(இதனோடு ஞானகாண்டம் முடிவுபெற்றது.)

---

## வாழ்த்து.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மாதவன் வாழி யன்னோன் வழுத்திய கீதை வாழி
ஏதமெட் டுணையு மில்லா விசைபெறு விசையன் வாழி
நீதியோ டிதனை யிங்கு நிகழ்த்தினோர் கேட்டோர் வாழி
ஓதுவித் தோர்கள் வாழி யொப்பிலாப் பெரியோர் வாழி.

## ஸ்ரீ பகவத்கீதை வசனம்

முற்றுப்பெற்றது.

---

# ஸ்ரீ பகவத்கீதாமான்மியம்.

எல்லா உபநிடதங்களும் பசுக்களாம்; கறக்கிறவர் ஸ்ரீ கிருஷ்ணபகவானவர்; கன்று அருச்சுனனவன்; பெருமை பொருந்திய தேவாமிர்தத்தை நிகர்த்த இக்கீதையானது பாலாம்; இதனை யனுபவிக்கிறவன் பிரமசிஞ்ஞாசையுள்ள விவேகியாவன்.

பயங்கர மிகுந்த ஜனன மரணரூபமான சமுசாரசாகரத்தைக் கடத்தற்கு எவன் இச்சிப்பானோ அவன், இந்தக் கீதையாகிய தோணியின் சகாயத்தால் இலகுவாக அச்சமுசாரக் கடலைக் கடந்து கரையேறுவான்.

சுத்த ஜலத்தில் ஸ்நானஞ் செய்தலானது, மனிதர்களுக்கு நாடோறும் சரீரத்திலுள்ள அழுக்கைப் போக்கும்; ஒரு சமயம் இந்தக் கீதாசாஸ்திரத்தை யுணர்தலாகிய ஜலஸ்நானமானது பிறப்பிறப்பு வடிவமான சமுசார மலத்தைப் போக்கும். ஆதலால், இக்கீதையானது மிக்க மகிமையுடையதாம்.

ஒரு சமயம் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அருச்சுனனை நோக்கி, "விசையா! எங்கு இந்தக் கீதாசாஸ்திரத்தை ஆராய்தலும், படித்தலும், படிக்கச் செய்தலும், கேட்டலும் நடக்குமோ அங்கு நான் எக்காலத்தும் வாசஞ்செய்வேன், இது சத்தியம்," என்று இக்கீதையின் உயர்வைப்பற்றிக் கூறியருளியிருக்கின்றார்.

இன்னும் வராகபுராணத்தில் தொண்ணூறு சுலோகங்களால் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கும் இக்கீதா மான்மியத்தைச் சுருக்கிச் சொல்லுமாறு சௌனகரென்னு முனிவர், சூதமகாரிஷியிடம் வேண்டிக் கேட்டகாலத்தில் அவர் சௌனகரை நோக்கி, "முனிவரே! நான் வியாசரிடத்திற் கேட்டபடியே கீதாமான்மியத்தைக் கூறுகிறேன் கேட்பீ



ராக: நீர் கேட்ட இந்தக் கீதாமான்மியமானது பெருமையிற் சிறந்ததும், இரகசியமானதும், உத்தமமானதுமாம்; இதன் பெருமை எவராலு முரைத்தற் கரியதாம்; ஆயினும், நான் கேட்டபிரகாரம் இதிற் சிறிது கூறுகிறேன்: ஸ்ரீ கிருஷ்ண பகவானால் அருச்சுனனுக் குபதேசித்தருளிய இக் கீதையானது தேவாமிர்தத்திற் கொப்பானது; சமுசாரசாகரத்தைத் தாண்டுவதற்கு ஒரு தெப்பம்போன்றது; இதனை விசுவாசத்துடன் கேளாதவன் ஊர்ப்பன்றிக்குச் சமானமாவன்; இக்கீதையைப் பாராயணஞ் செய்கிறவன் மோக்ஷத்தை யடைவன்; ஒருவன் இதனைப் பாராயணஞ் செய்வது எல்லா வேதங்களையும் சாஸ்திரங்களையும் படித்ததற்குச் சமானமாம்; இன்னும் மனிதர் இந்தக் கீதையிற் பாதிப்பாகத்தைப் படித்தால் கோதானபலனும், மூன்றிலொரு பாகத்தைப் படித்தால் சோமயாகபலனும், ஆறிலொரு பாகத்தைப் படித்தால் கெங்கா ஸ்நானபலனும், ஒருதினத்தில் இரண்டத்தியாயங்களைப் படித்தால் இந்திரலோகத்தில் கற்பகால வாசமும், ஓத்தியாயம் வாசித்தால் சிவகணமாகி உருத்திரலோகத்தில் நெடுநாள் வசித்தலும், ஓத்தியாயத்திற் பாதி அல்லது நான்கிலொருபாகம் படித்தால் நீண்ட நாள்வரை சூரியலோகத்தில் வசித்தலும், பத்து சுலோகங்களையாவது ஏழு சுலோகங்களையாவது, ஐந்து சுலோகங்களையாவது, நான்கு சுலோகங்களையாவது, மூன்று சுலோகங்களையாவது, இரண்டு சுலோகங்களையாவது, ஒரு சுலோகத்தையாவது, அரைச் சுலோகத்தையாவது படித்தால் பத்துக் கோடிவருஷங்கள்வரை சந்திரலோகத்தில் வசித்தலும் அவர்க்குச் சித்திக்கும்; மரணகாலத்தில் இக்கீதையின் அர்த்தத்தைச் சிந்திப்பவர்களும், இதன் பாராயண சப்தத்தைக் கேட்பவர்களும் எத்தகையரா யிருந்தாலும் மோக்ஷத்தையே அடைவார்கள்; மனிதர் கிரியைகளை நடத்தும்போது இக்கீதையைப் பாராயணஞ் செய்தால் அவர்க்குச் சகல குற்றங்களும் நீங்கும்; சிரார்த்தகாலத்தில் பிதிர்க்களை யுத்தேசித்து இதனைப் படித்தால் அந்தப் பிதிர்க்களுக்குப் பாவவிமோசன முண்

டாம்; இக் கீதாபுத்தகங்களை அன்போடு பிறருக்குத் தானஞ்
செய்வோர்க்கு அளவிடக்கூடாத நன்மைகளுண்டாம்; பிரா
மணர் முதலிய நான்கு வருணத்திலும் பிறந்து மனித
தேகத்தை யடைந்தவர்கள் கீதையைச் சிரவண படனஞ்
செய்யாவிட்டால் அவர்கள் அமிர்தத்தை விட்டு விஷத்தைப்
பானஞ் செய்பவராவர்; ஞானமானது எவ்விடத்தும் பூரண
மானதாகையால் அதை விளக்கிக் காட்டுகிற கீதையும் எங்
கும் சமமானதாம்; கீதையிலும் கீதார்த்தத்திலும் அருவை
கொண்டு அவற்றை நிந்தனை செய்வோர்க்கு நரகமே நிச்சய
மாகக் கிடைக்கும்; சமீபத்தில் வாசிக்கிற கீதையை அன்
போடு கேளாதவன் நாய், பன்றி முதலியவற்றின் அநேக
யோனிகளிற் பிறப்பான்," என்று இக் கீதாமான்மியத்தை
விளக்கிக் கூறியிருக்கின்றனர். இவ்வாறு இவர்கள் கூறி
யிருப்பதனுல் இக்கீதையின் மகிமை இவ்வளவென்பது நன்கு
விளங்கும். இத்தகைய சிறப்புவாய்ந்த இக்கீதையைப் பாரா
யணஞ் செய்ததால் பாவ நீங்கப்பெற்று மோக்ஷ மடைந்தார்
பலர். அவர்கள் அவ்வாறு மோக்ஷமடைந்த விவரங்களை, இந்
தப் பகவத்கீதை வசனத்தைப் படிப்போர் அறியவேண்டி
யது அவசியமாதலின், சைவபுராணங்களுள் ஒன்ருகிய பத்ம
புராணத்தில் இலட்சுமிக்கு விஷ்ணு சொன்னபடி பரமேசு
வரன் பார்வதிக் குரைத்தருளியதாக எழுதப்பெற்றிருக்கும்
அவ்விவரங்களை யனுசரித்த சில விஷயங்களையும், வேறு சில
விஷயங்களையும் சுருக்கி யெழுதுவாம்; அவையாவன :

முற்காலத்தில் சுதன்மா என்னும் பெயரினையுடைய
ஒரு வேதியன் தனக்குரிய நற்கருமங்களைவிட்டு மதுபானஞ்
செய்தல் முதலிய அதர்மங்களை நடத்திக்கொண்டிருந்து
பின்னர்த் தேகத்தை விட்டு நீங்கி யமலோகஞ் சென்று,
அங்கே பலவிதமான நரகங்களை யனுபவித்து அதன்மேல்
எருதாகப் பிறந்தான். அங்ஙனம் பிறந்திருக்கும்போது ஒரு
முடவன் அதனை விலைக்கு வாங்கி, அதற்கு நிர்த்தனம் முத
லிய பல வித்தைகளைக் கற்றுக்கொடுத்து அதனைப் பற்பல



விடங்களுக்குக் கொண்டு சென்று ஆட்டுவித்து, வேடிக்கை
பார்ப்போரிடம் நற்பரிசு பெற்று, அதன்மூலம் ஜீவித்துவந்
தான்; அவ்வெருதும் அவனிடத்திலேயே பதினைந்து வருடங்
கள்வரை தங்கியிருந்தது. இப்படியிருக்கும்போது ஒருநாள்
வேடிக்கை செய்யுங்காலத்தில் அவ்வெருது தவறி விழுந்து
குற்றுயிராகக்கிடந்து அவதிப்பட்டது; அத்தருணத்தில் அங்
குக் கூடியிருந்தவர்கள் இரக்கமுற்றுத் தாங்கள் செய்த
புண்ணியங்களிற் சிறிது சிறிது அவ்வெருதிற்குக் கொடுத்
தார்கள்; அவர்களுள் ஒரு தாசிமாத்திரம் தன் புண்ணியத்
தில் அதிகமான பாகத்தைக் கொடுத்தாள். பின்னர் இப்
புண்ணியங்களைப் பெற்றுக்கொண்டு அவ்வெருது தேகத்தை
விட்டு யமனுலகடைந்தது. அவ்வாறடைந்தவுடன் யமன் அவ்
வெருதை நோக்கி, "தாசி கொடுக்க நீ பெற்றுக்கொண்ட
புண்ணிய விசேஷத்தினாலே புண்ணியாத்மாவாயினை; ஆத
லின், உனக்கிங்கே நரகவாதனையில்லை," என்று கூறி நரக
வாதனை யடைவதினின்றும் அதனை நீக்கினன்; பின்பு அது
பூலோகத்திலே பிராமணகுலத்தில் பூர்வஞானத்துடனே பிரா
மணனாகப் பிறந்தது. அவ்வாறு பிறந்த அப்பிராமணன் நிஷ்
டையோடு கூடியிருந்து முன்னே தனக்கு மிகுந்த புண்ணி
யத்தைக்கொடுத்த தாசியிடஞ்சென்று, "நங்கையே! நீ எனக்
குக் கொடுத்த புண்ணிய விசேஷத்தினாலே எருதாயிருந்த
நான் வேதியனானேன்; ஆதலால், அஃதின்னவிதமான புண்
ணியமென்பதை நான் தெரிந்துகொள்ள விரும்புகின்றேன்;
அப்புண்ணியத்தின் தன்மையை எனக்குக் கூறவேண்டும்,"
என்று கேட்டான். அப்போது அத்தாசி தன்னிடமிருந்த
கிளியைச் சுட்டிக்காட்டி அவ்வேதியனை நோக்கி, "அந்த
ணரே! அப் புண்ணியத்தின் விவரம் இக்கிளிக்குத் தெரியும்;
ஆதலால், இதன்வாக்கினால் அதனைத் தெரிந்துகொள்வீராக,"
என்றுரைத்து அப்புண்ணிய விசேஷத்தைத் தெரிவிக்கும்
படி அக்கிளிக்குக் கட்டளையிட்டாள்; அதன்மேல் அக்கிளி
யானது அவளை நோக்கி, "பெண்மணியே! நான் முந்தின
ஜன்மத்தில்மனிதனாயிருந்து புராணம்படித்தவித்தியாகர்வத்

தினாலே பெரியோரை நிந்தித்து அத்தோஷத்தால் கிளியாகப் பிறந்து ஒரு வேதியன் வீட்டில் வளர்ந்தேன்; அக்காலத்தில் ஆங்குள்ளவர்கள் கீதையின் முதலத்தியாயத்தைப் படித்துவந்தார்கள்; அதை நான் கேட்டுவந்ததால் அஃதெனக்குப் பாடமாயிற்று; அப்படி அதனை நான் பாடஞ் செய்துகொண் டிருக்கும்போது ஒரு வேடன் என்னைத் திருடிக்கொண்டுவந்து உன்னிடம் விற்றான்; நான் அவ்வாறு உன்னிடம் விலையானபின் எனக்குப் பாடமாயிருந்த கீதையின் முதலத்தியாயத்தை இங்குப் படித்துவந்தேன்; அதனால் உனக்கு மிக்க புண்ணியம் கூடிற்று; அப் புண்ணியத்தின் பாகத்தையே நீ இவ் வேதியர்க்குக் கொடுத்தாய்; நான் இப்பொழுதும் அதனைக் கூறுகிறேன்; நீயும் இந்த வேதியரும் கேட்பீராக,” என்று மேற்கூறிய கீதையின் முதலத்தியாயத்தைப்பாராயணஞ்செய்தது; அவ்வாறு செய்யவே அதைக் கேட்டு அந்த வேதியனும், தாசியும் மோக்ஷத்தை யடைந்தார்கள்; கிளியும் முத்திபெற்றது.

கோதாவரி தீரத்திலே தேவசன்மா என்னும் பெயரினையுடைய ஒரு பிராமணன், நிஷ்டை யுடையவனாயும், நற்கருமங்களைச் செய்பவனாயு மிருந்தான்; அப்படி யிருக்கும்போது அவன் ஒரு தினத்தில் ஞானசன்னியாசி யொருவர்க்கு உணவளித்து, அவரிடம், “எனக்கு ஞானோபதேசஞ் செய்யவேண்டும்,” என்று கேட்டனன். அதற்கவர், “தென்றிசையில் நதிபாறையிலே மித்திரவந்தன் என்னும் ஓரிடையனிருக்கிறான்; அவனிடம் செல்வாயானால் உனதெண்ணம் நிறைவேறும்,” என்று கூற அவ்வேதியன் அவ்வாறே அவ்விடையனிடஞ் சென்று தன்னுடைய எண்ணத்தைத் தெரிவித்தான். அப்போது இடையன் அந்தணனை நோக்கி, “பிராமண சிரேஷ்ட! முன்னே நிஷ்டனாயிருந்த ஒரு பிராமணனுடைய மனைவி ஒரு சண்டாளனைச் சேர்ந்து, பிணியுடையவளாகித் தேகத்தை விட்டு நீங்கி அப்பாவத்தினால் அநேகம் நரகங்களை யனுபவித்துப் பின்னர் பைசாசமாகப் பிறந்து



தனக்கேற்பட்ட பசிக் கொடுமையினாலே, மிக்க நோயுடையவனாய்க் கிடந்த ஒரு வேடனுடைய தேகத்தைப் பிடுங்கித் தின்ன அவ்வேதனையால் அவனிறந்தனன். பின்னர்ப் பைசாசமாயிருந்த அம்மாது ஆடாகப் பிறந்து என்னிடமடைந்தாள். நான் அந்த ஆட்டை மேய்த்துக் காப்பாற்றிவந்தேன்; அப்படி யிருக்கும்போது முன்னே அம்மாதா லிறந்த வேடன் புலியாகப் பிறந்தான்; அங்ஙனம் பிறந்த அப்புலியானது ஒருதினம் வந்து என்னிடமிருந்த அந்த ஆட்டைப் பழைய பகையினால் கொல்லத் துணிந்து துரத்திற்று; ஆடு மிகுந்த வேகங்கொண் டோடிற்று; அவ்வாறு இரண்டும் ஓடும்போது யானும் பின் தொடர்ந்து சென்றேன்; அதன்மேல் அந்த ஆடானது ஓரிடத்திற் போய் நின்று, புலியைப் பார்த்துப் பயமின்றி, ‘நீ என்னைப் புசிப்பாயாக,’ என்று சொல்லப், புலிக்கு முந்தின பகையில்லாமற் போனபடியால், அது, ‘உன்னைக் கொல்ல என் மனம் இப்போது இசையவில்லை,’ என்று அவ்வாட்டை நோக்கிக் கூறிற்று. பின்னர் அவ்விரண்டும் அவ்விடத்திற் சென்றவுடன் தங்கள் பகை நீங்கியதைப்பற்றி ஆச்சரியமுற்று, என்னை நோக்கி, ‘நாங்கள் இங்கு வந்தவுடன் எங்கள் பகை நீங்கியதற்குக் காரணமென்ன?’ என்று வினவின; அப்போது எனக்கொன்றும் தோற்றாமையால் நான் சந்தேகங்கொண்டு நின்றேன். அத்தருணத்தில் அங்கே ஒரு குரங்கு எதிர்ப்பட்டது; அதனிடத்து அவ்விசேஷத்தைப்பற்றி நான் கேட்க அது, அங்குள்ள ஒரு லிங்கத்தையும் கற்பாறையையும் சுட்டிக்காட்டி, ‘இது பிரமப் பிரதிஷ்டை லிங்கம்; முற்காலத்தில் ஒரு பிராமணன் இதற்குப் பூஜை செய்துகொண்டு வந்தான்; அப்போது அவன் வீட்டுக்கு அதிதியாக ஒரு பிராமணன் வந்தான்; மேற்கூறிய பூசகன் அவனுக்குப் பூசனை புரிந்து அவனிடத்தில், ‘எனக்கு மோக்ஷங் கிடைக்கும்படியான மார்க்கத்தை உபதேசித்தருளவேண்டும்,’ என்று கேட்டான்; அவ்வாறு கேட்கவே அவன் ‘இந்தக் கற்பாறையில் கீதையின் இரண்டா மத்தியாயத்தை எழுதி இதனைப் பாராயணஞ் செய்

தால் மோக்ஷமுண்டாகும்,' என்று கூறிச் சென்றனன்; அப்படியே அவன் பாராயணம் பண்ணி மோக்ஷத்தை யடைந்தான்; இவ்விடம் அவன் சஞ்சரித்த விடமாதலால் அவனுடைய புண்ணிய விசேஷத்தால் இவற்றிற் கேற்பட்டிருந்த பகையில்லாமற் போயிற்று,' என்று கூறிற்று. அதன்மேல் நானும் அந்தக் கற்பாறையில் வரைந்துள்ள கீதை இரண்டாமத்தியாயத்தைப் பாராயணஞ் செய்து பிரமக்ஞான முடையவனானேன்; ஆதலால், நீயும் அங்குச் சென்று அதனைப் பாராயணம் பண்ணினால் உனதெண்ணம் நிறைவேறும்," என்று கூறி அக்கற்பாறையுள்ள விடத்தையுங் காட்டினான்; அதன்மேல் அந்தத் தேவசன்மாவென்னும் வேதியன் அவ்வாறே சென்று கீதையின் இரண்டாமத்தியாயத்தைப் பாராயணம் பண்ணி மோக்ஷமடைந்தான்.

செனஸ்தானத்திலே கௌசிக குலத்திற்பிறந்த சேட்டன் என்னும் பிராமணன் நற்கருமங்களை விட்டு வியாபாரஞ் செய்து தாசிநேய முடையனாய்ச் சூது, மதுபானம், வேட்டை முதலியவற்றை யனுசரித்து, அவற்றால் தரித்திரமடைந்து, பின்னர் சோமயாசியாகஞ் செய்தற் பொருட்டு வைத்திருந்த திரவிபத்தைக் கவர்ந்து பருவத ராச்சியஞ் சென்று கஸ்தூரி, சவரி முதலியவற்றின் வியாபாரஞ் செய்து வந்தான்; அங்ஙனம் அவன் வியாபாரம் நடத்தி வரும்போது ஒருதினம் ஓரிடத்திற்குப் பிரயாணமாய்ச் சென்று சூரியன் அஸ்தமித்தபடியால் வழிநடுவிலிருந்த ஒரு காட்டுக் குளக்கரையில் மரத்தடியிற் படுத்துறங்க, நடுராத்திரியில் ஒரு வேடன் வந்து அவனை வெட்டிக் கொன்றுவிட்டு அவனிடமிருந்த திரவியங்களை யெடுத்துக்கொண்டு போய்விட்டான்; அதன்மேல் வெட்டுப்பட்டிறந்த அப்பிராமணன் பைசாசமாய் அம்மரத்தடியிலேயே தங்கித் துக்கப்பட்டுக்கொண்டிருந்தான். அப்படி யிருக்கும்போது அவனுடைய புத்திரன் அவனைத் தேடிவர நடுவழியிற் சில மனிதர் அவனிறந்த சமாசாரத்தை அப்புத்திரனுக் கறிவித்தார்



கள். தந்தை யிறந்த சமாசாரத்தைக் கேட்கவே அப்பிராமணச் சிறுவன் துக்கமடைந்து, தன் தந்தைக்கு நற்கதியை யுண்டாக்கக் கருதிக் காசிக்கு யாத்திரையாகப் புறப்பட்டுச் சென்றான்; அவ்வாறு செல்லும்போது அவனுடைய தந்தை யிறந்த விடமாகிய அக்குளத்தை யடைந்து, அதிற் சந்தியாவந்தனஞ் செய்து, தன் தகப்பன் பைசாசமாய்த் தங்கியிருக்கும் அம்மரத்தின் கீழிருந்து கீதையின் மூன்றாமத்தியாயத்தைப் பாராயணம் பண்ணினான். அவ்வாறு செய்யவே அதன் மகிமையாலே பைசாசமாயிருந்த அவனுடைய தந்தைக்கு அப்பைசாசத் தன்மை நீங்கித் திவ்விய தேகமுண்டாயிற்று; உடனே அவனைப் புண்ணிய லோகத்திற் சேர்ப்பதற்காகத் தேவ விமானம் வந்தது. அதில் அவன் ஏறிப் புண்ணியலோகஞ் சென்றான். அப்படி அவன் செல்லும்போது தன் புத்திரனை நோக்கி, "புதல்வ! நீபாராயணஞ் செய்தகீதையின்மகிமையால் நான் நன்மையடைந்தேன்; என்னைப்போன்ற பாவிகளாயுள்ள நம் குலத்தார் பலர் நரகத்திற் கிடந்து வருந்துகின்றனர்; ஆதலின், அவர்கள் பொருட்டாகவும் இன்னும் இதனை நீ வழக்கப்படி பாராயணஞ் செய்து ஈசுவர தத்தம் பண்ணி அவர்களை நற்கதி யடையச்செய்வாயாக," என்று கூறிப் போயினன்; அதன்மேல் அப்பிராமணச் சிறுவன் தன்னுடைய தந்தை கட்டளைப்படியே விஷ்ணுவாலயத்திற் சென்றிருந்து இக்கீதையின் மூன்றாமத்தியாயத்தைப் பாராயணஞ் செய்த ஈசுவரதத்தம் பண்ணினான். அவ்வாறு செய்யவே நரகத்திற் கிடந்த அவன் குலத்தவர்கள் அதனின்றும் நீங்கிச் சுவர்க்கமடைந்தார்கள். யமன் அந்த விஷ்ணுவாலயத்திற்கு வந்து அங்குள்ள விஷ்ணுவைத் தரிசித்துச் சென்றான்.

கங்காதீரத்திலுள்ள காசிவிசுவேசர் சந்நிதியில் கீதையின் நான்காமத்தியாயம் பாராயணம் பண்ணிக்கொண்டிருந்த வரதன் என்னும் பிராமணன் ஒருதினம் சமீபத்திலுள்ள ஒரு முக்கிய ஸ்தலத்தைத் தரிசிக்கும்பொருட்டுச் சென்று வெயிலால் தகிக்கப்பட்டுச் சரீரங் கருகி யிளைத்து நடுவழியில்

நின்ற இரண்டு இலந்தைமரங்களின் மத்தியில் ஒருமரத்தில் தலையை வைத்துக்கொண்டும் மற்றொரு மரத்தில் காலாலுதைத்துக்கொண்டும்படுத்து அப்படுக்கையிற்கிடந்தபடியே தனக்குப் பாடமாயிருந்த கீதையின் நான்கா மத்தியாயத்தைப் பாராயணஞ் செய்துகொண்டே இளைப்பாறிப் பின்னர் அவ்விடத்தைவிட் டெழுந்துபோயினன். அவன் அவ்வாறு சென்றபின் ஐந்தாறு தினங்களுக் கப்பால் அம்மரங்க ளிரண்டும் பட்டு இரண்டு பிராமண ஸ்திரீகளாய்ப் பிறந்தன. அங்ஙனம் பிறந்த அப்பெண்கள் தாமாகவே வளர்ந்து அங்கோரிடத்திற் றங்கி யிருந்தார்கள். அவ்வாறு அவர்கள் தங்கி யிருந்தகாலத்தில் அவர்களுச்கு ஏழாவது வயது நடக்கும்போது, முன்னே அவர்கள் மரமா யிருக்குங்காலத்தில் கீதையின் நான்கா மத்தியாயத்தைப் பாராயணம் பண்ணிச் சென்ற வேதியன் அவர்களிடம் வந்தான். உடனே அப்பெண்க ளிருவரும் அவனுக்கு உணவளித்து அவனைநோக்கி "சுவாமி! நாங்கள் இலந்தை மரங்களா யிருந்தவர்கள்; உம்மாலே இவ்வாறு பெண்களாயினோம்," என்று கூறினார்கள். அவர்களுடைய வார்த்தைகளைக் கேட்டவுடனே அப்பிராமணன் அவர்களைநோக்கி, "பெண்களே! நீங்கள் அவ்வாறாதற்குக்காரணமியாது?" என்றுவினவத்தங்களுடையபூர்வவிருத்தாந்தந்தெரிந்த அவர்கள், அவ்வேதியனைநோக்கி, "சுவாமி! நாங்கள் முன்னே தேவ ஸ்திரீகளா யிருந்தவர்கள்; ஒரு காலத்தில் கோதாவரி தீரத்தில் ஓரந்தணன் வெயில், மழை, பனி, காற்று முதலியவைகளை யெல்லாம் சகித்துக்கொண்டு சிரேஷ்டமான தவசைப் பண்ணி, ஆத்மஞானபரனாகி, ஞானவிசாரணை செய்துகொண்டிருந்தான்; அப்படி யிருக்கும்போது இந்திரன் அவனுடைய தவசைக் கெடுத்து வரும்படி எங்களை யனுப்பினான்; நாங்கள் அவ்வாறே சென்று பலவிதமான ஆடல்பாடல்களைச் செய்து அவனுடைய தவத்தைக் கெடுக்க முயலுகையில் அவன் எங்களுடைய எண்ணத்தைத் தெரிந்துகோபங்கொண்டு, 'நீங்கள் இலந்தை மரங்களாகப் போவீராக,' என்று எங்களைச் சபித்தனன்; அங்ஙனம் சபிக்க



வே நாங்கள் பயந்து அவனைத் துதித்து, 'எங்கட்கு விமோசனமெப்போதுண்டாகும்?' என்று கேட்க, அவன், 'உங்கள் மத்தியிலே ஒரு பிராமணன் வந்து படுத்துக்கொண்டு பின்னொரு காலத்தில் கீதையின் நான்காமத்தியாயத்தைப் பாராயணம் பண்ணுவான்; அதைக்கேட்டு நீங்கள் பிராமணஸ்திரீகளாகப் பிறந்து ஞானம் பெற்று விஷ்ணு பதமடைவீர்கள்,' என்று சொன்னான். அவ்வாறே நீர் வந்து கீதை நான்கா மத்தியாயத்தைப் பாராயணஞ் செய்தீர்; அதன் மகிமையாலேயே இங்ஙனம் ஸ்திரீகளாயினோம்; ஆதலால், நீர் எங்களுக் கிப்போது அக்கீதையின் நான்காமத்தியாயத்தை உபதேசித்து அநுக்கிரகம் பண்ணி நாங்கள் விஷ்ணு பதத்தை யடையும்படிச் செய்வீராக," என்று கூறினார்கள். அவ்வாறே அவன் அவர்களுக்குக் கீதையின் நான்கா மத்தியாயத்தை உபதேசித்தான்; அதனை அவர்கள் பாராயணஞ் செய்து உடனே விஷ்ணு கணங்கள் விமானங் கொண்டுவர அதிலேறிச் சென்று விஷ்ணுபத மடைந்தார்கள்.

முற்காலத்தில் மத்துவதேசத்திற் பிறந்த பிராமணனொருவன், நித்திய கர்மானுஷ்டானங்களை விட்டுச் சங்கீத சாஸ்திரம் பயின்று, நிர்த்தனம், வாத்தியம் முதலியவைகளிற் றேர்ச்சியடைந் திருந்தான். அவனுடைய சங்கீதத் தேர்ச்சியையறிந்த அத்தேசத்தரசன், அவனுக்குச் சம்பளங்கொடுத்து அவனைத் தன்னுடைய சம்ஸ்தானத்தில் வைத்துக்கொள்ள, அவன் தாசி நேசனாகித் திரிந்தான். அப்போது அவனுடைய மனைவி அரசன்மேல் மோகங்கொண்டு அப்பிராமணனைக் கொன்றுவிட்டு அரசனைக்கூடி முடிவில் கிரந்திரோகத்தால் வருந்தி யிறந்தாள். பின்னர் அப்பிராமணனும்அப்பிராமணஸ்திரீயும்அநேகம் நரகங்களை யனுபவித்து அவருட் பிராமணன் பருந்தாகவும், பிராமணஸ்திரீ கிளியாகவும் பிறந்தார்கள். அவ்வாறு பிறந்த அப்பருந்தும் கிளியும் இவ்வுலகத்திற் சஞ்சரிக்கும்போது ஒருநாள் இரண்டும் சந்தித்தன. அத்தருணத்தில், பருந்தானது முன்

ஏற்பட்ட பகையினால் அக்கிளியை அடித்துக் கீழே வீழ்
த்தியது; அப்படி வீழ்த்தவே அக்கிளியானது, முன்னே
கீதையின் ஐந்தா மத்தியாயத்தைப் பாராயணம் பண்ணி
மோக்ஷமடைந்த ஒரு வேதியனுடைய தலையோடு ஜலம்
நிறைந்ததாய் அங்குக்கிடக்க அதில் வீழ்ந்திறந்தது; அச்சம
யத்திலேயே ஒரு வேடன்வந்து அப் பருந்தைக் கொல்ல
அதுவும் அத்தலையோட்டிலேயே வீழ்ந்திறந்தது. பின்னர்
அவ்விரண்டும் யமலோகம் செல்ல, யமன் அவைகளை நோக்கி,
"உங்களுக்கு எந்தப் புண்ணியலோகஞ்செல்ல இஷ்டமோ
அங்குச் செல்வீராக," என்று கூறினான். அப்போது அவ்
விரண்டும் யமனிடத்தில், "நாங்களோ மிகவும் பாவிகளா
யிருக்கின்றோம்; அப்படியிருந்தும் எங்களுக்கு எந்தப் புண்
ணிப வசத்தினால் நற்கதி யேற்பட்டது?" என்று வினவின.
அப்போது யமன், "முன்னே சாஸ்திரவிதிப்படி நற்கருமங்
களைச்செய்து கீதையின் ஐந்தா மத்தியாயத்தைப் பாராய
ணம்பண்ணி மோக்ஷமடைந்த ஒரு பிராமணனுடைய தலை
யோட்டில் நீங்கள் வீழ்ந்திறந்தீர்கள்; அதில் உங்கள் சரீரம்
பட்ட விசேஷத்தினால் இவ்வாறு நற்பதவி யேற்பட்டது,"
என்று கூறினன். அச்சமயத்தில் பிரமலோகம், விஷ்ணு
லோகம், சிவலோகம் ஆகிய மூன்றிடங்களிலுமிருந்து விமா
னங்கள் வந்தன. உடனே அவைகள் அவ்விமானங்களிலேறிக்
கிரமமாக அவ்வுலகங்களையடைந்து முடிவில் முத்திபெற்றன.

கோதாவரி தீரத்திலுள்ள அப்பியிஷ்டிணி புரத்திலே
சானசாரதி யென்னுமரசன் அநேகம் யாகங்கள்முதலிய நற்
கருமங்களைச் செய்து புண்ணிய புருஷனாய் அரசுபுரிந்து வந்
தான்; அப்போது, தேவர்கள் அவனுக்கு நற்கதியை உண்
டாக்க வேண்டுமென்னுங் கருத்துடையவர்களாய்ப் பல
அன்னங்களாக வடிவெடுத்து, அவ்வாசன் மேலுப்பரிகையில்
நிலவின் பிராகாசத்தி லிருக்கும்போது அவனுக்கு நேரே
ஆகாயமார்க்கத்திற் சென்றார்கள்; அங்ஙனஞ்செல்லும்போது
அவ்வன்னங்களில் பின் சென்ற அன்னமானது முன் சென்ற



அன்னத்தை நோக்கி, அரசனுக்குக் கேட்கும்படி, "இவ்
வரசனுக்குமுன்னே செல்லவேண்டாம்; அங்ஙனம்மரியாதை
யின்றி நாம் இவருடைய பிரகாசத்தில் செல்வது தகாது,"
என்று சொல்ல, உடனே முன்சென்ற அன்னமானது "நாம்
அவ்வாறு மரியாதை செய்வதற்கு இம்மன்னன் ரைக்கிய
னோ?" என்று சொல்லி ரைக்கியரென்னும் மகானுடைய
பெருமையை விளக்கிக்காட்டிச் சென்றது; அதன் வார்த்தை
யைக் கேட்டவுடன் அரசன், "அந்த ரைக்கியர் எப்படிப்
பட்ட பெருமையுடையவரோ? அவரை நாம் அடையவேண்
டும்," என்று கருதி உடனே தன் மந்திரியை அழைத்து
அன்னங் கூறிய வார்த்தைகளைச் சொல்லி அவரைத் தேடி
யழைத்துவரும்படி கட்டளையிட அப்படியே மந்திரி புறப்
பட்டு அநேக விடங்களிற்றேடி முடிவாக அவர் காஸ்மீர
தேசத்திலிருப்பதாகக் கேள்விப்பட்டு அங்குச் சென்று,
அவர், மணிபுரமென்னும் பட்டணத்தில் மாணிக்கவீசுரர்
சமீபத்தில் ஒரு சகடையின் நிழலிலே தங்கித் தமக்குள்ள
குஷ்டரோகத்தின் நமைச்சலால் தேகத்தை அச்சகடத்திற்
றேய்த்துக்கொண்டிருக்கக் கண்டு, அவர் தன்னோடு வாத்
தகாதவரென்றறிந்து அவருக்கு நமஸ்காரஞ் செய்து அவரை
நோக்கி, "சுவாமி! தங்களுக்கு வேண்டியது யாது?" என்று
கேட்டான். அதற்கவர், "நித்தியானந்த வனுபவியாயிருக்
கும் எனக்கு நீ என்ன கொடுக்கப்போகிறாய்? எனக் கேது
வும் வேண்டியதின்று," என்றுரைக்க, மந்திரி மீண்டும் நமஸ்
கரித்து அவரை நோக்கி, "சுவாமி! அடியேனால் ஏதாவது
ஒருபகாரத்தைப் பெற்றுக்கொள்ளத்தான் வேண்டும்," என்று
வேண்டினான். அதன்மேல் அவர், "அப்படியானால் என்
னுடைய நமைச்சல் தீரும்படி என் தேகத்தைச் சொறிந்து
கொண்டிருத்தற்கு ஓராளனுப்பு," என்று சொல்ல, அவ்
வார்த்தையை மந்திரி கேட்டுக்கொண்டு உடனே புறப்பட்டு
அரசனிடம் வந்து, "அந்த ரைக்கியர் இங்கே வரமாட்டார்;
அவர் தேகத்தைச் சொறிந்துகொண்டிருக்க ஓராளனுப்பும்
படி தெரிவித்தார்; ஆதலால், நீர் தாம் அங்குச்சென்று அவர்க்

குத் தொண்டு செய்து அவருடைய கிருபையைப் பெற்றுக் கொள்ளவேண்டும்," என்று தெரிவித்தான். அதன்மேல் அவ்வரசன், உடனே அந்த ரைக்கியரிடம் சென்று ஆடையாபரணம் முதலிய பொருள்களை அவர்க்கு முன்னே காணிக்கையாக வைத்து நமஸ்காரஞ் செய்து நின்றான். அப்போது அந்த ரைக்கியர் அரசனை நோக்கி, "மன்னா இவைகளெல்லாம் எனக் கெதற்காக? நீ அரசனாயிருந்தும் பெரியோர்களுடைய எண்ணத்தைத் தெரிந்துகொள்ளாதவனா யிருக்கின்றாய்; சீ! சீ!! இவற்றையெல்லாம் எடுத்துக்கொண்டு செல்," என்று சினந்து கூறினார். அவ்வாறு கூறவே அரசன் பயந்து நடுங்கி மீண்டும் அவர்க்கு நமஸ்காரஞ் செய்து அவர் தேகத்தைச் சொறிந்துகொண்டிருந்து, "சுவாமி! எனக்கு நல்வழி காட்டி என்னை இரட்சிக்கவேண்டும்," என்று வேண்ட, அதன்மேல் அவர் மனதிரங்கி, அவனை நோக்கி, "அரசனே! நான் கீதையின் ஆறாமத்தியாயத்தைப் பாராயணஞ் செய்த மகத்துவத்தினாலே நித்தியானந்தானுபவியானேன்; ஆதலால், அதனை உனக்கும் இப்போது உபதேசிக்கின்றேன்; அதன்மூலம் நீ நற்பதவியடைவாயாக," என்று கூறி அதனை உபதேசித்தனர்; பின்னர் அவ்வரசன், அதனைப் பாராயணம் பண்ணி அதன் மகிமையினாலே முத்தியடைந்தான்.

பண்டைக்காலத்தில் பாடலபுரமென்ற பட்டணத்திற் பிறந்த சங்குகர்ணன் என்னும் பிராமணன் பல வியாபாரங்கள் செய்து, அளவற்ற பொருள்களைச் சம்பாதித்துத் தன்னுடைய பிள்ளைகளுக்குத் தெரியாமல் ஓரிடத்திற் புதைத்து வைத்திருந்தான்; அப்படி யிருக்கும்போது அவன், ஒரு சமயம் நான்காம் விவாகம் செய்ய உத்தேசித்துத் தன் பந்துக்களோடு ஓரூர்க்குப் புறப்பட்டுச் சென்று, நடுவழியில் சூரியன் அஸ்தமிக்க, ஒரு மரத்தின்கீழ்த் தங்கிப் படுத்திருந்தான். அவ்வாறு படுத்திருக்குந்தருணத்தில் ஒரு பாம்பு வந்து அவனைக் கடிக்க அதன் விஷத்தினால் அவனிறந்தான். அதன்மேல் அவனோடு சென்றிருந்த சுற்றத்தார் வேப்பிலைகளைப் போட்டு அவன் தேகத்தை மூடி அங்கேயே கிடத்தி



விட்டுச் சென்றார்கள்; பின்னர் அப்பிராமணன் பாம்பாகப் பிறந்து, தான் திரவியங்களைப் புதைத்துவைத்த விடத்தில் காத்திருந்தான். அங்ஙன மிருக்கும்போது ஒருநாள் பாம்பாகிய அப்பிராமணன் தன்னுடைய நடுப்புத்திரன் கனவில் தோன்றி, "புத்திர! நான் இன்னவிடத்தில் அளவற்ற திரவியங்களைப் புதைத்துவைத்து, இப்போது பாம்பாகப் பிறந்து அவற்றைக் காத்திருக்கிறேன்; திதி தினத்தன்று கீதையின் ஏழாமத்தியாயத்தைப் பாராயணம் பண்ணின பிராமணனுக்கு நீயும், உன்னைச் சார்ந்தவர்களும் அன்னங் கொடுப்பீர்களானால் அத்தான விசேஷத்தால் நான் இந்த ஜன்மம் நிவிர்த்தியாகப் பெற்று மோக்ஷமடைவேன்; நீங்கள் அந்தத் திரவியங்களை எடுத்து அவற்றின் மூலம் நல்ல தருமங்களைச் செய்து சுகம் பெறுவீராக," என்று கூறித் திரவியங்களைப் புதைத்திருந்த விடத்தையும் குறிப்பிட்டுக் காட்டிச் சென்றான். அதன்மேல், அப்பிராமணனுடைய நடுப்புதல்வன் விழித்துத் தான் கண்ட சொப்பன விதத்தைத் தன் பந்துக்களிடம் சொல்லித் தந்தை சொற்படியே கீதையின் ஏழாமத்தியாயத்தைப் பாராயணம் பண்ணிய பிராமணனுக் கன்னங்கொடுக்க, பாம்பாயிருந்த அப்பிதா மோக்ஷத்தை யடைந்தான்; பின்னர், அப்பிராமண புத்திரனும், அவனுடைய பந்துக்களும், புதைக்கப்பட்டிருந்த திரவியங்களை யெடுத்து மிக்க தான தர்மங்களைச் செய்து சுகம் பெற்றார்கள்.

முற்காலத்தில் தட்சணதிக்கிலிருந்த ஆமர்த்தன பட்டணத்தில் பிறந்த பாவசன்மன் என்னும் ஒரு வேதியன் தாசிநேசனாய் மாமிசபக்ஷணம், மதுபானம், வேட்டை முதலிய துர்ச்செய்கைகளை யனுசரித்து மிகுந்த பாவமுடையவனாகி விருந்து முடிவாக ஒருநாள், பனங்கள்ளை வயிறு நிறையப் பானம் பண்ணி அசீரண முண்டாக அதனால் அவன் தேகத்தை விட்டு நீங்கி யமலோகஞ் சென்று பல நரகங்களை யனுபவித்துப் பின்னர் பனைமரமாகப் பிறந்து ஓரிடத்தில் நின்றான். அக்காலத்தில் கிரமிவலன் என்ற ஓர்வேதி

யன் குமதியென்னும் தன் மனைவியோடு கூடி வேதமோதிச் சாஸ்திரங்களை யுணர்ந்து, நித்திய கர்மானுஷ்டானங்கள் தவறாதவனா யிருந்து, ஒரு சமயம் கெட்டதானத்தை யேற்றுக்கொண்டதனாலே பிரமராட்சதனாய்ப் பிறந்து, அவன் மனைவியும் ராட்சதியாக அவளுடன் மேற்கூறிய பனைமரத்தின் நிழலில் வந்திருந்தான். அப்படியே அந்நிழலில் பல தினங்கள் தங்கி யிருக்கும்போது ஒருநாள் அவனுடைய மனைவி அவனை நோக்கி, "நாதா! நாம் தகாத்தானத்தைப் பெற்றபாவத்தாலே இவ்வாறு ராட்சத ஜன்மத்தையடைந்து துக்க மனுபவிக்கிறோம்; நமக் கேற்பட்டிருக்கும் இத்துன்பம் எப்போது நீங்கும்?" என்று வினவினன். அதற்கவன், "பெண்ணே! நமக்கு ஆத்மஞான முண்டாய் அஞ்ஞானம் நிவிர்த்தியானால் இத்துன்பங்கள் நீங்கும்," என்று கூறினான். அவள், "ஆத்மஞானமாவது யாது? அஞ்ஞானநிவிர்த்தியாவது யாது?" என்று கேட்டாள். இந்த வசனங்கள் கீதை எட்டாமத்தியாயம் முதற் சுலோகத்தின் அர்த்தமாயிருந்தபடியால் அவற்றின் மகிமையால், அவள் மேற்கூறியபடி இவ்வசனங்களை வினவியமாத்திரத்திலேயே அங்குப் பனைமரமாகிநின்ற பிராமணன் தன்னுடைய யதார்த்த சொரூபத்தை யடைந்தான். ராட்சதனாயிருந்த வேதியனும் தன்னுடைய பிராமண சொரூபத்தைப் பெற்றான்; அந்த ஸ்திரீயும் பிராமணப் பெண்ணானாள். உடனே வைகுண்டத்திலிருந்து விமானம் வந்தது. அப்போது ராட்சதனாயிருந்த பிராமணனும் அவன் மனைவியும் அதிலேறி வைகுண்டத்தை யடைந்தார்கள். பனைமரமா யிருந்த பாவசன்மன் பின்னர் காசிக்குச் சென்று விந்துமாதவரைப் பூஜித்து, மேற்கூறிய வார்த்தைகளடங்கிய கீதையின் எட்டாமத்தியாய சுலோகத்தைச் சொல்லி விஷ்ணுவின்மேல் விடாத தியானமுடையவனாய்த் தபசிலிருந்தான். அவன் அப்படி யிருந்தபடியால் பாற்கடலிற் பள்ளிகொண்டிருந்த விஷ்ணு விரைவில் அவனிடம் சென்று அவனுக் கனுக்கிரகம் பண்ணவேண்டுமென்ற எண்ணமுடையவராய் நித்திரை கொள்ளாதிருக்க, இலட்சுமி



யானவள் அவரை நோக்கி, "சுவாமி! நீர் ஏன் நித்திரை கொள்ளவில்லை?" என்று வினவினள். அப்போது விஷ்ணுவானவர், பாவசன்மாவின் பக்திவிசேஷத்தையும் அவன் பொருட்டாகத் தாம் கொண்ட எண்ணத்தையும், அதனால் நித்திரை வாராமலிருந்த விதத்தையும் சொல்லி உடனே அந்த இலட்சுமியுடன் புறப்பட்டு வந்து பாவசன்மாவுக்குத் தரிசனந் தந்து மோக்ஷத்தைக் கொடுத்தருளினார்.

நர்மதாதீரத்திலிருந்த மாயிஷமந்திரபுரமென்னும் நகத்தில் மாதவன் என்னும் பெயரையுடைய ஒரு பிராமணன் வேதோத்தமனாயும், சகல சாஸ்திர சம்பன்னனாயும், நல்ல நிஷ்டனாயு மிருந்தான். அங்ஙனமிருந்த அவன், அளவற்ற திரவியங்களைச் சம்பாதித்து, அவற்றால் யாகஞ்செய்ய வுத்தேசித்து, அதற்கு வேண்டிய பொருள்களையும் சேகரித்து ஆட்டுக்கடா வொன்றும் வாங்கி, யாகசாலை யேற்படுத்திச் செய்யத்தக்க காரியங்களை யெல்லாம் செய்து முடித்து அவ் வாட்டுக்கடாவை வெட்டப்போனான். அத்தருணத்தில் அவ்வாட்டுக்கடாவானது, அந்தப் பிராமணனை நோக்கி, "அந்தண! நீ அற்பமான சுவர்க்கபலனையடைய வுத்தேசித்து என்னைக் கொல்லத் துணிந்தனை; இதனாலுனக்குப் பிறவித் துன்பம் நீங்கமாட்டாது; மனிதராய்ப் பிறந்தோர் ஜனன மரணமற்ற மோக்ஷத்தை யடைதற்குரிய காரியங்களையே நடத்தவேண்டும்," என்று கூறிற்று. இந்த வார்த்தைகளைக் கேட்டவுடனே அந்த வேதியன் பயந்து நடுங்கி, அவ்வாட்டுக்கடாவுக்கு நமஸ்காரஞ் செய்து, அதை நோக்கி, "மேடமே! நீ யார்? உனக்கிந்த ஞானம் எப்படி யுண்டாயிற்று?" என்று வினவினான். அதற்கு ஆட்டுக்கடாவானது அவனைப் பார்த்து, "பிராமண சிரேஷ்ட! முந்தின ஜன்மத்தில் நான் பிராமணனாய்ப் பிறந்து வேதசாஸ்திரப் பயிற்சியுள்ளவனாய்ச் சகல நற்கருமங்களையும் நடத்திக்கொண்டிருந்தேன்; அப்போது எனக்கொரு குழந்தை பிறந்தது. அதற்கு வியாதியுண்டானபடியால் என்னுடைய மனைவி

'என் குழந்தைக்கு வியாதி நீங்கினால் உனக்கு ஆடு வெட்டிப் பலியிடுகிறேன்,' என்று பத்திரகாளியிடம் பிரார்த்தனை செய்துகொண்டாள்; பின்னர் அப்பிணி நீங்க என் குழந்தைக்குச் சௌக்கிய முண்டாயிற்று; அவ்வாறாகவே என் மனைவி, 'நான் முன்னர்த் தெரிவித்தபடியே பத்திரகாளிக்கு ஆடுவெட்டிப் பலியிடவேண்டும்,' என்று கூறினாள். நான் அவள் சொல்லுக்கிணங்கி ஒரு ஆட்டுக்குட்டியை வாங்கிப் பத்திரகாளி முன்பு வெட்டி அவளுக்குப் பலி கொடுத்தேன். அப்போது அவ்வாட்டுக்குட்டியின் தாய் மிகவும் வருத்தத்தோடு என்னை நோக்கி, 'வேதியனே! உன் பிள்ளை சௌக்கியத்தை யடைதற்பொருட்டு என்குட்டியைக் கொலை புரிந்தாய்; அந்தோ! என்வயிறெரிகிறதே; இவ்வாறு எனக்கு வயிற்றெரிச்சலை யுண்டாக்கியபடியால் நீ ஆடாகப் பிறக்கக் கடவாய்,' என்று சபித்தது. அதனாலேயே நான் ஆடாகப் பிறந்தேன்; ஆயினும், முந்தின ஜன்மத்தில் பிராமணனாய் நற்கருமங்கள் தப்பாமலிருந்த விசேஷத்தால் இப்போது பூர்வ ஞானத்தோ டிருக்கிறேன்; இதற்குமுன் குரங்காகவும், நாயாகவும், குதிரையாகவும் பல ஜன்மங்க ளெடுத்தேன்,'' என்று கூறிற்று. இவ்வாறு கூறிய அதன் வார்த்தைகளைக் கேட்டவுடன் மாதவன், அவ்வாட்டுக்கடாவை நோக்கி, "இத்தகைய விசேஷமுடைய நீ ஜன்ம நீங்கத்தக்க வுபாயத்தையு மறிந்திருப்பாய்; ஆதலின், அதனையும் எனக்குக் கூறக்கடவாய்," என்றுரைத்தனன். அப்போது ஆட்டுக்கடாவானது வேதியனை நோக்கி, "அந்தண சிரேஷ்ட! உன்னிஷ்டப்படியே ஒரு சரித்திரவாயிலாக அவ்வுபாயத்தை உரைக்கின்றேன் கேட்பாயாக: சூரியசந்திர வருணனென்கிற ஓரரசன் குருக்ஷேத்திரத்திலே சூரிய கிரகணகாலத்தில் கால புருஷத்தானம் பண்ண உத்தேசித்துப் புரோகிதன் சொற்படி அதற்கு வேண்டிய பொருள்களையெல்லாம் தேடிக் காலபுருஷனையும் புதிதாகப் பண்ணிக்கொண்டு, தான மேற்றுக்கொள்வதற்கு அளவற்ற பொருள்களைக் கொடுத்து யோக்கியனான ஒரு பிராமணனையும் அழைத்து அங்கே வைத்துவிட்டு ஸ்நா



னத்திற்குச் சென்றான்; அப்போது அங்கிருந்த புரோகிதனும் அவனோடு கூடச் சென்றான். அவ்வாறு இருவருஞ் செல்லத் தானம் வாங்கவந்த பிராமணன் தனித்திருக்குஞ் சமயத்தில் அங்கிருந்த காலபுருஷன் அவனைப் பார்த்து 'ஏ பிராமணா! சிறந்த க்ஷேத்திரத்தில் நல்ல புண்ணியகாலத்தில் கெட்டதானத்தை வாங்க வந்திருக்கின்றாயே; இத்தானத்தை வாங்கினால் நீ பிழைப்பாயா?' என்று கேட்க, அப்பிராமணன் அக் காலபுருஷனை நோக்கி, 'என்னுடைய வலிமையை நீ அறியமாட்டாய்; உன்னுடைய வார்த்தைக்குப் பயப்படுகிறவன் நானல்லன்; நான் என்னுடைய இச்சைப்படி இத்தானத்தை ஏற்றுக்கொள்ளாமலிரேன்; நீ உன்வாயை மூடிக்கொண்டு பேசாமலிரு,' என்று அக் காலபுருஷனுடைய வார்த்தையை மறுத்துவிட்டான். அதன்மேல் ஸ்நானத்திற்குச் சென்ற அரசனும் புரோகிதனும் வந்து சேர்ந்தார்கள். அப்படி வந்தவுடன் மேற்கூறியபடி அரசன் தானத்தைக் கொடுக்க அந்தப் பிராமணன் வாங்கினான். அப்படி வாங்கின மாத்திரத்தில், காலபுருஷனுடைய வயிற்றிலிருந்து கரத்திற் கத்தியுடையவனாகிய ஒருநீசபுருஷனும், நீசஸ்திரீயும்வெளிப்பட்டுக்கோரரூபமாய்த்தானம்வாங்கிய பிராமணனைக்கொல்ல வந்தார்கள். அவர்கள் அங்ஙனம் வருவதைக் கண்டவுடனே அந்தப்பிராமணன் ஒரே மனதுடன் கீதையின் ஒன்பதாமத்தியாயத்தைப் பாராயணம் பண்ணினான். அவ்வாறு பண்ணவே, காலபுருஷனிடத்திலிருந்து தோன்றிவந்த அந்நீசபுருஷனும் நீசப்பெண்ணும் கீதையின் மகிமைக்குப் பயந்து கண்ணுக்குத்தெரியாம லோடிப்போனார்கள். இவ்விசேஷத்தைக் கண்டவுடன் அரசன் பிராமணனை நோக்கி, 'அந்தணரே! இப்போதிங்கேவந்தவரியாவர்? இவர்கள் உடனே ஓடிவிட்டதற்குக் காரணமியாது?' என்று கேட்கப் பிராமணன், அரசனை நோக்கி, 'இறைவ! இங்கே வந்த நீசஸ்திரீ, நீசபுருஷன் ஆகிய இருவருள் நீசபுருஷன், நான் காலபுருஷதானம் வாங்கியதனா லேற்பட்ட பாவம்; நீசஸ்திரீ, நான் முந்திய ஜன்மத்தில் வித்தையின் கர்வத்தாலே பெரியவர்களை நிந்தை செய்

ததா லேற்பட்ட பாவம்; இவ்விரண்டு பாவங்களும் என்னைக் கொல்லும்பொருட்டு நீசன் வடிவமாகவும், நீசஸ்திரீ வடிவமாகவும் வந்தன; ஆயினும், அப்பாவரூபமான அவ்விருவரும் கீதையின் ஒன்பதா மத்தியாயத்தை நான் பாராயணம் பண்ணிய விசேஷத்தினாலே என்னெதிரில் நில்லாமற் பயந்தோடிப்போனார்கள்,' என்று கூற, அவ்வரசன், 'அப்படி அது மகிமையுடையதா யிருக்கும்பக்ஷத்தில் அதனை எனக்கும் உபதேசம் பண்ணுவீராக,' என்றனன்; அவ்வாறே அப்பிராமணன் அவ்வரசனுக்கு மேற்கூறிய கீதையின் ஒன்பதா மத்தியாயத்தை உபதேசித்தான்; அதனைப் பாராயணம் பண்ணி அரசன் மோக்ஷமடைந்தான்; ஆதலால், நீயும் அதனைப் பாராயணம் பண்ணுவாயாயின் மோக்ஷமடைவது திண்ணம்," என்று கூறிற்று. அவ்வாறே அந்த மாதவனென்னும் பிராமணன் கீதையின் ஒன்பதா மத்தியாயத்தைப் பாராயணம்பண்ணி மோக்ஷமடைந்தான்; அவ்வாட்டுக்கடாவும் அதனைப் பாராயணஞ் செய்து மோக்ஷத்தை அடைந்தது.

காசியிலே முன்னொரு காலத்தில், பிராமண குலத்திற் பிறந்த தீரதியென்பவன், வேதசாஸ்திரங்களில் தேர்ச்சியுடையவனும், தருமகுண முடையவனும், ஆத்மஞான முள்ளவனும், ஆன்ம பாவனையினாலே உள் நோக்குடையவனும், வெளிநோக்கங்களினின்று நீங்கிச் சீவன்முத்திதசையை யடைந்திருந்தான்; அப்படியிருந்த அவனுக்குக் காசியிலுள்ள விசுவேசர் எப்போதும் கைலாகுகொடுத்து உபசாரஞ் செய்துகொண்டிருந்தார். அங்ஙன மிருக்கையில் ஒருநாள் அவ்வேதியன் விசுவலிங்கத்தின்மேற் காலை நீட்டி, வாயிற்படியிற் றலையை வைத்துக்கொண்டு படுத்திருந்தான். அவ்வாறு படுத்திருக்கும்போது பிருங்கிமகாரிஷி பரமேசுரனைப் பார்த்து, "நீர் இவனுக்குச் சிஷ்ருஷை பண்ணுவதற்குக் காரணமியாது?" என்று கேட்டார். அவ்வாறு அவர் கேட்கவே பரமேசுரன் அவரை நோக்கி, "ரிஷியே! நான் இவனுக்கு இவ்வாறு சிஷ்ருஷைபண்ணுதற் கேற்பட்ட காரணத்



தைக் கூறுகிறேன் கேட்பீராக: இவன் முன்னே பிராமண குலத்தில் சுதவன் என்னும் பெயருடன் பிறந்து பிரமசாரி விரதத்தை யனுஷ்டித்திருந்தான்; அப்படி யிருக்கும்போது இவனுடைய குரு ஒருநாள் வாயிலிலே படுத்திருந்தது தெரியாமல் இவன் இருட்டில் நடக்க, இவனுடைய காலானது அக்குருவின்மேற் பட்டது; அதனால் அவர் கோபித்து, 'நீ என்னை மிதித்தபடியினாலே அன்னமாகப்போகக்கடவாய்,' என்று இவனைச் சபித்தார்; அவ்வாறு சபித்தபின், இவன் அச்சாபப்படி அன்ன ஜனனத்தை யடையுங் காலத்தில் முன்னே பிரமசாரிவிரதந்தப்பாமல் நடந்த விசேஷத்தினாலே பிரமலோகத்தில் மானச சரசிலேயுள்ள அம்சங்களுக்குத் தலைமையன்னமாய்ப் பிறந்தான்; அங்ஙனம் பிறந்த அன்னமானது ஒருதினம் நம்முடைய கைலாயத்தாழ்வரையிலுள்ள சிங்காரமாகிய புன்னாகவனத்தில் நான் வேடிக்கை பார்த்திருக்குஞ் சமயத்தில் கரிய நிறத்தோடுவந்து என்னை ஸ்தோத்திரம் பண்ணிற்று; அப்போது அதைப் பார்த்து, 'நீ யார்? உன்னுடைய சரீரம் கறுப்பா யிருத்தற்குக் காரணமென்ன?' என்று கேட்டேன்; அதற்கு அவ்வன்னம், 'நான் முன் பிராமணனாயிருந்து குருசாபத்தால் அன்னமாகப் பிறந்து பிரமலோகத்திலுள்ள மானசசரசில் அன்னங்களுக்குத் தலைமையாயிருக்கின்றேன்; இன்று நான் அத்தடாகத்திலுள்ள தாமரைக்கிழங்கைப் புசித்து ஆகாயமார்க்கமாகப் பறந்து காசியிலுள்ள ஒரு சரசுக்கு நேராக வரும்போது பறக்கும் சக்தியற்றுக் கீழே விழுந்தேன்; அங்ஙனம் விழவே என் சரீரமும் கறுத்துப்போயிற்று; அவ்வாறானவுடனே நான் ஆச்சரியமடைந்து, 'நமக்கு என்ன காரணத்தால் இச்சம்பவம் நேர்ந்தது?' என்று யோசித்தேன்; அவ்வாறு யோசிக்கும்போது, 'உனக்கு இக்கதி நேர்ந்ததற்குக் காரணத்தை நான் கூறுகிறேன்,' என்று ஒரு சப்த முண்டாயிற்று; அதைக் கேட்டவுடனே நான், 'இந்தவார்த்தையைக் கூறினவரெவர்?' என்று பக்கங்களிற் பார்த்தேன்; அப்போது அங்குள்ள தடாகத்தில் துருவாசர் சாபத்தால் ஐந்து தாமரைப் புஷ்பங்களாயிருந்த

பத்மினியென்னும் பெண்ணைப் பார்த்தேன்; பின்னர் ஆகா
யத்தைப் பார்த்தேன்; அப்போது அங்கே விஷ்ணுபத மடை
ந்த அறுபதினாயிரம்பேர் என் கண்களுக்குத் தோற்றினார்
கள்; அவர்களைப் பார்த்ததும், நான் 'இவர்கள் யாவர்?' என்று
ஆலோசித்தேன்; அதன்மேல், 'மேற்கூறியபடி தாமரைப்
புஷ்பங்களின் வடிவமாகத் தோன்றிய பத்மினியினிடமிரு
ந்தே நாம் கேட்டவார்த்தை யுண்டாகி யிருக்கக்கூடும்;
ஆதலின், இவளிடம் மேற்கூறிய அதிசயங்களை வினவித்
தெரிந்துகொள்ளவேண்டும்,' என்று நினைத்து அந்தப் பத்
மினியை வணங்கி அவளிடத்தில், 'நான் இங்கு வந்தவுடனே
எனக் கிக்கதி நேர்ந்ததற்குக் காரணமியாது? ஆகாயத்திற்
றோற்றுகின்ற இந்த அறுபதினாயிரம்பேரும் யாவர்?' என்று
வினவினேன். அங்ஙனம் வினவவே அந்தப் பத்மினியான
வள், 'மேலே தோன்றின அறுபதினாயிரம் பேர்களும் ஏழு
ஜன்மங்களுக்கு முன்னே ஒரு ரிஷி புத்திரர்களா யிருந்தவர்
கள்; இவர்கள் அக்காலத்தில் நித்திய கர்மானுஷ்டானங்க
ளுடனே தவம் பண்ணிக்கொண்டிருந்தார்கள்; அவ்வாறிவர்
கள் தவம் பண்ணிக்கொண்டிருந்த விடத்தில் அங்கே ஒரு
பெண் வந்தாள்; அவளைக் கண்ட மாத்திரத்தில் இவருள் ஒவ்
வொருவரும் மணம் புரிந்துகொள்ள இச்சித்து அதனால்
சண்டையிட்டுக்கொண்டு முடிவில் எல்லோரு மிறந்தார்கள்;
அதன்மேல் இவர்கள் பல ஜென்மங்களெடுத்து அந்தத்தில்
செந்நாய்களாகப்பிறந்து இங்கேவந்து தாமரைப் புஷ்பங்களா
யிருக்கும் என்னுடைய வாசனையைக் கிரகித்தபடியால் இப்
போது அச் சென்மம் மாறி விஷ்ணுபத மடைந்தனர்; நீ
என்னை வணங்காமற் சென்றபடியினாலே உனக்குப் பறக்குஞ்
சக்தியற்றுச் சரீரங் கறுத்துப்போயிற்று; இனி என்னை
இன்னவளென் றறியவிரும்புவாயாதலின், என்னுடைய
விருத்தாந்தத்தையுங் கூறுகிறேன் கேள்: நான் இதற்கு
மூன்றாஞ் சென்மத்தில் கமலமுகி என்னும் பிராமணஸ்திரீ
யாய்ப் பிறந்து மகாபதிவிரதையா யிருந்தேன்; அப்போது
நான் ஒரு நாகணவாய்ப்புள்ளை வளர்த்தேன்; அவ்வாறு



வளர்த்தலைக் கண்ட என்னுடைய நாயகன் என்னை நோக்கி,
'நீ நாகணவாய்ப்புள்ளைக் கூண்டி லடைத்து வளர்க்கின்ற
படியால் நாகணவாய்ப்புள்ளாகவே பிறக்கக்கடவாய்,' என்று
சபித்தனர். அவ்வாறே நான் நாகணவாய்ப்புள்ளாகப் பிறக்க
ஒரு முனி குமாரத்தி என்னை வளர்த்தாள்; அப்படி நாகண
வாய்ப் புள்ளாகிய என்னை வளர்த்த அவ்விடத்தி லுள்ளவர்
கள் கீதையின் பத்தாவது அத்தியாயமாகிய விபூதியோக
வத்தியாயத்தைப் பாராயணம்பண்ணி வந்தார்கள்; அப்
போது நான் அதைக் கேட்டுக்கொண்டிருந்தேன்; அவ்வாறு
அதைக்கேட்ட விசேஷத்தினாலே நான் அந்த ஜன்மத்தை
விட்டு மறுஜன்மத்தில் தேவலோகத்திலே பரமாவதி என்
னும் தேவமாதாகத் தோன்றி இலக்குமிக்குத் தோழியாகி
விமானத்திலேறி இஷ்டமான விடங்களிலெல்லாம் சஞ்சரித்
துக்கொண்டு திரிந்தேன்; அங்ஙனஞ் சஞ்சரிக்கும்போது
ஒருநாள் பூலோகத்திற்கு வந்து இத்தடாகத்தில் வஸ்திர
மில்லாமல் ஜலக்கிரீடை செய்துகொண்டிருக்க அத்தரு
ணத்தில் துருவாசரிஷி இங்கேவந்தார். அவரைக் கண்டவுட
னே நான் பயந்து தலை, கைகள், கால்கள் ஆகிய ஐந்து அவய
வங்களையும் இந்த ஐந்துதாமரைப் புஷ்பங்களாகச் செய்து
கொண்டு இவற்றின்ரூபமாக விளங்கினேன். நான் அவ்வாறு
செய்த செய்கையைத் துருவாசமுனிவர் பார்த்து உடனே
கோபங்கொண்டு, 'நீ இந்தப் புஷ்பங்களின் வடிவமாகவே
நூறு வருடங்கள்வரை இருக்கக்கடவாய்,' என்று சபித்
தார்; அன்றுதொட்டு நான் இம்மலர்களின் வடிவமாகவே
யிருக்கின்றேன்; அப்படி யிருந்தாலும் முன்னே கிளியா
யிருக்கும்போது கீதையின் பத்தாமத்தியாயத்தைக் கேட்
டுக்கொண்டிருந்த மகிமையினாலே பூர்வ ஞானத்தோடு
பேசும் சக்தியைப் பெற்றிருக்கிறேன்; எனக்கிப்போது சாப
விமோசனகாலம் வந்துவிட்டது; ஆகையால் கீதையின் பத்
தாமத்தியாயத்தைப் பாராயணஞ் செய்து நான் நற்கதிக்குச்
செல்கின்றேன்; நீ அதனைக் கேட்டு இந்த ஐந்து மலர்களை
யும் பறித்துக்கொண்டு போய்ப் பரமேசுரனுக்குச் சூட்டுவா

யானால் உனக்கும் சாபவிமோசன முண்டாம்,' என்று சொல்லிக் கீதையின் பத்தாமத்தியாயத்தைப் பாராயணஞ் செய்தாள்; உடனே அவளுக்குச் சாப நிவிர்த்தியாயிற்று; அதன்மேல் நான் உமக்குச் சூட்டும்பொருட்டு அந்தப் புஷ்பங்களைப் பறித்துக்கொண்டு இங்கு வந்தேன்; இவற்றை நீர் ஏற்றுக்கொள்ளவேண்டும்,' என்று சொல்லி அம்மலர்களை எனக்குச் சூட்டிற்று. அவ்வாறு சூட்டவே கீதையின் பத்தாமத்தியாயங் கேட்ட விசேஷத்தினாலே அந்த அன்னத்திற்குக் கறுப்பு நீங்கியதோடு அந்த ஜன்மமும் நாசமாக, அது இக்காசியில் இந்தப் பிராமணனாக ஜனித்தது; அவ்வாறு ஜனித்த இந்தத் தீரதியென்னும் பிராமணன் குழந்தைப்பருவத்திலேயே கீதையின் பத்தாமத்தியாயம் படித்து அர்த்தவிசாரம் பண்ணிப் பின் விஷ்ணுவின் சகுணபாவனை செய்து அப்பாவனையும் போய்ச் சர்வான்மபாவனையை யடைந்து வெளி நோக்கங்களை நீக்கிச் சீவன்முத்திதசையை யடைந்தனன்; இவனிடத்தில் இத்தகைய மகிமை பொருந்தியிருப்பதனாலேயே நான் இவ்வாறு இவனுக்குச் சிஷ்ருஷை பண்ணி வருகின்றேன்," என்று கூறினார். அதன்மேல் அந்தத் தீரதியென்னும் வேதியன் முத்தியை யடைந்தான்.

பிரணிதீரமென்ற நதிதீரத்தில், மேகலாதீரமென்னும் தீரத்தை யுடையதும், நாரசிம்மனென்னும் விஷ்ணு எழுந்தருளப்பெற்ற ஆலயத்தை யுடையதுமாகி விளங்கியமேதிங்கிரம் என்னும் அழகிய பட்டணத்திலே பூர்வத்தில் சுனந்தன் என்னும் பெயரினையுடைய ஒரு பிராமணன் தோன்றிச் சகல சாஸ்திர சம்பன்னனாயும், நிஷ்டை யுடையவனாயும் கீதையின் பதினோரா மத்தியாயத்தைப் பாராயணம் பண்ணி நிஷ்காமமுடையவனாய் அதனாலே ஆத்மஞானம் உதிக்கப்பெற்றிருந்தான்; அப்படி யிருக்குங்காலத்தில் அவன், சிங்கத்திற் பிருகஸ்பதி வந்தகாலத்தில் கோதாவரிக்குப் புறப்பட்டுப்போய் முதல்நாளில் கோதாவரியி னுற்பத்தி ஸ்தானமாகிய திரியம்பக ஸ்தலத்தில் தங்கி ஸ்நானம் பண்ணித் தர்ப்பணம், சிரார்த்



தம்முதலியவைகளைச்செய்து, அந்தத் தீர்த்ததீரத்திலேயுள்ள சிவஸ்தலம், விஷ்ணுஸ்தலம் ஆகியவைகளைத் தரிசித்து, ஆங்காங்கே பூசனை, ஸ்தோத்திரம் முதலியவைகளைக் கிரமமாகச் செய்து இயன்றவரை தானங்களும் வழங்கிப், பின்னர் விவாகமணம்புரியென்னும் பட்டண மார்க்கமாகச் சென்றான்; அவ்வாறு அவன் சென்று அந்த நகரத்தை யடைந்தவுடன் சூரியன் அஸ்தமிக்க இரவு வந்தது; அச்சமயத்தில் அவ்வேதியன் அந்நகரத்திற் றங்கக் கருதி அங்குள்ளவர்களிடத்தில் படுக்க இடங்கேட்க ஒருவரு மிடங் கொடாமையால் பற்பல விடங்களிற் சென்றலைந்து முடிவாக ஒரு தலையாரியிடம் போய் இடங்கேட்டான்; அத்தலையாரி அவனை யழைத்துக்கொண்டுபோய் ஓரிடத்தைக் காட்டி, 'இங்கே படுத்துக்கொள்ளும்,' என்று கூறினான். அவ்வாறே வேதியன் அங்குப் படுத்திருந்து விடிந்தபின் சௌக்கியமாக எழுந்து வெளியிற் புறப்பட்டான்; அவ்வாறு புறப்பட்டு வரும்போது தலையாரி அவனைக் கண்டு வணங்கி, "சுவாமி! இவ்விடத்திற் படுப்போர் பிழைப்பதில்லை; அப்படி யிருந்தும் நீர் பிழைத்தபடியால் உம்மிடத்தில் ஏதோ விசேஷமிருப்பதாகத் தெரிகிறது; ஆகையால் நீர் என் வீட்டிலேயே சில தினங்கள்வரை தங்கியிருந்து செல்லவேண்டும்," என்று வேண்டினன். வேதியன் அவ்வாறே தலையாரி வார்த்தைக் கிணங்கி அங்குத் தங்கியிருந்தான்; தலையாரியும் அப்பிராமணனுக்குச் சகல உபசாரங்களையும் நடத்திக்கொண்டிருந்தான். அப்படி யிருக்கும்போது ஏழுதினங்கள் கழிந்தபின் எட்டாநாட் காலையில் தலையாரி அந்தப் பிராமணனிடம் வந்து, "சுவாமி! இராத்திரி என் புத்திரனை இராக்ஷதன் தின்றுவிட்டான்," என்று சொல்லி யழுதான். அப்போது வேதியன், "அந்த இராக்ஷதன் யார்? அவன் உன் மகனை ஏன் தின்றான்?" என்று வினவ, அதற்குத் தலையாரி, "சுவாமி! அந்த இராக்ஷதன் இங்கே யுள்ளவன்; அவன் முன்னர் இவ்வூரிலுள்ள மனிதர்களைத் தினந்தோறும் கணக்கில்லாம லடித்துக் கொன்று தின்றுவந்தான்; அக்காலத்

தில் இவ்வூராரும் யானும் சேர்ந்து அவ்விராக்ஷதனிடம், 'நீ இவ்வாறு இங்குள்ள மனிதர்களைக் கொல்லவேண்டாம்; இங்குவரும் வழிப்போக்கர்களை உனக்குத் தினந்தோறும் இரையாக்குகிறோம்; நீ அவர்களைத் தின்றுகொண்டு சுகமாக வாழக்கடவாய்,' என்று கூறினோம்; அவன் அவ்வாறே எங்களுடைய வார்த்தைக் கிணங்கினன்; அதன்மேல் நாங்கள் இங்குவரும் வழிப்போக்கரைத் தந்திரமாக அன்று நீர்படுத்திருந்த விடத்திற் படுக்கும்படிச் செய்து, அவனுக்கிரையாக்கிக் கொண்டுவந்தோம்; அவன் அங்குப் படுப்பவர்களைத் தினந்தோறும் இரவில் கொன்று தின்று வந்தான்; அந்த வழக்கப்படிதான் அன்று உம்மையும் அவ்விடத்தில் நான் படுக்கச் செய்தேன்; ஆனால், உம்முடைய மகிமையினால் அவன் உம்மைக் கொல்லத் துணிந்திலன்; அவ்விசேஷத்தை யறிந்துதான் நான் உம்மை இங்கிருக்குமாறு வேண்டினேன்; இதுநிற்க, நேற்றிரவு இங்கே சில வழிப்போக்கர்கள் வந்தார்கள்; எங்கள் வழக்கப்படியே அவர்களை அவ்விடத்திற் கழைத்துப் போய்ப் படுக்கச் செய்து வரும்படி என் புத்திரனுக்குக் கட்டளையிட்டேன்; அவன் அவ்வாறே அவர்களை யழைத்துக்கொண்டு அங்குப் படுக்கச் செய்ததோடு இந்த இரகசியத்தைத் தான் அறியாதவனானபடியால் அவனும் அவர்களுடன் படுத்துக்கொண்டான்; அங்ஙனம் படுத்திருக்கும்போது இராக்ஷதன் வந்து வழிப்போக்கர்களைத் தின்றதுடன் என் மகனையும் சேர்த்துத் தின்றுபோய்விட்டான்; விடிந்தவுடன் இச்செய்தியை யறிந்த நான் இராக்ஷதனிடம் சென்று, 'என் புத்திரனையும் ஏன் தின்றாய்?' என்று கேட்டேன்; அதற்கவன், 'உன் புத்திரன் அங்குப் படுத்திருந்த விவரம் எனக்குத் தெரியாது; அவனையும் வழிப்போக்கனென்றே நினைத்துத் தின்றுவிட்டேன்,' என்று கூறினான். அதன்மேல் நான், 'என் புத்திரனைமட்டும் உயிரோடு வரும்படிச் செய்து என்னிடம் கொடுத்துவிடு,' என்றுரைக்க, அவன், 'நீ புத்திரனைப் பெறவா விரும்புகின்றனை? அவனோடு கூடவுண்ட மற்றையரும் வந்தாற்றான் அவனும் வருவான்;



அவ்வாறு வருவதற்கு ஒருபாய மிருக்கின்றது; அதைச் செய்வாயானால் உன் புத்திரன் வருவான்; அதனைக் கூறுகின்றேன் கேள்: ஒருகாலத்தில் பருந்தொன்று கீதையின் பதினோராமத்தியாயத்தைப் பாராயணஞ்செய்த ஒருவனுடைய ஒரெலும்பைத் தூக்கிக்கொண்டு ஆகாயமார்க்கமாகப் பறந்து செல்லும்போது அவ்வெலும்பானது தவறி ஒரு எருக்குட்டையில் விழுந்தது; அங்ஙனம் விழுந்தபின் ஒரு ஞானவானாகிய பிராமணன் வந்து அக்குட்டையில் ஸ்நானம், திலதர்ப்பணம், பிண்டக்கிரியை முதலியவைகளை விதிப்படிச் செய்தான்; அவன் அவ்வாறு செய்வதை அங்குள்ளார் கண்டு அருவருப்புக்கொண்டு, 'இது தீர்த்தமன்று, இதில் ஸ்நானம் முதலியன செய்தல் தகாது,' என்று கூறினர்கள்; அப்போது அவ்வேதியன் அவர்களை நோக்கி, 'கீதையின் பதினோரா மத்தியாயம் படித்தவனுடைய எலும்பு இதில் விழுந்திருக்கின்றது; ஆதலால் இதுமிகவும் புண்ணியதீர்த்தமாம்,' என்று கூற எல்லோரும் அதில் மூழ்கி மோக்ஷ மடைந்தார்கள்; அதனால் நான் கீதையின் மகிமையைத் தெரிந்துகொண்டிருக்கின்றேன்; ஆதலால், கீதையின் பதினோராமத்தியாயம் படித்த ஒருவரை அழைத்து வந்து எனக்குமுன்னே அதனைப் பாராயணம் பண்ணுவித்து, அவர் கையால் என்மேல் ஜலத்தைத் தெளிக்கும்படிச் செய்; அங்ஙனஞ் செய்த மாத்திரத்தில் நான் இராக்ஷஸனா யிருப்பதற்குக் காரணமான என்னுடைய சாபமும் நீங்குவதோடு மேற்கூறியபடி என்னால் உண்ணப்பட்டவர்களுடன் உன் மகனும் வருவான்; நான் சொல்லியபடிச் செய்தற்கு உன் வீட்டி லிருக்கும் வேதியரே தக்கவர்; அவர் கீதையின் பதினோரா மத்தியாயம் படித்தவர்; அதன்பொருட்டே அன்று அவரைக் கொல்லாமல் விட்டேன்; நீ அவரை யழைத்துவா,' என்று கூறினான்; அதன்மேல் உம்மிடம் வந்திருக்கின்றேன்; நீர் தயவுசெய்து அங்குவரவேண்டும்," என்று கூறினான். அதன்மேல் அவ்வேதியர் அத்தலையாரியை நோக்கி, "அவனுக்கு என்ன சாபத்தால் இராக்ஷஸ ஜன்ம முண்டாயிற்று?" என்று வினவ

அத்தலையாரி, "சுவாமி! இராக்ஷஸனா யிருக்கு மிவன் பூர்வத்தில் இவ்வூரில் பயிரிடும் பிராமணனா யிருந்தான்; அப்படி யிருக்கும்போது இவன் ஒருதினம் பயிர் காக்குநிமித்தம் வயலுக்குச் சென்றான்; அங்ஙனஞ் செல்லுந் தருணத்தில் வழியிலே நடக்கும் சக்தி யில்லாமற் கிடந்த ஒருபிராமணனை ஒரு கழுகு தன் கூர்மையாகிய வாயினாற் பிடுங்கித் தின்றது; அவ்வாறு கழுகு அப்பிராமணனுக்கு உபத்திரவஞ் செய்வதை இவன் பார்த்து அதனை விலக்குதற்குத் தன்னிடம் பலமிருந்தும் அதைப்பற்றி ஒருமுயற்சியும் செய்யாமற் போனான்; இவன் அவ்வாறு இரக்கமின்றிச் செல்லும்போது அவ்வழியிற் சென்றுகொண்டிருந்த ஒரு ரிஷி அப்பிராமணன் கழுகாற் படுந் துன்பத்தைப் பார்த்து மனமிரங்கி இவனைக் கூப்பிட்டு, 'அடா! அந்தக் கழுகைத் துரத்து! துரத்து!!' என்று சொல்ல, இவன் அவருடைய வார்த்தைகளைக் கவனியாமல், பயிரைக் காக்கவேண்டு மென்னும் விருப்பத்தால் விரைந்து சென்றான்; அச்சமயத்தில் அக்கழுகு அப்பிராமணனைக் கொன்றுவிட்டது; அச்செய்கையைக் கண்ட அம்முனிவர் வயிறெரிந்து இவனைப் பார்த்து, 'அடா பாவி! நீ இவ்வாறு பிராமண வதையைப் பார்த்துக்கொண்டு சென்றபடியினாலே இராக்ஷஸனாகக்கடவாய்,' என்று சபித்தார். அப்போது இவன் பயந்து, அவருடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து, 'சுவாமி! அடியேன் அறியாமையால் இக்குற்றத்தைச் செய்துவிட்டேன்; ஆகையால், மன்னித்தருளவேண்டும்; எனக்கெப்போது இச்சாபம் விமோசனமாகும்? அவ்விவரத்தையும் எனக் குரைத்தருளவேண்டும்,' என்றிரங்கினான். அச்சமயத்தில் அவர் இவனை நோக்கி, 'கீதையின் பதினோராமத்தியாயம் படித்தவன் என்றைக்கு வந்து உன் முன் அதனைப் பாராயணஞ் செய்து உன்மீது ஜலத்தைப் புரோட்சிப்பானோ அன்றைக்கு உன் சாபம் விமோசனமாகும்,' என்று கூறிப்போனார்; அதன் பின்னர் தான் இவன் இவ்வாறு இராக்ஷஸனாகித் திரியத் தலைப்பட்டான்; இன்று உம்மால் இவனுக்குச் சாப விமோசனமாகுங் காலம் சமீபித்துவிட்டது," என்று கூறினான். தலையாரி இவ்வாறு கூறவே மேற்கூறிய சுனந்தனென்னும் வேதியன் உடனே சென்று அந்த இராக்ஷஸனுக்கு முன்னிருந்து கீதையின் பதினோரா மத்தியாயத்தை அவனுக்குக் கேட்கும்படி பாராயணம் பண்ணி அவன் முகத்திலே ஜலத்தைத் தெளித்தான்; அவ்வாறு தெளித்தவுடனே அவ்விராக்ஷஸன் சாப விமோசனமாய்ப் புண்ணிய தேகத்தோடு விளங்கினான்; அவனால் தினந்தோறும் உண்ணப்பட்டவர்களும் அங்குப் புண்ணிய தேகத்தோடு விளங்கினார்கள்; தலையாரி மகனும் அவர்களோடு சேர்ந்து புண்ணிய தேகத்துடன் விளங்கினான்; அப்போது தலையாரி இராக்ஷஸனா யிருந்தவனிடம், "என் மகனெங்கே யுளன்? அவனைக் காட்டு," என்றுரைக்க, உடனே அவன் தலையாரி மகனை அத்தலையாரிக்குச் சுட்டிக் காட்டி, 'இவன்தான்,' என்று கூறினான். அப்போது தலையாரி தன் மகனை நோக்கி, "வீட்டுக்கு வரக்கடவாய்," என்றழைத்தான். உடனே அவன் தலையாரியை நோக்கி, "உன்னைப்போல எனக்கு எத்தனையோ தகப்பன்மார் ஏற்பட்டிருக்கின்றார்கள்; நம்முடைய பந்துத்துவமெல்லாம் மானிட தேக முள்ளவரையிற்றான்; பின்னர் நாம் ஒருவர்க்கொருவர் சுற்றமாகமாட்டோம்; ஆதலால் உனக்கு மெனக்கும் எவ்வித சம்பந்தமு மில்லை; நீ இப்பாச பந்தத்தைவிட்டு ஒரே மனதுடன் பகவானை நாடி மோக்ஷத்தை யடைதற்குரிய வழியைத் தேடு," என்று கூறி ஞானோபதேசஞ்செய்தான்; அதன்மேல் இராக்ஷஸனாயிருந்த வேதியன் விஷ்ணுபத மடைந்தான்; அவனால் உண்ணப்பட்டிருந்தவர்களும், தலையாரியின் மகனும் தங்களுக்கு விமானங்கள் வர அவற்றிலேறிச் சென்று, விஷ்ணு சாரூபமானார்கள்; தலையாரியும் தன்மகன் செய்த ஞானோபதேசத்தினால் மோக்ஷமடைந்தான்; பின்னர் சுனந்தனும் நித்தியானந்த பதவியை யடைந்து அழியாச்சுகம் பெற்றான்.

முற்காலத்தில் தக்ஷண தேசத்திலே மிக்க சிங்காரம் பொருந்திய கோலவாபுரி யென்னும் ஒரு பட்டண மிருந்

தது; அதில் மிகவும் பிரசித்தமுள்ள இலட்சுமியாலய மொன்
றிருந்தது; அக்கோவிலில் ஒருதினம் முப்பத்திரண்டு லக்ஷ
ணங்களும் பொருந்திய ஓர் இராஜகுமாரன் வந்து அங்
கெழுந்தருளி யிருந்த இலட்சுமியைப் பலவிதமாக ஸ்தோத்
திரம் பண்ணினான்; அப்போது இலட்சுமி பிரசன்னமாகி
அவனை நோக்கி, "உனக்கு என்னாலாகவேண்டியதென்ன?"
என்று கேட்க, அவன் கை கூப்பிக்கொண்டு இலக்குமியை
நோக்கி, "தாயே! என்னுடைய தந்தை அசுவமேதயாகம்
பண்ணப் பிரயத்தனஞ் செய்து அது நிறைவேறுமுன் இற
ந்துபோய்விட்டார்; பின்னர் யான் அவருடைய தேகத்தைக்
கெடாதபடி எண்ணெயிலே பக்குவப்படுத்தி வைத்துக்
கொண்டு பூர்த்தியாகாம லிருந்த அந்த அசுவமேதயாகத்
தை முடிக்கத் துணிந்து அதற்கு வேண்டிய காரியங்களை
யெல்லாம் செய்து குதிரையையும் கொண்டுவந்து யாகசாலை
யிலே யூகஸ்தம்பத்தில் கட்டிவைத்திருந்தேன்; அக்குதிரை
யை எவர்களோ திருடிக்கொண்டு போய்விட்டார்கள்; ஆகை
யால், நீ அக்குதிரையை வரவழைத்து எனக்குக் கொடுக்க
வேண்டும்," என்று கூறினான். அதற்கு இலட்சுமி, "இக்
கோவில் வாயிலிலே சித்தசமாதி என்னும் பெயரினையுடைய
ஒரு பிராமண னிருக்கின்றான்; நீ அவனிடத்திற் சென்று
நான் குதிரையை அழைப்பித்துக் கொடுக்கும்படி சொன்ன
தாகத் தெரிவித்தால் அவன் அவ்வாறே அதனை யழைப்பித்
துக் கொடுப்பான்," என்று கூறினள்; உடனே அவ்விராஜ
குமாரன் இலக்குமியினிடத்தில் விடைபெற்றுக்கொண்டு அப்
பிராமணனிடஞ் சென்றான்; அப்போது அந்தப் பிராமணன்
இராஜகுமாரன் சமாசாரத்தைத் தெரிவிக்கு முன்னமே அவ
னுடைய விஷயத்தைத் தெரிந்துகொண்டு, அவனை நோக்கி,
"நீ இலட்சுமிதேவியனுப்ப வந்தாயோ? நீ என்னிடம் தெரி
விக்க வந்த விஷயம் எனக்குத் தெரியும்; உன்னிஷ்டப்
படியே குதிரையை வரவழைத்துத் தருகிறேன்," என்று
சொல்லிக் குதிரை யிருக்குமிடத்தை ஆராய்ந்து பார்த்து,
அது தேவேந்திரனால் கொண்டுபோகப்பட்டு அவனிட மிரு



ப்பதாகத் தெரிந்து, உடனே இந்திரன் முதலிய தேவர்கள்
தன்னெதிரே வரும்படி சிந்தனை செய்தான்; அங்ஙனம்
நினைத்தமாத்திரத்தில் அவர்கள் வந்து சேர்ந்தார்கள்; அப்
படிவந்த அவர்களை நோக்கி அந்தப் பிராமணன், "உங்களிட
மிருக்கும் இந்த இராஜகுமாரனுடைய குதிரையை இப்
பொழுதே இங்குக் கொண்டுவந்து கட்டிச் செல்லுங்கள்,"
என்றுரைத்தான். அவர்கள் அவ்வாறே செய்து அவனிடம்
விடை பெற்றுக்கொண்டு போய்விட்டார்கள். அதன்மேல்
இராஜகுமாரன் அவ்வேதியனை நோக்கி, "சுவாமி! இனி என்
னுடைய தந்தை உயிர்பெற்றெழும்படிச் செய்யவேண்டும்,"
என்று கூறினன். வேதியர் அவ்வாறே செய்வதாகச் சொல்லி
அவ்விராஜகுமாரனை யழைத்துக்கொண்டு யாகசாலைக்குச்
சென்று எண்ணெயிற் பக்குவப்படுத்தி வைக்கப்பட்டிருந்த
அரசனுடைய தேகத்துக் கெதிரில் உட்கார்ந்து ஜலத்தில்
கீதையின் பன்னிரண்டா மத்தியாயத்தைப் பாராயணம்
பண்ணி அந்த ஜலத்தை அப்பிரேதத்தின் முகத்தில் தெளி
க்க உடனே அரசன் உயிர்பெற்றெழுந்து தன் புத்திரனை
நோக்கி, "நீ யார்?" என்று கேட்டான்; அப்போது இராஜ
குமாரன், தான் அவனுடைய புத்திரனென்பதையும், நடந்த
விசேஷங்களையும், அந்தப் பிராமணனுடைய மகிமையையும்
தெரிவிக்க, அவ்வரசன் அதிசயித்து, அப்பிராமணனுக்கு
நமஸ்காரஞ் செய்து அவனை நோக்கி, "சுவாமி! மனிதராற்
செய்தற் கியலாத இக்காரியங்கள் உம்மால் எப்படி நிறைவே
றின?" என்று கேட்டான்; அதற் கவ்வேதியன், "இவைகள்
கீதையின் பன்னிரண்டா மத்தியாயத்தை நான் படித்திரு
க்கு மகிமையால் நிறைவேறின," என்றுரைக்க அவ்வரசன்
"அப்படியானால் அதனை எனக்கும் உபதேசித்தருளவேண்
டும்," என்று கேட்டான்; அவ்வாறே அவ்வேதியன் அவ்வரச
னுக் கதனை உபதேசம் பண்ணினான். பின்பு எல்லோரும்
சேர்ந்து அசுவமேதயாகத்தை நிறைவேற்றினார்கள். அவ்
வாறு யாகம் முடிந்தவுடனே அங்கு விமானம் வந்தது; அங்
குள்ள அரசன் முதலிய எல்லோரும் அதிலேறிச் சென்று
விஷ்ணு சாரூபம்பெற்று மோக்ஷத்தை யடைந்தார்கள்.

தக்ஷண தேசத்தில் சிவன், விஷ்ணு, காளி முதலியவர்கள் மிக்க வரத்தைக் கொடுக்கத்தக்கவர்களாக எழுந்தருளியிருக்கப்பட்ட அரியரன் பட்டணத்திலே முன்பு வேதசாஸ்திரங்களில் தேர்ச்சி யுடையவனும், யாக முதலியவைகளைச் செய்கிறவனுமாகிய அரிதீக்ஷதன் என்னும் ஒரு பிராமணனிருந்தான்; அவனுடைய மனைவியோ துராசாரி யென்னும் பெயருடையவள்; அவள், புருஷனுக் கடங்காதவளாயும், விடபுருஷர் நேசம் மதுபானம் மாமிசபக்ஷணம் ஆகியவைகளையுடையவளாயு மிருந்தாள்; அப்படியிருக்கும்போது அவளுக்கு விடபுருடருடன்கூடி விளையாடத்தக்க இடம் ஊரிலில்லாமையால் அவள் ஒருவனத்தில் ஓர் இடத்தைக் குறிப்பிட்டுத் தினந்தோறும் அவ்விடத்திற்கு வாலிபரை வரும்படிச்செய்து அங்குச் சென்று அவர்களுடன் விளையாடிவந்தாள். அங்ஙனம் நடத்திவருங்காலத்தில் வசந்தகாலச் சந்திரிகையுள்ள ஓரிரவு அவ்விடத்திற்கு வரும்படி வாலிபர்க்குச் சொல்லிவிட்டு அவள் அங்கே சென்று நெடுநேரம்வரை காத்திருந்தும் அவர்கள் வாராமையினாலே அவ்விரவெல்லாம் அவ்வாலிபரைத் தேடிப் பற்பல விடங்களிற் புகுந்து மனத்தளர்ச்சியுடன் சுழன்று திரிந்து முடிவில் புலிகிடந்த ஒரு புதருகே சென்றாள். அப்போது அந்தப் புலி சீறிக்கொண்டு அவளுக்கு முன்னே வர, அவள் அதை நோக்கி, "நீ யார்?" என்று கேட்டனள். அதற்கு அந்தப் புலி, "தென்றிசையி லிருக்கின்ற மாலகன்ன தீரத்திலேயுள்ள பஞ்சலிங்க க்ஷேத்திரமாகிய முனிபதாவென்னும் பட்டணத்தில் முன்னே நானொரு பிராமணனுக்குப் பிள்ளையாகப் பிறந்து, பல சாஸ்திர விற்பத்தியுடையனாய்த் துர்த்தானங்கள் வாங்கியும், வேதங்களைக் கிரயம் பண்ணியும் மிக்க திரவியத்தைச் சம்பாதித்து அதில் சிறிதும் எவருக்குங் கொடாமல் முடிவில் அத்திரவிய முழுவதையும் வைத்துவிட்டு ஒரு நாயினாற் கடிக்கப்பட்டிறந்தேன்; அவ்வாறிறந்த நான் யமலோகம் போகவே யமன் என்னை நோக்கி, 'நீ மகாபாவி யானதால் புலியாய்ப் பிறக்கக்கடவாய்,' என்று சொன்னான்; அதனால் நான் இப்போது



புலியாகப் பிறந்திருக்கின்றேன்; ஆயினும், முன்னே நான் சாஸ்திரங்கள் படித்திருந்த விசேஷத்தினாலே எனக்குப் பூர்வஞான மிருக்கிறது; அதனால் நான் புண்ணியாத்மாக்களைக் கொல்லுகிறதில்லை; பாவிகளைத் தேடி யடித்துக்கொன்று தின்றுவருகிறேன்; நீ மகாபாவி யாகையால் உன்னையும் இப்போது கொன்று தின்கிறேன், பார்," என்று சொல்லி உடனே அவளை அடித்துக்கொன்று தின்றுவிட்டது; அதன்பின் அந்தப் பிராமணஸ்திரீ யமலோகஞ் சென்று கொடிய நரகத்தை யனுபவித்து, மீண்டு நீசஸ்திரியாகப் பிறந்து, அப்போதும் முன் வழக்கப்படி வியபிசாரம் செய்துகொண்டு திரிந்தாள். அவ்வாறு திரியும்போது, ஒரு பத்திரகாளி கோவிலில் பூஜை செய்பவனும், கீதை பதின்மூன்றா மத்தியாயம் படித்தவனுமாகிய வாசுதேவன் என்னும் ஒரு பிராமணன் அதனை ஒருதினம் பாராயணஞ் செய்துகொண்டிருக்கும் தருணத்தில் அவள் அங்கே வந்தாள்; அப்படி வரவே கீதை பதின்மூன்றா மத்தியாயத்தின் சில சொற்கள் அவளுடைய செவியிற் பட்டன; அங்ஙனம் பட்டமாத்திரத்தில் அவளுக்கு நீசதேகம் நீங்கித் திவ்வியதேக முண்டாயிற்று; அதன்மேல் அங்கு விமானம்வர அவள் அதி லேறிச்சென்று மோக்ஷமடைந்தாள்.

முற்காலத்தில் காஸ்மீர தேசத்திலுள்ள குங்கும உற்பத்தி ஸ்தானமாகிய சாஸ்வதியாலயமென்னுந் தலத்தில் சவுரியவர்மன் என்பவன் அரசனாயிருந்தான்; அவன் சிங்களதீபத்தையாளும் விக்கிரமவேதனன் என்னும் அரசனோடு சிநேகங்கொண்டு அச்சிநேகத்தை விருத்திசெய்து கொள்ளற்பொருட்டு அவனுக்கு இரண்டு வேட்டை நாய்களை யனுப்பினான்; அவன் அந்த நாய்களைப் பெற்றுக்கொண்டு சவுரியவர்மனுக்குத் தன்னிடத்திலிருந்த அரிய வஸ்துக்களை யானையின்மே லேற்றியனுப்ப இவன் அவற்றைப் பெற்றுக்கொண்டு மகிழ்ச்சி யடைந்திருந்தான். அதன்மேல் விக்கிரமவேதனமன்னன், மேற்கூறியசவுரியவர்மனால்தனக்கனுப்பப்

பட்ட இரண்டு நாய்களுக்கும் தங்கச்சங்கிலிகளிட்டு அவற்றைப் பிரியமாக வளர்த்து ஒருதினம் அவற்றோடு வேட்டையாடுதற்குக் காட்டிற்குச் சென்று, முயல்வேட்டையில் தன் நேயரோடு பந்தயம் பேசி முயல்களை யெழுப்பி அவற்றைப் பிடிக்கும்படி மேற்கூறிய நாய்களை யேவிவிடுத்தான்; அவற்றுள் ஆணாயானது ஒரு முயலைத் தூக்கிக்கொண்டு ஒரு திக்கிற்செல்லப் பெட்டை நாயானது மிகவும் கோபத்தோடு, ஒருமுயலைத் தூக்கிக்கொண்டு சென்றது. அந்தப் பெட்டை நாயின் வேகம் பார்க்கத்தக்கதா யிருந்தபடியால் விக்கரமவேதனன் முதலிய எல்லோரும்அதற்குப் பின்னே சென்றார்கள்; அப்போது அந்தப் பெட்டை நாயானது அம்முயலைத் தூக்கிக்கொண்டு நெடுந்தூரஞ் சென்று வச்சரிஷியின் ஆச்சிரமத்திற் சேர, அப்போது அங்கே ஒரு பள்ளத்திலுள்ள ஜலத்தில் கால் கழுவிக்கொண்டு நின்ற வச்சரிஷி சிஷராகிய சுந்தரர் என்பவர் அந்த நாயையும் முயலையும் பார்த்து, "உங்களுக்கு இன்னுமா வைரமிருக்கின்றது?" என்று சொல்லிச் சிரித்தார். அப்போது அவ்விரண்டிற்கு மேற்பட்டிருந்த பகை நீங்க, அந்தமுயல் அப்பள்ளத்தில் வீழ்ந்திறந்து திவ்ய தேகம் பெற்றது; அம்முயல் விழுந்த அதிர்ச்சியால் தெறித்த சேறானது அந்நாயின் மேற்பட, அதுவும் அந்நாய்ச் சன்மம் நீங்கித் திவ்வியதேகம்பெற்றது; உடனே அங்கு விமானம் வர, அவ்விரண்டும்அதிலேறிச்சென்று மோக்ஷமடைந்தன; அதன்மேல் அங்குச் சென்ற விக்கிரமவேதன அரசன், அவ்விடத்தில் நடந்த விசேஷங்களைப் பார்த்து அதிசயித்துச் சுந்தரரை வணங்கி, அவரை நோக்கி, "சுவாமி! அந்த நாயும் முயலும் இங்கே வந்தவுடன் நீர், 'உங்களுக்கு இன்னுமா வைரமிருக்கின்றது?' என்று சொன்னதற்குக் காரணமியாது? இங்கே விமானம் எதனால் வந்தது? இங்கே நாயும் முயலும் ஜன்ம நீங்கியதற்குக் காரணமென்ன?' என்று வினவினான். அவ்வாறு கேட்டவுடனே அந்தச் சுந்தரர் அரசனை நோக்கி, "மன்ன! முன்னே மகராஷ்டிர தேசத்திலுள்ள பிரஸ்தாந்தரமென்கிற பட்டணத்தில் கேசவன் என்னும் ஒரு பிராம



ணன் சூது விளையாடுவதில் மகாசமர்த்தனா யிருந்தான். விலோபனி யென்னும் பெயருடைய அவன் மனைவி மிக்க வியபிசாரியா யிருந்தாள்; அவளுடைய துர் நடத்தையை யறிந்த கேசவன் அவளை வெட்டிக் கொன்றுவிட்டுத் தன்னுடைய பாவத்தினாலே இந்த முயலாகப் பிறந்தான்; விலோபனி தன்னுடைய பாவத்தினாலே இந்தப் பெட்டைநாயாகப் பிறந்தாள். அந்தப் பழைய பகையைக் கொண்டுதான் இப்போது இந்த நாய் இம்முயலைத் தூக்கிவந்தது; இவர்களின் பூர்வ விருத்தாந்தம் எனக்குத் தெரியும்; அதனாற்றான் நான் 'இவர்கள் வேறு ஜன்மத்தை யடைந்தும் இன்னும் பழைய பகை போகவில்லையே,' என்று நினைத்து, மேற்கூறியவாறு, 'இன்னுமா உங்களுக்கு வைரமிருக்கின்றது?' என்று சொல்லிச் சிரித்தேன்; இதுநிற்க, இவ்விடம் என்னுடைய குருவாகிய வச்சரிஷியின் ஆச்சிரமம்; இங்கு நான் அவரிடத்தில் கீதையின் பதினான்கா மத்தியாயம் உபதேசம் பெற்று அதனைப் பாராயணம் பண்ணி வருகின்றேன்; இத்தகைய நான் கால் கழுவின இந்தப் பள்ளத்தில் முயல்வீழ்ந் திறந்தபடியாலும், இதிலுள்ள சேறு நாயின்மேற் பட்டபடியாலும் இவ்விரண்டும் திவ்வியதேகம் பெற்று மோக்ஷமடைந்தன; இவற்றைக் கொண்டு செல்வதற்காகவே விமானம் வந்தது; இவை இவ்வாறு மோக்ஷமடைந்ததற்குக் காரணம் என்னாற் பாராயணம் பண்ணப்படும் கீதையின் பதினான்கா மத்தியாய மகிமைதான்," என்று கூறினார். அதன்மேல் அவ்வரசன் அவரை நோக்கி, "சுவாமி எனக்கு அக்கீதையின் பதினான்கா மத்தியாயத்தை உபதேசம் பண்ணும்," என்று வேண்ட, அவர் அவ்வாறே உபதேசித்தார். பின்னர் அவ்வரசனும் அதனைப் பாராயணம் பண்ணி மோக்ஷத்தை யடைந்தான்.

பூர்வத்தில், கௌடதேசத்திலே கிருபாலராசிமன் என்னும் ஓரரசனிருந்தான்; அவன் தனக் கிருந்த மிக்க பலத்தினால் கர்வங்கொண்டு வஞ்சனையும்பாவகிருத்தியங்களு முடையவனாய் அநேகம் மனிதர்களைக் கொன்று அளவற்ற பாவத்

தைத் தேடிக்கொண்டான்; அதனால் அவன் பின்னர் பலவிதமான துன்பங்களை யடைந்து அவற்றால் வாதனைப்பட்டிறந்து சிந்துதேசத்தில் குதிரையாகப் பிறந்தான்; அதன்மேல் அந்தக் குதிரையை ஒரு கோமுட்டி வாங்கிக்கொண்டுவந்து சாபேருண்டன் என்கிற அரசனிடம் கிரயத்திற்கு விற்றான். அவன் அதனை வாங்கிப் பிரியமாக வளர்த்துவரும்போது ஒருதினம் அதன்மே லேறிக்கொண்டு வேட்டைக்குச் சென்று நடுக்காட்டிற் சேனைகளை விட்டுப்பிரிந்து தனியனாகி, மிக்க வெப்பத்தினால் தாகங்கொண்டு அத்தாகத்தைத் தணித்துக்கொள்ளும்பொருட்டுக் குதிரையை ஓரிடத்திற் கட்டிவிட்டு நீரிருக்கு மிடந்தேடி ஒரு மலைமீதேறினான். அப்படி ஏறிச் செல்லும்போது அவனுடைய தலையில் ஓர் இலை விழுந்தது; அவன் அதை எடுத்துப்பார்க்க அதில், கீதை பதினைந்தா மத்தியாயத்தின் ஒரு சுலோகத்தில் பாதி எழுதப்பட்டிருந்தது; அதை அவன் உரத்த சப்தத்தோடு படித்தான்; அவ்வாறு படிக்கவே அவ்வசனமானது அங்கே கட்டப்பட்டிருந்த குதிரையின் காதிற் புகுந்தது; அங்ஙனம் புகவே அக்குதிரையானது அச்சுலோகத்தின் மகிமையாலே கீழே வீழ்ந்திறந்து திவ்விய தேகம்பெற்று உடனே விமானம் வர அதிலேறிச் சென்று மோக்ஷமடைந்தது. அதன்மேல் அவ்வரசன் அங்கு நடந்த விசேஷத்தைப்பற்றி அதிசயித்துக் குதிரைபோனதனா லேற்பட்ட விசனத்துடன் அம்மலைமேல் பின்னும் சற்று தூரம் மேலே போய், அங்கே ஒரு வனத்திலிருந்த ஒரு முனிவரைக் கண்டான்; அவ்வாறு கண்டவுடனே அவன் அவருக்கு நமஸ்காரம் பண்ணி அவரிடத்தில் தான் அங்குச் செல்வதற்கு நேர்ந்த காரணத்தையும், குதிரை சம்பந்தமாக நடந்த விசேஷத்தையுங் கூறி, "குதிரைக்கு இவ்வாறு நேர்ந்ததற்குக் காரணமியாது?" என்று வினவினான். அப்போது அம்முனிவர் அவனுக்கு ஜலமுதவி இளைப்பாற்றிப் பின்னர் அக்குதிரையின் பூர்வ விருத்தாந்தங்களைச் சொல்லி, மீண்டும் அவனை நோக்கி, "அரசனே! நீ வரும்போது உன் தலையில் விழுந்த இலையில் எழுதப்பட்டிருந்தது



கீதையின் பதினைந்தா மத்தியாயத்தின் அரைச் சுலோகம்; அதனை நீ படிக்கக் கேட்டதனாலேயே குதிரை மோக்ஷமடைந்தது," என்று கூறினார். அதன்பின் அவ்வரசன் தன் சொந்த நகர்க்குச் சென்று தன்னுடைய புத்திரனுக்கு இராஜ்ஜியபட்டாபிஷேகம் செய்துவிட்டுத் தான் ஏகாந்தமான விடத்திலிருந்து மேற்கூறிய கீதை பதினைந்தா மத்தியாயத்தின் அரைச் சுலோகத்தைப் பாராயணம் பண்ணி மோக்ஷமடைந்தான்.

பண்டைக் காலத்தில் உச்சரிதேசத்திலே கஷ்கபாதன் என்னும் ஓரரசன் மிக்க கீர்த்திமானாயும், வீரனாயு மிருந்தான். அப்படி யிருக்குங் காலத்தில் ஒருநாள் அரிமர்த்தனம் என்கிற அவனுடைய பட்டத்து யானை மதங்கொண்டு ஒருவரையுங் கிட்டவொட்டாமல் திரிந்தது; அச்சமயத்தில் ஒரு பிராமணன், அந்த யானை மதங்கொண்டிருப்பதை யுணராமல் அதன் சமீபத்திற் போனான்; அவ்வாறு சென்றும் அஃது அவனுக் கொரு தீங்கும் செய்யவில்லை; அவ்விசேஷத்தை அரசன் கண்டு அதிசயித்து, "இவனிடத்தில் ஏதேனும் மகிமை யிருத்தல்கூடும்; அதனாலேயே இந்த யானை இவனைக் கொல்லாமல் விட்டுவிட்டது; இவன்பால் என்ன மகிமை யிருக்கின்றதென்பதை விசாரித்தறிவோம்," என்று கருதி உடனே அப்பிராமணனை யழைத்து அவனிடம், "வேதியரே! நீர் இப்போது மதங்கொண்ட யானையின் சமீபத்திற் சென்றும் அஃதும்மைக் கொல்லாமல் விட்டுவிட்டது; இதனால் உம்மிடம் ஏதேனும் மகிமை யிருத்தல் கூடுமென்று நினைக்கிறேன்; உம்மிடத்தில் என்ன மகிமை யிருக்கிறது? அதனைக் கூறும்," என்றுகேட்டான்; அதற்கந்தப் பிராமணன், "கீதை பதினாறு மத்தியாயத்தில் சிறிது சுலோகம் எனக்குத் தெரியும்; இது தவிர என்னிடத்தில் வேறொரு விசேஷமு மில்லை," என்றுரைத்தான். உடனே அரசன், 'கீதையின் மகிமை இப்பேர்ப்பட்டதா?' என் றதிசயித்து அப்பிராமணனை நோக்கி, "வேதியரே! எனக்கந்தச்சுலோகத்தை உபதேசம்பண்ணுவீ

ராக,'' என்று வேண்டினன். அவ்வாறே அதனைப் பிராமணன் உபதேசித்தான். அதன்மேல் அவ்வரசன் தன் பிள்ளை சுஸசியானனுக்கு இராஜ்ஜிய பட்டாபிஷேகஞ் செய்துவிட்டு மேலும் கீதையின் மகிமையை ஐயமறத் தெரிந்துகொள்ள வேண்டித் தானும் அந்த மதயானைக்குச் சமீபத்திற் சென்ருன்; அப்போது யானை அவனுக் கொரு தீங்கும் செய்யவில்லை. பின்னர் அவன் அந்தச் சுலோகத்தை மிகவுஞ் சிரேஷ்ட முடையதாகக் கருதி அதனை இடைவிடாது எப்போதும் பாராயணம் பண்ணி மோக்ஷத்தை யடைந்தான்.

மேற்கூறியபடி கஷ்கபாதன் மோக்ஷமடைந்த பின்னர் அரசாண்டுகொண்டிருந்த அவனுடைய புத்திரன் சுஸசியானன், ஒருதினம் தன்னுடைய நேயர்களான இராஜகுமாரர்களுடனே சபதஞ் செய்துகொண்டு மதம்பிடித்திருந்த யானைக்குச் சமீபத்திற் செல்ல அந்தயானை அவனைக் கொன்றுவிட்டது; அதன்மேல் அவ்விராசகுமாரன் மானவீதசத்திலே யானையாகப் பிறந்திருந்தான்; அப்படி யிருக்குங் காலத்தில் அந்த யானை விருத்தாப்பிய தசையையடைந்து, நோய் கொண்டு மாணமாகுந் தறுவாயிலிருந்தது. அப்போது அத்தேசத்தரசன் வந்து அதனைப் பார்த்து அதற்கு வைத்தியஞ் செய்தற்பொருட்டு வைத்தியர்களை வரவழைக்க முயன்ருன்; அங்ஙனம் முயலும்போது அந்தயானை அவ்வரசனை நோக்கி, "எனக்கு வைத்தியஞ் செய்யவேண்டாம்; கீதையின் பதினேழா மத்தியாயம் படித்தவனை இங்கே யழைப்பித்தால் எனக்கு நன்மையுண்டாகும்," என்று கூறிற்று. அரசன் அப்படியே கீதை பதினேழா மத்தியாயம்படித்த ஒருவேதியனை யழைப்பித்தான்; அவ்வேதியனைக் கண்டமாத்திரத்தில் அந்த யானை தன்னுடைய யானைத் தேகத்தைவிட்டு முந்தின சுஸசியானனுடைய தேகத்தை யடைந்தது; உடனே அங்கு விமானம் வந்தது; அப்போது மேற்கூறியபடி யானைத்தேகம் நீங்கி மானிட தேகமடைந்த சுஸசியானனை அவ்வரசன் பார்த்ததிசயித்து, 'நீ யார்?' என்று வினவினுன்; அங்ஙனம்



வினவியவுடனே அச்சுஸசியானன் தன்னுடைய பூர்வவிருத்தாந்தங்களையும், தான் நற்கதியடைதற் கேதுவாக வந்த வேதியனிடத்திலுள்ள கீதையின் பதினேழா மத்தியாயத்தின் மகிமையையுஞ் சொல்லி விமானத்தி லேறிப்போய் மோக்ஷமடைந்தான்; அதன்மேல் அந்த அரசன் கீதையின் பதினேழா மத்தியாய மகிமையை யுணர்ந்து தானும் அவ்வேதியனிடம் அதனைக் கேட்டுணர்ந்து அதைப் பாராயணம் பண்ணி மோக்ஷமடைந்தான்.

ஒருகாலத்தில் அமராவதிக் கிறைவனுகிய தேவேந்திரன் சிம்மாதனத்தி லேறி வீற்றிருக்கும்போது அங்கே ஒரு விஷ்ணுதூதன் ஒருவனை யழைத்துக்கொண்டுவர உடனே சிம்மாதனத்திலிருந்த இந்திரன் மூர்ச்சையாய்க் கீழே விழுந்தான்; அவ்வாறு விழுந்தவுடனே அங்குவந்த விஷ்ணுதூதன் அவனை அப்புறந் தள்ளிவிட்டுத் தன்னுடன் வந்தவனை அச்சிம்மாதனத்தி லேற்றி அவனுக்கு இந்திரபட்டங் கட்டிவிட்டுச் சென்ருன்; பின்னர் முன்னே மூர்ச்சையாய் விழுந்த இந்திரன் மூர்ச்சை தெளிந்தெழுந்து பார்த்துச் சிம்மாதனத்தில் வேறிந்திரன் வீற்றிருப்பதை யுணர்ந்து, அவ்வாருனதற்குரிய காரணத்தை யறியாமல் அதனைத் தெரிந்துகொள்ளும் பொருட்டு உடனே விஷ்ணுவினிடஞ் சென்று, அவரைத் தோத்திரம் பண்ணி அவர் திருமுகத்தை நோக்கி, "என்னைத் தள்ளி வேருெருவனை இந்திரனுக்கியதற்குக் காரணமென்ன?" என்று வினவினுன்; அதற்கு விஷ்ணு, "இவன் கீதை பதினெட்டா மத்தியாயத்தில் ஆறு சுலோகம் படித்தவன்; இங்ஙனம் படித்தவன் இந்திரபட்ட மடையவேண்டியது அவசியமாதலால் இவன் இப்போது இந்திரனுனன்," என்று கூறினர். இவ்வாறு கூறிய அவருடைய வார்த்தைகளைக் கேட்டவுடனே இந்திரன் கீதையின் பதினெட்டா மத்தியாய மகிமையை யுணர்ந்து அதனைத் தானுங் கற்று நற்கதியடைய விரும்பிப் பிராமண வடிவங்கொண்டு கோதாவரி தீரத்திலுள்ள காளிகாபுரத்திலிருந்த காலேசுரன் என்னும்

பிராமணனிடஞ் சென்று அவனை நமஸ்கரித்துப் பிரமச்சரிய விரத மனுஷ்டித்து அவனிடம் கீதை பதினெட்டா மத்தி யாய உபதேசம் பெற்று அதனைப் பாராயணம் பண்ணி விஷ்ணு சாயுச்சிய மடைந்தான்.

(இவையெல்லாம் பத்மபுராணத்திலுள்ள கீதாமான் மியத்தை அனுசரித் தெழுதப்பட்டவை.)

இவைநிற்க, இக் கலியுகத்தில் பல வருடங்கட்கு முன் னர் அரசு செலுத்திவந்த இதர மதஸ்தராகிய பாக்ஷாவொரு வர், 'முழு மந்திரி சுமந்திரன், முக்கால் மந்திரி சத்திய கீர்த்தி, அரை மந்திரி பட்டி, கால்மந்திரி அப்பாச்சி,' என்று உலகத்தவரால் கூறப்படும் சிறந்த மந்திரிகளின் எண்ணிக் கையிற் சேர்ந்தவரும், மிகுந்த மதிநுட்ப முடையவரும், இராஜதந்திர முடையவரும், உலகவியலை நன்குணர்ந்தவ ரும், சிறந்த ஞானம் பொருந்தியவருமாகிய அப்பாச்சி யென்பவருக்கு, "எல்லா மதஸ்தராலும் அங்கீகரிக்கப்படுவ தும், இகபர சாதனங்களை உதவத்தக்கதுமாகிய நூலெது? அத்தகைய நூலிருந்தால் அதனை எனக்கனுப்பவேண்டும்," என்று கடிதமெழுத, அப்பாச்சி, 'அத்தகைய சிறப்புவாய்ந்த நூல் பகவத்கீதையே யாம்,' என்று கருதி உடனே இதனை அறபுபாஷையில் மொழிபெயர்ப்பித்து மேற்கூறிய பாக்ஷா வுக் கனுப்பினர்; அவர் இதனைப் பெற்றுத் தம்மிடத்தி லுள்ள நாற்றிசை மந்திரிகளுக்குங் காட்ட, அவர்களுள் மூன்றுதிசை மந்திரிகள் இதைப்பார்த்து, "இதுமிகவும் திவ் வியமான நூலாகும்," என்று அங்கிகரித்தார்கள்; ஒருதிசை மந்திரிமாத்திரம் இதனை அங்கீகரியாமல், "இது நம்மதத் தைச் சாராமலிருக்கிறது," என்று அறிவித்தான். அவ னுடைய வார்த்தையைக்கேட்டதனால் பாக்ஷாவானவர் இதில் விருப்பங்கொள்ளாமலும், அப்பாச்சியவர்களுக்கு நூல்வந்து சேர்ந்ததைப்பற்றித் திருப்தியான நிருபமெழுதாமலு மிருந் தார். இப்படி யிருக்கவே எதையும் நுட்பமாக ஆராய்ந்தறி யத்தக்க அறிவுடைய அப்பாச்சி, பாக்ஷா அதிருப்தி கொண்



டிருப்பதையும், அவரிடத்தில் நடந்த விசேஷத்தையும் யூகத்தாலறிந்து உடனே பாக்ஷாவுக்கு, "நான் அனுப்பிய நூலைப்பற்றி ஒருவன் அதிருப்தியான வார்த்தை கூறியிருக் கின்றான்; அதைக் கேட்டதனால் நீர் அந்நூலை அங்கீகரித்து நிருப மெழுதாதிருக்கின்றீர்; இந்நூலைப்பற்றிக் கெட்ட அபிப்பிராயம் சொன்னவன் நீசப்பிறப்பா யிருப்பான்; நீர் விசாரித்தால் இவ்வுண்மை தெரியவரும்," என்று நிருப மெழுதினர். பாக்ஷா அந்நிருபத்தைப் பார்த்தவுடன் கீதை யைப்பற்றிக் கெட்ட அபிப்பிராயஞ் சொன்ன மந்திரியின் தாயை விசாரித்து அவள் வாய்மொழியினால் அப்பாச்சி யெழுதியபடி அவன் நீசப்பிறப்பாகவே யிருக்கத் தெரிந்து அப்பாச்சிமீதும், கீதையின்மீதும் அபிமானம் வைத்து, அம் மந்திரியைக் கண்டித்துப் பேசிவிட்டுப் பின்னர்க் கீதையைத் தினந்தோறும் பாராயணஞ் செய்து சிவன்முத்தராயினர்.

இஃதன்றி ஏறக்குறைய நூறு வருஷங்களுக்கு முன் னர் இத்தேசத்திற்கு கவர்னர் ஜெனராலாக வந்திருந்த கனம் - உவாரன் ஹேஸ்டிங்ஸ் துரை இந்துமத நூல்களை ஆராய்ச்சி செய்தகாலத்தில் இந்தப் பகவத்கீதையே எல்லா வற்றிலும் சிறந்த நூலென்பதைத் தெரிந்து, இதன் பொ ருளை இந்துதேசத்தவர்களுணர்ந்து நற்பயனடைவதுபோல ஐரோப்பா தேசத்தவரும் அறிந்து பயனெய்த வேண்டு மென்னும் நோக்கத்துடன் தக்க பொருளுதவி செய்து ஒரு சிறந்த வித்வானைக்கொண்டு, இங்குள்ள சில வித்வான்களின் உதவியால் இதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பித்திருக் கின்றார். இதனை ஆங்கிலத்தில் மேற்கூறியபடி மொழி பெயர்த்த வாசிரியர், "நான் நன்றாக ஆராய்ந்து பார்த்ததில் இந்தப் பகவத்கீதையே எந்நூல்களிலும் சிறந்ததாய் விள ங்குகின்றது; இதனாலேயே இந்துக்கள் மிக்க மகிமை யடைந் திருக்கின்றார்கள்; இதனுடைய அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளும் விஷயத்தில் இந்துமத சாஸ்திரிகளே மயங்கும் போது நான் எவ்வாறு அதனைத் தெரிந்து விளக்கிக் காட்ட

வல்லவனுவேன்; ஒருபோதும் ஆகமாட்டேன்; ஆதலின், என் புத்திக் கெட்டியவரையில் இந்நூலை மொழிபெயர்த்தேன்; இதில் ஏதேனும் குற்றம் காணப்படின் அதனை என்னுடைய குற்றமாகக் கொள்ளவேண்டுமே தவிர மகத்துவம் பொருந்திய இந்நூலின் குற்றமாகக் கொள்ளலாகாது," என்று இதன் சிறப்பைப்பற்றிப் புகழ்ந்தெழுதியிருக்கின்றார். இன்னும், இது ஹீப்ரு, லத்தின் முதலிய பாஷைகளினும் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. இத்துணைச் சிறப்புவாய்ந்த இக்கீதையின் மகிமையைப்பற்றிய சரித்திரங்கள் இன்னும் பலவுள; அவைகளை யிங்கு விரிக்கப்புகின் இம்மான்மியம் பெருகும்; ஆதலின், அவற்றை விடுத்து முக்கியமான இவைகளை மாத்திரம் விளக்கி யெழுதினேம். இவ்வாறு அளவிடற்கரிய மகிமையையுடைய இந்நூலை மிகுந்த பக்தி சிரத்தையுடன் எப்போதும் பாராயணஞ்செய்வோர் இகபர சுகங்களை யடைந்து முடிவில் முத்தி வீடடைவரென்பது சத்தியம்.

ஸ்ரீ பகவத்கீதாமான்மியம்

முற்றுப்பெற்றது.







## பிரபோதசந்திரோதய வசனம்

### அல்லது மெய்ஞ்ஞானவிளக்கம்.

### உயர்ந்த கிலிட்டு பயிண்டு: விலை ரூபா 1

புண்ணிய பூமியென்று புலவர்களால் புகழ்ந்து துதிக்கப்படுகின்ற பரதகண்டத்தின்கண் வைதிக மதங்களான மீமாம்ஸம், சாங்கியம், தர்க்கம், யோகம், சைவ முதலியவை வேதாந்த சித்தாந்தத்தைக் கைக்கொண்டொழுகி, துக்கநிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியுமாகிய மோட்சத்தை மக்களடைவதற்கு முக்கிய சாதனங்களா யுள்ளனவென்றும், உலோகாயதம், சமணம் முதலிய அவைதிக மதங்கள் வேதாந்த சித்தாந்தத்தை யனுசரித்தொழுகுதற்கு முக்கிய சாதனங்களல்லவென்றும் விளக்குமாறு கி. பி. 1200-ம் ஆண்டில் விஜயநகரத்தின்கண் பண்டித சிரோமணியாய் விளக்கமுற்றிருந்த கிருஷ்ணமிசிரரென்னும் அந்தணகுலதிலகர் வேதாந்த சித்தாந்தத்தை யனுஷ்டானத்திற் கொண்டுவருவதற்குப் பெருந்தடையாயுள்ள மனம், அகங்காரம், காமம், கோபம், மற்சரம், மதம், மானம், சங்கற்பம், சந்தேக முதலியவற்றையும், அவ்வேதாந்த சித்தாந்தத்தை யனுஷ்டித்தற்குச் சாதனமாயுள்ள விவேகம், நிரூபகம், பொறுமை, சந்தோஷம், சமம், தமம், விராகம், சுசீலம், தவம், இயமாதிகள் முதலியவற்றையும் புருஷர்களாகவும், மனைவியர்களாகவும், புத்திரர்களாகவும் தக்கவாறு உருவகப்படுத்தி, சுலபமாய் வேதாந்த சித்தாந்தத்தை அறிந்துகொள்ளுமாறு நாடக வடிவமாய்ப் பிரபோதசந்திரோதய மென்னும் ஓர் அரிய நூலை சம்ஸ்கிருத பாஷையில் இயற்றியருளினதை அப்பாஷாப்பியாசமில்லாத தமிழ்ப் பண்டிதரும் எளிதில் அறிந்துகொள்ளுமாறு, கி. பி. 1600-ம் ஆண்டு இலக்கணவிளக்கச் சிறப்புப்பாயிரத்தில் "மாதைய ரதிபன் வரகுண மேரு, கல்விக் கெல்லை கருணைக் காரகம், பெருமான் மெய்த்தவப் பேறெனத் தோன்றிய, திருமாலுலகு" என்றுள்ளபடி ஷ இலக்கண விளக்க மியற்றிய திருவாரூர் வைத்தியநாத தேசிகர் காலத்து விளங்கிய மாதைநகர்க்கரசான திருவேங்கடநாதனென்னும் திருவேங்கட சுவாமிகள் தமது ஞானகுருவான இராகவாநந்தர்து கட்டளைப்படி காவிய இலக்கணமமையச் செய்யுள்வடிவாக மெய்ஞ்ஞானவிளக்கம் என்று பேரிட்டுச் சொன்னோக்கும், பொருணோக்கும், தொடைநோக்கும், நடைநோக்கும், வேறெந்நோக்கும் நன்றாகப் பொருந்த ஓர் நூலியற்றியருளினர்.

அவ்வாறியற்றியுள்ள பிரபோதசந்திரோதய மென்னும் இம்மெய்ஞ்ஞானவிளக்கம் இல்க்கண் இலக்கிய வுணர்ச்சி யுள்ளார்க்கன்றி யேனையோர்க்குப் பயன்படாதிருப்பது கருதி, இவ்வரிய பெரிய நூலை வித்வசிரேஷ்டராகிய காஞ்சிபுரநிவாஸி ஸ்ரீமத் இராமயோகிகளவர்களைக் கொண்டு தெள்ளிய தமிழ் நடையில் வசனவடிவமாக வெழுதுவித் தச்சிடலாயிற்று.

# பிரபுலிங்கலீலை வசனம்

[நூதனமாய் வசனப்படுத்தப்பட்ட அரிய நூல்]

உயர்ந்த கிலிட்டு பயிண்டு: விலை அணு 12

அநாதிமுத்த சித்துருவாயுள்ள பரசிவப் பிரபுவை அநாதிபெத்த சித்துருவாயுள்ள ஜீவர்கள் அவிச்சையினின்று நீங்கி யமைந்தொன்று யாநந்தமாய் விளங்கும் வகையை யடைவுபடக் கூறும் நூல்கள் வேதாகமங்களாம். இவைகளே முதனூ லெனப்படும்.

அம் முதனூல்களின் கருத்தை வடமொழியிலும் தேசபாஷை யிலும் வல்லாரல்லாதாரும் உணர்ந்து நன்னெறியைக் கைக்கொண் டொழுகி யுய்யுமாறு, வடமொழியிலும் தேசபாஷையிலும் வல்ல மகான்கள் வடமொழியிலே யன்றித் தேசபாஷையிலும் வழிநூலும் சார்புநூலும் அருளியதோடு, தம்முடைய கருத்தை நியாயவாயிலாக ஸ்தாபிப்பதாயுமுள்ள எதிர் நூலும் செய்து வைத்தனர்.

இவ்வாறுள்ள நூல்களில் பிரபுலிங்கலீலையும் ஒன்று. இதற்கு முதனூல் கன்னடபாஷையி லிருக்கிறது. தமிழிலுள்ள பிரபுலிங்க லீலையின் காலம் ஏறக்குறைய 260 வருஷங்களாமென்று தெரிய வருகின்றது.

இதனை யாக்கியோர் துறைமங்கலம் சிவப்பிரகாசசுவாமிகள். இவர் கவிச் சக்கரவர்த்திகளென் றெண்ணப்பட்டவர்களுள் முதன்மையாக வைக்கக்கூடியவர்களி லொருவராவர். இம்மகான் செய்தரு ளிய நூல்க ளொவ்வொன்றும் மிகுதியும் காப்பியத்திற் குரியொன் றும் வியஞ்சகத்தை யுடைத்தாயிருக்கும். இப்பெரியார் வீரசைவத் தில் அபேதவாதத்தை (அதாவது அத்துவித சித்தாந்தத்தை) மேற் கொண்டொழுகி, அதனது ஏற்றத்தைப் பல்லாற்றானும் உலகிற்கு விளக்கிக் காட்டியவர். இத்தகைய இச்சீரியார் இப்பிரபுலிங்கலீலையில் பெரும்பான்மையும் திருக்குறளை மேற்கோளாகக் கொண்டிருக்கின் றனர். இந்நூலில் குணம், அலங்காரமென்னும் சொற்சுவையும், காமம், நகை, கருணை, வீரம், உருத்திரம், அச்சம், இழிப்பு, வியப்பு, சாந்தமென்னும் பொருட்சுவையும் நிரம்பி யிருக்கின்றன வென்பது இதனைச் செவ்வனே படித்துணர்ந்தார் ஒவ்வொருவரும் அறிவாரென் பது வெள்ளிடை மலையாம். துக்கநிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியு மான மோட்சத்தை மிக்க எளிதில் அடைவதற்கு நேர்சாதனமாயுள்ள தத்துவ ஞானத்தைப் பெறும்வழியை மிகுதியாகக் கூறுதல்பற்றி இது தத்துவவிசாரஞ் செய்பவர்களால் பொன்னேபோற் போற்றப்படுகின் றது.

இதனைப் படிப்பதால், சிவதத்துவத்திற்குச் சத்தி தத்துவம் மேற்பட்டதன்றென்பதும், மாயையின் வரலாறும், அதனை யொழிக் கும் வகையும், சத்துவகுணத்தாலன்றி வேறு வேறு குணத்தாலும் வேறெதனாலும் பரம்பொருளை யறியமுடியா தென்பதும், ஸ்திரீக ளும் மோக்ஷமடைதற் கதிகாரிகளாவ ரென்பதும், புறப்பூசையிலும் உட் (மனோ) பூசையே சிறந்ததென்பதும், அன்புடையார்க்கே அரனருள்வாய்க்குமென்பதும் இன்னும் பிறவும் உணர்ந்து கொள்ளலாம்.